அனைத்திந்திய நூல் வரிசை

# பஞ்சாபிக் கதைகள்

*தொகுப்பாசிரியர் :*

**டாக்டர் ஹர்பஜன் சிங்**

*மொழிபெயர்ப்பு :*

**ரா. வீழிநாதன்**



**நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா**

**புது தில்லி**

February 1973 (Magha 1894)
பிப்ரவரி 1973 (மாகா 1894)



ரூ. 5.50

*Original title* : KATHA PUNJAB
*Tamil title* : PUNJABI KADHAIGAL

விநியோகிப்பாளர் :
பாரி நிலையம்,
1/59, பிராட்வே, சென்னை - 1

PUBLISHED BY THE DIRECTOR, NATIONAL BOOK TRUST INDIA, NEW DELHI AND PRINTED AT JANATHA PRINTING & PUBLISHING CO., (P) LTD., MADRAS-14

# முகவுரை

இந்தியா ஒரு விசாலமான நாடு. இந்நாடு பண்பாட்டினால் ஒன்றாக இருந்தபோதிலும், இதனை முன்னேற்றமடைந்த சக்தியுள்ளதொரு நாடாக ஆக்கக்கூடிய ஒற்றுமைத் தளைகளை இன்னும் வலிமைப் படுத்த வேண்டியிருக்கிறது.

நம்முடைய பாரத நாட்டில் பல மொழிகள் பேசப்படுகின்றன நம்முடைய நாட்டைப்போல உலகத்தின் மற்றெந்த நாட்டிலும் மொழிகளுடைய எண்ணிக்கை இவ்வளவு அதிகமாக இல்லை ஆனால், நமது அண்டையிலுள்ள பகுதியில் வழங்கும் மொழிகளைப் பற்றி நாம் அதிகம் அக்கறை கொள்ளுவதில்லை. அப்பகுதிகளில் இலக்கியம், கலாசாரம், இவற்றின் செழிப்பைப் பற்றிய அறிவும் நாம் அதிகமாகப் பெற்றிருக்கவில்லை ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் முதலிய ஐரோப்பிய மொழிகளில் இலக்கியத்தைப் பற்றி யும், அம்மொழிகள் வழங்கும் சமுதாயங்களைப் பற்றியும் நமக்குள்ள அறிவைவிட நமது நாட்டின் மொழிகளில் உள்ள இலக்கியங்களைப் பற்றிய அறிவு குறைவாயுள்ளது.

நாட்டின் உணர்ச்சி—பண்பாடு ஒருமைப்பாட்டிற்கு—நமது நாட்டி னர் தேசத்தின் பல மொழிகளிலுள்ள சிறந்த இலக்கியப் படைப்புக் களைப் பற்றி நன்கு அறிந்திருத்தல் வேண்டும். அவற்றின் வாயி லாகப் பல்வேறு பகுதிகளில் வழங்கும் வாழ்க்கை முறைகள், மக்க ளது எண்ணங்கள், நம்பிக்கைகள், நடை - உடை பாவனைகள் ஆகியவை பற்றியும் அறியவேண்டும்.

மேற்கே சுதந்திரமான பல நாடுகள் உள்ளன ஒவ்வொரு நாட் டுக்கும் தனிப்பட்ட மொழி உண்டு ஆயினும் ஒவ்வொரு நாட்டி னரும் மற்ற நாட்டினருடைய இலக்கியத்தைப் பற்றியும், சிந்தனை யைப் பற்றியும் அறிந்து வைத்திருக்கிறார்கள். அவ்வாறு நாம் நமது நாட்டு மொழிகளைப் பற்றி அறிந்திருக்கவில்லை ஐரோப்பிய மொழி யொன்றில் வெளியாகும் எந்தச் சிறந்த நூலும் உடனடியாக மற்ற மொழிகளில் பெயர்க்கப்படுகின்றது இந்தியா ஒரே நாடு. ஆனால் நமக்கு நமது அண்டை மொழிகளில் என்ன நடைபெறுகின்றது என்பதைப் பற்றித் தெரிந்து கொள்வதில் அவ்வளவு ஆவல் கிடையாது. இந்நிலைமை மாறிக்கொண்டு வருகிறது என்பது

உண்மையே. ஆனால் இந்த மாறுதல் மிகவும் மெதுவாக நடை பெற்று வருகிறது.

இந்நிலையை உத்தேசித்தே இந்திய அரசு ஒவ்வொரு இந்திய மொழியிலிருந்தும் தற்காலத்திய இலக்கியத்திலிருந்தும் தெரிந் தெடுத்த நூல்களை மற்ற மொழிகளில் மொழி பெயர்ப்பிப்பதற்கான திட்டமொன்றை வரைந்திருக்கின்றது. இந்தத் திட்டத்தின் கீழ் மக்கள் படித்து மகிழக்கூடிய நூல்கள்—அதாவது, கதைகள், புதினங்கள், இன்பமளிக்கும் பயண வரலாறுகள், சுயசரிதைகள் போன்றவை தெரிந்தெடுக்கப்படும். மிகச் சிறந்தவையும், மக்க ளிடையே பிரபலமடைந்தவையும், அந்தந்த மொழிப் பகுதியில் வாழும் மக்களுடைய நடை-உடை பாவனைகளையும், வாழ்க்கை முறைகளையும், சமூக நிலைகளையும் கண்ணாடி போலப் பிரதிபலித்துக் காட்டக்கூடியவையுமான நூல்களே இத்தொடரில் தெரிந் தெடுக்கப்படும். இத்திட்டத்தின் வாயிலாகப் பல்வேறு மொழிகள் பேசுவோரிடையே பரஸ்பரப் பரிவுணர்வும் ஒற்றுமையும வளருமென நம்புகிறோம்.

வெவ்வேறு மொழிகளின் சிறந்த படைப்புக்களைத் தெரிந்தெடுப்ப தும், அவற்றை மொழிபெயர்ப்பதும எளிய காரியமல்ல. இப் பணியில் எங்களுடைய ஆலோசனைக் குழுவினருக்கும், மொழி பெயர்ப்பாளர்களுக்கும் நாங்கள் கடமைப் பட்டவராவோம். அவர் கள் வழிகாட்டி, உதவிசெய்து, ஒத்துழைப்புத் தராவிடில் இந்தத் திட்டத்தை வெற்றிப் பலனுடன் செயலாக்குவது முடியாது.

பாலகிருஷ்ண கேஸ்கர்

# பஞ்சாபிக் கதை

பஞ்சாபி இலக்கியத்துடன கூடவே பஞ்சாபிக் கதையும் பிறந்து விட்டது. பஞ்சாபி இலக்கியத்துக் கென்று ஒரு தனித் தன்மை உண்டு என்ருலும், அதன் இலக்கிய ஓட்டம் அனைத்திந்திய இலக்கியப் பண்பை ஒட்டி, குறிப்பாகக் கூறப்போனுல் வட இந்திய இலக்கிய வழியைப் பின்பற்றியே நிகழ்ந்திருப்பதைக் காணலாம். ஹிந்தி மொழியில் 'ராஸோ' இலக்கியம் உருவான காலத்தில், மராட்டி மொழியில் 'பவாடோ' இலக்கியம் பிறந்த காலத்தில், பஞ்சாபி மொழியிலும் 'வாரோ' இலக்கியம் உதயமாயிற்று. பாஞ்சாலத்தின் வீரக் கதைகளைச் செய்யுள் உருவில் கூறுவதுதான் 'வாரே' எனப்படுவது. இநதச் செய்யுள் உருவத்தின் இணைபிரிக்க இயலாத ஓர் அங்கம் கதை. கதை இன்றிக் காவியமோ, காவியம் இன்றிக் கதையோ கிடையாது. 'வாரே'க்களின் கதாநாயகர்கள் பெரும்பாலும் மக்கள் தலைவர்கள் ஆவார்கள். பொதுமக்களிடையே இக் காவியங்கள் பாடபபடும் பாஞ்சாலத்தில் பஞ்சாபியர்களுக்கென்று தனி ராஜ்யம் கிடையாது. வடமேற்கு எல்லைப் புறத்திலிருநது படை யெடுப்பாளர்கள் தொடர்ந்து தாக்குவது இடையருது நிகழ்நது வநதது.

பஞ்சாபின கிராமஙகள் தங்களைத் தாங்களே காத்துக் கொளளும் படியான நிலை. வெளிநாட்டுப் படைகள் வலுவோடு தாக்க வரும் பொழுதெல்லாம் மக்கள் தங்கள் உடல், பொருள், ஆவி, மதிப்பு, மரியாதை ஆகியவற்றைக் காத்துக் கொள்ளப் போரிட வேண்டியிருந்தது. இத்தகைய படையெடுப்புகள் வலுவிழந்த நேரங்களில், தங்கள போர் வீரர்களின் தீரங்களைப்பற்றி 'வாரே' இயற்றிப் பாடினர் இந்த 'வாரே' காவியங்கள் பஞ்சாபிய வீரர்களின இரத்தத்துக்குச் சூடேற்றி வந்தன; எந்த நேரம் என்ன இடையூறு நிகழ்ந்தாலும் அதைச் சமாளிக்கும் ஆற்றலையும் அளித்து வந்தன. இந்தப் போர்க் கதைகளின் காவியத் தலைவர்கள் பாஞ்சாலத்தின் வீர மண்ணில் பிறந்து வளர்ந்து பெரியவர்களானவர்களாக, உற்ருர் உறவினர்களாக, பழகி அறிமுகமானவர்களாக இருப்பார்கள். பொய்க்கும் ஐயத்துக்கும் இடம் கிடையாது. அச்சம் தலைகாட்ட முடியாது. பொது மக்களுக்கெதிரே இவ்வீர காரியங்கள் பாடப்பட்டமையினுல், பொய்யான புகழுரையும் இடம் பெற முடிவதில்லை. போரில் தோற்ற வீரன் மீது 'வாரே' காவியங்கள் பாடப்படுவதே

இல்லை. மக்களில் ஒருவனே தலைவன். மக்களில் ஒருவனே பாடுபவன், மக்களில் ஒருவனே கேட்பவன் என்று ஆகிவிட்ட நிலையில் பஞ்சாபிக் கதை இலக்கியம் தொடங்கி வளர்ந்தது. இத்தொடக்கமே இலக்கியத்துக்கென்று ஒரு தனித் தன்மையையும் தகைமையையும் தேடித் தந்துள்ளது.

இப்பொழுது இந்த 'வாரே' காவியங்கள் கிடைப்பதில்லை. ஆனால் இவை இருந்திருக்கின்றன என்பதற்கான ஐயமற்ற அறிகுறி 'குரு கிரந்த'த்தில் காணப்படுகிறது. 'குரு கிரந்தம்' பஞ்சாபி மொழியின் பண்டைய, அதிகார பூர்வமான நூல் ஆகும். இந்த 'கிரந்தத்தின் ஓர் எழுத்தை மாற்றக்கூட யாருக்கும் உத்தரவோ உரிமையோ கிடையாது. எனவே, இந்நூலில் பாதுகாக்கப் பட்டிருக்கும் அனைத்தும் நமக்குத் தெய்வ வாக்கைப் போன்றவை; பக்தி—சிரத்தையுடன் போற்றப்படுபவை. மலிக் முரீத், சந்திர ஹடா ஸோஹியா, ராய் கமால் டிண்டா அஸ்ராஜ், லல்லா பஹீலீமான், ஜோதா வீரா பூர்பானீ, ராய் மஹ்மா ஹஸ்னீ, மூஸா போன்ற எத்தனையோ பெயர்களோடு கொண்ட 'வாரே' என்னும் வீரக் கதைகளைப் பற்றிய குறிப்புகள் 'குரு கிரந்த'த்தில் காணக் கிடைக்கின்றன.

ஆனால் இந்தக் கதைகள் சீர்தளை, எதுகை, மோனை—யாப்பிலக்கணப்படி எழுதப்பட்டுள்ளன. அந்தக் காலத்தில் கதை கவிதையின் ஓர் அங்கமாகவே இருந்து வந்தது. அதற்கென்று தனியானதொரு சுதந்திர உருவம் கிடையாது. கதைக்கு ஒரு சுதந்திர உருவம் ஏற்பட்டது குரு நானக்கின் காலத்தில்தான். குரு நானக் பாஞ்சால மண்ணின் மாபெரும் புருஷர். அவருக்கு இயல்பாக அமைந்திருந்த பல துறை அறிவாற்றலும் பஞ்சாபியர்களின் வாழ்க்கையில் படிந்து மெருகு கூட்டியுள்ளது. பாஞ்சாலம் ஐந்து ஆறுகள் ஓடும் பூமியெனப் புகழ்பெற்றுள்ளது. குரு நானக்கைப் பஞ்சாபின் ஆறாவது ஆறு என்று எடுத்துக் கொள்ளுவோமானால், அது முற்றிலும் பொருந்தும். ஐந்து ஆறுகளின் நீர் வளமும் பஞ்சாபில் பாய்ந்து மண்ணின் வளத்தைப் பெருக்கியுள்ளது போலவே, குரு நானக் பஞ்சாப் மக்களின் மனத்தை நனைத்து மாண்புறச் செய்திருக்கிறார். பஞ்சாப ஹிந்துக்களாலோ முஸல்மான்களாலோ அல்ல; குருமார்களின் பெயரால் வளம் கூட்டி வாழ்கிறது என்பதை யாவரும் ஒப்புக்கொள்ளவே செய்வர். பஞ்சாபி உரை நடை இலக்கியம் கூட குரு நானக்கின் பெயராலேயே தொடங்குகிறது. பஞ்சாபி உரை நடையில் எழுதப்பெற்ற கதைகளும் குரு நானக்கின் பெயரைச் சுற்றிப் படர்ந்தே மலர்ந்துள்ளன. இந்தக் கதை இலக்கியம்

'ஸாகீ' என்று அழைக்கப்படுகிறது. இக்கதைகளின், அதாவது 'ஸாகீ'களின் கதா நாயகனாகப் பஞ்சாப் மக்களின் தலைவரான குரு நானக்கே திகழ்கிறார். இன்று இந்த 'ஸாகீ'களை நாம் அறநெறிக் கதைகள் என்று பெயரிட்டு அழைக்கலாம் என்றாலும் இவற்றில் தற்காலத்திய உரை நடைக் கதைகளின் வித்தைக் காணவே செய்கிறோம். குரு நானக்கின் அறநெறி உணர்வு மத நோக்கிலிருந்து விடுபட்டிருந்தது; வேறு பட்டிருந்தது. 'ஸாகீ'க்காரர்களின் அறநெறி உணர்வும் மத நோக்கு அற்றே இருந்தது. இந்தக் கதைகள் குறுகிய மத நோக்கிலிருந்து மட்டுமல்ல: குறுகிய பிரதேச மனப்பான்மையினின்றும் கூட விடுபட்டவை. குரு நானக் பாரதத்தின் நான்கு திக்குகளுக்கும் போய் வந்தவர். சொல்லப்போனால் அப்பாற்பட்ட வெளி நாடுகளுக்கும் சென்று வந்தவர். இந்த 'ஸாகீ'க்கள் பல்வகையான உயிர்ப் பிராணிகள், மண் வளங்கள், பருவங்கள். மக்கள் ஆகியவற்றோடு தொடர்பு கொண்டவை இவற்றில் அரசர்களும் உண்டு, அவர்களுடைய அவையோர்களும் உண்டு. ஏழைத் தச்சரும் கருமாரும் உண்டு. அறநெறியில் ஈடுபட்ட சூப்பிகள், துறவிகள், பக்கீர்கள் ஆகியோரும் உண்டு. தர்ம—கர்மங்களை வெறுத்தவர்கள், கொலை, கொள்ளை, களவு, வழிப்பறி புரிவோர், அரக்க குணம் படைத்தோர்—இப்படியாக எல்லா வகை மக்களுமே பங்கு கொள்வது உண்டு. குரு நானக்குடன் தொடர்பு கொண்டிருந்தபொழுதிலும் ஒவ்வொரு கதையும் வாழ்க்கையைப் புதுமையாகப் படம் பிடித்துக் காட்டுபவை வாழ்க்கையின் எந்தப் புது முயற்சிக்கும் திட்டத்துக்கும் விளக்கம் தருபவை. இவற்றில் வாழ்க்கையின் பல்வகை வேறுபாடுகளும் ஆழமும் காணக் கிடைக்கின்றன. உருவ அமைப்பைக் கொண்டு நோக்கினால் இந்த 'ஸாகீ'க்கள் இன்றையச் சிறுகதை மரபுக்கு வெகு நெருங்கியுள்ளன. எல்லாவற்றுக்கும் மேலாகச் சுவையான உண்மை ஒன்று என்ன வென்றால், 'ஸாகீ' இலக்கியம் கதையைக் கதை சொல்லும் பழைய போக்கிலிருந்து பிரித்து இனம் காட்டுகிறது. இந்த 'ஸாகீ'க்கள் அறநெறிக் கதைகள் போன்று நீண்டவையும் அல்ல: கடவுளர் கதை போன்று அற்புதங்கள் நிகழ்த்திக் கேட்போர்களை வியப்பில் ஆழ்த்துபவையும் அல்ல நாடோடிக் கதைகள் போன்று வெறும் பொழுது போக்குமட்டும் இவற்றின் கொள்கை அல்ல. இவற்றின் உருவம் சுருக்கமானது: நோக்கமுடையது. மானிட அநுபவங்களைப் போலவே சுருக்கமும் பொருளும் பொதிந்தவை இவை.

இப்படிப் பிறந்த ஸாகீக்கள் இருநூறு இருநூற்றைம்பது ஆண்டுகள் வரை படைக்கப்பட்டுப் பழக்கத்தில் இருந்தன. இவை பஞ்சாபி வாசகர்கள்—கதை கேட்பவர்கள் இவர்களிடையே ஒரு புது விதமான இலக்கியச் சுவைக்கு அடி கோலின. இந்த உரை நடை வடிவம் பஞ்சாபிச் செய்யுள் வடிவத்திலும் கூட ஊடுருவிப் பாய்ந்தது. யாப்பிலக்கணத்துக்குள் அடங்கிய மொழி நடையிலும் இத்தகைய சிறு கதைகள் உருவாக்கப்பட்டன. பாயீ குருதாஸ் பாடல் நடையில் ஏறக்குறைய இருபத்து மூன்று கதைகள் இயற்றியுள்ளார். இவற்றில் ஒன்றை எடுத்து உரை நடை வடிவம் கொடுத்தால், இன்றையச் சிறு கதையின் குண நல இயல்புகளை அப்படியே காணலாம். முக்கியமான வேறுபாடு ஒன்று என்ன வென்றால், இந்தக் கதைகளுக்கும் ஆதாரம் தனி மனிதனின் அநுபவம் அல்ல. மக்களிடையே புழங்கி வந்த உலகப் பேச்சுக்களே யாகும். ஆனால் இப்படைப்புகளைப் படித்துக் கதை, சிறுகதை இவற்றுக்கான வேறுபாட்டை எளிதில தெளிய முடியும்.

இடைக்காலத்தில் பஞ்சாபி இலக்கியம் இரு கிளைகளாகியது பஞ்சாபிக் கட்டுக கதைகள், 'தசம கிரந்த'த்தின் ஸ்திரீ சாகசங்கள அல்லது வரலாற்று உபகதைகள் என்று இப்படைப்புகளைப் படிக்கும்பொழுது மத்திய யுகத்தில் அதாவது இடைக்காலத்திலேயே பஞ்சாபி இலக்கியம் நவீனப் போக்கைப் பற்றிக் கொண்டு விட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது. நவீனத் தனமையின குறிப்பான சிறப்பு என்ன வென்றால், தனி மனிதனின் சிறப்பியல்பை எடுத்துக் காட்டுவதாகும். நமது பண்டை காலத்திலும் இடைக்காலத்திலும் மனிதன் உயிரினத்தின ஓர் அங்கமாக ஜீவனைக் கருதபபட்டான்; தனி மனிதனை, தனக்கென்று ஒரு சிறப்பு இயல்பு கொண்டவனைக கருதப்படவில்லை ஓர் உயிரை மற்றோர் உயிரிலிருந்து பிரித்து இனம் காண்பது கடினமாயிருந்தது. ஏனெனில் ஒவ்வொரு ஜீவனுககும் ஒரு பொதுவான 'போஸ்' இருந்தது அவ்வுருவத்தைக காத்துக் காத்தே வாழ்க்கை முழுவதும் ஓடிவிட்டது. இந்த ஜீவன்கள கதைகளுக்கு ஒரு நிரந்தரமான பாத்திரமாக அமைந்து வந்தன அவற்றுக்கு ஒரு வளர்ச்சியே கிடையாதோ என்று கூடத் தோன்றியது. உத்தம நாயகர்களும் வீரத் தலைவர்களும் ஒன்று போலவே, எவ்வித மாற்றமும் இன்றி நேரிய முறையில் சித்திரிக்கப் பட்டனர். அவர்களுக்கென்று தனியானதோர் ஆசை உணர்வைக் காணமுடியாது; அவர்களுக்கு உள்ள தனிச் சிறப்பையோ விந்தையான இயல்பையோ சித்திரிக்கும் ஆர்வம் கூட அந்த நாளில்

இருந்ததாகத் தெரியவில்லை. மனிதன் உலகத்துக்கும் அறநெறிகளுக்கும் உட்பட்டு, அவற்றின் உறவு முறைக்குக் கட்டுப்பட்டு வாழ்ந்து வந்தான். உறவு முறையில் மாறுதலைக் காண்பதற்கோ காட்டுவதற்கோ இடமே ஏற்படவில்லை. உலகத்தின் உறவு முறைப்படி மனிதன் ஒரு குடிமகன். அறவழி, மத நெறிப்படி அவன் ஆண்டவனின் அடிமை. உண்மையில், பண்டைய கால, மத்திய கால சமூக ஏற்பாடு முழுவதுமே அடிமைத்தளையின் அடிப்படையிலே நின்றது. பஞ்சாபிக் கட்டுக்கதைகளும் ஸ்திரீ சாகஸக் கதைகளும் இந்த அடிமைப் போக்குக்கு எதிராகச் கிளர்ச்சிக் குரல் கொடுத்தவை. அடிமை ஒருவன் எளிதில் தலை நிமிர்த்திக் கழுத்தைத் திருப்பி அகத்தையோடு, 'போதும்! இதுவரை நடந்தது நடந்துவிட்டது. இனி இந்த அடிமை வாழ்வுக்கு இடம் இல்லை!' என்று குரல் எழுப்புவதுபோலத் தோன்றுகிறது. பஞ்சாபிக் கதைகளில் இடைக்காலத்திய வாழ்க்கை மதிப்பீடு முறிந்துவிட்டதாகவே காண்கிறது. பெண்கள் தாய்-தந்தையருக்கு அடிமையாயிருப்பதை ஏற்கவில்லை; மறுத்துவிட்டனர். ஒரு நாட்டுக்கும் மற்றொரு நாட்டுக்கும் இடையே, ஒரு மதத்துக்கும் மற்றொரு மதத்துக்கும் இடையே அன்புடைமை உதயமாகியுள்ளது. ஸஸ்ஸி—புன்னு, ஸோஹ்னி—மஹீவால் போன்ற கதைகள் இதற்குச் சான்று. வேண்டா உறவுகளிலும் கூட அன்பு ஏற்றம் கண்டிருக்கிறது. உதாரணம், மிர்ஜா—ஸாஹிபான். பெண் இனத்தின் இடையிலேயும் புரட்சிக் குரல் கொடுக்கும் துணிவு ஏற்பட்டுள்ளதைக் காணலாம். இக்கதைகளின் மூலம், உயிரினம் தனி மனிதனாக உருவெடுத்ததையும், தனி மனிதன் தன் ஆசைகளையும் எண்ணங்களையும் தைரியமாக வெளியிடுவதைத் தெள்ளத் தெளியக் காண்கிறோம். பெண் சாகசக் கதைகளில் பெண்ணின் ஆசைகளும் அபிலாஷைகளும் கிளர்ந்து எழுந்து பழி வாங்க முடிவெடுத்தாற்போலத் தோன்றுகின்றன. பல்லாண்டு பல்லாண்டுகளாக அடிமையின் சின்னமாகத் திகழ்ந்தவள் பெண். ஒருபுறம் குரு கோவிந்த சிங் போன்ற மக்கள் தலைவர்கள் அடக்கி ஒடுக்கப்பட்ட மக்களை சுல்தான்கள், பாதுஷாக்கள் போன்றவர்களின் அடிமைத் தளையிலிருந்து விடுவிக்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருந்தனர். இன்னொருபுறம் இலக்கியத்தில் விடுதலை உணர்வு உறக்கம் கலைந்து சோம்பல் முறித்து எழுந்து உட்கார்ந்து கொண்டிருந்தது. இலக்கியப் போர், வாழ்க்கைப் போர் இரண்டும் சம இடைவெளிவிட்டுச் சேர்ந்தாற்போல் நிகழ்ந்து கொண்டிருந்தன. காதல் கதைகளின்

பாத்திரங்களான ஹீர், ஸோஹ்னி, ஸஸ்ஸி போன்றவர்களும் வரலாற்றுக் கதைகளின் பெண் பாத்திரங்களும் அடிமை உணர்வு என்னும் அஸ்திவாரத்தில் நின்ற மக்கள் உறவுக்கு அறை கூவல் விடுத்துக் கொண்டிருந்தனர். இந்த அறை கூவலை எத்தனை அழகாகக் கதைகளின் உதவி கொண்டு வெளியிட முடியுமோ, அவ்வளவு அழகாக இலக்கியத்தின் வேறு எந்தத் துறைகளின் உதவி கொண்டும் வெளியிட முடியாது. இந்தக் கதைகள் புரட்சி உணர்வு காரணமாகவே, பாஞ்சால மக்களின் வாழ்க்கையில் ஆழம் பதிந்துள்ளன. பஞ்சாபிப் புரட்சி பழைய மதிப்பீடுகளை அழிப்பதோடு புது மதிப்பீடுகளுக்கும் அடி கோலுகிறது. பெண் சாகசங்களில் பழைய கோட்பாடுகளும் வாழ்க்கை மதிப்பீடுகளும் நசிக்கின்றன. காதல் கதைகளில் புதிய உரிமைகளை நிறுவ முயற்சி மேற்கொள்ளப் படுகிறது. நவீன யுகம் தொடங்குவதற்கு முன்னலேயே, தளர்ந்து நலிந்துபோன வாழ்க்கைக் கோட்பாடுகளை விலக்கவும் புது மதிப்பீடுகளைப் புகுத்தவும் பஞ்சாபி இலக்கிய கர்த்தாக்களுக்குப் பரம்பரை பாத்தியதை கிடைத்து விட்டது. இந்தக் கதைகளில் உள்ள விசேஷச் சிறப்பு என்ன வென்ருல், மானிட உணர்வும் மண்ணின் மாண்பும் ஆகும். பஞ்சாபில் அவதார நம்பிக்கை மலர வாய்ப்பே கிட்டவில்லை. அதன் பலன், சங்கடமான சமயத்தில் மனிதன் ஆண்டவனை நினைத்தாலும், அவனை மண்ணுலகுக்கு அவதாரம் எடுத்து வருமாறு அழைப்பதில்லை. மனிதன் தன் சங்கடங்களைப் போக்கிக்கொள்ளத் தானே தான் முயற்சி மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. அவதார புருஷனை ஏற்கும் கதையின் முடிவு நிச்சயமாக வெற்றியில்தான் கொணடுவிடும். ஆனல் மனிதனின் கதையின் முடிவு வெற்றி—தோல்வி இரண்டிலும் முடியக்கூடும். இதன் காரணமாகக் கதையிலே பல்வகைச் சுவை கூடக் கூடும். அதோடு ஆழமும் இருக்கும். மனிதனிடம் இடையரு ஈடுபாடு கொண்டுள்ளதானலேயே பஞ்சாபிக் கதை இடைக்காலத்திலேயே புதுக் காலத்தின் போக்கை ஏற்றுக்கொண்டு விட்டதாகத் தோன்றுகிறது.

வீர சிங் நவீன பஞ்சாபி இலக்கியத்தைத் தொடங்கியவராகக் கருதப்படுகிருர். பஞ்சாபி மொழியில் முதன் முதல் நவீனம் எழுதியவர் இவரே. இந்த நவீனங்களை நெடுங்கதை என்றே கொள்ளல் தகும். இக்கதைகள் பஞ்சாபியரின் இயல்பு, பாரம்பரியம் ஆகியவற்றைப் பேணி வளர்ப்பவை. 'ஸுந்தரி', 'ஸத்வந்த் கௌர்' இரண்டும் ஆழ்ந்த தார்மீக உணர்வில் உருவானவை; அறநெறியின் நிறமேறியவை—ஆனல் இவற்றில் கதை தனி மனிதனின்

உதவி கொண்டு முன்னேறுகிறது; பூமியில் ஊன்றிய கால்களை வேர் பறிக்கவிட்டு வானத்தில் பறக்கவில்லை. பெரும் சங்கடங்களும் பலத்த புரட்சிகளும் இந்தக் கதைகளின் நாளங்களிலே புரையோடுகின்றன. பஞ்சாபி மொழியில் நவீன சிறு கதைகள் நானக் சிங்கிலிருந்து தொடங்குவதாகக் கொள்ளவேண்டும். நானக் சிங்கின் காலத்துக்குள்ளேயே நடுத்தர வகுப்பு தோன்றி விட்டது. நடுத்தர வகுப்பின் வளைந்து கொடுக்கும் தன்மையிலேயே ஓர் அழகு. அதனைப் படம் பிடித்துக் காட்டியே மெருகு கூட்டி விடமுடியயும் அதன் எந்த ஈடுபாடும் இறுதியானதென்றோ உறுதியானதென்றோ கூறி விடமுடியாது. புதுப்புது உறவுகளை ஏற்படுத்திக் கொள்வதிலும் அது தயங்குவதில்லை; சிணுங்குவதில்லை. நானக் சிங்கின் கவனம் முழுவதும் நகர்ப்புறத்தை நோக்கியிருந்தது. நகர்ப் புறத்து வாழ்வைப் போலவே அவருடைய கதைகளிலும் பல்வகைச் சுவை உண்டு: உறுதியின்மையும் உண்டு எனவே, அவரது கதைகள் உறுதியான மனித உறவையோ வலுவான வேரூன்றிவிட்ட பழக்க வழக்கங்களையோ பிரதிபலிப்பவை அல்ல ஒவ்வொரு கணமும் நிகழும் மனிதனின் புதுப்புது அனுபவங்களைச் சித்திரிப்பவையே ஆகும். இவற்றில் பழைமை ஏற்றிய புரட்சியையோ, பழைமையில் ஊறிய காதல் உணர்வையோ காணமுடியாது. இப்படைப்புகள் சங்கடங்களை அடிப்படையாகக் கொண்டவையோ, அறநெறியில சிறந்தவையோ அல்ல. ஏன, வெறும் உடல் தேவைகளையும் கூடக் கோடி காட்டுபவை அல்ல. நானக் சிஙகிடம ஓர் ஆழ்ந்த வாழ்க்கை நோக்குக கிடையாது. அவர் வெற்றிக்கு அடிப்படை, இயல்பாக அவர் நடுத்தர வகுப்பினரின் உணர்வைப படம் பிடித்துக் காட்டுவதே ஆகும். நம்மையறியாமலே அவர் பஞ்சாபி இலககியத்தின் நோக்கை பல நிர்பபந்தமான கட்டுப்பாடுகளிலிருந்து விடுவித்திருக்கிறார். இந்தத் தொகுப்பில் சேர்க்கப்பட்டிருககும் 'சீட்டாட்டப் பழக்கம்' எனனும் அவரது கதை நடுத்தர வகுப்பாரின் வாழ்க்கை முறையை வெகு துல்லியமாகச் சித்திரிக்கிறது இந்த வாழ்க்கை முறைதான் நானக் சிங்கின் கலைககு ஆரம்பமும் முடிவும் என்று கூடச் சொல்லலாம். இந்த மையப் புள்ளியிலிருந்துதான் பஞ்சாபி இலக்கியத்தின் புதுமையும் தொடங்குகிறது.

நானக் சிங்குககு அடுத்தபடியாகப் பஞ்சாபிக் கதை உலகில் குருபகஷ் சிங்கின் பெயர்தான் சிறப்பாக அடிபடுகிறது. குருபக்ஷ் சிங் பஞ்சாபிக் கதையைக் கொஞ்சம் முன்னுக்கும் இட்டுச் செல்

கிறார்; கொஞ்சம் பின்னுக்கும் இழுத்துச் செல்கிறார். அவர் கதையை வாழ்க்கை நோக்கோடு இணைத்து அதற்கு ஒரு புதிய பெருமை அளித்திருக்கிறார். ஆனால் நடுத்தர வகுப்பினரைப் பற்றிய அவருடைய கருத்துகளும் உணர்வுகளும் நானக் சிங்கைப் போன்று எளியவை அல்ல. அவர் கால் ஊன்றி நிற்பது உணர்ச்சி மிகுந்த ஆதரிச மண்ணில் ஆகும். எளிய யதார்த்த பூமியில் அல்ல. நடுத்தர வகுப்பினரின் வாழ்க்கை யதார்த்தமும் ஆதரிசமும் இழுத்துப் பறிந்து இறுக்கம் காணும் வாழ்க்கையாகும். எனவே, கதை பொதுவாக இழுபறி நிலையில் தொடங்கி இழுபறி நிலையிலேயே முடிந்து விடுகிறது. நானக் சிங்கின் எழுத்தில் அன்றாட யதார்த்தத்தோடு இறுக்கமான நெருக்கத்தைக் காணலாம். குருபக்ஷ் சிங்கின் படைப்புகளில் இந்த நெருககம் உணர்ச்சி மிகு ஆதரிசத்தோடு ஒட்டி நிற்கும். நடுத்தர வகுப்பைச் சேர்ந்த மனிதன், எந்த ஆசைகளை அநுபவிக்கத் தயங்கி நாணுகிருனோ, அந்த ஆசைகளுக்கு ஆதரிச ரீதியில் குருபக்ஷ் சிங் விளக்கம் தந்திருக்கிறார். இந்த விளக்கம் இயல்பான அன்பில் தொடங்கி உடல் உறவு வரை விரிவதைக் காணலாம். ஆனால் அவர் காதலை வெறும் உடல் உறவு கொள்ள விழையும் பொருளாக ஏற்கவில்லை. அவ்வுடலை ஆன்ம உறவு அற்றதாகவும் கருதவில்லை. உடலுக்கும் உள்ளத்துக்கும் ஓர் அழுத்தமான முடிபோட்டே காண்கிறார். எனவே, அவர் கதைகள் மனிதனைக் காட்டிலும் அவனுடைய உணர்வுகளோடு அதிகம் தொடர்பு கொண்டவையாக உள்ளன. நானக் சிங், குருபக்ஷ் சிங்—இருவருடைய முயற்சிகளும் பஞ்சாபிக் கதைக்கு ஓர் ஆதாரம் அளித்துள்ளன. கதை உண்மைக்கும் மெய்க்கும் உறைவிடமாக, நிலைக்கும் உணர்வுக்கும் இருப்பிடமாக, எளிமைக்கும் அறிவுக்கும் இலக்கணமாக, காட்சிக்கும் நோக்குக்கும் அணிகலனாக, விரிந்து பரந்திருப்பதாகவே தோன்றுகிறது.

ஸேகோன்—துக்கல் இருவரும் பஞ்சாபிக் கதைக்கு ஒரு முதிர்ச்சி நிலையை அளித்தனர். உணர்ச்சியில் தம்மை இழக்காமல் உணர்ச்சி மிகுந்த கதைகள் சொல்வதில் ஸேகோன் இணையிற்றவர். 'பேமீ தே ந்யாணீ' 'முட் விதவா' என்னும் கதைகள் அவரது சிறந்த படைப்புக்கு எடுத்துக் காட்டு ஆகும். ஸேகோன் மார்க்ஸ்வாதி அறிஞர் என்ற முறையில் புகழ் வாய்ந்தவர். பஞ்சாபியில் விமரிசகனுக்கு அறிவு சார்ந்த நோக்கை யளித்து கெட்டியான அஸ்திவாரம் இட்ட பணியில் ஸேகோன் அவர்களுக்கும் பெரும் பங்கு உண்டு. ஆனால் கதை கூறும்பொழுது அவருடைய அறிவாற்றல்

நேரிடையாகக் குறுக்கிடுவதில்லை. அவரை யறியாமலே, மறை முகமாகக் கதையின சூழ்நிலை முழுவதிலும் அது வியாபித்திருக் கிறது. அதன் பயனுகக் கதைக்கு அறிவு முதிர்ச்சி அடித்தள மெனக் கிடைக்கிறது. அதோடு கதை ஓட்டமும் தங்கு தடை யின்றி ஓடி அழகு கூட்டுகிறது.

கர்த்தார் சிங் துக்கல் பஞ்சாபி மொழியின் தலை சிறந்த கதை எழுததாளர் ஆவார். அவர் நவீனங்களும் நாடகங்களும் கூட எழுதி யிருக்கிருர். கவிதையிலும் கைவரிசையைக காட்டியிருக் கிருர். சிற்சில சமயம் எழுததின் சுவை மாற்றத்துக்காக விமர் சன உலகத்திலும் புகுந்து புறப்பட்டிருக்கிருர். ஆனுல் அவரைக் கதை எழுத்தாளர் என்ற முறையில்தான் நினைவு கூரப்படுகிறது. பஞ்சாபி மொழியில் இடையருது கதையை ஒரு சாதனை யென மேற்கொண்டது துக்கல் மட்டுமேதான். பஞ்சாப் மக்களது கடந்த முப்பது ஆண்டுகளின் உணர்ச்சி வரலாற்றினைத் துக்கலின் கதை கள் பதிந்துள்ளன. ஆனுல் மறைமுகமாகத்தான். ஏனென்ருல் துக்கல் தமது கதைகளுக்கே முக்கிய இடம் கொடுத்து நியாயம் வழங்கி யிருக்கிருர். ஓர் இயக்கத்துக்கோ கருத்தோட்டத்துக்கோ அவர் அவ்வளவாக மதிப்புத் தரவில்லை. 1947ம் ஆண்டுக்கு முந்திய அடிமை நாடு, இரண்டாது மகா யுத்தம், 1947ம் ஆண் டின் பயங்கர நிலவரம், இந்தியா—பாகிஸ்தானுக்கு இடையே உள்ள ஒற்றுமை உணர்வு, பிரிவு மனப்பான்மை, இலக்கிய வளர்ச்சி, இந்திய—பாகிஸ்தானியப் போர்—எல்லாவற்றைப் பற்றிய உணர்ச் சிச் சுழலையும் துக்கலின் கதைகளில் காணலாம். அவருடைய கதைகளில் கம்பீரமான பொருள்களையும் எளிய, புரியக்கூடிய வகையிலே அநாயாசமாக விளக்கியிருப்பதைக காணலாம். வாழ்க்கை முழுவதையும் நாணய நோக்கோடு அணுகுவதால், அவருடைய கதைகளில் ஒருதலைப் பட்சத்தையோ மிகைப்படுத்தப் பட்ட இன இன்ப விழைவுகளையோ, அடையாளத்துக்குக் கூடக் காணமுடியாது. அவர் மனத் தத்துவம், மார்க்ஸ்வாதம் இரண் டையும் சிறப்பாகப் பயன்படுத்திக் கொண்டு பயன் அடைந்திருக் கிருர். பல முறைகள் சாமான்ய நடைமுறைக்கு ஒவ்வாத விஷயங் களையும் கூறியிருக்கிருர். துணிவு, தனடக்கம்—இரண்டையும் அழகாக இணைத்திருப்பதைத் துக்கலின் கதைகளில் காணலாம். மொத்தத்தில் துக்கலின் கதைகள் இன்றைய உலகத்தைப் பொருந்தவரை ஒரு முழு மனிதனின் எதிர்த்தாக்குதல் எனவே கொள்ளவேண்டும்.

1947ம் ஆண்டு நாட்டுப் பிரிவினை முக்கியமாகப் பஞ்சாபி கதை உலகை வெகுவாகப் பாதித்தது. காரணம், இந்தப் பிரிவினை பாஞ்சால மக்களின் உள்ளத்தையே ஓர் உலுக்கு உலுக்கிவிட்டது. சில கதையாசிரியர்கள். முஸாபிர், துக்கல், விர்க், ஸர்ணு, ஸத்யார்த்தி, பக்ஷீ போன்றவர்கள் மேற்குப் பஞ்சாபை விட்டுக் குடி பெயர்ந்து இங்கு வந்தனர். தனிப்பட்ட முறையிலே மனப்புண் உற்றபொழுதிலும், இந்த எழுத்தாளர்களின் கதைகள் நிலை தடுமாருமல் தராசு முனையில் நின்று விந்தை புரிந்தன. இந்தக் கதைகளில் வரலாற்றுக் கசப்பு சிறிதளவுகூடக் காணக் கிடைக்கவில்லை. இந்தக் கதைகள் ஒரு கணத்தில் தோன்றியவையாயினும், இவற்றில் பஞ்சாபியரின் வாழ்வு நிலை பிறழாமல் சீரிய வகையில் சித்திரிக்கப்பட்டுள்ளது. இந்தத் தொகுப்பில் உள்ள 'கஸ்மான் கானே,' 'கப்பல்,' 'சவியான் தீருத்,' 'மோதீ' என்ற நான்கு கதைகளும் நாட்டுப் பிரிவினையோடு தொடர்பு கொண்டவையாயினும், இடம் பொருள், ஏவல், கால, தேச, வர்த்தமானம் இவற்றுக்கு அப்பாற்பட்டு, முன்பின் விளைவுகளிலிருந்து ஒதுங்கி நிற்பவை. ஒன்று இவற்றின் மீது கசப்புப் பூச்சு அதிகமாகவோ அழுத்தமாகவோ விழவில்லை. அப்படித் தோன்றும் கசப்புக் கூடத் தனது அருகில் காணும் நிகழ்காலச் செயல்களைக் குறித்ததே தவிர ஆழப் பதிந்தவை அல்ல. இந்த அழிவின் முழுப் பொறுப்பையும் ஒரு தரப்பின் தலையில் கட்டும் போக்குக் கூட இக்கதைகளில் காணப்படவில்லை. இது ஆரோக்கியம் மிகுந்த பஞ்சாபியரது இயல்புக்கு ஓர் எடுத்துக் காட்டு. இதனுல்தான் பஞ்சாபிக் கதை பஞ்சாபோடு தொடர்பு கொண்டிருந்தாலும், மனிதத் தன்மை முழுவதுடனும் தொடர்பு காட்டுவதாகக் காணப்படுகிறது.

# பொருள் அடக்கம்

# சீட்டாட்டப் பழக்கம்

"ரஹீம்"

ஸப்இன்ஸ்பெக்டர் ஷேக் அப்துல் ஹமீத் வீட்டில் நுழைந்ததுமே வேலைக்காரனுக்குக் குரல் கொடுத்தார். "பஷீரைச் சற்று என் அறைக்கு அனுப்பி வை!"

சட்டென்று தம் அறைக்குள் நுழைந்து கோட்டையும் இடுப்புப் பட்டையையும் கழற்றி அவர் கொடியில் மாட்டினார். அப்புறம் மேஜைக்கெதிரே போய் அமர்ந்து கொண்டார். மேஜையின் மீது என்ன என்னவோ பொருள்கள் அலங்கோலமாகச் சிதறிக் கிடந்தன. ஒரு மூலையில் பெரிதும் சிறிதுமாகச் சட்டப் புத்தகங்கள், சட்டமில்லாத புத்தகங்கள், காகிதங்கள் பிதுங்கிய பைல்கள் ஆகியவை கிடந்தன. நட்ட நடுவில் மசிக் கூடு, பேனா; அவற்றை ஒட்டினாற்போல் அன்றைக்கு வந்த தபால்கள் கிடந்தன. ஐந்து ஆறு கவர்கள், இரண்டு மூன்று கார்டுகள், ஒன்றிரண்டு பத்திரிகைகள்! பின் குஷன், மையொற்றி, பேப்பர் வெயிட், நூல் கண்டு என்று இவை போன்ற சிறிய பெரிய பொருள்களும் அங்கங்கே கிடந்தன.

ஷேக் ஸாஹப் உட்கார்ந்ததும் தொலை நோக்கி மூக்குக் கண்ணாடியைக் கழற்றி மேஜையின் மீது இருந்த சிறு காலி இடத்தில் வைத்தார். பிறகு கிட்டப் பார்வைக் கண்ணாடியைப் போட்டுக் கொண்டு வந்த தபால்களைப் பார்க்கலானார்.

அவர் இரண்டொரு உறைகளைத்தான் பிரித்திருப்பார்; அதற்குள் ஐந்து வயதுப் பையன் ஒருவன் உள்ளே நுழைந்தான்.

பையன் பார்ப்பதற்குச் சுருசுருப்பானவனாகவும் கெட்டிக்காரனாகவும் குறும்புக்காரனாகவும் தோன்றினான். ஆனால் தந்தையின் அறைக்குள் நுழைந்ததும் அவன் சுபாவம் அடியோடு மாறி விட்டது. சஞ்சலமும் துறுதுறுப்பும் வாய்ந்த கண்கள் குனிந்தன. உடலில் தெம்பே இல்லைபோலத் தோன்றியது.

"எதிரே உள்ள நாற்காலியில் உட்காரு!" நீண்டதொரு கடிதத்தைப் படித்தவாறே ஷேக் ஸாஹப் சிங்கமென உறுமி உத்தர விட்டார்.

பையன் பயந்தவாறே எதிரே உட்கார்ந்தான்.

"என்னைப் பார்!" கடிதத்திலிருந்து கவனத்தை அகற்றி ஷேக் ஸாஹப் இடித்துரைத்தார்: "இன்று நீ சீட்டு விளையாடினுயாமே!"

"இல்லை, அப்பா!" பையன் அச்சத்தோடு கூறினன்.

ஷேக் ஸாஹப் தமது பழக்கத்துக்கு விரோதமாகத் தொடர்ந்தார்: "பயப்படாதே. உண்மையை ஒளிக்காமல் சொல்லு. நான் உன்னை ஒன்றும் சொல்ல மாட்டேன். நானே என் கண்ணல் பார்த்தேன். அப்துல்லாவின் மகனேடு நீ அவர்கள் வீட்டு முற்றத்தில் சீட்டு ஆடிக்கொண்டிருந்தாய். இப்பொழுது சொல்லு, நீ சீட்டு விளையாடிக் கொண்டிருந்தாயா, இல்லையா?"

பையன் வாய் திறந்து எதுவும் சொல்லவில்லை. ஆனல் தலை அசைத்து 'ஆம்' என்று ஒப்புக் கொண்டான்.

"சபாஷ்!" ஷேக் ஸாஹப் மென்மையோடு கூறினர்: "நீ உண்மையைக் கூறியதற்காக நான் மிகவும் மகிழ்கிறேன். பஷீர், உண்மையில், நீ விளையாடும் பொழுது நான் என் கண்களாலே பார்க்கவில்லை. இன்னெருவர் சொல்லக் கேட்டதுதான். உன்னை ஒப்ப வைப்பதற்கு இது ஒரு முறை. நாங்கள் பல குற்றவாளிகளிடமிருந்தும் இப்படித்தான் உண்மையைக் கக்க வைக்கிறேம். அது போகட்டும். இன்று உனக்குச் சில முக்கியமான விஷயங்களைக் கூறப்போகிறேன். அதற்காகத்தான் உன்னைக் கூப்பிட்டேன். கவனமாகக் கேளு!"

"கவனமாகக் கேளு!" என்று கூறியவர் பஷீரை நோக்கினர். அவன் தந்தையின் மூக்குக் கண்ணடியை எடுத்து, அதன் '.:பிரே'மோடு விளையாடிக் கொண்டிருந்தான்.

அவன் கையிலிருந்த கண்ணடியைப் பிடுங்கி வைத்து விட்டுப் பக்கத்தில் இருந்த '.:பைல்'களில் இருந்த வாரண்டுகளின் வாசகங்களை மனத்துள் படித்தவாறே ஷேக் தொடர்ந்தார்:

"இதுபோன்ற குற்றங்கள் தான், மற்றைய குற்றங்களுக்கு முன்னேடி என்பதை நீ நினைவு வைத்துக்கொள்ள வேண்டும். ஒரு பொய் சொன்னல் தொடர்ந்து பல பொய்கள் சொல்லும்படியாகிறது. அதற்கு இப்பொழுது நீயே நேரிடை உதாரணம். சீட்டு ஆடிய குற்றத்தை மறைக்க நீ பொய் சொல்லும்படி ஆயிற்று. அதாவது ஒரு குற்றத்துக்குப் பதில் நீ இரண்டு குற்றங்கள் புரிந்து விட்டாய்!"

வாரண்டுகளைப் பழையபடியே ஃபைல்களில் வைத்தவாறே ஷேக் ஸாஹுப் பையனைப் பார்த்தார். பஷீர் பின் குஷனிலிருந்து குண்டூசிகளை எடுத்து மேஜை விரிப்பின் மீது குத்திக் கொண்டிருந்தான்.

"நான் சொல்வதைக் கவனமாகக் கேளு!" ஷேக் ஸாஹுப் அவன் கையிலிருந்து குண்டூசிகளைப் பிடுங்கிவைத்து விட்டு, ஒரு செய்தித் தாளின் பக்கங்களைப் புரட்டியவாறே தொடர்ந்தார்: "சீட்டும் ஒரு வகைச் சூதாட்டம் தான். இதில் தொடங்கித்தான் மனிதனுக்குச் சூதாட்டப் பழக்கமே படிகிறது. நன்றாகக் கேட்டுக் கொண்டாயா? இந்தப் பழக்கம் தன் ஒருவனோடு நிற்பதில்லை. ஒருவனிலிருந்து இரண்டாமவனுக்கு, இரண்டாமவனிலிருந்து மூன்றாமவனுக்கு என்று நீண்டு கொண்டே போகிறது; பூசணியைப் பார்த்துப் பூசணி சாம்பல் பிடித்ததாம் என்கிற கதைதான்."

மசிப்புட்டியில் ஒரு விரலைத் தோய்த்து, அந்த மசியைக் கொண்டு ஒரு வெற்றுக் காகிதத்தில் கழுகு-குதிரை போன்ற படங்கள் வரைவதில் பஷீர் அப்பொழுது முனைந்திருந்தான். சாம்பல் பூசணியைப் பற்றிக் கேட்டதுமே, அவன் மசி தோய்ந்த தன் விரலை, மேஜைக்கு அடியில் தொங்கிக் கொண்டிருந்த விரிப்பில் துடைத்துக்கொண்டான். சாம்பல் பூசணியே தன் கையில் இருப்பது போன்ற உணர்வோடு தந்தையை நோக்கினான்.

"பஷீர்!" பையனுக்கு எதிர்த்தாற் போலிருந்த மசிப் புட்டியை எடுத்து அப்பால் வைத்தவாறே ஷேக் ஸாஹுப், "நான் சொல்வதைக் கவனமாகக் கேளு!" என்றார். அதற்குள் தொலைபேசியின் மணி அடிக்கவே, ஷேக் ஸாஹுப் எழுந்து ரிசீவரை எடுத்தார்: "ஹலோ! எங்கிருந்து பேசுகிறீர்கள்?... பாபு புருஷோத்தம் தாஸா? ஆதாப் அர்ஜ்! வணக்கம்! சொல்லுங்கள், என்ன உத்தரவு?.... லாட்டரி டிக்கட்டுகளா....? இன்று மாலை நான் ஃபாரம் பூர்த்தி செய்து அனுப்புகிறேன். எத்தனை ரூபாய் ஐந்து டிக்கட்டுகளுக்கு?... ஐம்பதா?... சரி! ஆனால் இது வரை நீங்கள் ஏதாவது பரிசு தந்திருக்கிறீர்களா?.... நமக்கு அதிர்ஷ்டம் எப்பொழுதோ, அப்பொழுது தானே கிடைக்கும்?.... உங்களால் என்ன செய்து விடமுடியும்?... சரி, வணக்கம்!"

ரிசீவரை வைத்து விட்டு அவர் மீண்டும் தம் ஆசனத்தில் அமர்ந்தார். "இதோ பார்! இனிமேல் குறும்புகள் செய்யாதே.

பேப்பர் வெயிட் தரையில் விழுந்தால் உடைந்துவிடும். அதை வைத்துவிட்டு நான் சொல்வதைக் கேளு!'' என்ருர்.

“ஆமாம், நான் என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்?'' மற்ெருரு ஃபைலின் நாடாவை அவிழ்த்தவாறே ஷேக் ஸாஹப் தொடர்ந்தார்:'' சீட்டாட்டத்தின் கெடுதிகளைத் தானே சொல்லிக் கொண்டிருந்தேன்? சீட்டிலிருந்து சூதாட்டம். சூதாட்டத்திலிருந்து திருட்டு. திருட்டிலிருந்து எதில் எல்லாம் கொண்டுபோய் விடுகிறது, தெரியுமா?'' பஷீரைப் பார்த்துப் பேச்சை முடித்தார்: ''ஜெயில், அதாவது சிறைத் தண்டனை!''

ஃபைலிலிருந்து வெளியே துருத்திக்கொண்டிருந்த ஒரு மஞ்சள் காகிதத்தில் பேனு முனையினுல் ஓட்டை செய்து கொண்டிருந்தான் பஷீர்.

“உதவாக்கரை! மட்டம்!'' என்று கூறி அவன் கையிலிருந்து ஷேக் ஸாஹப் பேனுவைப் பிடுங்கிவைத்தார். “இந்தத் தீய காரியங்களை விட்டுவிட்டு நான் சொல்கிறதைக் கேளு! ஒவ்வொரு நாளும் நாங்கள் எத்தனை திருடர்களைப் பிடித்துச் சிறைக்கு அனுப்பவேண்டி யிருக்கிறது, தெரியுமா? இவர்கள் எல்லோரும் சீட்டு விளையாடி விளையாடித்தான் திருடக் கற்றுக் கொண்டிருக்கிருர்கள். அவர்கள் தலையில் இந்தச் சட்டத்தின் கோல் சுழலாமல் இருந்தால், இன்னும் என்ன என்ன அநியாயம் செய்வார்களோ, தெரியாது!'' ஷேக் ஸாஹப் மேஜையின் ஒரு மூலையில் இருந்த 'இந்தியன் கிரிமினல்' கோட் நூலைச் சுட்டிக் காட்டிஞர். ஆனுல் பஷீரின் கவனம் வேறு ஒரு நூல் மீது பதிந்திருந்தது. அதன் கட்டடத்தில் ஒரு மூலை சற்றுக் கிழிந்திருந்தது. பஷீரின் கை விஷமம் செய்து அதன் 'காலிகோ'வைப் பாதிக்குமேல் உரித்துவிட்டது.

“முட்டாள்; கழுதை!'' என்று திட்டியவண்ணம் பஷீரின் அருகிலிருந்து ஷேக் ஸாஹப் புத்தகத்தை எடுத்துத் தூர வைத்தார். “உன்னை இங்கே பைண்டுப் புத்தகத்தைக் கிழிக்கவா கூப்பிட்டேன்? நான் சொல்கிறதைக் கவனித்துக் கேளடா!'' என்று கடிந்தார். பிறகு சில சம்மன்களில் கையெழுத்துப் போட்ட வண்ணம் தம் பேச்சை இணைத்தார்: “போலீஸ் அதிகாரிகளான எங்களுக்கு அரசாங்கம் கை நிறையச் சம்பளமும் பென்ஷனும் கொடுக்கிறதே, எதற்காகத் தெரியுமா? நாட்டில் நடக்கும் குற்றங்களைக் களைந்தெறியவேண்டும் என்பதற்காகத்தான். அப்படி

யிருக்கும்பொழுது எங்கள் வீட்டுக் குழந்தைகளே சீட்டும் சூதாட்டமும் ஆடத் தொடங்கிவிட்டால், அப்புறம் உலகம் என்ன சொல்லும்? நாங்கள் தின்னும் உப்பு எப்படிச் சீரணிக்கும்...?''

பேச்சு இடையில் 'திரிசங்கு'வாக நிற்கும்பொழுதே, பின்புறத்துக் கதவைத் திறந்து கொண்டு, வாட்ட சாட்டமாக உயர்ந்த ஒரு வேலையாள் உள்ளே நுழைந்தான். ஷேக் ஸாஹப் எப்பொழுதுமே தம் வீட்டில் இப்படி நம்பிக்கைக்குப் பாத்திரமான இரண்டொரு போலீஸ்காரர்களை வைத்திருப்பது வழக்கம். அவர்களில் ஒருவன் ஆடுமாடுகளுக்குத் தீவனம் போடுபவன்; எருமை-பசுக்களைக் கறப்பவன். இன்னொருவன் சமையல் வேலைக்குக் கையாள். மூன்றாவதாக, இப்பொழுது உள்ளே நுழைந்தானே, இவன், ஆட்களிடம் பணம் கழற்றுவதற்காக வைக்கப்பட்டிருந்தான். அவன் குனிந்து சலாம் வைத்து, ''சார்! அவர்கள் வந்து உட்கார்ந்திருக்கிறார்கள்!'' என்றான்.

''எவர்கள்?''

''அந்தப் போக்கிரி புக்கியின் ஆட்கள்! தசராத் திருவிழாவின்பொழுது சூதாட்டக் கடை நடத்த விண்ணப்பம் செய்திருந்தார்களே, அவர்கள்...!''

''நீயே அவர்களிடம் பேசி முடிப்பதுதானே?''

''ஷேக் ஸாஹப் இருநூற்றைம்பதுக்குக் குறைந்து சம்மதிக்க மாட்டார் என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டேன். ஆனால்...''

''அவர்கள் என்ன சொல்லுகிறார்கள்?''

''ஒருமுறை தங்களை நேரில் கண்டு கும்பிட்டுப்போக விரும்புவதாகக் கூறுகிறார்கள். உங்களுக்குத் தடையில்லையென்றால் இரண்டு நிமிஷம் வாருங்கள். அவர்கள் வெகு நேரமாகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்!''

''சரி, வா!'' என்று கூறி எழுந்த ஷேக் ஸாஹப் ஒருமுறை பஷீரைப் பார்த்தார். அவன் தூங்கி வழிந்துகொண்டிருந்தான். ஓர் அதட்டல் போட்டு அவனை எழுப்பினால், அவன் மேஜையின் மீது மண்டையை மோதிக்கொள்ளுவான் போலிருந்தது.

''போ, போய்ச் சற்று இளைப்பாறு!'' ஷேக் ஸாஹப் கோட்டையும் இடுப்புப் பட்டையும் மாட்டிக்கொண்டு, ''மற்ற போதனை

களை மாலையிலே சொல்லுகிறேன். இனி ஒரு பொழுதும் சீட்டு விளையாடாதே!'' என்று கூறிவிட்டு வெளியே சென்றார்.

பையன் எழுந்து நின்று இரண்டொரு சோம்பல் முறித்தான், கொட்டாவி விட்டான். பிறகு கண்களைத் தேய்த்துக்கொண்டு தாவிக் குதித்தவாறு மகிழ்ச்சியோடு வெளியே ஓடினான்.

# அண்ணி மைனா

நகரத்தின் தெருவுக்கெதிரே, இரண்டு வீடுகளுக்கு இடையே அதிகபட்சம் மூன்று மூன்றரை கஜ இடைவெளி இருக்கலாம். முதல் மாடியின் இரண்டு ஜன்னல்களும்கூட எதிரும்புதிருமாக அமைந்திருந்தன. ஒரு ஜன்னல் வழியாக, எதிரே சுவரில் தொங்கிக் கொண்டிருந்த பெரிய கண்ணாடி ஒன்று தெரிந்தது. இந்த அறையில் இருந்த மற்றப் பொருள்களோ வெகு குறைவு. ஒரு கட்டில், ஒரு சிறிய ஆசனம், ஒரு மாடத்தில் மூன்று நான்கு புத்தகங்கள், சீப்பு, எண்ணெய்க் குப்பி, சுவரில் இரண்டொரு படங்கள், ஒரு கூடையில் நான்கைந்து துணிகள்! இவ்வளவுதான் தெரிந்தன.

மிகச் சிறிய அறை அது. ஒரு பெண்மணியைத் தவிர, வேறு உருவம் தென்படுவதே அபூர்வமாயிருந்தது. ஒரு சமயம் அவள் பூ வேலை செய்வாள். ஒரு சமயம் புத்தகம் படிப்பாள், ஒரு சமயம் தலைகுனிந்து உட்கார்ந்திருப்பாள். சில சமயம் நிலைக்கண்ணாடிக்கு எதிரே நின்றுகொண்டு வெகு நேரம் தலைசீவிக் கொண்டிருப்பாள். அவள் ஒரு நாளைக்கு எத்தனை தடவைதான் தலை வாரிக் கொள்வாள்? முடி சீவிக் கொள்வதில் அவளை ஒரு பைத்தியமாகவே வீட்டார்கள் கருதிவிட்டார்கள்!

நன்கு நீண்ட கேசங்கள் அவளுக்கு. அவள் திரும்பித் தன் கேசங்களின் நீளத்தைப் பார்வையினால் அளக்கும்பொழுது, அவை முழங்காலை முத்தமிடுவதைக் காணலாம். ஒருவர் ஒளியைப் பார்த்துப் பழகியவராயிருந்தால்தான், அவற்றின் ஒளிப் பெருமை அவர்களுக்குப் புலப்படும். அவளுக்குத் தன் தலைமுடி மீது அபாரப் பெருமை என்பதில் ஐயமே இல்லை.

அவளுடைய இளமை, எழில், உயரம் எல்லாமே கனகச்சிதம். எதிர்த்தாற்போலிருந்த ஜன்னல் வழியாக அவள் கண்களின் நிறத்தைக் காண முடியாதுதான். ஆனாலும் அதன் ஒளியிலே ஓர் இனிமையும் வாட்டமும் நிறைந்திருந்தன என்பது மட்டும் நிச்சயம்.

அவள் எத்தனை நேரம் தனது ஜன்னல் முனையில் உட்கார்ந்து கண்ணீர் உதிர்ப்பாள் என்று கணக்கிட்டுக் கூறமுடியாது. ஆனால் ஒருபொழுதும் ஜன்னல் வழியாகத் தலை நீட்டி அவள்

வெளியே யாரையுமே பார்த்ததில்லை. ஆயினும் தெருப் பெண்களுக்கு அவள் உட்கார்ந்திருப்பாள் என்று தெரியும். அவர்களில் யாராவது அவ்வழியே போனால், அவளை ஒரு குரல் கொடுத்துக் கூப்பிடுவார்கள்.

அவளும் சற்றுத் தலை குனிந்து இனிய குரலில் மறுமொழி அளிப்பாள்.

அவள் அறையில் இல்லாத நேரங்களில் ஜன்னல் கதவு சாத்தியிருக்கும். ஆனால் குளிர் காலத்தில் மூன்றாவது யாமமும் கோடைக் காலத்தில் இரண்டாவது யாமமும் அவளுடைய ஜன்னல் கதவு கட்டாயம் திறந்திருக்கும். ஜன்னலுக்கெதிரே முதுகைக் காட்டிக்கொண்டு அவள் அமர்ந்திருப்பாள். சிற்சில சமயம் தெருவை எட்டிக்கூட அவள் பார்ப்பதுண்டு.

ஒரு பையன்—பார்ப்பதற்குப் பாலகனைத் தோற்றம் தருவான்—கையில் புத்தக மூட்டையுடன், தெருத் திருப்பத்தில் காட்சி தருவான். அவள் கைவேலையை அப்படியே போட்டுவிட்டு இரும்புக் கிராதிகளின் இடுக்கு வழியே அவனையே உற்றுநோக்குவாள். அந்தப் பையனும் சில சமயம் மேலே பார்வையை ஓட்டுவான். அப்புறம் தன் வீட்டுக்குள் நுழைந்து விடுவான். பையன் படியேறும் 'தட, தட' ஒலி அப்பெண்ணின் செவிகளில் விழும். அவள் என்றைக்கும் அந்தப் பையனின் வீட்டுக்குச் சென்றதில்லை. ஆனால் அந்தப் பையனின் வீடு ஏற மாடிக்கு எத்தனை படிகள் என்ற கணக்கு அவளுக்கு அத்துபடி. அவன் ஒவ்வொரு படி ஏறும் பொழுதும், அடி ஓசையைக் கேட்டே அவள் தன் மார்பை எத்தனையோ முறை அழுத்திப் பிடித்துக் கொண்டிருக்கிறாள்.

அடுத்த வீட்டில் கதவு திறந்தால், எதிரேயுள்ள அறைக்குள் யாரோ வந்திருக்கிறார்கள் என்பதைப் பாராமலே அவள் புரிந்து கொண்டு விடுவாள்.

புத்தக மூட்டையை ஒருபுறம் வைத்துவிட்டுப் பையன் சிறிது நேரம் தன் வீட்டு ஜன்னல் கதவைத் திறந்து எதிர்வீட்டு ஜன்னலை நோக்குவான். அப்பெண் திரும்பி அந்தப்புறம் பார்க்க மாட்டாள். ஆனாலும் அவன் பார்வை தன்னையே பார்த்துக் கொண்டிருக்கிறது என்பது அவளுக்குத் தெரியும். தினமும் வழி மேல் விழி வைத்து அவனை நோக்குகிற கண்கள் ஆயிற்றே! ஒருநாள் அவன் பள்ளியிலிருந்து திரும்ப நேரம் ஆகிவிட்டால்,

"காகா ஏன் வரவில்லை?" என்று வருகின்ற போகின்ற பையன்களைக் கேட்கத் தோன்றும். ஆனால் அவள் அப்படி ஒருநாளும் கேட்டதில்லை.

காகா அறைக் கதவைச் சாத்திக்கொண்டு மேலே போய் விடுவான்.

இப்படியே எத்தனையோ காலம் கழிந்துவிட்டது. இப்பொழுது காகாவுக்குப் பதிமூன்றாவது வயது நடந்து கொண்டிருந்தது. எதிர்வீட்டு ஜன்னல் விஷயத்தில் இப்பொழுது அவன் ஆர்வம் அதிகமாகி விட்டது. ஒருநாள் அவன் தன் அன்னையைக் கேட்டான்:

"நம் வீட்டுக்கு எல்லோரும் வருகிறார்கள். ஆனால் எதிர் வீட்டிலிருந்து யாருமே வருவதில்லையே, ஏன்?"

"காகா! நம் தெருவில் அவர்களுடைய வீடு ஒன்றுதான் ஜைனர்களின் வீடு. அவர்கள் மாமிசம் புசிப்பதில்லை. அதனால் சீக்கியர்களோடு அவர்கள் நெருக்கம் காட்டுவதில்லை!" என்றாள் அன்னை.

"ஆனால், அம்மா! நாமும் தான் மாமிசம் புசிப்பதில்லையே!"

"மெய்தான். இருந்தாலும் சீக்கியர்கள் அனைவரும் மாமிசம் சாப்பிடுபவர்கள் என்று அவர்கள் எண்ணுகிறார்கள்!"

"அப்படியானால், அவர்கள் வீட்டைவிட்டுக் கூட வெளியே செல்வதில்லையா?"

"செல்லாமல் என்ன? வெளியே போய் வரத்தான் செய்வார்கள். இருந்தாலும் அந்த வீடு துயரத்தில் அடிபட்ட வீடு. சாவு அந்த வீட்டை அழித்துவிட்டது. ஒரே மகன் தப்பிப் பிழைத்தான். அவனுக்குத் திருமணம் செய்து வைத்தார்கள். இரண்டே ஆண்டுகளில் அவனும் இறந்துவிட்டான். அவன் இறந்தபின் ஒரு குழந்தை பிறந்தது. அதுவும் ஓராண்டு உயிருடன் இல்லை. இப்பொழுது மூன்று விதவைப் பெண்கள்தான் அழுது புலம்ப உயிர் பிழைத்திருக்கிறார்கள்!"

"அந்தக் குழந்தை யாருடையது?"

"மைனுவின் குழந்தை! ஜன்னலில் உட்கார்ந்திருப்பாளே, அவள்தான். நீ கூட அடிக்கடி பார்த்திருப்பாயே அவளை!"

"ஆமாம், அவள் எப்பொழுதும் ஏன் இப்படி ஜன்னல் அடியிலேயே உட்கார்ந்திருக்கிறாள்?"

''இளம் விதவைகளாக இருந்துவிட்டால், அவர்கள் மிகவும காபந்து செய்கிறார்கள்...... அதோடு வீட்டிலும் அதிக வேலை கிடையாது.''

''அப்படி எதற்காகக் காபந்து செய்யவேண்டும்?''

''சும்மாத்தான். வெளியாரிடம் பேச நேர்ந்தால் வீட்டைப் பற்றி ஏதாவது சொல்லிவிடலாமோ என்ற ஐயம்...... அவளுக்கு மகிழ்ச்சியே இல்லை, பார்!''

''அம்மா! நம் வீட்டுக்கு வரும் பெண் பிள்ளைகளைப்பற்றி யெல்லாம் 'இவர்களை அத்தை என்று சொல்லு. இவர்களைச் சித்தி என்று கூப்பிடு. இவர்களை அக்கா என்று அழை' என்பீர்களே, இவர்களை எப்பொழுதாவது நான் காண நேர்ந்தால் என்ன சொல்லிக் கூப்பிட?''

''யாரை? மைனாவையா?''

''ஆமாம், ஜன்னல் அடியில் உட்கார்ந்திருக்கிறார்களே, அவர்களைத்தான்.''

''அவள் உனக்கு அண்ணி. இவளுடைய வீட்டுக்காரன் இருந்தானே, அவன் தெரு உறவு முறையிலே உனக்கு அண்ணன். நிரம்ப நல்ல பையன்!''

''மைனா வென்று ஏன் பெயர் வைத்திருக்கிறார்கள், அம்மா?''

''ஏன், உனக்கு அந்தப் பெயர் பிடிக்கவில்லையா?''

''இல்லை, அம்மா! நன்றாகப் பிடித்திருக்கிறது. ஆனால் இதற்கு முன்னால் இந்த மாதிரிப் பெயரை நான் கேட்டதில்லை. நம் மாமா வீட்டிலே கூண்டிலே அடைத்து வைத்திருக்கிறார்களே, அது தானே மைனா? எத்தனை அழகாகப் பேசும் தெரியுமா அது? கிளி கூட அவ்வளவு நன்றாகப் பேசுகிறதில்லை, அம்மா!''

''மெய்தான்!''

''அம்மா! எனக்கு ஒரு மைனா வாங்கித் தருகிறாயா, அம்மா?''

''காகா! உன் மாமாவிடமே கேளேன்!''

சில நாட்களுக்கெல்லாம் காகாவின் அறையில் ஒரு கூண்டு தொங்கலாயிற்று. அவன் மேற்கூரைக்குப் போகும்பொழுதெல்லாம், அந்தக் கூண்டையும் கூடவே எடுத்துச் செல்வான்.

''அண்ணி மைனா ஜன்னலில் உட்கார்ந்திருக்கிறாள்!'' காகா தன் மைனாவுக்குப் படித்துப் படித்துச் சொல்லித் தந்தான்.

ஜன்னலடி மைனா காகாவுடன் ஒரு நாளும் பேசியதில்லை. இருந்தாலும் அவளுக்குக் காகாவின் கூண்டில் இருந்த மைனாவின் பேச்சு மிகவும் பிடித்துவிட்டது:

"அண்ணி மைனு ஜன்னலில் உட்கார்ந்திருக்கிறாள்!"

குளிர் காலத்து இரவுகளில் அண்ணி மைனு தனது அறையில் தூங்குவது வழக்கம். பரீட்சை நெருங்கிவிட்டதனால் காகாவும் சில நாட்களாக ஹாலில் தூங்கி வந்தான். அண்ணி மைனுவுக்கு எத்தனையோ முறைகள் தூங்கும் காகாவின் மூச்சொலி கேட்டதுண்டு. அவள் தன் கட்டிலிலிருந்து எழுந்து வெகு நேரம் வரை அவ்வொலியைச் செவி மடுத்தவாறு நிற்பாள்.

அவளுக்கு வயது இருபத்தைந்து ஆகிக்கொண்டிருந்தது. காகாவுக்கு இன்னும் முழுசாகப் பதின்மூன்று முடியவில்லை. 'இந்தச் சிறுவனுடன் விளையாட மட்டும் எனக்குச் சுதந்திரம் கிடைத்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!' அவள் மனத்துள் கூறிக் கொண்டதுண்டு. 'இவன் பள்ளிவிட்டு வீட்டுக்கு வரும்பொழுது, நான் ஜன்னல் வழியே தலை நீட்டிப் பார்க்க முடிந்தால், அவனோடு உரையாட முடிந்தால், எப்பொழுதாவது அவன் சுகவீனம் உற்றால், அவன் வீடு சென்று அவன் கட்டிலருகில் உட்கார முடிந்தால்... உடல் நலக் குறைவால் ஏற்படக்கூடிய எத்தகைய தீமையும் அவனை அணுக அஞ்சுமே!' என்றெல்லாம் எண்ணமிடுவாள்.

பிறகு தனக்குத் தானே சொல்லிக் கொள்ளுவாள்: 'எனக்கு யார் அந்தச் சுதந்திரத்தை வழங்குவார்கள்? நான் இந்த அறைக்குள் அடைந்து கிடந்து கிழவியாக வேண்டியவள்தான். என் கூந்தல் மாமியாரின் முடியைப்போலக் கொட்டிச் சீரழிந்துவிடும். காகாவுக்குத் திருமணம் ஆகும். அப்புறம் இந்த ஜன்னல் இப்படித் திறந்து கிடக்காது. பிறகு நான் எதை எதிர்நோக்கி இருளடைந்த இந்த வாழ்வின் நீண்ட நெடும் பகல் பொழுதையும் இராப்பொழுதையும் போக்குவேன்?"

யோசனையில் அவள் மனம் மூழ்கிக் கனத்தது. படுக்கையிலிருந்து எழுந்து அவள் ஜன்னல் அருகே சென்றாள். நிலா வீசும் நல் இரவு. திறந்த ஜன்னல் வழியே நிலா சிறுக நுழைந்து காகாவின் முகத்தில் விழுந்தது. காகா ஆழ்ந்த தூக்கத்தில் மூழ்கியிருந்தான். நீண்ட மூச்சு விட்டுக் கொண்டிருந்தான். மைனுவின் மனம் பொங்கி எழுந்தது. இரண்டு வீடுகளுக்கும் உள்ள இடைவெளி குறுகி வந்தாற்போலத் தோன்றியது. இரண்டு ஜன்னல்களுக்கும் இடையே கட்டிலைப் பரப்பி ஒரு பாலம் அமைத்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? அதன் வழியே காகாவின் அருகே சென்று....நான் அவனை எழுப்ப மாட்டேன்....

தொலேவில் இருந்தவண்ணமே ஒரு முத்தம் கொடுத்துவிட்டு என் அறைக்குக் காதும் காதும் வைத்தாற் போலத் திரும்பி விடுவேன்.

ஆனல் அந்த இடைவெளி அவள் எண்ணியதுபோல் குறை வாயில்லே.

அவள் உள்ளத்தில் பொங்கிய ஆர்வத்தின் அளவு அவளுக்குத் துணிவு ஏற்படவில்லே. அவள் திரும்பிச் சென்று தன் கட்டிலில் படுத்துவிட்டாள். சிறிது நேரத்திற்கெல்லாம் காகாவின் அறை யிலிருந்து குரல் வந்தது: "மைனு அண்ணீ...."

அவள் துணுக்குற்று எழுந்தாள். ஆனல் கூட்டில் இருந்த மைனு கொடுத்த குரல் அது. காகா முன்போலவே உறங்கிக் கொண்டிருந்தான்.

அதே நேரம், மைனுவின் மாமியார் 'முற்றம் செல்ல' எழுந் திருந்தாள். மைனுவின் அறையிலே ஏதோ கசமுசப்புக் கேட்டது. அவள் செவிகளில் "மைனு அண்ணி" என்று யாரோ கூப்பிடுவது போலக் கேட்டது. அவள் மைனுவுக்குக் குரல் கொடுத்தாள். உள்ளிருந்த மைனு சட்டென மறுமொழி அளித்தாள். அதுவே மாமியாரின் சந்தேகம் வலுக்க உதவியது.

"நீ இன்னும் தூங்கவில்லேயா, மைனு! நள்ளிரவு கழிந்து விட்டாற் போலிருக்கிறதே!"

"ஏதோ தூக்கம் கலேந்து விட்டது!"

மாமியார் இதற்குள் மைனுவின் அறைக்கு வந்துவிட்டாள். எதிர் ஜன்னலருகில் யாரோ படுத்து உறங்குவது தெரிந்தது. ஆண் பிள்ளேயின் முகமாகவும் தோன்றியது.

"நீ யாரோடு பேசிக் கொண்டிருந்தாய்?"

"நான் யாரோடு பேசுவது? என்னேடு பேச யார் இருக் கிருர்கள்?"

மாமியார் மீண்டும் எதிர் ஜன்னலே நோக்கிளுள்.

"அது சர்தார் வீட்டுக் காகா—நன்ருகத் தூங்கிக் கொண்டிருக் கிருன்!" என்ருள் மைனு.

மாமியார் போய்விட்டாள். ஆனல், 'காகா எவ்வளவுதான் சின்னஞ் சிறு குழந்தையாக இருந்தாலும், தன் வயதைக் காட்டி லும் அறியாப் பிள்ளேயாக இருந்தாலும், ஆண்பிள்ளே ஆண் பிள்ளே தானே? சிறு குழந்தையாயிருந்தாலும், அவர்களே இப்படிப்

பார்க்கலாமோ விதவைகள்?' என்று ஓர் எண்ணத்தையும் எடுத்துக் கொண்டுதான் போனுள்.

காகா பள்ளியிலிருந்து வரும்பொழுது மைனு பார்ப்பதுண்டு. காகாவும் வந்ததும் முதற் காரியமாக ஹாலுக்குப் போவான். ஜன்னல் கதவுகளை மல்லாந்து திறந்து வைப்பான். சென்ற ஆண்டைக் காட்டிலும் இந்த ஆண்டு இன்னும் பெரியவனுகத் தோன்றுகிருன் அவன்.

இது போன்ற விஷயங்கள் ஒரு காதால் கேட்டு இன்னெரு காதால் விட்டுவிடக்கூடியவை அல்லவே! சின்னஞ் சிறு மேகப் பிஞ்சுகள் பெரிய கரிய மேகங்களாகி விடுவதில்லையா?

அன்று காகா பள்ளியிலிருந்து வீடு திரும்பிய பொழுது மைனுவின் வீட்டு ஜன்னல் கதவு சாத்தியிருந்தது. அந்த ஜன்னல் கதவு அப்புறம் இரவு நேரங்களில் கூட மூடியிருக்கலாயிற்று.

இந்த ஜன்னல் காகாவின் வாழ்க்கையிலும் ஓர் அங்கமாகவே ஆகிக்கொண்டிருந்தது. அவனுடைய மனம் இப்பொழுதெல்லாம் விளையாட்டுகளில் அதிகமாகச் செல்வதில்லை. அன்னையிடம் கேட்டும் ஒரு பயனும் இல்லை. ஏனென்ருல், அந்த வீட்டோடு அவளுக்குத் தொடர்பே கிடையாது. எப்பொழுதாவது கல்யாணம் கார்த்திகை என்று வந்தால் தின்பண்டம் கொடுக்கவோ பெறவோ தான் யாராவது அந்த வீட்டு இடை கழியைத் தாண்டுவார்கள்.

அன்று தேய்பிறை இரவு, நன்ருக இருள் சூழ்ந்திருந்தது. மைனுவின் வீட்டு ஜன்னல் புறத்தில் கலகல வென்று ஒலி கேட்டது. யாரோ சாவியை மாற்றி மாற்றிப் பூட்டில் போடுவது போலத் தோன்றியது.

பிறகு மெதுவாக ஜன்னல் கதவு திறந்தது. மைனு எழுந்து கதவில் காதைப் பொருத்திஞள். யாராவது விழித்துக் கொண்டிருப்பார்களோ என்று எண்ணிஞன். பிறகு தெருவை நோக்கிஞள். காகாவின் மூச்சொலி கேட்டது. ஆம் காகா உறங்கிக் கொண்டிருந்தான். அந்த இருளில் யாருக்கும் எதுவுமே புலப்படாது. ஆனல் மைனுவின் அன்புப்பார்வை காகாவின் ஒவ்வோர் அவயவத்தையும் எடைபோட்டுக் கொண்டிருந்தது.

அடுத்த கணமே அவளுக்குத் தோன்றியது, தான் காகாவின் கட்டிலில் போய் உட்காந்திருப்பதாக; அவனுடைய மிருதுவான கேசங்களில் விரல்களை நுழைத்துக் கோதுவதாக. அவள் அவனை

எழுப்பக் கூடச் செய்தாள். மைனுவின் காதுகளில் அவளுடைய குரலே ஒலித்தது!

"காகா... காகா... காகா!"

அவன் அப்பொழுதும் தூங்கிக் கொண்டிருந்தான். 'காகா! நான் உன் அண்ணி மைனு. சற்று விழித்துக்கொள்: ஒரு கணம் விழித்துக்கொள், போதும்! ஒரு சொல், ஒரு வார்த்தை, ஒரே சொல், ஒரே ஒரு வார்த்தை!... அவ்வளவுதான்!...' மைனு கூறிக் கொண்டிருந்தாள்.

காகா பதறிப் போய் எழுந்து உட்கார்ந்தான்.

மைனுவுக்கு ஒரே வெட்கமாகப் போய் விட்டது. 'நாம் மனத் துக்குள் பேசிக்கொள்ளவில்லை. உரக்க வாய்விட்டே பேசி விட்டோம்!' என்பது அவளுக்கு அப்புறம் தான் விளங்கியது. காகா விழித்துக் கொண்டு விட்டான். இன்னும் வேறு யாராவது விழித்துக் கொண்டு விட்டால்...?

காகா தன் ஜன்னலில் வந்து அமர்ந்தான். ஜன்னல் இருளில் அண்ணி மைனு உட்கார்ந்திருக்கிருள் என்பதை அவனும் மனத் தால் உணர்ந்தான். அண்ணி மைனுவின் கழுத்தில் கைபோட வேண்டும் என்று அவன் உள்ளத்திலும் எத்தனையோ முறைகள் தோன்றியதுண்டு. ஜன்னல் அடைத்திருக்கும் விஷயத்தில் அவனுக்கும் மிகமிக மன வருத்தம்தான்.

"மைனு அண்ணி! மைனு அண்ணி!"

"என்ன காகா! என் அழகான காகா! ஆனல் கொஞ்சம் மெது வாகப் பேசு. நீ எத்தனை மெதுவாகப் பேசினுலும் எனக்குக் கேட்கும்."

"எனக்கும் கூடத்தான் உங்கள் குரல் வெகு தெளிவாகக் கேட் கிறது... நீங்கள் மிகவும் மெதுவாகத் தான் பேசுவீர்களா?"

"ஆமாம், என் அன்பே! ஆரமுதே!"

"நீங்கள் இத்தனை நாட்களும் எங்கே போயிருந்தீர்கள்?"

"என் அறையைச் சிறைச்சாலையாக்கி விட்டார்கள். இந்த ஜன்னலுக்குப் பூட்டுப் போட்டு விட்டார்கள்!"

"ஏன் அப்படி?"

"அன்றைக்கு உன் மைனு எனக்குக் குரல் கொடுத்தது. அது கேட்டு நான் எழுந்தேன். நீயாக இருக்கும் என்று நான் எண்ணி னேன். அது முதல் எனக்குப் பிடித்தது சனியன். என் மாமியரும்

அதே நேரம் பார்த்து எழுந்து தொலைந்தாள். நான் உன்னேடு பேசிக்கொண்டிருப்பதாக அவள் எண்ணிவிட்டாள்.''

"பேசினுல் என்னவாம்? நான் உங்களை என் அண்ணி யென்று தானே சொல்லிக் கொண்டிருக்கிறேன்.''

''இருந்தாலும் காகா! பெரிய பூதம் கிளம்பி விட்டது. வாசலிலும் கொல்லையிலும் பூட்டுகள் தொங்கின. அதனுல் இனி நான் இங்கிருந்து போய்விடப் போகிறேன். இந்த வீட்டில் இன்றுதான் என் கடைசி இரவு. நான் உன்னைப் பார்த்து விட்டுப் போகவேண்டும் என்று ஆசைப்பட்டேன். யாரிடமும் நீ சொல்ல மாட்டாயே?''

''நான் சொல்லவே மாட்டேன், மைனு அண்ணி!— ஆமாம், நீங்கள் எதற்காக இங்கிருந்து போகவேண்டும்? நான் பெரியவனுகப் போவேன். எனக்குத் திருமணம் நடைபெறும். என் மனைவியை உங்களிடம் அனுப்பிவைப்பேன். அவள் உங்களை எங்கள் வீட்டுக்கு அழைப்பாள். அவளைப் பார்க்க நீங்கள் வாருங்கள். அப்புறம் யாரும் எதுவும் சொல்ல முடியாது; சொல்ல மாட்டார்கள். நான் சொல்வதைக் கேளுங்கள். நீங்கள் இங்கிருந்து போகவேண்டாம்.''

''ஆனுல் காகா, நீ இன்னும் சின்னக் குழந்தை. உன் திருமணம் வெகு தொலைவில் இருக்கிறது. இந்தச் சிறைச்சாலையில் அத்தனை வருஷங்கள் எப்படிப் போகும்? அதோடு உன்னைப் பார்க்கவே கூடாது என்று தடைபோட்டுவிட்டார்களே!''

"போவதாயிருந்தால் நீங்கள் எங்கே போவீர்கள்? நான் அங்கே உங்களைப் பார்க்க வருகிறேன்!''

"வர முடியாது, காகா! நான் போகிற இடத்திலே ஆண் வாடையே அடிக்கமுடியாது; ஆண் பிள்ளைகள் யாரும் என்னேடு பேசவும் முடியாது.''

''அப்படியானுல் அங்கே போகவேண்டாம் நீங்கள்!''

"எனக்கு அதை விட்டால் வேறு வழி கிடையாது. நான் 'பூஜனி' ஆவதென்று முடிவு கட்டிவிட்டேன்!''

''பூஜனியா? அப்படி யென்ருல்..........?''

''ஜைன மதத்தைச் சார்ந்த பெண் துறவி. முடி யெடுத்த மொட்டைத் தலை, முகத்தை மறைக்கும் வெள்ளைத் துணி, வெற்றுக் கால்—இப்படிக் கோலம் பூணவேண்டும்!''

"வேண்டாம் அண்ணி. ஒருநாளும் நீங்கள் அந்தக் கோலம் பூணவேண்டாம். அவர்களைக் கண்டாலே எனக்கு அச்சம். கண்களை மறைக்கும் அவர்களுடைய அந்தத் துணி என்னவோ போலிருக்கிறது எனக்கு. அதனால்..."

"காகா! எனக்கு அதைத் தவிர வேறு வழி தோன்றவில்லை!" என்று கூறியவாறே மைனா பந்துபோல எதையோ சுற்றிக் காகாவின் ஜன்னல் வழியாக அவன் அறைக்குள் போய் விழும் படி விட்டெறிந்தாள். "என் நினைவாக அதை வைத்துக்கொள். காலையில் தேடி எடுத்துக்கொள். இப்பொழுது எடுக்க முனைந் தால், ஒலி கேட்டு யாராவது விழித்துக் கொண்டுவிடப் போகிறார்கள்!" என்றாள்.

மைனா அண்ணியின் அறை ஜன்னல் கதவு அப்புறம் சாத்திக் கொண்டது. காகா பூட்டில் சாவி திரும்பும் ஒலியைக் கேட்டான். மீதமுள்ள இரவில் அவனுக்கு உறக்கமே கொள்ளவில்லை.

மறுநாள் காலை பள்ளியிலிருந்து திரும்பியதும், அவன் அன்னை செய்தி சொன்னாள்!

"மைனா அநுபவித்த துன்பம் கொஞ்ச நஞ்சமன்று. தினமும் அவள் மாமியார் அவளோடு சண்டை பிடித்து வந்தாள்; குத்த லும் கேலியுமாகப் பேசி வந்தாள். அதனால் மைனா வெறுத்துப் போய் வீட்டை விட்டே ஓடிவிட்டாள். தான் பூஜனியாகிவிடப் போவதாகக் கடிதம் ஒன்று விட்டுச் சென்றிருக்கிறாள்."

"ஏன், அம்மா! இங்கிருந்தபடியே அவள் 'பூஜனி'யாக முடியாதா?"

"முடியாது. பூஜனியாகப் போகிறவர்கள் தன் ஊரைவிட்டு வேற்றூருக்குச் சென்று கோவிலில் தங்குவார்கள். அங்கே அவர் களைப் பலவாறாகச் சோதனைகள் செய்வார்கள். அவர்களுடைய உறுதியில் நம்பிக்கை பிறந்துவிட்டால், அவர்களைப் பத்திரமாகப் பாதுகாப்பார்கள். நல்ல உணவு, நல்ல உடை தருவார்கள். சிறிது காலம் அவர்கள் இஷ்டத்துக்கு இருக்கவிடுவார்கள். அப் புறம் அவர்களுக்கு முடி எடுத்துப் பூஜனியாக்கிவிடுவார்கள். அப்புறம் அவர்கள் நல்ல உணவு அருந்த முடியாது; நல்ல உடை உடுத்த முடியாது. ஆண்களோடு அறவே பேசவும் முடியாது."

"மைனா அண்ணி எங்கே போயிருப்பாள்?"

"கொஞ்ச நாட்கள் போனால் தெரியும்."

"ஏதாவது பக்கத்து நகரத்துக்குப் போயிருந்தால், என்னை அழைத்துப்போய்க் காட்டுகிறீர்களா, அம்மா?"

"உன் சித்தி இருக்கிருளே, அந்த ஊரில் மிகப் பெரிய ஜைனர் கோயில் இருக்கிறது. மைனு அங்கே போயிருந்தால், இரண் டொரு நாட்கள் நீ அங்கே போய் இருந்துவிட்டு வா. உன் சித்தி உன்னைக் கொண்டுபோய்க் காட்டுவாள். யாராவது எப்பொழு தாவது பூஜனி ஆனுல், நகரமே திருவிழாக் கோலம்பூண்டு கல கலப்பாயிக்கும்!" என்ருள் அன்னை.

இவ்விஷயத்தைக் கவனிக்குமாறு காகா சித்திக்குக் கடிதம் எழுதிப் போட்டான்.

இரண்டு வாரங்களுக்கெல்லாம் எல்லோருக்கும் விவரம் தெரிந்துவிட்டது. தெரு முழுவதும் மைனுவைப் பற்றியேதான் பேச்சு. ரொம்ப நல்ல பெண்! அவள் தலை நிமிர்ந்து யாரும் பார்த்ததில்லை. என்ன அழகான கூந்தல்! அதை அவள் கவனித் துக்கொண்ட முறை ஒன்று போதுமே! அத்தனையையும் வழித்து மொட்டை அடித்துவிடப் போகிருர்கள்! சாமணம் கொண்டு ஒவ் வொன்ருக எல்லா மயிரையும் பிய்த்து எடுத்து விடுவார்கள், பாவம்!

காகா சித்தியின் ஊரை அடைந்தான். அன்றுதான் அவன் சித்தி மைனுவைப் பார்த்துவிட்டு வந்திருந்தாள். அவள் வெகு நேர்த்தியாக உடுத்திருந்தாள், நகை நட்டுகளும் ஏராளமாகப் பூட்டி யிருந்தாள். அத்தனை நகைகளும் மக்கள் அவளுக்கு இர வல் தந்தவை. மக்கள் பாட்டும் கூத்துமாக ஓரே ஆரவாரம் செய்து கொண்டிருந்தார்கள். காகாவின் தெருவில் தான் மைனுவும் இருந்தாள் என்னும் விவரம் தெரிய வரவே சித்தியின் ஆர்வம் மேலும் வளர்ந்தது. அவள் ஒவ்வொரு சடங்குக்கும் போய் வரலானுள். மைனுவின் அழகு மேலும் மெருகிட்டு இருப் பதைச் சித்தி காகாவுக்குக் கதை கதையாகச் சொன்னுள். நாளை அவளைப் பல்லக்கில் வைத்து நகரம் முழுவதிலும் ஊர்வலம் விடுவார்கள். மக்கள் அவள் மீது மலர் மாரி பொழிவார்கள், பன்னீர் தெளிப்பார்கள் என்றெல்லாம் கூறினுள்.

காகா தனது அண்ணியைக் காணத் துடிதுடித்தான். மைனுவை அவன் எப்பொழுதும் ஒரே மாதிரி உடையில்தான் பார்த்திருந் தான். அந்த உடையிலேயே அவள் வெகு அழகாயிருந்தாள். இப்பொழுது நகைகள் வேறு அணிந்திருக்கிருளாமே! வெகு எடுப்பாயிருக்கும் இல்லையா? அவள் சிரித்துக் காகா என்றுமே கண்டதில்லை. மைனுவின் முறுவல் உள்ளத்தைக் கொள்ளை

கொள்ளுவதாக அமைந்திருக்கிறது என்று சித்தி குறிப்பிட்டாளே, அதை ஒரு முறையாவது காணவேண்டாமா?

மைனு கொடுத்த கைக்குட்டை, அவள் அளித்த நினைவுச் சின்னம் காகாவின் உள் பைக்குள் இருந்தது. அவன் இந்த விவரத்தை யாருக்குமே சொன்னதில்லை. ஆனால் தினமும் கைக்குட்டையை எடுத்து எடுத்துப் பார்ப்பான். காகா ஹிந்தி எழுத்துக்களைக் கற்றிருந்தான். ஏனென்றால், மைனு கைக்குட்டையில் ஹிந்தியில்தான் பூவேலை செய்து எழுதியிருந்தாள்:

'அன்புக்கு அன்பான காகாவுக்கு, அவன் அண்ணி தந்த நினைவுப் பரிசு!'

மறுநாள் நடுப்பகல் தாண்டியதும், "மைனுவின் பல்லக்கு இன்று ஊர்வலம் வரப் போகிறது. கடைத் தெருக்களில் எல்லாம் சுற்றப்போகிறது. யார் வேண்டுமானாலும் பார்க்கலாம்!" என்று சித்தி சொன்னாள்.

கேட்டதும் காகா சித்தியின் தோட்டத்துக்குள் புகுந்து மலர்களைப் பறித்துக் கைக்குட்டையில் கட்டிக்கொண்டான். பல்லக்கு அவன் இருந்த சௌக்குக்கு அருகாகச் சென்றபொழுது, அவன் வேண்டுமென்றே தன் வீட்டார்களைப் பிரிந்தான். அவன் பல்லக்கை மட்டும் பார்த்துவிட்டுத் திரும்பவில்லை; வழி முழுவதும் அவன் பல்லக்கோடு இருக்கவே விரும்பினான்.

சீருடை அணிந்த பலர் வாத்தியம் முழங்கிக் கொண்டிருந்தனர். ஜனங்கள் பணம்-காசை மாரியெனப் பொழிந்து கொண்டிருந்தனர். பல்லக்கில் அவன் அண்ணி நகைச் சுமை அழுந்த அமர்ந்திருந்தாள். அவள் முகம் வேறு விதமாக மாறிக் காட்சி அளித்த பொழுதிலும், அதில் பழைய ஒளியும் பளிச்சிடவே செய்தது. இப்பொழுது காணும் சிரித்த முகத்தைக் காட்டிலும், அந்தப் பழைய வாட்டமுற்ற விழிகளே காகாவுக்கு மிகவும் பிடித்தமானவையாகத் தோன்றின. இந்தப் பூஜனிக்குக் கொள்ளை யழகு என்று மக்கள் பேசிக் கொண்டார்கள், அவளது நகை நட்டிலும் ஆடை-அணியிலும் மயங்கி. ஆனால் இந்தப் பகட்டில் மைனு அண்ணியின் அந்தப் பேருருவத்தை முழுசாக அவனால் காண முடியவில்லை.

அவள் தன்னைப் பார்ப்பதாகத் தோன்றும் பொழுதெல்லாம் அவன் அவள்மீது மலரை அள்ளி வீசுவான். அவள் கை கூப்புவாள். ஆனால் அவள் கை கூப்பியது காகாவுக்காக அல்ல.

இந்தப் பெருங்கூட்டத்தில் அந்தச் சின்னஞ்சிறு காகா மைனு அண்ணியின் பார்வையில் எப்படிப் படமுடியும்?- காகா எண்ணியது இதுதான்.

ஒரு திருப்பத்தில் திரும்பும்பொழுது தற்செயலாகப் பல்லக்கு அவனுக்கு வெகு நெருக்கத்தில் வந்துவிட்டது. மலர் மாரிபொழியத் தொடங்கின. மைனு கைகுவித்தாள். அதே சமயம் காகா மலர் தூவ முயன்றான். மைனு அவனை அடையாளம் கண்டு கொண்டாள். அவளது அரை மூடிய கண்கள் அகல விரிந்தன. அவள் கண் கொட்டாமல் அவனை நோக்கினாள். பிறகு துணிந்து பல்லக்கை நிறுத்துமாறு சொன்னாள்.

"இந்தக் காகா எங்கள் தெருவைச் சேர்ந்தவன். என் மீது மலர் தூவ விரும்புகிறான். அவன் சிறு கைகள் பல்லக்கு வரை வரமுடியாது. அவனை ஒரு நிமிஷம் என அருகில் அழைத்து வாருங்கள்!'' என்றாள்.

இது ஒரு விந்தையான கோரிக்கை. என்றாலும் பூஜனி ஆகிறவளின் கோரிக்கையை மறுக்க முடியாது; கூடாது.

"கொண்டுவா, காகா! உன் மலர்களை நான் வாங்கிக் கொள்ளுகிறேன். நீ வெகு தொலைவிலிருந்து வந்திருக்கிறாய். என் தெருவைச் சேர்ந்த காகா நீ!''

காகா மிகவும் மகிழ்ந்து போனான். இருக்காதா பின்னே? அண்ணி மைனு அவனைப் பார்த்துவிட்டாள். அதோடு அருகில் அழைத்து இரு கைகளையும் குவித்து அவன் தந்த மலர்களையும் பெற்றுக்கொண்டாள்.

'கைக் குட்டையையும் திருப்பத் தராமல் போனாளே!' காகா யோசித்தான்: 'அண்ணி நினைவின் அடையாளமாக வைத்துக் கொள்ளுவாளே!'

ஊர்வலம் மண்டபத்தை அடைந்தது. மக்கள் விடை பெற்றனர். மைனுவும் அவளோடு சில பெண்களும் மேடை ஏறினார்கள். படிகளில் அடி வைப்பதற்கு முன்னால் மைனு ஒருமுறை திரும்பித் தன் பார்வையை ஓட்டினாள். காகா எதிரே உள்ள ஒரு கடையின் பலகைமீது நின்று கொண்டிருப்பதைக் கண்டாள்.

மேலே பிரதான பூஜாரிக் கெதிரே மைனுவை உட்கார வைத்தார்கள்.

"நீ உன் மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டு விட்டாயா?''— பிரதான பூஜாரி கேட்டார்.

"ஆம், ஐயனே! உறுதி பூண்டுவிட்டேன்!"

"நீ உனது ஆடை அணிகளையெல்லாம் களைந்து விடவேண்டும். உன் வாழ்க்கையில் நீ அப்புறம் இவற்றை ஏற்கவே முடியாது."

"சம்மதம், எனக்கு இவற்றில் சிறிதும் நாட்டம் இல்லை."

"உணவு விஷயத்திலும் நீ துறவிகளின் நியமங்களைக் கடைப் பிடிக்கவேண்டியிருக்கும். அறுசுவை உண்டி கிடைக்காது."

"எனக்கு அத்தகைய உணவு வகை தேவையில்லை, ஐயனே!"

"ஆண்களைத் தொடுவதென்ன, அவர்களைப்பற்றி நினைப்பதே நீ மேற்கொள்ளவிருக்கும் அறத்துக்கு இடையூறாக முடியும்."

மைனு நீண்ட பெருமூச்சு விட்டாள். தன் பைக்குள் வைத் திருக்கும் காகாவின் உருமாலை அவிழ்வது போலவும், அதன் முனைகள் சின்னஞ் சிறு கைகள் ஆகித் தன் இடையைத் தழுவு வது போலவும் அவளுக்குத் தோன்றியது. சட்டென அவள் தன்னைச் சமாளித்துக் கொண்டு விடை அளித்தாள்:

"ஐயனே, இதுவும் எனக்குச் சம்மதம்!"

"இனி நீ அந்த அறைக்குச் சென்று இந்த ஆடைகளைக் களைந்து விட்டு, அங்கே உனக்குத் தரப்படும் உடையை உடுத்திக்கொள். அதற்குப் பிறகு நீ உன் முடியை வெட்டிக்கொள்ள வேண்டும். பின்னர். சாமணம் கொண்டு ஒவ்வொரு கேசத்தையும் எப்படிக் களைந்தெறிய வேண்டும் என்பதை உனக்குப் பூஜனி மாதா சொல்லித் தருவாள்."

தலை முடியை வெட்டுவது, களைவது என்ற சொற்களைக் கேட் கும்பொழுதே அவளுக்குப் பொறுக்கவில்லை. வலித்தது. அதே பெருமூச்சோடு எப்படியோ துணிந்து கேட்டுவிட்டாள்:

"பெருமதிப்புக்குரிய ஐயனே! எனக்கு முடி வைத்துக்கொள்ள அநுமதி தர முடியாதா?"

"அது எப்படி முடியும்?"... தலைமைப் பூஜாரி வியப்போடு கேட்டார்.

"எனது இந்தக் கோரிக்கை விசித்திரமானது என்பதை நான் அறிவேன்!..." மைனுவுக்குத் திடீரென்று தன்னுள்ளே ஒரு துணிவு பிறப்பதுபோலத் தோன்றியது. "இருந்தாலும் தாங்கள் சம்மதம் அளித்தால்...நான் எந்த நாளும் தங்களிடம் குறை கூற மாட்டேன்... என்னுள்ளே இனம் தெரியாத முடிச்சு ஒன்று விழுந்து நெருடுகிறது... உலகமே வியக்கும் வண்ணம் என் பணி கொண்டு நான் உயருவேன்... முடி களையாமல் இருக்க எனக்கு

உத்தரவு தாருங்கள்......'' மைஞு தன் உள்ளத்தை விண்டு வைத்தாள்.

''ஆனால், அது ஒருநாளும் இயலாத காரியம். உனக்குத் தெரியாதா?''

''தெரியும், முடியை வெட்டிக் கொள்ளத்தான் வேண்டும் என்று. ஆனால்... ஆனால் வெட்டும் நேரம் இப்பொழுதுதானே வந்துள்ளது. எனது இந்தக் கூந்தலுக்கு உயிர் இருப்பதாக எனக்குப் படுகிறது. இவை என் உயிரால் ஊட்டம் பெற்று வளர்ந்தவை தானே? நான் சீப்பு எடுத்துச் சீவும்பொழுது, இவை என் பாதங்களைத் தீண்டும். அப்பொழுது இவற்றில் ஏதோ உயிர் ஓட்டம் இருப்பதாகவே எனக்குப்படும். பல்லாண்டுகளாக நான் இந்தக் கூந்தலைத் தவிர வேறு யாருடனும் பேசிப் பழகியதில்லை!'' என்றவள் தலை தரையில் பதிய வணங்கித் தொடர்ந்தாள்: ''வழிபாட்டுக்குகந்த பெரியவரே!.... ஒருமுறை நடக்காததையும் தான் நடத்தி பாருங்களேன்; இயலாததையும் தான் இயற்றிப் பாருங்களேன். நீங்கள் எடுக்கும் இந்த முடிவுக்குப் பின்னால் எந்த நாளும் வருந்த நேராது.''

பிரதான பூஜாரியின் உள்ளம் நெகிழ்ந்தது. ஆனால்... 'பூஜனிப் பெண்ணின் தலையில் கூந்தலைப் பார்த்தால் மக்கள் என்ன சொல்லுவார்கள்?' என்ற எண்ணமும் அந்த நெகிழ்வோடு தலை எடுத்தது.

''அம்மா! முடியாது, அம்மா! உன் இந்த விருப்பத்தை ஏற்க முடியாது!''

''அப்படியானால், ஐயனே! எனக்கு ஐந்து நிமிஷம் அவகாசம் கொடுங்கள். தனிமையில் சென்று என் மனத்தைத் தேற்றிக் கொள்ளுகிறேன்!'' மைஞு தன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு கேட்டாள்.

''தாராளமாக போய் எதிரேயுள்ள அந்த மேடையில் அமர்ந்து யோசித்துக் கொள்.''

மைஞு எழுந்தாள். மெதுவாக, ஆனால் உறுதியாக அடி எடுத்து வைத்து மொட்டை மாடியில் உள்ள அம்மேடைக்குச் சென்று அமர்ந்தாள். அந்த மேடைக் கூரைக்குக் கீழேதான் கடைத் தெரு இருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் மைஞு எழுந்து நின்றாள்.

''நல்ல விந்தைப் பெண் இவள்! நான் எத்தனையோ பெண்களுக்கு இந்தச் சடங்கை நிறைவேற்றி வைத்திருக்கிறேன்.

ஆனால் இவளது ஒவ்வொரு பேச்சும் நம்மையே அல்லவா சிந்திக்க வைத்து விடுகின்றது! இவள் மட்டும் பூஜனியாகி விட்டால் பெரும் புகழ் ஈட்டுவாள்.''

''ஆனால், அவள் மேடைமீது ஏறி நிற்கிறாளே, ஏன்?'' என்று வேறு ஒருவர் பதைத்துப்போய்க் கேட்டார்.

தலைமைப் பூஜாரியும் நோக்கினார், மைனா மேடைமீது ஏறித் தான் நின்றிருந்தாள். அவள் தன் பின்னலை விரல்களால் நீவி விட்டாள். போட்டிருந்த மூடி அவிழ்ந்து கொண்டது. கூந்தல் இடுப்பையும் தாண்டித் தொங்கியது. இலேசான காற்றில் பட்டுப்போன்ற அவளது கேசங்கள் படபடத்தன.

''அப்பா! எத்தனை நீளம்!''

''ஐயோ!''

எல்லோரும் எழுந்து படபடவென்று படியிறங்கி ஓடினர். கூரை மேடையிலே பெண் யாரும் நிற்கவில்லை.

அனைவரும் கீழே கூடினர். கடைத் தெருவிலே கூக்குரல் எழுந்தது. ஒரு பையன் அடிபட்ட மைனாவின் தலைமாட்டில் உட்கார்ந்திருந்தான். அவன் அவளது கலைந்த கேசங்களை நெற்றியிலிருந்து அகற்றி வகிட்டைச் சீர்ப்படுத்தினான். கரிய கூந்தலில் இடையிடையே குங்குமப் பொட்டாக இரத்தம் பளிச்சிட்டது. பையனின் விழிகளிலிருந்து நீர் அருவியாகப் பாய்ந்தது. அவன் அதே கோலத்தில் கீழே கிடந்த பெண்ணின் கண்களில் எதையோ தேடினான். அவளது விழிகள் விரிந்து கிடந்தன. இதற்குமுன் காகா அந்தக் கண்களின் நிறத்தைக் கண்டதில்லை. அன்று ஒரு நாள் இரவு கடைசி முறையாக அவள் காகாவை எழுப்பினாளே, அந்தக் கரிய இரவைப்போல அவள் கண்கள் கருத்திருந்தன. ஆனால் அன்றைய இரவின் ஆழ்ந்த கும்மிருட்டிலும் ஒரு சூரியன் ஒளிந்திருந்தான், அதனால்தான் இருள் சூழ்ந்த அந்த இரவிலும் அவள் பளிச்சென்று பார்க்க முடிந்தது. அந்தக் கண்கள் இப்பொழுதும் அதே கருமையோடு, அதே ஒளியோடுதான் காட்சி தந்தன. அவை திறந்தும் இருந்தன.

ஆனால், இப்பொழுது அவற்றில் அந்த ஒளி தரும் கதிரவனைத் தான் எத்தனை தேடியும் காணவில்லை.

# பேமியின் குழந்தைகள்

ஏறக்குறைய இருபது ஆண்டுகளுக்குமுன் நடந்தது. எனக்கு எழு வயது இருக்கும். என் தமக்கைக்குப் பதினைன்று இருக்கலாம். எங்கள் வயல வீட்டிலிருந்து ஒரு மைல் தொலைவில் இருந்தது. பாதி வழி சென்றபின் ஒரு பொதுப் பாதை இணையும். அப்பாதையிலே காடர்கள், பட்டாணியர்கள் 'ராஷே' மலைவாசிகள் போன்ற எத்தனையோ வேற்று மனிதர்களின் நடமாட்டம் அதிகம் இருக்கும். சிறுவர்களாகிய எங்களுக்கு வீட்டில் இருந்து கொண்டு 'ராஷே'க்களின் பெயரைக் கேட்டாலே பயம். அதனால் பெரியவர்கள் துணையின்றி இப்பாதையிலே செல்ல நாங்கள் மிகவும் அஞ்சினோம். ஆனால் ஒரு கஷ்டம் என்னவென்றால், நாங்கள் தினமும் ஒரு நடையோ இரண்டு நடையோ தந்தைக்கும் அவரது கூலியாட்களுக்கும் உணவு எடுத்துச் செல்லும் நிர்ப்பந்த நிலைக்கு ஆளாகியிருந்தோம். தினமும் அந்தச் சாலையைக் கடக்கும்பொழுது, ஏதோ கடக்க முடியாத பள்ளத்தாக்கிலே சிரமப்பட்டு இறங்கி ஏறுவதுபோல உணர்ந்தோம்.

பொதுவாக நாங்கள் துணிவை வரவழைத்துக் கொண்டு வீட்டிலிருந்து தனியாகவேதான் புறப்படுவோம். ஆனால் அப்பாதையை அடைய இரண்டு மூன்று திருப்பங்கள் இருக்கும் பொழுதே, கால்வாயைக் கடக்கும் நேரத்திலேயே நாங்கள் ஆட்டுக்குட்டிபோல் மிரட்சியோடு அங்கும் இங்கும் நோக்குவோம். 'யாராவது அக்கம் பக்கத்துக் குக்கிராமங்களிலிருந்து அந்தப் பக்கம் வரமாட்டார்களா? அவர்கள் துணைகொண்டு, அவர்களைத் தொடர்ந்து இப்பெருங் கடலைத் தாண்டி விடமாட்டோமா?' என்று எண்ணுவோம்.

நாங்கள் பெற்று வந்த அறக்கல்வி அத்தகையது. இதுபோன்ற பயம் எங்கள் உடன்பிறப்பாக, எங்கள் இயல்பின் ஒரு பகுதியாக ஆகிவிட்டது. தினம் மாலை நேரங்களில், எங்கள் வீட்டுப் பெரியவர்களின் வாயிலாக நாங்கள் நரகம், சொர்க்கம் பற்றிய கதைகளைக் கேட்டு வந்தோம். சொர்க்கத்தை நாங்கள் வயல்—வெளிக்கு அப்பால் வெகு குறைவாகவே கண்டோம். ஆனால் நரகத்தின் தூண்களோ ஆங்காங்கே காணப்பட்டன. எல்லாவற்றிலும் பெரிய நரகம் பள்ளிக்கூடம், என்றைக்காவது எப்பொழுதாவது அந்த நரகத்திலிருந்து விடுபட்டால், வயலுக்குச்

சோறு கொண்டு செல்வதே எங்களுக்கு நரகமாக முடியும். சொல்லப் போனால், நாங்கள் செல்லும் பாதையின் ஒவ்வொரு திருப்பத்திலும் நரகம் பதுங்கித் தாக்க முனைந்திருப்பதாகவே தோன்றும். இந்தப் பாதையில் குறுக்கிடும் அச்சக் கடலைத் தாண்டுவதில் உள்ள சிரமம் காரணமாக வயற்புறம் செல்வதென்றாலே நாங்கள் ஒருவேளை நரகவேதனைப் பட்டோமோ, என்னவோ? அல்லது வயலுக்குச் சோறு எடுத்துச் செல்வதைத் தான் நாங்கள் நரகமாக எண்ணினோமோ, என்னவோ? இது பற்றி ஓர் உறுதியோடு என்னால் எதுவும் கூறமுடியாது. ஆனால் ஒன்று மட்டும் நான் அறிவேன்! வயல் சொர்க்கம்தான். ஆனால் அங்கே உணவு எடுத்துச் செல்லும் பொறுப்புச் சுமை ஒன்று இருந்ததே, அதுதான் எங்களுக்கு நரகமாயிருந்தது. இப்படியாகப் பார்க்கப் போனால், அந்தப் பொதுப் பாதைக்கு இடையே உள்ள பகுதி எங்களைப் பொறுத்தவரை ஓர் அச்சக் கடல்.

குளிர்காலம். தமக்கை, தம்பி நாங்கள் இருவரும் மதிய உணவை எடுத்துக்கொண்டு வயற்காட்டுக்குப் புறப்பட்டோம். இலேசாக வெய்யில் அடித்துக் கொண்டிருந்தது. நடந்துகொண்டிருக்கும் பொழுதே குளிர்கால வெய்யிலில் ஆனந்தமாகத் தூக்கம் வந்தது. ஆனால், மனத்துள் சாலையைத் தாண்டவேண்டுமே என்ற அச்சம் எலியாகக் குடைந்து கொண்டிருந்தது.

நாங்கள் அச்சத்தைத் தவிர்க்க எல்லோரையும் போலவே ஒரு சாதாரண வழி கண்டு பிடித்தோம். என் தமக்கை ஒரு கதை கூறலானாள்:

"ஓர் அரசன் இருந்தான். அவனுடைய ராணி இறந்துவிட்டாள். இறக்கும்பொழுது அவள் அரசனைப் பார்த்து, 'நீங்கள் எனக்கு ஒரு வாக்குறுதி அளிக்கவேண்டும்' என்றாள். 'என்ன வாக்குறுதி?' என்று கேட்டான் அரசன்...."

நான் கதையில் கவனம் செலுத்தாமல் கிராமத்தைத் திரும்பத் திரும்ப நோக்கினேன், யாராவது நம் வழியே போகிறவர்கள் வர மாட்டார்களா என்று!

"நீ கதை கேட்கவில்லையா, தம்பி?"— தமக்கை என் தோளைப் பற்றி உலுக்கிக் கேட்டாள்.

"யார் சொன்னது? நான் கதை கேட்டுக்கொண்டு தானே இருக்கிறேன்!" நான் தம்பிமார்களுக்கே உள்ள குறும்போடு தமக்கையின் கேள்விக்கு விடை அளித்தேன்.

"சரி, கேளு! ராணி சாகும்பொழுது அரசனைக் கூப்பிட்டு 'எனக்கு ஒரு வாக்குறுதி தாருங்கள்' என்றாள். 'என்ன வாக்குறுதி?' என்று அரசன் கேட்டான். 'நீங்கள் இரண்டாம் திருமணம் செய்து கொள்ளக்கூடாது!' என்றாள் ராணி — அட, ஒரு விஷயம் சொல்ல நான் மறந்தே போய்விட்டேனே! ராணிக்கு இரண்டு மகன்களும் ஒரு மகளும் இருந்தார்கள்."

எங்களுக்கு அந்த ராஜாவும் ராணியும் எங்கள் தாய் தந்தையரைப் போலவே தோன்றினார்கள். எங்கள் அம்மாவும் சாகிறது என்று வந்தால், எங்கள் தந்தையிடம் இதே வாக்குறுதியைத் தான் வேண்டுவாள். இந்த எண்ணம்தான் அந்த அறியாப் பருவத்து எங்கள் பிஞ்சு மனத்திலே ஏற்பட்டிருக்கவேண்டும் என்று எண்ணுகிறேன். என் சகோதரியை ராணியின் பெண்ணாகவும் என்னை ராணியின் பிள்ளையாகவும் என் கற்பனை முடி போட்டது.

என் சகோதரி என்னைப்போலவே அப்பொழுது கிராமத்தை நோக்கிக் கொண்டிருந்தாள். "மேலே நடந்ததைச் சொல்லேன்!" சொல்லில் கடுமையை வருவித்துக் கொண்டு நான் அவளிடம் காய்ந்தேன்.

"மாற்றாந்தாய் வந்தால் தன் பிள்ளை-குட்டிகளுக்குத் துயரம் தருவாள் என்று எண்ணித்தான் ராணி அப்படி ஒரு வாக்குறுதி கேட்டாள்!" என் சகோதரி தன் குரலில் இனிமையைக் குழைத்துப் பெண்மையின் மென்மை பூரிக்கச் சொன்னாள். "அரசனும் அவள் பேச்சுக்கு மாறு கூறாமல், 'சரி, உன் இஷ்டப்படியே வாக்குறுதி அளிக்கிறேன்!' என்றான்."

அரசன் வாக்குறுதி அளிக்க மறுத்திருந்தால், அரசியும் செத்துப் போக மறுத்திருந்திருப்பாளோ, என்னவோ?

"ஊம்."

பகலில் கதை சொன்னால் வழிப் போக்கர்கள் திசை தப்பி விடுவார்கள் என்று ஒரு மரபு. அதை நாங்கள் இருவருமே அறிந்திருந்தோம். ஆயினும் நாங்கள் இருவரும் இதை நினைவுபடுத்தி ஒருவரை யொருவர் அச்சுறுத்தி எச்சரிக்கை செய்து கொள்ளவில்லை. காரணம் எங்கள் சிந்தனைப் போக்கை இக்கருத்து பாதித்துத் தடுத்துவிடக் கூடாது என்பதில் இருவருமே குறியாயிருந்தோம்.

"ஆனால் அரசன் என்ன செய்தார், தெரியுமா? ராணி இறந்ததும் சட்டென்று மறுமணம் செய்து கொண்டுவிட்டார்."

"உம்"

பின் திருப்பத்தில் ஓர் ஆள் வருவதை நாங்கள் கண்டோம். நாங்கள் இருவருமே நிம்மதியாக ஒரு பெருமூச்சு விட்டோம். அவனையும் எங்களுடன் சேர்த்துக் கொள்வதற்குத் தயாராக நின்றோம். ஆனால் அந்த ஆள் வேறு பக்கம் போய்விட்டான். எங்கள் பாதைப் பக்கமே அவன் திரும்பவில்லை.

எந்த எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ள எண்ணி நாங்கள் போக்குக் காட்டினோமோ, அது நிறைவேறவில்லை. நாம் இப்படிப் பேச்சில் மூழ்கி நடந்தோமானால், நம்மையறியாமலே அந்தப் பாதையைத் தாண்டிவிடலாம் என்று நாங்கள் கருதினோம். ஆனால் அப்பாதை கூப்பிடு தொலைவில இருக்கும்பொழுதே எங்கள் கதையும் பயந்து நின்றுவிட்டது. யாராவது பெரியவர்கள் துணை கிடைக்காதா என்று கொண்டிருந்த நம்பிக்கையும் குலைந்துவிட்டது. எனவே, நாங்கள் இருவரும் அஞ்சி அஞ்சி நின்றுவிட்டோம்.

பத்துப் பதினைந்து அடி சென்றதும் எங்கள் அச்சம் இன்னும் அதிகமாகிவிட்டது. சாலையின் ஒரு புறத்தில் கறுப்புப்பட்டில் வைஸ்ட் கோட்டும், பட்டாணியர்களைப் போன்று தளர்ந்த ஸல்வாரும் அணிந்து ஒருவன் படுத்திருந்தான்.

"இதோ பார்த்தாயா, அக்கா! ராஷா படுத்துக் கிடக்கிறான்!"

அந்த நேரம் பார்த்து அந்த ஆள் புரண்டு படுத்தான்.

'ஆள் அசைகிறானே! விழித்துக்கொள்ளுகிறான் போலிருக்கிறது!' என் சகோதரி பயந்துபோய், "இப்பொழுது என்ன செய்கிறது?" என்று கேட்டாள்.

"அவன் நம்மைப் பிடித்துக்கொண்டுவிடுவானோ?"

"அதைத்தவிர வேறு என்ன செய்வான்?" என்றாள் என் சகோதரி.

நாங்கள் இருவரும் இரவு வேளைகளில் வீட்டைவிட்டு வெளியே கிளம்புவது வெகு அபூர்வம். ஆனால் ஏதாவது அச்சம கிச்சம் ஏற்பட்டால் 'வாஹே குரு'வின் பெயரைக் கூறவேண்டும் என்று கேள்விப்பட்டிருந்தோம். அப்படிக் கூறினால் பயம் விலகிவிடுமாம். எங்கள் அம்மா எங்களுக்கு எங்கள் மாமாவின் கதையைச் சொல்லியிருக்கிறாள். ஒருதடவை எங்கள் மாமாவும் ஓர் அந்தணரும் இரவுநேரத்தில் ஒரு கிராமத்தின் இடுகாட்டு வழியாக வரும்படி ஆயிற்றாம். அப்படி வருகிறபொழுது அவர்

களுடைய காலடிகளில் எரிகின்ற தீக்கங்குகள் வந்து விழுந்தனவாம். 'இப்பொழுது என்ன செய்வது?' என்று அந்தணர் என மாமாவைக் கேட்டாராம். 'பண்டித்ஜி, 'வாஹேகுரு'வின் பெயரைச் சொல்லுங்கள். எதிர்ப்படுகின்ற இன்னல்கள் எல்லாம் பனிபோல் விலகிவிடும்' என்று சொன்னாராம் மாமா. எங்கள் மாமா 'வாஹேகுரு', 'வாஹேகுரு' என்று ஜபித்தாராம். அந்தணர் 'ராம், ராம்' என்றாராம். நெருப்புத் தணல்கள் அப்பொழுதும் விழுந்தனவாம். ஆனால் அவர்கள் அருகில் அல்ல, தொலைவில். இந்தச் சம்பவம் காரணமாக எங்களிடையே எங்கள் மாமாவின் பெருமை மலை அத்தனை உயர்ந்துவிட்டது.

"வா! நாமும் 'வாஹேகுரு'வின் பெயரைச் சொல்லுவோம்."

"'வாஹேகுரு'விடம் பேய்-பிசாசுகள் பயப்படும். மனிதர்கள் பயப்படுவதில்லை!" என்றாள் என் தமக்கை.

அவள் பேச்சில் சாரம் இருப்பதாகத் தோன்றவே நானும் ஒப்புக்கொண்டேன்.

சாலையில் படுத்திருந்த ராஷோவோ மனிதன். அவன் ஆண்டவனிடம் ஏன் பயப்படப்போகிறான்?

"அப்படியானால் இப்பொழுது என்ன செய்கிறது?"

நாங்கள் இருவரும் ஐந்து-ஆறு நிமிஷங்கள் அஞ்சிப்போய் நின்றோம். இந்த ராஷோவை அச்சுறுத்தக்கூடிய மனிதன் எங்களுக்கு யாராவது கிடைக்காமற் போகமாட்டான் என்ற நம்பிக்கை எங்களுக்கு இன்னும் இருந்தது. ஆனால் அந்த நம்பிக்கை நிறைவேறுவதற்கான அறிகுறியைத்தான் காணவில்லை.

நாங்கள் இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு நின்றோம். ஆனால் அந்த நேரத்தில் நாங்கள் ஒருவர் முகத்தில் ஒருவர் எதைக் காணமுடியும் அல்லது கண்டுபிடிக்கத்தான் முடியும்? எங்கள் அறியாமையும் ஒற்றுமையும் தெம்பிழந்து வலுவிழந்து தொய்ந்தன. சில நிமிஷங்களுக்கெல்லாம் எனக்கு அழுகை வந்துவிட்டது.

என் சகோதரி தனது துப்பட்டாவின் முனையினால் என் கண்ணீரைத் துடைத்து, "அழாதே, தம்பி! ஏன் அழுகிறாய்? நாம் இங்கேயே நின்றுவிடுவோம். யாராவது ஆசாமி கிராமத்திலிருந்து வராமலா போவார்கள்?" என்றாள்.

நாங்கள் இருவரும் சில அடிகள் சாலையை நோக்கி எடுத்து வைத்தோம். பிறகு அஞ்சி நின்றோம். பிறகு முன்னேறியது போலவே திரும்பி வந்தோம்.

கடைசியில் என் சகோதரி பலத்த யோசனைக்குப்பின், "நாங்கள் பேமி*யின் குழந்தைகள். எங்களைப் பிடிக்காதே என்று கூறுவோம்!" என்றாள்.

அவள் வாயிலிருந்து 'பேமி' என்னும் சொல் மிகவும் இனிமையாக வந்தது. என்னை அணுகி அவள் எனக்கு ஆறுதல் கூறுவது போல், தனக்கும் ஆறுதல் அளிக்க முயன்றபொழுது, அவளே 'பேமி'யாகிவிட்டாள்.

என் மனத்திலும் துணிவு பிறந்தது. நாங்கள் பேமியின் குழந்தைகள் என்று ராஷேக்குத் தெரிந்துவிட்டால் எங்களை ஒன்றும் கூறமாட்டான்; பிடிக்கவும் மாட்டான்.

நடுங்கும் உள்ளத்துடனும், தடுமாறும் கால்களுடனும் மக்கள் 'வாஹே குரு,' 'வாஹே குரு' என்று கூறிக்கொண்டு இடுகாட்டைக் கடந்து விடுகிறார்கள், ஹிந்துக்கள் பசுவின் வாலைப் பிடித்துக் கொண்டு பாவக் கடலைத் தாண்டுவதுபோல! ஏன் நாமும் அப்படிச் செய்யக்கூடாது? நாங்கள் இருவரும் 'பேமி'யின் பெயரைச் சொல்லிக்கொண்டு சாலையைத் தாண்டிவிட்டோம். ராஷா அங்கேயே படுத்துக் கிடந்தான்.

---

* பேமி என்னும் சொல்லுக்கு அன்பன் என்று பொருள். அது அன்பே உருவான ஆண்டவனையும் குறிக்கும்.

## விடியா மூஞ்சி

அரைத் தூக்கத்தில் திரௌபதி கூறினாள், கூறவில்லை. அவள் வாயிலிருந்து அவளையறியாமலே வெளி வந்துவிட்டது அந்தச் சொல்: "விடியா மூஞ்சி!" ஹாரனின் கரகரத்த ஒலியில் அவள் காதுகளே கிழிந்துவிடும் போலிருந்தது. இன்று வரை எத்தனையோ ஹாரன் ஒலிகள் அவள் செவிகளில் விழுந்திருக்கின்றன. ஆனால் இந்த ஒலியைப்போல இவ்வளவு கரகரத்து ஒலித்ததில்லை.

"டாக்ஸிக்காரன் கணேஷாவாக இருக்காது. சானண் ஷாஜியாக இருக்கும்."

தன் கணவர் பகத்ராமின் வாயிலிருந்து சானண்ஷாவின் பெயரைக் கேட்டதும் திரௌபதி சற்று வெட்கிப்போய் விட்டாள்: "ஐயையோ! நான் சொன்னது சானண்ஷாவின் காதுகளில் விழுந்திருக்குமோ?"

இப்பொழுதுதான் நான்கைந்து நாட்களுக்கு முன்னால், விடிந்தும் விடியாததுமாகக் கணேஷாவின் டாக்ஸியிலிருந்து எழுந்த ஹாரன் ஒலி கேட்டுத் திரௌபதியின் வாயிலிருந்து, "இந்த விடியா மூஞ்சிகளுக்கு இரவு நேரத்தில் தூக்கமே வராதோ?' என்ற கேள்வி பிறந்தது. அப்பொழுது பகத்ராம் அவளுக்கு விளக்கினார். "இந்த ஏழை டாக்ஸிக்காரன் மேலே ஒரு வழக்குத் தொடர்ந்திருக்கிறார்கள். பாவம், அவன் ஓர் அகதி. ஒரு சிபாரிசுக்காகக் கேட்டுக் கொண்டிருக்கிறான்!"

இந்த விளக்கத்தைக் கேட்டபின் திரௌபதியின் குரல் இன்னும் உயர்ந்து ஒலித்தது: "விடியா மூஞ்சி!"

கணேசாவின் செவிகளிலும் இச்சொல் விழுந்தது. ஆனால், பாவம்! அவனுக்கல்லவா முடை? எதிர்த்து என்ன சொல்வான், எப்படிச் சொல்வான்? இன்று சானண்ஷாவிடமுள்ள மதிப்பு பகத்ராமை திரௌபதியின் வாயில் புகுந்து புறப்படுவதிலிருந்து தப்பி வைத்தது. மோட்டாரை வாசலுக்கெதிரே நிறுத்திவிட்டுச் சானண்ஷா நேராக பகத்ராமின் படுக்கை யறைக்குள்ளேயே நுழைந்து விட்டான். திரௌபதி நல்வரவு கூறி நாற்காலியை அவனுக்காக இழுத்துப் போட்டாள்.

சானண்ஷா நின்றபடியே ஒரு சொடுக்குச் சொடுக்கி, "லாலாஜி! தயார் தானே? புறப்படலாமா?" என்று கேட்டான்.

"ஓ! கொஞ்சம் மருந்துப் புட்டிகளை எடுத்துக் கொள்ளுகிறேன். போகிற இடத்தில் எப்படியிருக்கிறதோ? மாலையில் திரும்பும் பொழுது நேரமாகிவிட்டால்....?" பகத்ராம் பேச்சுக்கு இடையிலேயே குறுக்கிட்டான் சானண்ஷா:

"நேரமாகாது, கட்டாயம்! போனதும் வந்ததுமாகத் திரும்பி விடலாம். புதுக் கார், இரண்டரை மணி நேரத்தில் அம்பாலா போய்ச் சேர்ந்து விடுவோம். அங்கே ஒரு மணி பிடிக்கலாம். திரும்ப இரண்டரை மணி நேரத்திலே தில்லி. மொத்தம் ஆறு மணி நேர சமாசாரம். இப்பொழுது மணி ஆறு. பத்து–பதினைந்து நிமிஷத்திலே புறப்பட்டோமானால் பன்னிரண்டே கால் மணிக்குள் திரும்பிவிடலாம்."

"முடியாது ஷாஜி! அகதிகள் முகாமிலேயே குறைந்தது எனக்கு இரண்டு, இரண்டே கால் மணி நேரம் பிடித்துவிடும்."

"புறப்படுங்கள். அதிகமாகப் போனால் மூன்று மணி ஆகலாம். அவ்வளவு தானே? பொழுது சாய்வதற்கு முன்னால் எப்படியும் திரும்பி விடுவோம் இல்லையா? எழுந்திருங்கள். துரிதப்படுத்துங்கள். எத்தனைக் கெத்தனை சீக்கிரம் புறப்படுகிறோமோ, அத்தனைக்கத்தனை சீக்கிரம் திரும்பிவிடலாம்!" என்றான் சானண்ஷா.

"திரும்ப நேரம் ஆகிவிடும் என்று பயமாயிருந்தால், அல்லது இரவு அங்கேயே தங்கும்படி இருக்கும் என்று தோன்றினால், கையோடு கம்பளிப் போர்வையோ, படுக்கையோ........" என்று ஆரம்பித்தாள் திரௌபதி.

சானண்ஷா அவளைப் பேச்சை முடிக்கவிடவில்லை. பகத்ராமின் கையைப்பற்றி அவரைக் கட்டிலிலிருந்து எழுந்து உட்கார வைத்து விட்டான். "புறப்படுங்கள். கையோடு எதுவும் எடுத்துச் செல்லவேண்டிய தேவையே இல்லை. போனதும் திரும்பி விடுவோம். உங்களுக்குக் குளிருகிறது என்றால், காரிலேயே கம்பளி கிடக்கிறது. இழுத்துப் போர்த்திக் கொள்ளுங்கள். மூன்று மணிக்கு உங்களைக் கட்டாயம் வீட்டில் கொண்டு வந்து சேர்த்து விடுகிறேன்!" என்றான்.

பகத்ராம் புது மோட்டாரின் புது மெத்தையிலே சௌகரியமாக உட்கார்ந்து நன்றாகச் சாய்ந்து கொண்டார். கார் புறப்பட்டது. "திரௌபதி! யாராவது ஏதாவது வேலையாக வந்தால்,

மூன்று மணிக்குப் பார்க்கலாம் என்று அவர்களிடம் சொல்லு!'' என்று கூறினர்.

பகத்ராமின் மடியில் கம்பளியைப் போட்டவாறே சானண்ஷா கூறினான்: "நீங்கள் டெபுடி கமிஷனரிடம் உங்கள் முகத்தைக் காட்டினால் போதும். என் காரியம் உடனே முடிந்து விட்டதாகவே தீர்மானித்துக் கொள்ளலாம். அதற்குப்பின் நீங்கள் உங்கள் இஷ்டத்துக்கு எங்கு வேண்டுமானாலும் போங்கள்! வண்டியில் வேண்டிய பெட்ரோல் இருக்கிறது.''

லாலா பகத்ராம் அகதிகள் தலைவர். காலையிலிருந்து மாலை வரை எத்தனையோ முடைப்பட்ட அகதிகள் அவரிடம் வந்து போய்க் கொண்டிருப்பார்கள். அவரும் அவர்களுடைய அலுவல்களை அநுதாபத்தோடு கேட்டு முடித்து வைக்க முயல்வார். பார்க்கப்போனால் திரௌபதியும் இனிய இயல்பு படைத்தவள்தான். அநுதாபம் நிறைந்த உள்ளம் கொண்டவள்தான். இருந்தாலும் காலையில் கண் விழித்து எழுவதற்கு முன்னரும் இரவில் கண் உறங்கிய பின்னரும், வாசற்கதவை வந்து தட்டித் தொல்லை தருகிறார்களே, அவர்களைக் கண்டு சிற்சில சமயம் அவள் பொறுமை இழந்துவிடுவது உண்டு; சலித்துக் கொள்வது உண்டு.

மோட்டார் குவார்ட்டரைத் தாண்டி அந்தண்டை போயிருக்காது. ஓர் அகதி வந்து லாலா பகத்ராமைப்பற்றிக் கேட்டான். லாலாஜி சானண்ஷாவுடன் அம்பாலா போயிருக்கிறார் என்று திரௌபதி கூறியதும் அவன் ஏதோ முணு முணுத்துக் கொண்டே சென்றான்:

"பசையுள்ளவர்களானால் உடனே புறப்பட்டு விடுகிறார். இன்றைக்கு என்னோடு அவர் 'கஸ்டோடிய'னிடம் வரவில்லை என்றால், மாலை நேரத்துக்குள்ளே என் வீட்டுப் பாத்திரம்—பண்டங்கள் எல்லாம் தெருவிலே கிடக்கும்!''

அவன் அந்தண்டை போயிருக்கமாட்டான், இந்தண்டை இன்னொரு அகதி வந்து, "என் கடன் மனுவை ஏற்கும்படியாகச் செய்துவிட்டார். ஆனால் அதை வாங்குவதற்கு யார் ஜாமீன் கொடுப்பார்களாம்?'' என்று கேட்டுத் தன் சிரமத்தை அழுது தீர்த்தான்.

"என் மாற்றல் உத்தரவுக் காகிதங்கள் இன்று கையெழுத்தாகி விடும். நான் இருக்கும் வீடு அகதி உறவினர்கள் நிறைந்து கிடக்

கிறது. தாய்—தந்தையருக்கு வயது ஆகிவிட்டது. மனைவிக்கோ இது நிறைமாதம். என்னை எந்த ஊருக்கு மாற்றுகிறார்களோ, அங்கே தங்குவதற்குக் கூடாரம் கூடக் கிடையாது. என்ன செய்வது?''

''நான் பேஷாவரில் ஏ. டி. எம்மாக இருந்தேன். இங்கே குமாஸ்தா வேலைதான் கிடைத்திருக்கிறது. இப்பொழுது அதிலிருந்தும் நீக்க முயற்சி நடந்து கொண்டிருக்கிறது!''

''அம்மா! நூற்று ஆறு பங்களாக்களுக்குச் சொந்தக்காரனாக இருந்தவன். இங்கே வந்து ஒரு வீட்டு மூலையிலே முடங்கிப் படுப்பதற்குக்கூட இடம் கிடைக்கவில்லை என்றால், நீங்களே சொல்லுங்கள், நான் எங்கே போய் முட்டிக் கொள்வது?''

திரௌபதி வருகின்ற அகதிகளின் வேலைகளை யெல்லாம் கேட்டு, மூன்று மணிக்கு வந்து பார்க்குமாறு நேரம் குறித்து அனுப்பினாள்.

எறும்பு ஊறக் கல் குழியும், இலேசான தூற்றலும் இடைவிடாது பெய்து கெட்டியான கற்பாறையிலும் தனக்கு ஒரு வழி வகுத்துக் கொள்ளும் என்றால் திரௌபதியின் உள்ளத்திலே ஒரு தாய் மனம் அல்லவா குடிகொண்டிருந்தது! இளகி இரக்கம் காட்டாமல் அவளால் எப்படி இருக்க முடியும்?

''கணவன் போய்விட்டான், பிள்ளை போய்விட்டது, இப்பொழுது மானமும் பறிபோய்க் கொண்டிருக்கிறது!''

நடுத்தர வயதுள்ள ஓர் அகதிப் பெண்ணின் இக்குறையைக் கேட்டுத் திரௌபதி அவளுக்கும் மூன்று மணிக் கெடு கொடுக்க வாய் திறந்தாள். அதற்குள்ளாக அவள் தன் துயரக் கதையைச் சொல்லத் தொடங்கிவிட்டாள்.

விழிகளுக்கு வாய் கிடையாது என்றாலும் அவற்றை வாய் அற்றவை என்று கூறமுடியாது. இடர்ப்பட்ட அகதிப் பெண்ணின் துயரக் கதை, அவளது வாய் மொழியாகவும், திரௌபதியின் விழி வழியாகவும் ஏக காலத்தில் சொல்லப்படுவது போலத் தோன்றியது. திரௌபதி அவள் கதையைக் கேட்பதில் தன்னை மறந்து ஆழ்ந்து விட்டாள். மற்ற அகதிகளை மூன்று மணிக்கு வந்து பார்க்கும்படி கூறக் கூட அவள் மறந்துவிட்டாள்.

இதே நேரம் இன்னொரு பெண்மணி அங்கே தோன்றினாள். வெளுத்து இளைத்த உடல். கந்தலாகிவிட்ட அழுக்குத் துணியினால் எப்படியோ தன் உடலைச் சுற்றி மூடி மறைக்கப் பாடுபட்டிருந்

தாள் அவள். உடலின் முன் பகுதியை மறைப்பதற்காக அவள் தன் உடலையேதான் கூனிக் குறுக்கிக் கொண்டிருந்தாள். எதிரே வருகிறவர்களை ஏறிட்டு நோக்கமுடியாத அளவுக்கு அவள் தலை குனிந்திருந்தாள். பூமியில் பார்வையைப் பதித்தவாறே அவள் வாசற்படிக்கு வந்தாள். இடைகழியில் இருந்த ஓர் அகதியின் தலையோடு முட்டிக்கொண்டு விட்டாள். அவன் அப்பொழுது தன் சிந்தனையோடு மோதிக்கொண்டிருந்தான்; கவனிக்கவில்லை. அப்பெண்மணி 'தடால்' என்று விழுந்துவிட்டாள். அவள் விழுந்த ஓசை கேட்டுத்தான் திரௌபதி அப்படி ஒருத்தி வந்திருக்கிறாள் என்பதையே உணர்ந்தாள். முதலில் வந்திருந்த அகதிப் பெண்ணின் உதவிகொண்டு திரௌபதி அவளை வெளியறையில் விரித்திருந்த தரை விரிப்பில் படுக்கவைத்தாள். அந்த விரிப்பிலோ ஒரே அழுக்கு, வருவோர்—போவோரின் செருப்பு மண் வேறு ஏகமாகப் படிந்திருந்தது. அறையில் உட்கார்ந்த மற்றவர்களை 'மூன்று மணிக்கு வாருங்கள்' என்று கூறி எழுப்பிவிட்டாள். விழுந்தவள் மூர்ச்சையற்றுக் கிடப்பதைக் கண்டதும் திரௌபதிக்கே மூச்சு முட்டியது. அவளுக்கு வியர்த்துக் கொட்டியது; கைகால்கள் மரத்துவிட்டன. முதலில் வந்திருந்த அகதிப் பெண் எழுந்து உட்புறமாகக் கதவைத் தாளிட்டாள். பதற்றத்தோடு திரௌபதி கதவின் இடுக்கு வழியே வெளியே எட்டிப் பார்த்தாள். அவள் செவிகளிலே ஹாரன் ஒலி கேட்டது: 'என்ன, மணி மூன்று அடித்துவிட்டதா?' சே! வந்திருப்பது கணேசா அல்லவா? விடியா மூஞ்சி! பிந்திய சொல் திரௌபதியின் வாயிலிருந்து அவள் அறியாமலேதான் வெளி வந்துவிட்டது. ஆனால் அவள் மனம் சிறிது கவலையில் ஆழ்ந்தது. அவள் கணேசாவை ஜாடையாகக் கூப்பிட்டாள். அவனிடம் ஒரு வேலை சொல்ல அவளுக்குக் கூச்சமாகவும் இருந்தது. ஆனால் வேறு வழி......?

"கரோல்பாக், குருத்வாரா ரோடுக்குப் போய் லேடி டாக்டர் கர்த்தார் கௌரின் பெயரைக் கேளு!" என்று எப்படியோ கூறிவிட்டாள்.

கணேஷா தில்லி முழுவதுமே நன்றாகத் தெரிந்து கொண்டிருந்தான். திரௌபதி சொல்லி முடிப்பதற்குள்ளாகவே, அவன் டாக்ஸியை எடுத்துக்கொண்டு புறப்பட்டுவிட்டான்.

திரும்பிக் கேட்டுக்குள் நுழையும்பொழுதே கணேசா உரக்க ஹாரன் ஒலி எழுப்பினான். ஆனால் இப்பொழுது திரௌபதியின் காதுகளில் அகதிப் பெண்ணின் வலி பொறுக்கமுடியாத

'ஐயோ'க்குரலும் புதிதாகப் பிறந்த குழந்தையின் அழுகைக் குரலும்தான் விழுந்தன. வேறு எந்த ஒலியையும் அவள் செவி ஏற்கவில்லை. லேடி டாக்டரைக் கண்டதும் திரௌபதி நிம்மதிப் பெருமூச்சு விட்டாள். பெற்ற தாயின் நிலையைப் பரிசோதித்துப் பார்த்த கர்த்தார் கௌர் திரௌபதியை வெகுவாகப் புகழ்ந்தாள்.

"டாக்ஸிக்காரன் புறப்பட்ட பிறகுதான் எனக்கு நினைவு வந்தது. முன்பே வந்திருந்தால் உங்களுக்கு டெலிபோன் செய்திருப்பேன். ஒருமுறை நீங்கள்தான் ஏதோ ஒரு நம்பர் கூடக் குறித்துக் கொடுத்திருந்தீர்களே!"

திரௌபதியின் பேச்சைக் கேட்ட லேடி டாக்டர் கூறினாள்: "ஆமாமாம், அது கமண்டாசிங்கின் நம்பர். ஆனால் இப்பொழுதெல்லாம் அவர் சொல்லியனுப்புவதில்லை. என்ன இருந்தாலும் நல்ல பசை உள்ள மனிதர் இல்லையா? ஆனால் ஒன்று, தமது சொந்தக்காரர்களுக்கோ அல்லது மிகவும் வேண்டியப்பட்டவர்களுக்கோ முடை ஏற்பட்டால் உடனே ஆள் அனுப்பிக் கூப்பிடுகிறார்!"

"விடியாமூஞ்சி! நாசமற்றுப்போக!—காசு இருந்தால், கூடவே கர்வமும் வரவேணுமா?" என்றாள் திரௌபதி.

அவளுடைய அநுதாபத்தைக் கண்ணுற்ற லேடி டாக்டர் பிரசவித்த அகதிப் பெண்ணின் ஊர்-பெயரை விசாரித்தாள்.

திரௌபதி நடந்தது அவ்வளவையும் கூறிவிட்டு, "இன்னும் நான் இவளுடைய பெயர்-ஊரைக் கேட்டுக்கொள்ளவில்லை. கொஞ்சம் உடல்நலம் பெறட்டும் என்று இருக்கிறேன். ஒரு விதத்தில் இப்படி நடந்தது நல்லதாகப் போயிற்று. பாவம், எங்கேயாவது தெருவிலேயே நடந்திருந்தால்...?" என்றாள்.

"ஆமாமாம்,–திரௌபதி, நானே உங்கள் வீட்டுக்கு வந்து என் துயரத்தைச் சொல்லி அழவேண்டும் என்றிருந்தேன். லாலாஜி எங்கே இருக்கிறார்?" என்று கேட்டாள் லேடி டாக்டர்.

"ஏன், என்ன விஷயம்? அம்பாலா வரைக்கும் போயிருக்கிறார். திரும்பி வருகிற நேரம்தான்!" என்றாள் திரௌபதி.

"என்னத்தைச் சொல்வேன், திரௌபதி? நான் வேலைசெய்கிற 'காரேஜ்' இருக்கிறதே, உங்களுக்குத் தெரியும், நான் இரண்டாயிரம் ரூபாய் போட்டுப் 'பார்ட்டிஷியன்' செய்தேன். பகலில் அங்கே வேலை செய்கிறேன். இரவு அங்கேயே மஞ்சத்தில் படுத்

துத் தூங்கிக்கொள்ளுகிறேன். என்னுடைய 'காரேஜை' பக்ஷி குஷ்ஹால் சந்த் அட்வொகேட் இருக்கிறுரே, அவர் தமது பெயருக்கு 'அலாட்' செய்துகொண்டுவிட்டார் என்று கேள்விப் பட்டேன். நம்பகமான தகவல்தான்!'' என்ருள் லேடி டாக்டர்.

''அட, விடியாமூஞ்சி!''

''உண்மையைக் கேட்டால் திரௌபதி, இந்தக் கவலையினுலே எனக்கு இராத் தூக்கமே வருகிறதில்லே!'' என்ருள் லேடி டாக்டர்.

மூன்று அடித்தது, மூன்றரை அடித்தது. அப்புறம் நான்கும் தாண்டி ஐந்து ஆகிவிட்டது. லாலா பகத்ராமின் குவார்ட்டருக்கெதிரே அகதிகளின் கூட்டம் கூடியிருந்தது. ஆனுல் அவர் அம்பாலாவிலிருந்து இன்னும் திரும்பவில்லே.

''சானண்ஷாவின் வீட்டுக்கு டெலிபோன் செய்து சற்று விசாரித்துப் பாரேன்!'' என்ருள் திரௌபதி தனது சின்னப் பிள்ளேயிடம். அவன் டெலிபோன் டைரக்டரியைப் புரட்டிப்பார்த்து விட்டு ''அவர் வீட்டில் டெலிபோன் இருப்பதாகத் தெரியவில்லேயே, அம்மா!'' என்ருன்.

''இல்லேயா? அது எப்படி? லாலாஜி தானே சமீபத்தில் பெரு முயற்சி எடுத்து டெலிபோன் கனெக்ஷன் வாங்கிக் கொடுத்தார்!'' என்ருள்.

திரௌபதியின் வாய் மொழியாக இச் சொற்களேக் கேட்ட ஒர் அகதி, ''லாலாஜியும் பணக்காரர்களுக்குத்தான் ஒடி ஆடி வேலே செய்கிருர்!'' என்ருன்.

''விடியாமுஞ்சிகள்! அதிகாரம் செலுத்த மட்டும் வந்து விடுகிறதுகள்! பணம் இல்லாமல் எந்தக் காரியமாவது நடக்குமா? சானண்ஷா தம் காரில் ஏற்றிக்கொண்டு லாலாஜியை அம்பாலாவுக்கு அழைத்துப் போயிருக்கிருர். அவருக்கும் அங்கே ஏதோ வேலே இருந்தது என்பது மெய்தான். இருந்தாலும் லாலாஜி அகதிகள் முகாமுக்குச் சென்று நிலேமை அறிந்து வரவேண்டியிருந்தது. சானண்ஷாவின் கார் இருக்கக்கொண்டு தானே அவர் சௌகரியமாய்ப் போயிருக்கிருர், சௌகரியமாகத் திரும்பியும் வரப்போகிருர்!'' திரௌபதி இப்படிச் சொல்லிக்கொண்டே, தன் மகனுக்குக் குரல் கொடுத்தாள்: ''டெலிபோன் விசாரணே அலுவலகத்திலே லாலா சானண்ஷாவின் நம்பரைக் கேட்டுத் தெரிந்துகொண்டு கூப்பிட்டுப் பார்!''

"எங்கிருந்து பேசுகிறீர்கள் நீங்கள்?"

"லாலா சானண்ஷாவின் பங்களாவிலிருந்தா?"

"ஷாஜி அம்பாலா போயிருந்தாரே!"

"வந்து விட்டாரா?"

"அவருக்குச் சற்று டெலிபோன் கொடுங்களேன்!"

"சற்றுப் பொறுத்துப் போன் செய்யுங்கள். இப்பொழுது அவர் வெளியிலே தோட்டத்தில் உட்கார்ந்திருக்கிறார். சில விருந்தாளிகள் வந்திருக்கிறார்கள். பார்ட்டி நடந்து கொண்டிருக்கிறது!"

"அப்படியானால் ஒரு விஷயம் அவரிடம் கேட்டுச் சொல்லுங்கள். லாலா பகத்ராம்ஜியும் அவரோடு அம்பாலா போயிருந்தார். அவர் இப்பொழுது எங்கேயிருக்கிறார் என்று தெரிந்தால் நலம்"

"நீங்கள் பேசுகிறது யார்?"

"திரௌபதி! லாலாஜியின் வீட்டிலிருந்து பேசுகிறேன்!"

"சரி, அப்படியானால் இரண்டு நிமிஷம் பொறுங்கள். இல்லை, உங்கள் நம்பரைச் சொல்லுங்கள்!"

திரௌபதி நம்பர் கூறிவிட்டுக் கர்த்தார் கௌரிருடன் பேசலானாள். சில விநாடிகளுக்கெல்லாம் தொலைபேசியின் மணி ஒலித்தது.

"ஹ....லோ!"

"சொல்லுங்கள்!"

"டிபுடி கமிஷனரின் மாளிகையிலிருந்து வண்டி வைத்துக் கொண்டு லாலாஜி அகதிகள் முகாமுக்குப் போய் விட்டாராம். ஷாஜி சொல்லச் சொன்னார். மோட்டாரில் பெட்ரோல் குறைவாயிருந்ததாம். அதோடு ஷாஜிக்கும் இரண்டொரு அலுவல் இருந்ததாம். அவற்றை முடித்துக்கொண்டு, அகதிகள் முகாமுக்குச் சென்று லாலாஜியை அழைத்து வருவதாக ஏற்பாடு. ஆனால் போன இடத்தில் ஷாஜிக்கு வேலை 'மெனக்கட்டு' விட்டதால் நேரமாகிவிட்டது. இங்கே வீட்டில் இரண்டொருவரைத் தேநீருக்கு அழைத்திருந்தாராம். லாலாஜியை அழைத்து வர அகதிகள் முகாமுக்குப் போனால் இன்னும் நேரமாகி விடுமே என்று எண்ணித் திருப்பிவிட்டாராம்."

எதிர்த்தரப்பில் பேசியவர் தம் பேச்சை முடிக்கக்கூடவில்லை. அதற்குள் திரௌபதி 'விடியாமூஞ்சி!' என்று கூறி ரிசீவரைப்

பட்டென்று வைத்தாள். எல்லோருக்கும் விஷயம் விளங்கி விட்டது. தங்கள் தங்கள் வேலையாக வந்து அங்கே உட்கார்ந் திருந்த அத்தனை பேரும் எழுந்து வீட்டை நோக்கிப் புறப்பட்டு விட்டார்கள்.

இரவின் அமைதி கூடக்கூட, திரௌபதியின் பரபரப்பும் கவலையும் கூடின.

தெருவில் போகும் ஒவ்வொரு காரின் ஒலியும் தன் வீட்டு வாசலில் ஒலிப்பதாகவே அவளுக்குத் தோன்றியது. அவள் ஏமாந்து கதவைத் திறப்பாள். கார் விர்ரென்று ஓடி மறையும். பிரசவித்த அகதிப் பெண்ணுக்குப் பணிவிடைசெய்வது திரௌ பதி இராக்கண் விழித்ததற்கு ஒரு சாக்கே ஒழிய உண்மையில் அவளால் இமை கொட்ட முடியவில்லை.

"தை மாத இரவு. படுக்கை இல்லை, பாய் இல்லை. கம்பளித் துணியும் கையுடன் எடுத்துச் செல்லவில்லை. மருந்து இல்லாமல் அவருக்குத் தூக்கமும் வருவதில்லை."

திரௌபதிக்கு எழுந்தாலும் உட்கார்ந்தாலும் இதே நினைவு தான். பிரசவித்த அகதிப் பெண்ணின் துணிமணிகளைச் சரி செய்யும் பொழுதும் இதே நினைவுதான். மோட்டாரின் ஒலி கேட்டு வாயிலில் எட்டிப் பார்க்கும்பொழுதும் இதே நினைவுதான். குமட்டி யடுப்புத் தீயைக் கிண்டி விடும்பொழுதும் இதே நினைவுதான். இப்படி ஒரு நினைவிலேயே பொழுது விடிந்துவிட்டது.

கடைசியில் முதல் நாளைப்போலவே, ஒரு கார் அவள் வீட்டு வாசலில் வந்து நின்றது. இன்றும் அதன் ஹாரன் ஒலி கர்ண கடூரமாகக் கரகரத்துத்தான் ஒலித்தது. ஆனாலும் திரௌபதி யின் செவிகளுக்கு அந்த ஒலி காலையில் பாடப்படும் ஆசா ராகத் தைப்போல, பூபாளத்தைப்போல இனிமையாக ஒலித்தது.

கணேஷா டாக்ஸியின் கதவை வெளிப்புறமாகத் திறந்து விட் டான். அழுக்கேறிய, மிகவும் மெல்லிய கம்பளி ஒன்றைப் போர்த்திய வண்ணம் லாலா பகத்ராம் டாக்ஸியிலிருந்து இறங்கி னார். திரௌபதி வலது கை விரல்களினால், கம்பளி எத்தனை கனமாக இருக்கிறது என்று தொட்டுப் பார்த்தாள்.

"பாவம், அந்த அகதி இரவுக் குளிரில் எப்படிச் சங்கடபட் டானோ? அவனிடம் ஒரே ஒரு கம்பளிதான் இருந்தது. என்னை ரெயில் ஏற்றிவிட்டபொழுது வலுக்கட்டாயமாகப் போர்த்தி விட்டான்!" என்றார் லாலா பகத்ராம்.

திரௌபதி இடது கையைச் சட்டைப் பைக்குள் நுழைத்துக் கொண்டாள், குளிர் தாங்காமல். 'ஸந்த் ஸ்ரீ அகால்!' என்னும் சொல் அவள் காதுகளில் ஒலித்தது. கணேஷாவின் டாக்ஸி வேகமாய் புறப்பட்டுப் போயிற்று. அது வெகு தூரம் போகும் வரை, வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்த திரௌபதியின் வாயிலிருந்து, "பாவம், இந்த ஏழையையும் பாரு, அந்த விடியா மூஞ்சியையும் பாரு!" என்ற சொல்தான் மன நிறைவோடு வந்தது.

## ராஸ லீலை

அந்தக் காலத்தில் எனக்கு வயது ஒன்பது அல்லது பத்து இருக்கலாம். நாங்கள் இருந்த வீட்டில் மூன்று குடித்தனங்கள் வாழ்வதற்கான வேண்டிய இடம் இருந்தது. ஒரு பகுதியில் நாங்கள் இருந்தோம். இன்னொரு பகுதியில் அமிருதசரைச் சேர்ந்த ஒரு பெரிய காண்டிராக்டர் இருந்தார். மூன்றாவது பகுதியில் ஒரு ஹிந்து வியாபாரி வசித்து வந்தான். இன்றைய எனது அநுமானப்படி அன்று அவனுக்கு அறுபது—அறுபத்தைந்து வயது இருக்கலாம். நான் பிறந்தது முதல் அவன் அந்தப் பகுதியில்தான் வாழ்ந்து வந்தான். அவனுக்கு என்னிடம் மிகவும் அன்பு உண்டு. உலகத்தில் அவனுக்கென்று யாரும் இல்லை என்று நான் கேள்விப்பட்டிருந்தேன். அதனால் தானோ, என்னவோ அவன் பணம் கொடுத்து ஓர் ஏழைக் குடும்பத்திலிருந்து தனக்குப் பெண் எடுத்துக் கொண்டான். மூன்று நான்கு மாதங்களாக அந்தக் கிழவனின் குடியிருப்புப் பகுதி சாத்தியே இருப்பதை நான் கண்டு வந்தேன். வெளிப்புறமாகத் தாழ்ப்பாளோ, பூட்டோ மாட்டாமலே அது மூடியிருந்தது.

ஒரு நாள் நான் பள்ளியிலிருந்து திரும்பியபொழுது, அவன் வீட்டுக் கதவு திறந்திருப்பதைக் கண்டேன். கிழவனை உள்ளே கண்டதும், நான் 'தாத்தா, தாத்தா' என்று அன்போடு கூவிக் கொண்டே ஓடி அவனைக் கட்டிக்கொள்ளப் போனேன். என்னை வெறித்துப்பார்த்து, அறைய வருவதுபோலக் கையை ஓங்கினான் அவன். அப்புறம் 'உஷ்' என்று வாயில் விரல் வைத்துப் பேசாமல் வெளியே போய் விடுமாறு ஜாடை காட்டினான். நான் அயர்ந்து போய் விட்டேன், அவனது அந்தச் செயலைக் கண்டு. கிழவன் என் முகத்தில் தோன்றி மறைந்த உணர்ச்சியைப் பார்த்திருக்க வேண்டும். போன வேகத்திலேயே வெளியேறிக் கொண்டிருந்த என்னைக் கண்டு ஓடோடி வந்து அப்படியே புத்தக மூட்டையோடு 'அலக்'காகத் தூக்கிவைத்துக்கொண்டான். அந்த வண்ணமே வெளியே கொண்டு வந்து என்னை இறக்கி விட்டு ஓரணாக் காசைக் கையில் திணித்து, "கிஷன்! நீ என்னைச் சித்தப்பா என்று சொல்லிக் கூப்பிடணும், என்ன?" என்றான். நான் 'சரி' என்று அவன் கேள்விக்கு விடை அளிக்கவே, அவன் என்னை மிகுந்த அன்போடு அணைத்துக்கொண்டான்.

வீட்டுக்குள் நுழைந்ததும் அம்மா ஒரு கோப்பை பால் தந்தாள் குடிக்க. தொடர்ந்து, "சற்றுப் பொறு! ஒரு சின்னப் பராட்டா வாட்டித் தருகிறேன் தின்னலாம்!" என்றாள். அதற்குள்ளாகக் கிழவன் வீட்டு வேலைக்காரி என்னைக் கூப்பிட வந்துவிட்டாள். "போய்வா, மகனே! உன்னைப் பெரியப்பா கூப்பிடுகிறார் போலிருக்கிறது!" என்று அம்மா அநுமதி கொடுத்தாள்.

நான் வியப்போடு, "பெரியப்பாவா? யாரு பெரியப்பா? காண்டிராக்டர் மாமாவா?" என்று கேட்டேன்.

"இல்லை. துணி வியாபாரம் செய்கிறாரே, அந்தப் பெரியப்பா!" என்றாள் என் அன்னை.

"அவர் 'தாத்தா' அல்லவா? ஆனால் இன்றைக்கு என்னை நீ 'சித்தப்பா' என்று கூப்பிடணும் என்று சொன்னார்!" என்றேன் நான்.

அம்மா சிரித்துக்கொண்டே, "ஆமாம், அவர்தான் கூப்பிட்டிருக்கணும். இவள் அவர்கள் வீட்டுக்கு வந்துள்ள புதிய வேலைக்காரி! ஒரு வேளை உன் பெரியம்மா உன்னைக் கூப்பிட்டிருக்கிறாளோ, என்னவோ?" என்று ஓர் உறவு முறை காட்டிக் கூறினாள்.

இந்தப் பேச்சுக்களையெல்லாம் கேட்டு எனக்குத் தலையைச் சுற்றுகிறாற் போலிருந்தது. பராட்டாவைப் போய்விட்டு வந்து சாப்பிட்டுக்கொள்ளலாம் என்று எண்ணி நான் அந்த வேலைக்காரியோடு புறப்பட்டேன்.

நான் சித்தாப்பாவின் அறைக்குள் நுழைந்ததும், முன்போலவே அவர் என்னை மடியில் தூக்கிக்கொண்டார். அப்படியே அடுத்த அறைக்கு எடுத்துச் சென்றார். இரும்புக் கட்டிலுக்கு அருகில் இருந்த அலமாரியின் ஆள் உயர நிலைக்கண்ணாடிக்கு எதிரே ஒல்லியான மென்மையான கோதுமை நிறப் பெண் ஒருத்தி, முழங்காலை முத்தமிடும் தனது நீண்ட கரிய கேசங்களை நீவி வாரிக்கொண்டிருந்தாள். அந்தக் கண்ணாடியிலேயே நாங்கள் வருவதை அவள் பார்த்துவிட்டாள். எங்கள் பக்கமாகத் திரும்புவதற்கு முன்னாலேயே பஞ்சாபியர் வழக்கப்படி அவள் தன் புடவைத் தலைப்பை இழுத்துத் தலையைப் போர்த்திக்கொண்டாள். "கிஷன்! இவள்தான் உன் சித்தி!" என்றார் தாத்தாச் சித்தப்பா.

நான் வீட்டில் சொல்லிக் கொடுக்கப்பட்டதுபோலச் சித்தியின் காலடிகளில் தலை வணங்குவதற்காகக் கீழே இறங்கினேன்.

சித்தி சட்டென்று தன் கால்களை நகர்த்திக்கொண்டு, என்னை இழுத்து இறுக அணைத்துக் கொண்டாள். என் கைகள் மிகுந்த பிரயாசையுடன் அவள் இடுப்பைச் சுற்றி வளைத்து அவள் அன்புக்கு அன்பு செலுத்த முயன்றன. அவள் என் தலை மயிரைத் தன் நீண்ட பூப்போன்ற விரல்களினால் கோதியவாறே, "எத்தனை அன்பான குழந்தை இது!" என்றாள்.

"ராம் பியாரி! இந்தக் குழந்தை எனக்கும் மிகப் பிடித்த குழந்தை. இதை நான் என் கைகளால் தட்டித் தட்டி, விரல்களினால் உருவி உருவி வளர்த்திருக்கிறேனாக்கும்!" என்றார் சித்தப்பா.

நான் சித்தியின் இடுப்பைச் சுற்றி வளர்த்திருந்த என் கைகளை அகற்றியபொழுது அவள் ஓர் ஆழ்ந்த பெருமூச்சு விட்டது எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது.

"ஏன், என்ன விஷயம், கண்ணே?" என்று கேட்டார் சித்தப்பா.

"ஒன்றும் இல்லை!" அவள் மீண்டும் ஒரு பெருமூச்சு விட்டுக் கூறினாள். அப்புறம் சிறிது நேரம் பொறுத்து, என்னை அன்போடு நோக்கி, "உன் பெயர் என்ன, குழந்தை?" என்று கேட்டாள்.

நான் என் பெயரைச் சொன்னபொழுது, அவள் பஞ்சாபியர்கள் அல்லாத உச்சரிப்பில் திரும்பச் சொன்னாள்: "கிருஷ்ண சந்திரன்!"

தலை சீவிக் கொள்வதை அப்படியே நிறுத்திவிட்டு அவள் சோப்பினால் கை கழுவிக்கொண்டாள். ஒரு தட்டில் பாலேடும் அரிசிச் சோறும் நான் உண்ணக் கொண்டு வந்து தந்தாள். பராட்டாவின் நினைவை மறந்து நான் அவள் தந்த உணவைச் சுவைத்து உண்டேன். பிறகு அப்படியே வெளியே விளையாடப் போய் விட்டேன்.

ஏறக்குறைய மூன்று நாட்களுக்குப்பின், நான் பள்ளியிலிருந்து வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தபொழுது சித்தப்பாவின் வீட்டுக் கதவு ஒருக்கணித்துத் திறந்திருந்ததைக் கண்டேன். வீட்டின் நிலை வாசலுக்குள்ளிருந்து யாரோ என்னை அழைத்தார்கள். அந்தக் குரல் எனக்குத் தெரிந்த பழகிய குரலாக இருந்தது. நான் கதவைத் திறந்துகொண்டு புத்தக மூட்டையோடு அவ்வீட்டுக்குள் நுழைந்து விட்டேன். உள்ளே யாரையும் காணவில்லை. என்னை யறியாமலே நான் வாசற்கதவைச் சாத்திக்

கொண்டு, நான் அன்று போன அறைக்குள் நுழைந்தேன். சித்தி தலைவாரிக் கொண்டிருந்தாள். அவள் நிலைக்கண்ணாடியிலேயே நான் வருவதைப் பார்த்துவிட்டாள். சட்டென்று தன் முகத்தை என் பக்கமாகத் திருப்பினாள். ஆனால் இந்த முறை அவள் புடவைத் தலைப்பால் தன் முகத்தை மூடிக்கொள்ளவில்லை. சிறிது நேரம் சங்கோசத்தோடு நின்றாள். அப்புறம் முன் போலவே என்னை வாரி அணைத்துக் கொண்டாள். நான் அசையாமல் நின்றவாறு அவளுடைய அழகிய வட்டமான முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன். கொஞ்சம் கொஞ்சமாக அவளது விழிகளிலிருந்து இரு பெரிய கண்ணீர்த் துளிகள் உருண்டு வந்தன. என்னால் பொறுக்கமுடியவில்லை. அவள் ஏன் அழுகிறாள் என்று கூட நான் கேட்கவில்லை. நான் கையை விரித்துக் கொண்டு அவளை நெருங்கினேன். சட்டென்று முழங்கால் மண்டியிட்டுக்கொண்டு அவள் உட்கார்ந்தாள். எனது இரு கைகளும் அவள் முதுப்புறத்தை அணைத்தன. அவள் இறுக்கி என்னை மார்புறத் தழுவிக்கொண்டாள். அன்று நான் முதன் முதலாக மென்மையின் ஸ்பரிசத்தை உணர்ந்தேன். நான் உண்மையைச் சொல்லுகிறேனே, என் உடலிலே ஒரு நடுக்கமும் புல்லரிப்பும் ஏற்பட்டன. சித்தி வலது கையை விடுத்து, என் கன்னத்தைத் தனது இடது கன்னத்தில் பதித்துக்கொண்டாள். நாங்கள் வெகு நேரம் வரை அப்படியே அமர்ந்திருந்தோம். கடைசியில் அவளது கண்ணீர் என் கன்னங்களில் வழிந்து ஓடலாயிற்று. அந்தக் கண்ணீரில் ஈரமும் இருந்தது; வெம்மையும் இருந்தது. எனக்கு என் நினைவு வந்தது. நான் நெருக்கத்தில் அவளுடைய முகத்தைப் பார்த்தேன். அவளுடைய உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன; இமைகள் மூடியிருந்தன. பிறகு அவளுடைய இரண்டாவது கையும் தளர்ந்துவிட்டது. மெதுவாக அவள் தன் கண்களைத் திறந்தாள். இன்றைய என் அறிவு வளர்ச்சியைக் கொண்டு, 'அவளுடைய கண்கள் அப்பொழுது கனத்திருந்தன, சோர்ந்திருந்தன, அப்பொழுதுதான் தூங்கி விழித்தாற்போலிருந்தன' என்று கூறமுடியும். நான் அப்பொழுது அவளை ஒன்று கேட்க விரும்பினேன். "சித்தி..." என்றும் தொடங்கினேன்.

அதற்குள்ளாகவே அவள் வங்காள மொழி கலந்த ஹிந்தியில், "கிருஷ்ண சந்திரா! என் பெயர் ராதை. என்னை ராதை என்றே சொல்லிக் கூப்பிடு!" என்றாள்.

நான் தலையசைத்து, "உங்கள் இஷ்டப்படியே செய்கிறேன்!" என்றேன். அதோடு நான் கேட்க நினைத்ததை மறந்து, "சித்தப்பா எங்கே?" என்று கேட்டேன்.

"அவர் செவ்வாய்ச் சந்தையில் கடைபோடப் போயிருக்கிறார். அமாவாஸ்யை தவிர வேறு எந்த நாளும் அவருக்குப் பொழுது இருப்பதில்லை!" என்றாள் ராதா.

"வேலைக்காரி...?" நான் கேட்டேன்:

"அவளை நீக்கிவிட்டோம். அவள் நல்ல மாதிரி இல்லை. எனவே, நானே எல்லா வேலைகளையும் செய்து கொள்ளுகிறேன்!" என்றாள் ராதா.

திடீரென்று அவளுக்கு என்ன தோன்றிற்றோ, தெரியவில்லை! இதுவரை என் இடது தோளில் தொங்கிக் கொண்டிருந்த புத்தகப் பையைக் கழற்றிக் கீழே வைத்தாள். என் கோட்டைக் கழற்றிக் கட்டிலில் வீசி எறிந்தாள். வாரை அவிழ்த்து என் பூட்ஸ்களையும் கழற்றி விட்டாள். அவள் எனது வலது காலை முன்னே எடுத்துச் சென்று முழங்காலுக்குக் கீழாக மடித்தாள். குதிகால் ஊன்றி நிற்குமாறு செய்தாள். இடது காலை அப்படியே நேராக நிமிர்ந்து இருக்கும்படி விட்டு விட்டாள். பிறகு அவள் நாற்புறமும் பார்வையை ஓட்டினாள், எதையோ தேடினாற் போலிருந்தது. சட்டென்று ஒரு கொடியில் தொங்கிக் கொண்டிருந்த பிரம்பை எடுத்தாள். அந்தப் பிரம்பை என் கையில் கொடுத்து அதன் ஒரு முனையை என் உதடுகளோடு ஒட்டிவைத்தாள். பிறகு சிறிது பின் சென்று என்னை உன்னிப்பாகப் பார்த்தாள். அவள் உதடுகளில் பூப்போல ஒரு புன்னகை ஓடியது. அதைத் தொடர்ந்து வாயிலிருந்து ஒரு நீண்ட பெருமூச்சும் இழைந்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் தன் சிங்கார மேஜையின் டிராயரைத் திறந்து ரோஜா நிறத்தில் ஒரு நாடாவை எடுத்து வந்தாள். என் பொன்னிறக் கேசங்களைக் கோதி, என் முன் நெற்றிக்கு அருகாகக் கொண்டு வந்து, அந்த நாடாவினால் சுற்றி, இடது காதுக்கு அருகில் அழகிய மலர் முடி சமைத்தாள். பிறகு நீண்ட கண்ணாடி அலமாரியைத் திறந்து மஞ்சள் நிற பனாரஸ் பட்டுப் புடவை ஒன்றை எடுத்தாள். அதை இப்படியும் அப்படியும் புரட்டிப் பார்த்துக் கொண்டே பக்கத்துச் சுவரில் மாட்டியிருந்த ஒரு பெரிய படத்தின் அருகில் சென்றாள். அந்தப் படத்துக்கு ஒரு மலர் மாலை அணிவிக்கப் பட்டிருந்தது. வெகு

உன்னிப்பாக அந்தப் படத்தைப் பார்த்துப் பார்த்துத் தன் மனத்தில் பதியவைத்துக் கொண்டாள். அப்புறம் என் பக்கம் திரும்பி வந்தாள். படத்தைப் பார்த்து என் இடுப்பிலே வேட்டியைக் கட்டினாள். எனக்கு ஆடை அணிவித்து அவள் மகிழ்ந்து மாய்ந்து போனாள். காண்டிராக்டரின் சின்னப் பெண் இருக்கிறாளே, அவள் இப்படித் தான் தன் அண்ணனைக் கொண்டு புதிய பொம்மை வாங்கி வரச்செய்து அலங்கரித்து மகிழ்வாள். எனக்கு ராதை அந்தப் பெண்ணைப் போலவே தோன்றினாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் சட்டென்று பிரம்பைப் பிடுங்கிப் புத்தக மூட்டைக்கு அருகில் விட்டெறிந்து விட்டாள். என்னைத் தன் கைகளில் ஏந்தி இடுப்போடு இறுகத் தழுவிக் கொண்டாள். அப்புறம் ஏழெட்டு முறை பம்பரமாகத் தட்டாமாலை சுற்றி என்னைத் தரையில் இறக்கி நிறுத்திவிட்டாள். நான் அந்த மயக்கத்தில் விழுந்து விழுந்து எழுந்தேன். அவள் எனது இளஞ் சூட்டுக் கன்னங்களைத் தன் இரு கைகளினாலும் அழுந்தப் பிடித்துக்கொண்டு நெற்றியிலும் தலையிலும் முத்தமாகப் பொழிந்து விட்டாள்.

சிறிது நேரம் பொறுத்து அவள் எனது அந்த ஆடைகளைக் களைந்து சொந்த உடைகளைப் புனைந்து விட்டாள்; என்னைப் பழையபடியே ஆக்கிவிட்டாள். அவள் சமையலறையிலிருந்து ஒரு வெள்ளிக் கிண்ணம் நிறையப் பாலும் ஒரு தட்டு நிறையத் திராட்சையும் கொண்டு வந்து என்னெதிரில் வைத்தாள். அன்று போலவே இன்றும் தாய் தந்தையரின் உத்தரவுக் கெதிராக நான் எல்லாவற்றையும் சாப்பிட்டு விட்டேன். குளியலறைக்கு என்னை இட்டுச் சென்று அவள் கை வாயைக் கழுவி விட்டாள். பனிபோன்ற வெள்ளைத் துண்டினால் முகத்தைத் துடைத்துக்கொண்டு நான் வெளியே வந்தேன். ராதை என் பின்னாலேயே வந்தாள். 'நாளைக்கு நீ மறுபடியும் விளையாட வா. உனக்கு நல்ல நடனம் ஆடிக் காட்டுகிறேன்!' என்றாள். காண்டிராக்டர் சர்தாரின் பெண் கூறுவதுபோலவே அவளும் கூறுவதாக எனக்குப் பட்டது.

வாசலில் மழை பெய்து கொண்டிருந்தது. வீசிச் சீறும் காற்று தென்னை மரங்களைப் பேயாட்டம் ஆடவைத்துக் கொண்டிருந்தது. நான் நனைந்தவாறே என் வீட்டு முனைவரை சென்று திரும்பி உள்ளே போனேன். அம்மா அலைபாய்ந்து கொண்டிருந்தாள், என்னை எதிர் நோக்கியவாறு. அவள் அன்போடு என்னை இதயத்

தோடு அணைத்துக் கொண்டாள். பிறகு பொய்க் கோபத்தை வருவித்துக்கொண்டு, "இத்தனை நேரமும் எங்கே இருந்தாய்?" என்று கேட்டாள்.

நான் என் தாய் தந்தையரும் புத்தகங்களும் புகட்டிய கல்விக்கு எதிராக, முதன் முறையாகப் பொய் சொன்னேன்.

"அவனிந்தர் வீட்டில். அவன் புதிதாக இயந்திரப் பம்பரம் வாங்கி வந்திருக்கிறான், அம்மா!" என்றேன்.

அம்மா அதைக் கேட்டு அமைதியுற்றாள்.

## 2

மறுநாள் பள்ளியில் என் மனம் செல்லவே இல்லை. வெகு சிரமப்பட்டுப் பொழுதைப் பிடித்துத் தள்ளிய பின்னரே பள்ளி விடும் மணி அடித்தது. விபன் சாவி கொடுத்தால் ஓடும் மோட்டாரைப் புத்தகப் பையில் வைத்துக்கொண்டு வந்திருந்தான். அதைச் சாலையில் உள்ள நடை பாதையில் ஓட்டி ஓட்டி நாங்கள் விளையாடவேண்டும் என்று அவன் விரும்பினான். ஆனால் அன்று நான் அவனுக்குக் கத்திரித்தாற்போல் பதில் சொல்லிவிட்டேன். நான் ராதையோடு விளையாட விரும்பினேன். அன்று அவள் ஆடப் போகும் நடனத்தைக் கண்டு களிக்க ஆசைப்பட்டேன்.

வீட்டுக்குச் சென்று குடிக்கப் பால் வேண்டாமென்று ஏதோ சொல்லிச் சமாளித்தேன். அப்புறம் அவனிந்தர் வீட்டுக்கு விளையாடப் போவதாக ஒரு பொய் சொல்லிவிட்டு ராதையின் வீட்டுக்குள் நுழைந்தேன்.

ராதை முன்னலிருந்தே என்னை எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தாள். அன்று அவள் உடை மிகப் பிரமாதமாக இருந்தது. நான் இதற்கு முன்பு எந்தப் பெண்ணையும் இத்தனை அழகாக உடை உடுத்திச் சீவிச் சிங்காரித்துக் கொண்டு பார்த்ததே இல்லை. அவள் என்னை விரலைப் பிடித்துச் சமையற்கட்டுக்கு அழைத்துச் சென்றாள். என்னை ஓர் ஆசனத்தில் உட்கார வைத்து விட்டு அவள் தரையிலேயே உட்கார்ந்து கொண்டாள். எதிரே வைக்கப்பட்டிருந்த வெள்ளிப் பாத்திரத்தில், பால், பாலேடு, சாதம், சப்பாத்தி. கறிகாய், வெண்ணெய் எல்லாம் வைக்கப்பட்டிருந்தன. ஒரு தங்க நிறத் தட்டில் பழவகைகள் பல வகைப்பட்டிருந்தன. நான் வேண்டாம், வேண்டாம் என்று எவ்வளவோ

சொல்லியும் கேட்காமல் சப்பாத்திகளை முறித்து முறித்து என் வாயில் கறி வகைகளுடன் வலிந்து ஊட்டலானாள். விரைவிலேயே என் வயிறு நிறைந்துவிட்டது. ராதை என்னைக் குளியலறைக்கு இட்டுச் சென்று கை வாயைக் கழுவி விட்டாள்.

அப்புறம் நாங்கள் பக்கத்து அறைக்குச் சென்றோம். அறையில் ஊது பத்தியின் மணம் கமழ்ந்து கொண்டிருந்தது. சிங்கார மேஜையின் மீது ஒரு வெள்ளித் தாம்பாளத்தில் மலர் மாலைகளும் நெய் விளக்குகளும் ஏற்றுவதற்குத் தயாராக வைத்திருந்தன. என் கண்களுக்கு நேராகவே புடவைத் தலைப்பில் முடிந்து தொங்கிக் கொண்டிருந்த சாவிக் கொத்திலிருந்து ஒரு சாவியைத் தேடி எடுத்துத் துணிகள் வைத்திருந்த அலமாரியை ராதை திறந்தாள். அதிலிருந்து மஞ்சள் நிறப் புதுப்பட்டு ஒன்றை எடுத்துக் கட்டிலின் மீது வைத்தாள். ஓர் ஆணியிலிருந்து மயில் தோகையினால் ஆன மகுடம் ஒன்றை எடுத்தவாறே, "கிருஷ்ண சந்திரா! இந்த மகுடத்தை நான் என் கையினாலேயே உனக்காகத் தயாரித்திருக்கிறேனாக்கும்!" என்றாள்.

நான் வியப்பில் ஆழ்ந்து நின்றேன். அதற்குள் ராதை சிங்கார மேஜையின் டிராயரை இழுத்து அதற்குள்ளிருந்து ஒரு புல்லாங்குழலை எடுத்தாள். பத்து நிமிடங்களுக்குள்ளாக எனக்கு வேட்டியுடுத்தி, மகுடம் வைத்து, மலர் மாலை சூட்டிப் புல்லாங்குழலும் கொடுத்து முந்திய நாளைப் போலவே நிறுத்திவிட்டாள். இன்னொரு பூமாலையை எதிர்த்தாற்போலச் சுவரில் மாட்டப்பட்டிருந்த படத்தின் கழுத்தில் அணிவித்தாள். நான் எதிர்த்தாற்போலிருந்த நிலைக்கண்ணாடியில் என் முகத்தை நோக்கினேன். அது எதிரேயுள்ள படத்தைப்போலவே இருந்தது. "ராதா! இது யாருடைய படம்?" என்று நான் கேட்டேன்.

அவள் முறுவலித்து, "உனக்குத் தெரியாதா? கிருஷ்ண சந்திரனின் படம்!" என்றாள்.

"என்னுடையதா?" என்று கேட்டேன் நான்.

"ஆமாமாம், கிருஷ்ண சந்திரனுடையது தான்!" என்றாள் அவள்.

தீக்குச்சியைக் கிழித்துத் தட்டில் வைத்திருந்த ஐந்து விளக்குகளையும் ராதை பொருத்தினாள். பிறகு இரண்டு கைகளாலும் தட்டைத் தூக்கிக்கொண்டு என் அருகில் வந்தாள், எதிரே நின்று கொண்டு தன் இரு கண்களையும் மூடிக் கொண்டாள். சிறிது நேரம் தியானத்தில் ஆழ்ந்தவள் போலிருந்து,

பின்னர் கண்களைத் திறந்தாள். தட்டில் ஒரு புறம் குழைத்து வைத்திருந்த கேசரிப் பொடியில் சுட்டு விரலைத் தோய்த்து அட்சதையையும் எடுத்து என் நெற்றியில் திலகம் இட்டாள். எனக்கும் திடுமென்று ஏனோ அவளைப் போலவே தோன்றியது. நானும் சுட்டு விரலால் கேசரிப் பொடியை எடுத்து அவள் நெற்றியின் அருகில் திலகமிடக் கொண்டு போனேன். அவள் நெற்றியைக் குனிந்து காட்டினாள். என் விரல் பட்டதும் அவள் நடுங்கிவிட்டாள். அவள் கையிலிருந்த விளக்குத் தட்டும் நடுங்கியது. விளக்கின் சுடர் ஆடியது; ஊதுபத்திப் புகை ஆடியது. அவளது கால்களில் கொஞ்சும் சலங்கை ஆடியது; அந்த ஆட்டத்தில் ஒலித்த ஒலியுமே ஆடியது. திடுமென்று அவள் நின்ற நிலையிலேயே ஆடினாள். அதைத் தவிர்க்க அவள் முன்னேறியபொழுது, எங்கே கால் வழுக்கிக் கீழே விழுந்து விடுவாளோ என்று தோன்றியது. ஆனால் நல்ல வேளையாகச் சட்டென்று சமாளித்துக் கொண்டாள். கொஞ்சம் கொஞ்சமாக அவளுடைய அந்த வழுக்கலிலும் சமாளிப்பிலும் ஒரு வேகம் கண்டது. நடனம் தொடங்கிவிட்டது என்பதை நான் உணர்ந்தேன். அவள் இடுப்பை வளைக்கும் பொழுதெல்லாம், அவளது அவிழ்ந்து நீண்ட கூந்தல் தரையைத் தொட்டது. காற்றின் அசைவிலே அலையலையாகப் புரண்டு இரண்டு மடங்காகவும் காட்டியது. வேகம் மீண்டும் கூடத் தொடங்கியது. சலங்கைகளின் ஒலியினால் அறையில் ஒரு முனைப்பாடு கூடியது. கதி வேகத்திலே இன்னும் சூடு பிடித்தது. விளக்கின் எரிகின்ற சுடர்கள் என்னைச் சுற்றி ஓர் ஒளிவட்டம் கூட்டின. என் கண்களெதிரே நட்சத்திரங்கள் சுழன்றன. என்னைச் சுற்றி எத்தனையோ ராதைகள் எனக்குக் காணப்பட்டனர். என் உருவொத்த எத்தனையோ பிள்ளைகள் நான் அணிந்திருந்த உடையில் அவர்களோடு இருந்தனர். நானே கூட என் வசத்தில் இல்லை என்று எனக்குத் தோன்றியது. என்னுடைய விரல்களைப் பலவந்தமாக இழுத்துப் புல்லாங்குழலின் துவாரங்களில் யாரோ வைப்பது போலவும் எனக்குப் பட்டது. நான் பெரிய துவாரத்தில் என் கீழுதட்டைக் கொண்டு சென்று உரக்க ஊதினேன். என் சின்னச் சின்ன விரல்கள் அப்படி எப்படித்தான் அந்தத் துவாரங்களில் நடனம் புரியத் தொடங்கினவோ, தெரியவில்லை! நான் என்றுமே புல்லாங்குழல் வாசித்ததில்லை. புல்லாங்குழல் மட்டும் என்ன, வேறு எந்த வாத்தியமும் கூட எனக்கு வாசிக்கத் தெரியாது. அப்

பொழுது நான் வாசித்த புல்லாங்குழல் வாசிப்பு இருக்கிறதே, அதுபோலப் பெரிய கை தேர்ந்த வித்துவான் வாசித்துக் கூட நான் கேட்டதில்லை.

சிறுகச் சிறுக என் விரல்கள் தளர்ச்சியுற்றன. நடனத்தின் வேகமும் குறைந்து நிற்கிற பக்குவத்துக்கு வந்து விட்டது. ராதை ஒருத்தியானுள்; நானும் ஒருவன் ஆனேன். அறையில் சமாதி நிலைபோன்ற மௌனம் நிலவியது. ராதை குடிகாரர்களைப்போல ஆடிக் கொண்டிருந்தாள். ஆனால் தீபங்கள் உள்ள தட்டைக் கை நழுவவிடவில்லை. நான் என்னிடத்திலிருந்து எழுந்து அவளை நெருங்கினேன். அவள் கையிலிருந்த தட்டை வாங்கிச் சிங்கார மேஜைமீது வைத்ததுதான் தாமதம், ராதை 'திடும்' என்று தரையில் விழுந்துவிட்டாள். புல்லாங்குழலைக் கட்டிலில் விட்டெறிந்து விட்டு நான் அவளைத் தாங்கினேன். அந்த நேரத்தில் எனக்கு எங்கிருந்துதான் அவ்வளவு பலம் வந்ததோ, தெரியவில்லை! அப்பொழுது நான் என்னை எல்லா வகையிலும் ஒரு முழு மனிதனுகவே கண்டேன். என் வேட்டித் தலைப்பினுல் அவளுக்கு விசிறி முற்றிலும் சுய நினைவுக்குக் கொண்டு வந்தேன். அவள் எழுந்து என் கன்னத்தை முத்தமிட்டாள். எனது ஒவ்வொரு நரம்பிலும் துடிப்பு வெள்ளமாகப் பெருகியது. நான் அரை நினைவில் அவளை எனது கைகளில் ஏந்திக்கொண்டேன். அவளும் நடுங்கிவிட்டாள். அதே நேரத்தில் தன் கைகளால் இறுகத் தழுவிக்கொண்டு தன்னை என் பிடியில் நிச்சலனமாக விட்டுவிட்டாள். நான் அவள் கன்னத்தை முத்தமிட்டேன், உதடுகளை முத்தமிட்டேன்; கண் மலர்களை முத்தமிட்டேன், கூந்தலை முத்தமிட்டேன். ஆனால் அவள் அசைவற்று என் பிடியில் கிடந்தாள். நான் அவள் முகத்தை நிமிர்ந்து நோக்கினேன். சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் தனது அரை மயக்கமுற்ற கண்களை இலேசாகத் திறந்தாள்; உடனே சட்டென்று மூடியும் கொண்டாள்.

திடுமெனக் கதவு தட்டும் ஓசை கேட்டது. நாங்கள் எழுந்து நின்றோம். ஆனால் யாருடைய குரலும் கேட்கவில்லை. என்னைப் பழையபடியே கிஷன் சந்த் ஆக்கிவிட்டாள். நான் என் வீட்டுக்குப் போனபொழுது வெகு நேரம் ஆகிவிட்டது.

## 3

என்னை டாக்டரிடம் காண்பித்தார்கள். என் உடல் நலம் சரியாகவே இருக்கிறது என்று அவர் கூறினர்.

"இவனுக்கு ஏன் சிறிதும் பசியே இல்லே?" என்று என் தந்தை டாக்டரைக் கேட்டார்.

"சீரண சக்தி சரியாகத்தானே இருக்கிறது!" என்று விடை அளித்தார் டாக்டர்.

பள்ளிப் பரிட்சையிலும் என்னேப் பற்றி 'ரிப்போர்ட்டு' நல்ல படியே அமைந்தது இருந்தாலும் என் மீது ஒரு கண் வைத்து எல்லோரும் கவனித்து வரலாயினர்.

நான் தினமும் ராதையின் வீட்டுக்குப்போய் வந்தேன். இது பற்றி யாருக்கும் ஒரு பொழுதும் எந்த விதமான ஐயமும் ஏற் பட்டதில்லே. ஆனால நான் தினமும் இரவில் சரியாகச் சாப்பிடு வதில்லே என்பதனால் என் அம்மாவின் கவலே அதிகரித்தது. அவள் துப்புத் துலக்கும் துறையினரைப் போல என் நடவடிக் கைகளேக் கவனிக்கலானாள். ஒரு நாள் நான் ராதையின் வீட்டுக் குப் போனபொழுது, என்பின்னல் எனக்குத் தெரியாமல் ஒளிந்து மறைந்து வந்திருக்கிருள். உட்புறமாகக் கதவு தாளிடப்பட்டு விட்ட காரணத்தால், அவளால் உள்ளே வர முடியவில்லே. வெளியே வாசற்புறத்துக் கதவில் காதை வைத்துக்கொண்டு அவள் எத்தனே நேரம் நின்றிருப்பாளோ, தெரியாது. நடனம் முடிந்ததும் அவள் உரக்கக் குரல் கொடுத்து அழைப்பதுமட்டும் காதில் விழுந்தது. 'ராம்பியாரி! ராம்பியாரி!' என்று அவள் அழைத்தது செவிப் பறையில் வந்து மோதியது.

நான் பயந்து விட்டேன். ஆனல் ராதை சட்டென்று கண்ணன் ஆடைகளேக் களேந்து என் உடைகளே உடுத்திவிட்டாள். குரல் வருகின்ற வேகத்திலேயே என் கைகால்களேக் கழுவி விட்டாள். அப்புறம் என்னே அதே அறையில் ஒளித்து விட்டு அவள் மட்டும் வெளியே போனள். கதவைத் திறந்து என் அன்னேயிடம், "என்ன அம்மா சமாசாரம்?" என்று கேட்டாள்.

"கிஷன் எங்கே?" என்று கோபம் பொங்கும் கண்களோடு அம்மா கேட்டாள்.

"இங்கு தான் எங்கேயாவது இருப்பான்!" என்று பதில் அளித் தாள் ராதை.

"அவன் உள்ளே நுழைந்ததை நானே என் கண்களால் பார்த் தேனே!" என்று இடிக் குரலில் கேட்டாள் அம்மா.

"உள்ளே போய்ப்பார்க்கிறேன்!" மிகவும் அமைதியோடு பதில் சொன்னள் ராதை. "நான் தூங்கிப்போனல், கதவைத்

தாளிட்டுக்கொண்டு அவன் தனியாக எத்தனையோ முறைகள் விளையாடிக் கொண்டிருந்திருக்கிறான். அதுபோல...''

உள்ளே வந்து அவள் என் கைகளைப் பற்றிக்கொண்டாள். நான் பயத்தில் கதியற்றவன் போல நடு நடுங்கிவிட்டேன். "பயப் படாதே, கண்ணு! நாம் திருடவில்லை. பாவம் செய்யவில்லை!'' என்று எனக்குத் தைரியம் சொன்னாள் அவள்.

நான் பிரயாசையுடன் துணிவை வருவித்துக் கொண்டேன். அவள் என்னை இழுத்துக்கொண்டு வெளியே வந்தாள். என் கைகளைப் பிடித்து அம்மாவிடம் கொடுத்து, "இந்தாருங்கள், பிடியுங்கள் உங்கள் வெண்ணெய்த் திருடனை! உள் அறையில் ஒளிந்து கொண்டிருந்தான்'' என்றாள்.

என் அன்னை என்னைவிட்டுவிட்டு உள்ளே நுழைந்துவிட்டாள். பக்கத்து அறையில் சிதறிக் கிடந்த பொருள்களையும், எரிகின்ற ஜோதி விளக்குகளையும் கண்டவள், 'ஊ...ஹும்' என்றாள் உரக்க. பிறகு ஒரு சந்தேகப் பார்வையை ராதையின்மீது வீசிவிட்டு, வெகு மிடுக்கோடு வெளியே திரும்பிவந்தாள். வந்ததும் கண்-மண் தெரியாமல் என்னை அடிக்கத் தொடங்கிவிட்டாள். ராதை என்னை விடுவிக்க வெளியே வந்தாள்; பிறகு திரும்பி விட்டாள். என் கன்னத்தில் விழும் அறைகளைக் கண்டு அவள் குலை நடுங்கி விட்டாள்.

என்னை இழுத்துச் சென்று அறையில் அடைத்தபின் அம்மா அப்பாவின் வரவை எதிர்பார்க்கத் தொடங்கினாள். நான் வேண்டுமென்றே குறட்டைவிடத் தொடங்கினேன். அம்மா மிகுந்த அன்போடு அப்பாவுக்கு உணவு பரிமாறினாள். உணவு அருந்தி முடிந்தபின் வராந்தாவுக்கு வந்து சிறிது நேரம் அப்பா உலாவினார். பிறகு கட்டிலில் சென்று படுத்துக்கொண்டார். அம்மாவும் தனது சமையலறை அலுவல்களை முடித்துக்கொண்டு தனது படுக்கைக்கு வந்தாள். சிறிது நேரம் பொறுத்து, மெதுவாக, "உங்களைத்தானே? விழித்துக் கொண்டிருக்கிறீர்களா?'' என்று கேட்டாள்.

அப்பா புரண்டு படுத்து, "என்ன?'' என்று கேட்டார்.

"நான் ஒரு சமாசாரம் சொல்லவேண்டும் என்றிருந்தேன்!'' சொல்லும் முறையிலேயே அவள், தான் சொல்லப்போகும் விஷயம் மிகவும் முக்கியமானது என்று காட்டிக்கொண்டாள்.

"என்ன சமாசாரம்?''

அம்மா அன்று கேட்டதையும் பார்த்ததையும் அப்படியே சொன்னாள். அப்புறம் முடிவாக, "இந்த வங்காள மாயமந்திரக் காரி என் பிள்ளையை அறையில் அடைத்து என்ன செய்கிறாளோ, விளங்கவில்லை!" என்றாள்.

"பைத்தியம் போலப் பேசாதே!" என்றார் அப்பா.

அம்மா விடவில்லை. தன் எண்ணத்தை வலியுறுத்திச் சொன்னாள்.

"சரி, காலையிலே அந்தக் கிழவனைப் பார்த்துப் பேசுகிறேன்!" என்று அப்பா கூறிய பிறகுதான் அவள் நிம்மதி யுற்றாள்.

## 4

மூன்றாவது நாள், நான் பள்ளியிலிருந்து திரும்பியபொழுது, என் வீட்டுக்குப் போகாமல் ராதையின் வீட்டுப் பக்கம் சென்றேன். வாசற்கதவு மல்லாந்து திறந்து கிடந்தது. வீட்டுக்குள் ஒரு பொருளும் இல்லை. கண்களைக் கசக்கிவிட்டுக் கொண்டு கவனமாகப் பார்த்தேன். ஆள் அரவமே அங்கு இல்லை. பக்கத்து அறைக்குள் சென்றேன். அங்கும் யாரையும் காணோம். என் உடலிலிருந்து ஏதோ ஓர் அவயவத்தை வெட்டி எடுத்து விட்டாற் போலிருந்தது எனக்கு. நான் புத்தகப் பையுடன் அறையின் ஒரு மூலையில்போய் விக்கித்து உட்கார்ந்து விட்டேன். பாதாளத்தை நோக்கிச் செல்வது போன்ற உணர்வில் மூழ்கினேன். அப்பொழுது திடீரென்று யாரோ என் கையைப் பிடித்தார்கள். ராதையாக இருக்கும் என்று முதலில் எண்ணினேன். ஆனால் பிடி மிகவும் அழுத்தமாக இருந்தது. தலை நிமிர்ந்து பார்த்தேன். எதிரே அம்மா நின்று கொண்டிருந்தாள். நான் அழுதுவிட்டேன். அம்மா என்னைக் கரகரவென்று இழுத்துக் கொண்டு எங்கள் வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தாள்.

## விந்தைச் செயல்

"...அப்புறம் நானக் பாபா சுற்றிக்கொண்டே ஹஸன் அப்தால் காட்டுக்குப் போய்ச் சேர்ந்தார். கடுங்கோடை, கொளுத்துகிற வெய்யில், உள் நாக்கை வெளியிலே கொண்டு வந்து தள்ளுகிறாற் போல. எத்திசை நோக்கினும் ஈ காக்கை கிடையாது. கரடு முரடான கற்கள், கற்களை விட்டால் மணல். எரிந்த புதர்கள்; உலர்ந்த மரங்கள். கண்களுக்கெட்டிய தூரம் எங்குமே மனித நடமாட்டம் கிடையாது."

"அதற்கு அப்புறம் அம்மா?" ஆர்வத்தில் அவசரம் தொனிக்கக் கேட்டேன்.

"நானக் பாபா தியானத்தில் மூழ்கி நடந்து கொண்டிருந்தார். மர்தானாவுக்கோ ஒரே தாகம். நா வறண்டுவிட்டது. ஆனால் அங்கே தண்ணீர் எங்கே கிடைக்கும்? 'மர்தானா! பொறுத்துக் கொள்! அடுத்த கிராமத்துக்குப்போய் எவ்வளவு வேண்டுமோ, அவ்வளவு தண்ணீர் பருகலாம்!' என்றார் பாபா. ஆனால் மர்தானாவுக்குத் தாகம் என்றால் அப்படிப்பட்ட தாகம். அதைக் கேட்டதும் நானக் பாபாவுக்குக் கவலையாய்ப் போய்விட்டது. அந்தக் காட்டிலோ எத்தனை தொலைவு போனாலும் தண்ணீர் கிடையாது. மர்தானாவோ பிடிவாதம் பிடிக்கத் தொடங்கிவிட்டான். எல்லோருக்குமே பெருங் கஷ்டமாகிவிட்டது. பாபா அவனுக்கு மீண்டும் எடுத்துச் சொன்னார், 'இங்கே எங்குமே தண்ணீர் கிடையாது. நீ சற்றுப் பொறுத்துக்கொள். ஆண்டவனின் விருப்பத்துக்கு அடிபணி!' என்று. ஆனால் மர்தானா அப்படியே உட்கார்ந்து விட்டான், அசையாமல். ஓரடி கூட அவனால் முன்னெடுத்து வைக்கமுடியவில்லை. பாபா தவித்துப்போனார். மர்தானாவின் பிடிவாதத்தைக் கண்டு குரு நானக் முறுவலித்தார்; வியந்தார். என்ன சொல்லியும் மர்தானா கேட்காமல் போகவே, நானக் பாபா தியானத்தில் மூழ்கினார். குரு நானக்கின் கண்கள் திறந்தபொழுது மர்தானா மீனைப்போலத் துடித்துக் கொண்டிருந்தான். ஸத் குரு அவனைக் கண்டு இளநகை புரிந்து, 'தம்பி மர்தானா! இந்த மலையிலே ஒரு குடிசை இருக்கிறது. அதில் வலீ கந்தாரி என்ற பெயருள்ள ஒரு துறவி இருக்கிறார். நீ அவரிடம் சென்றால் உனக்குத் தண்ணீர் கிடைக்கலாம். இந்தப் பகுதியில் அவருடைய கிணறு ஒன்றில்

தான் குடி நீர் இருக்கிறது. மற்றபடி வேறு எங்குமே நீர் இல்லை' என்று கூறினார்."

"அப்புறம் என்ன ஆயிற்று, அம்மா!" நான் துடித்தேன், மர்தானாவுக்குத் தாகம் தீர்த்துக் கொள்ளத் தண்ணீர் கிடைத்ததா, இல்லையா என்று அறிந்துகொள்ள.

"மர்தானாவுக்குத்தான் நல்ல கடுமையான தாகமா? இதைக் கேட்டதும் மலைப் பக்கம் ஓடினான். சுட்டெரிக்கும் நடுப் பகல் வேளையில் ஒரு புறம் தாகம், மறு புறம் மலைப் பயணம்! அவனுக்கு மூச்சு முட்டியது. உடல் வியர்வையில் தெப்பமாகியது. மர்தானா வெகு கஷ்டப்பட்டு மலையை அடைந்தான். வலீ கந்தாரியை வணங்கித் தண்ணீர் வேண்டி நின்றான். வலீ கந்தாரி கிணற்றுப் பக்கம் ஜாடை காட்டினார். அவன் கிணற்றை நோக்கி நடக்கத் தொடங்கியதும், வலீ கந்தாரியின் மனத்தில் ஏதோ ஒரு நினைப்பு எழுந்தது. மர்தானாவை நிறுத்தி, 'அப்பனே! நீ எங்கிருந்து வருகிறாய்?' என்று கேட்டார்.

'நானக் பீரின் தோழன் நான். பயணம் புறப்பட்ட நாங்கள் இந்தப் பக்கம் வந்து சேர்ந்திருக்கிறோம். எனக்குக் கடும் தாகமாயிருக்கிறது. இங்கே கீழே எங்குமே தண்ணீரைக் காணோம்' என்றான் மர்தானா. நானக் பாபாவின் பெயரைக் கேட்ட மாத்திரத்திலே வலீ கந்தாரிக்குப் பெருத்த கோபம் வந்துவிட்டது. உடனே அவர் மர்தானாவைத் தன் குடிசையிலிருந்து வெளியேற்றி விட்டார். களைத்துக் களைத்துக் கீழே இறங்கி வந்த மர்தானா நானக் பாபாவிடம் குறை கூறினான். அவன் துயரக் கதையைக் கேட்ட நானக் முறுவலித்தார். 'மர்தானா! மீண்டும் ஒருமுறை நீ போய் வா' என்றவர் ஓர் ஆலோசனையும் கூறினார்; 'இம்முறை நீ வணக்கத்தோடு அடக்கமான உள்ளத்தோடு போய் வா. நான் நானக் பக்கிரியின் தோழன் என்று சொல்லு.' மர்தானாவுக்கோ பொறுக்கமுடியாத நாவறட்சி. தண்ணீரோ எங்குமே கிடைக்கவில்லை. மனத்துள் பொங்கிப் பொருமிக்கொண்டு, குறை கூறிக்கொண்டு மலை ஏறிப் போனான். ஆனால் வலீ கந்தாரி அவனுக்கு மீண்டும் தண்ணீர் தரவில்லை. 'நான் ஒரு நாத்திகனின் தோழனுக்குச் சிறுங்காய்த் தண்ணீர் கூடத் தரமுடியாது. என்று கூறி வலீ கந்தாரி மர்தானாவை பழையபடியே மீண்டும் திருப்பிவிட்டார். இந்தத் தடவை மர்தானா மலையிலிருந்து கீழே இறங்கி வரும்பொழுதே அவன் நிலை மிகவும் கெட்டுவிட்டது.

வறட்சியினால் உதட்டுத் தோல் பொறுக்குத் தட்டிவிட்டது. முகத்திலோ வியர்வை வழிந்து கொண்டிருந்தது. இனி அதிக நேரம் உயிர் தரிக்க மாட்டான் என்றே தோன்றியது. பாபா நானக் அவன் சொன்னது முழுவதையும் கேட்டார். 'தன்ன நிரங்கார்' [அருவமான பொருள்] என்று கூறிக்கொண்டு மீண்டும் ஒரு முறை வலீயிடம் போய் வா என்று மர்தானாவிடம் கூறினார். கட்டளையைச் சிரமேற் தாங்கி மர்தானா புறப்பட்டான். ஆனால் நடுவழியிலேயே தன் உயிர் போய்விடும் என்று அவன் எண்ணினான். ஆயினும் எப்படியோ மூன்றாம் முறையாக மலையேறி மர்தானா வலீ கந்தாரியின் காலடிகளில் போய் விழுந்தான். ஆனால் கோபத் தீயில் எரிந்த துறவி இத்தடவையும் அவன் வேண்டுகோளை மறுத்தார். 'தன்னைத் தலைவன், குரு என்று கூறிக் கொள்ளும் நானக் தன் சீடனுக்கு ஒரு வாய் தண்ணீர் கொடுக்கக் கூடத் திறன் அற்றவனா?' என்று ஏசினார் வலீ கந்தாரி. இன்னும் என்ன என்னவோ கேலியும் குத்தலுமாகக் கேட்டார். இந்தத் தடவை மர்தானா கீழே போய்ச் சேர்ந்தபொழுது நாவறட்சியினால் சோர்ந்து போயிருந்தான். நானக்கின் கால்களில் மூர்ச்சையற்று விழுந்துவிட்டான். குரு நானக் பாபா மர்தானாவின் முதுகைத் தடவிக் கொடுத்தார். அவனுக்கு ஆறுதல் அளித்துத் தைரியம் ஊட்டினார். மர்தானா கண்களைத் திறந்தான். நானக் பாபா அவனை எதிரேயுள்ள ஒரு கல்லைத் தூக்குமாறு கூறினார். மர்தானா வெகு பிரயாசையோடு அக்கல்லைத் தூக்கினான். கீழேயிருந்து நீர் புனலாகப் பொங்கி வந்தது. வாய்க்கால் ஓடுவது போல் ஓடியது. பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே நாற்புறமும் நீர் நிறைந்துவிட்டது. இதே நேரத்தில் வலீ கந்தாரிக்கு நீர் தேவைப்பட்டது. கிணற்றைப் பார்த்தார். அதில் ஒரு பொட்டுக்கூட நீர் இல்லை. வலீ கந்தாரிக்கு ஏற்பட்ட வியப்புக்கு ஓர் எல்லை இல்லை. மலைக்குக் கீழோ தண்ணீர் வெள்ளமே வந்தாற் போலிருந்தது. பொங்கு மாங்கடல்போலப் புனல் அல்லவா பொங்கி வீசிக்கொண்டிருந்தது! வலீ கந்தாரி கீழே பார்த்தார். தொலைவில், வெகு தொலைவில், ஒரு கருவேலமரத்தடியில் நானக் பாபாவும் அவருடைய தோழர்களும் உட்கார்ந்திருப்பதைக் கண்டார். கோபம் தலைக்கேறவே, வலீ ஒரு பாறையைத் தம் பலம் கொண்டமட்டும் கீழே வேகமாக உருட்டிவிட்டார். பெரும் பாறை ஒன்று தன்னை நோக்கி உருண்டு வருவதைக் கண்ட மர்தானா கிறீச்சிட்டான். நானக் பாபா மிகவும் அடக்கமான

குரலில் அமைதியாக 'தன்ன நிரங்கார்' என்று கூறுமாறு மர்தானாவிடம் சொன்னார். மலையிலிருந்து உருண்டு வந்த கல் தமது தலைக்கு நேரே வந்ததும் குரு நானக் கையை நீட்டித் தமது உள்ளங்கையினால் அதைத் தடுத்துவிட்டார். ஹஸன் அப்தாலில், இப்பொழுது அதன் பெயர் 'பஞ்ஜா ஸாஹப்' என்று ஆகி விட்டது, ஒரு கற்பாறையில் நானக் பாபாவின் உள்ளங்கை அடையாளம் இன்றும் இருக்கிறது."

எனக்கு இந்த ஸாகீ (கதை) மிகவும் பிடித்தது. ஆனால் ஒரு கையால் பாறையை நிறுத்திய செய்தியைக் கேட்ட தும், எனக்குச் சப்பென்று ஆகிவிட்டது. இது எப்படி நடக்க முடியும்? ஒரு மனிதன் ஒரு பெரிய பாறையைத் தன் கையினால் எப்படித் தடுத்தாட் கொள்ளமுடியும்? அது மட்டுமா? அந்தப் பாறையில இன்னும் கூட நானக் பாபாவின் உள்ளங்கை அடையாளம் இருக்கிறதாமே!—எனக்குத் துளிக் கூட நம்பிக்கை ஏற்படவில்லை. 'பிறகாலத்தில் யாராவது செதுக்கி இருக்க லாம்' என்று அம்பாவிடம் நான் விடாப்பிடியாக வாதாடிக் கொண்டிருந்தேன். கல்லுக் கடியிலிருந்து நீர் ஊற்றுக் கிளம்ப முடியும் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். விஞ்ஞானத் தில் இதுபோல எத்தனையோ கண்டு பிடிப்புகள். அவற்றின் உதவி கொண்டு எங்கே தண்ணீர் இருக்கிறது என்பதை அறிய லாம். ஆனால் ஓர் ஆள் தன்னருகில் ஓடிவரும் பாறையைக் கையால் பிடித்து நிறுத்தினான் என்பதை என்னால் ஒப்புக் கொள்ளமுடியாது. நான் நம்பவில்லை என்பதை என் முகத்தைப் பார்த்தே என் தாயார் புரிந்து கொண்டுவிட்டார். எனவே மௌனம் சாதித்தாள்.

"உருண்டு வரும் மலையை ஒருவனால் எப்படித் தடுத்து நிறுத்த முடியும்?" இந்தக் கதையின் நினைவு வரும் பொழுதெல்லாம் நான் சாரமற்ற ஒரு சிரிப்புச் சிரித்துக் கொள்ளுவேன்.

பல முறை இந்த ஸாகீ குருத்வாராவில் கூடச் சொல்லப் பட்டது. ஆனால் மலைப்பாறையைக் கையால் நிறுத்திய கட்டம் வரும் பொழுதெல்லாம் நான் தலை அசைத்துவிடுவேன், அவ நம்பிக்கையைக் காட்டி.

சில நாட்களுக்கெல்லாம் 'பஞ்ஜா ஸாஹப்'பில் 'ஸாகா' நடை பெறப்போவதாக நாங்கள் கேள்விப்பட்டோம். ஆமாம், அந்த நாட்களில் அடிக்கடி 'ஸாகா' நடப்பது உண்டு. எப்பொழுது 'ஸாகா' நடந்தாலும் அன்று வீட்டில் அடுப்பு எரியாது என்பதும்

இரவில் தரையில் தான் படுத்து உறங்கவேண்டும் என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் இந்த 'ஸாகா' என்பது என்ன வென்று மட்டும் தெரியாது.

எங்கள் கிராமம் 'பஞ்ஜா ஸாஹப்'பிலிருந்து அதிகத் தொலை வில் இல்லை. இந்த 'ஸாகா' செய்தி அறிந்ததும் எங்கள் அம்மா 'பஞ்ஜா ஸாஹப்'புக்குப் புறப்பட்டு விட்டாள். அவள் கூட நானும் போனேன்; என் தங்கையும் வந்தாள். வழி நெடுக அம்மா வின் கண்களில் நீர் கரை கட்டியிருந்தது. இந்த 'ஸாகா' என்பது என்ன என்று நாங்கள் வியந்து கொண்டிருந்தோம்.

'பஞ்ஜா ஸாஹப்' சென்றதும் நாங்கள் ஒரு விந்தைக் கதை கேட்டோம்.

ஏதோ ஒரு தொலைவான நகரத்தில் ஒரு பரங்கியன் நிராயுத பாணிகளான இந்தியர்கள்மீது குண்டு வீசிப் பலரைக் கொன்று விட்டான். இறந்தவர்களில் இளைஞர்களும் இருந்தார்கள்; முதிய வர்களும் இருந்தார்கள். உயிருடன் தப்பியவர்களை ரெயில் வண்டியில் ஏற்றி ஏற்றி வேறு ஒரு நகரத்தின் சிறைச்சாலைக்கு அனுப்பிக் கொண்டிருந்தார்கள். கைதிகளுக்கோ தாங்க முடி யாத பசி—தாகம். ஆனால் வண்டியை நடுவில் எங்குமே நிறுத்தக் கூடாது என்று உத்தரவு. இந்தச் செய்தி 'பஞ்ஜா ஸாஹப்'பை எட்டியதும், மக்கள் கோபத்தினால் கொதித்து எழுந்தார்கள். 'பஞ்ஜா ஸாஹப்'பில் குரு நானக் அவர்களே மர்தானாவின் தாகத் தைத் தணித்திருந்தார். அந்தப் பெருமை வாய்ந்த நகரத்தின் வழியாகப் பயணிகள் பசியும் பட்டினியுமாகப் போவதா? அது வும் ஏதும் குற்ற மற்ற மக்கள், கொடுமை இழக்கப்பட்ட மக்கள்? அது எப்படி முடியும்? எனவே, வண்டியை நிறுத்தித் தீருவது என்று முடிவு ஆயிற்று. ஸ்டேஷன் மாஸ்டருக்கு மனுக் கொடுக் கப்பட்டது, டெலிபோனில் கூறப்பட்டது; தந்தியும் கொடுக்கப் பட்டது. ஆனால் வண்டியை வழியில் எங்கும் நிறுத்தக்கூடாது என்பது பரங்கியனின் உத்தரவாயிற்றே! வண்டியில் உட்கார்ந் திருந்த சுதந்திர தாகம் மிகுந்த விடுதலை வீரர்கள், நாட்டுப் பற்று நிறைந்த இந்தியர்கள் பசியால் அல்லவா வாடிக்கொண்டிருந்தார் கள்! அவர்களுடைய தாகத்தைத் தீர்க்கத் தண்ணீருக்கும் அல் லவா தடை விதிக்கப்பட்டிருந்தது? வண்டி 'பஞ்ஜா ஸாஹப்'பில் நிற்காது; நிற்கக் கூடாது என்பது உத்தரவு. ஆனால் 'பஞ்ஜா ஸாஹப்'பில் உள்ள மக்களின் உறுதியான தீர்மானம் என்ன வென்றால், வண்டியை எப்படியும் 'பஞ்ஜா ஸாஹப்'பில் நிறுத்

தியே தீரவேண்டும். நகரத்து மக்கள் ஸ்டேஷனில் ரொட்டிகள், பூரிகள், பருப்பு—பாயச வகைகள் எல்லாவற்றையும் கொண்டு வந்து குவித்து விட்டார்கள்.

ஆனால் வண்டி புழுதிக் காற்றைப்போல் வரும், புயலைப்போல் போய்விடுமே!— அதை எப்படி நிறுத்துவது?

அப்புறம் என் அம்மாவின் தோழி எங்களுக்குக் கூறினாள்: "அங்கே தண்டவாளத்தில் தலைவைத்து அவர் படுத்துவிட்டார், என் குழந்தைகளின் தந்தை. அவரோடு அவருடைய கூட்டாளி களும் படுத்துவிட்டார்கள். அதற்குப் பின் நாங்கள் பெண்கள் படுத்துவிட்டோம். அப்புறம்....? எங்கள் குழந்தை-குட்டிகளும் படுத்துவிட்டன. வண்டி வந்தது. தொலைவிலிருந்து கூவிக் கொண்டு, கதறிக்கொண்டு, நீள விசில் கொடுத்துக்கொண்டு. வண்டி தொலைவில்தான் வந்து கொண்டிருந்தது என்றாலும் அதன் வேகம் குறைந்துவிட்டது. என்ன இருந்தாலும் ரெயில் வண்டி இல்லையா? ஓரளவு ஓடித்தானே நிற்கவேண்டும். நான் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே ரெயிலின் சக்கரங் கள் அவருடைய மார்பில் ஏறிவிட்டன. அப்புறம் அவருக்குப் பக்கத்தில் இருந்தவர்மேல் ஏறியது... நான் என் கண்களைத் திறந்தபொழுது என் தலைமேல் நின்று கொண்டிருந்தது. என் னுடன் படுத்திருந்த பெண்களின் இதயங்களிலிருந்து 'தன்ன நிரங்கார்' 'தன்ன நிரங்கார்' என்ற ஒலி வந்து கொண்டிருந்தது. அப்புறம் நான் பார்த்துக்கொண்டிருந்தபொழுதே வண்டி பின் னால் சென்றது. சக்கரங்களின் கீழே மாட்டிக்கொண்டிருந்த பிணங்கள் துண்டம் துண்டமாகச் சிதறின........

"நான் என் கண்களால் ரத்த ஆறு ஓடுவதைக் கண்டேன். அது ஓடி ஓடி வெகு தொலைவில் இருந்த வாய்க்கால் பாலம் வரை சென்று விட்டது."

நான் பிரமித்துத் திறந்த வாய் மூடத் தெரியாமல் சமைந்து விட்டேன். என் வாயிலிருந்து சொல்லே புறப்படவில்லை.

மாலையில் திரும்பும் பொழுது, வழியில் எங்கள் அம்மா என் தங்கைக்குப் 'பஞ்ஜா ஸாஹப்' பின் கதையைச் சொல்ல ஆரம் பித்து விட்டாள். 'எப்படி நானக் பாபா மர்தானாவுடன் இந்தப் பக்கம் வந்தார்? மர்தானாவுக்கு எப்படித் தாகம் ஏற்பட்டது? வலீ கந்தாரி அவனை எப்படி மும் முறையும் நம்பிக்கை இழக்கச் செய்து அனுப்பினார்? நானக் பாபா எப்படி மர்தானாவைக் கல்லைப்

புரட்டச் சொன்னுர்? எப்படிக் கீழேயிருந்து தண்ணீர்ப் புனல் வெடித்து வந்தது? வலீ கந்தாரியின் கிணற்று நீரெல்லாம் எப்படிச் சோர்ந்து போய்க் கிழே புனலில் பெருகி வந்தது? அப்புறம் வலீ கந்தாரி தமக்கு வந்த கோபத்தில் எப்படி ஒரு பெரும் பாறையைக் கீழே உருட்டி விட்டார்? எப்படி மர்தாஞ பயந்து நடுங்கிப்போஞன்? ஆனல் நானக் பாபா 'தன்ன நிரங்கார்' என்று கூறித் தம் கையினுல் பாறையைத் தடுத்து நிறுத்திஞர்?'— எல்லாவற்றையும் ஒன்று விடாமல் கூறிஞள்.

"....ஆனல் மலையை ஒருவர் எப்படித் தடுத்து நிறுத்த முடியும்?" என்னைப் போலவே, என் தங்கை அம்மாவைக் கேட்டாள்.

"ஏன் தடுக்கமுடியாது?" என்று நான் முந்திக்கொண்டு கேட்டேன். அதைத் தொடர்ந்து, "புயலைப் போல் பாய்ந்து வரும் ரெயில் வண்டியை ஒருவர் நிறுத்த முடியுமாஞல், உருண்டு வரும் மலைப் பாறையை ஏன் ஒருவர் நிறுத்த முடியாது?" என்று முடித்தேன்.

என் கண்களில் சரசர வென்று நீர் பெருகலாயிற்று. கடமை வீரர்களுக்காக, உயிரைத் துரும்பாக மதித்து, நிற்காத வண்டியை நிறுத்திஞர்களே! பசியினுலும் தாகத்தினுலும் வேதனைப் பட்ட நாட்டு மக்களுக்குப் பசிக்கு உணவும் தாகத்துக்குத் தண்ணீரும் கொடுத்தார்களே! அவர்களுக்காகப் பெருகிய கண்ணீர் அது.

# தஸௌந்தா சிங்

**த**ஸௌந்தா சிங் அந்தப் பாதைக்கு நன்கு அறிமுகமானவன். பானிஹாலிலிருந்து பத்து மைலுக்குப் பிறகு வரப்போகும் மலை யேற்றத்தில் உள்ள திருப்பத்தைப் பற்றி அவன் தன் கிளீனரிடம் படான் கோட்டிலிருந்தே சொல்லத் தொடங்கி விடுவான். வெள்ளரி வகையைச் சேர்ந்த தர்பூஸாப் பழத்தின் கீற்றை ஒக்கும் பாதையின் அந்தப் பகுதி ஏற்கெனவே எதிரிடைப் புகழ் சூடிக்கொண்டது. ஆம், அவ்வளவு சிரமமான பாதை. பனிபெய்யும் காலத்தில் அங்கே நல்ல காற்றும் அடிக்கும். அப்பொழுது மலை உச்சியிலிருக்கும் பனிப் பத்தை அத்தனையும் கீழே உருண்டு வரும், போகும் பாதையை அடைத்து விடும். அதனால் அந்தக் காலத்தில் அரசாங்கத்தின் சார்பில் பனிக் கட்டிகளை அகற்றும் வேலை நடை பெற்ற வண்ணம் இருக்கும், வந்துபோகும் வாகனங்கள் தடைப்பட்டு நின்று விடக் கூடாது என்பதற்காக.

அன்று புலர்ந்த பொழுது நல்ல பொழுதாகத் தோன்றியது. பருவத்தின் கோளாறு இன்றி வானம் தெளிவாக இருந்தது. படோத்தில் இரவைக் கழித்தபின் வண்டி ஏறி ஸ்டியரிங்கைப் பிடித்த தஸௌந்தா சிங், 'பலே, பலே! இன்று பயபடத் தேவையில்லை, பயலே!' என்றான். அதோடு நிறுத்திக் கொள்ளாமல், முழு நீளத் திட்டுக்களால் தன் கிளீனரை அருச்சித்தான்; என்ன என்னவோ விலங்குகளுடன் அவனுக்கு உறவு-முறை கற்பித்தான். கிளீனருக்கு அர்ச்சனையை முடித்துக்கொண்டு பிரார்த்தனைக் குரலில், "வாஹ் குரு! மெய் அரசே! நீயே துணை!" என்றான்.

வண்டியில் மூன்று பயணிகள் இருந்தார்கள். ஏகப்பட்ட பொருள்களும் ஏறியிருந்தன. தஸௌந்தா சிங் எதிரே உள்ள கண்ணாடியில் பார்த்து, "நீங்கள் வாஹே குரு, மெய்யரசின் கணக்குப் படி இரண்டரை ஜீவன்கள் தான். இரண்டு ஆண், ஒரு பெண்!" என்றான்.

"ஸர்தார்ஜீ! பெண்ணைப் பாதியாகக் கணக்கிடுகிறீர்களே!" என்று பயணிகளில் ஒருவன் கேட்டான்.

"அப்படியானால் டிக்கட்டும் பாதியாக்கப் படவேண்டியது தான்!" பெண் வானம்பாடி போலக் குரல் கொடுத்தாள்.

பாகிஹால் கேட்டில் வண்டிகள் நின்று விட்டன. கேட் திறக்க இருபது நிமிடங்கள் பாக்கி இருந்தன. "இருபது வண்டிகள் நமக்கு முன் இருக்கின்றன. ஐந்து வண்டிகள் பின் நிற்கின்றன. மொத்தம் இருபத்து ஆறு ஆயிற்று. ஒன்று எல்லோரும் சேர்ந்து மரிப்போம், அல்லது கடைத்தேறி விடுவோம். பருவ நிலை ஒன்றும் மோசமாயில்லை!" என்றான் தஸௌந்தா சிங். பிறகு வானத்தை நோக்கி அண்ணாந்து பார்த்து, "உன் மாயை உனக்குத்தான் தெரியும் வாஹே குரு! என்றைக்காவது ஒரு நாள் டிக்கட் வாங்கவேண்டியது தானே? என்றைக்கு வாங்கினால் என்ன? ஆனால் ஒன்று; அங்கேயும் நான் உனக்கு டிரைவராகத் தான் இருப்பேன்!" என்றான்.

"அங்கே உனக்கு நான் கிளீனர் வேலை செய்யமாட்டேன், வாத்தியாரே!" என்று கிளீனர் இடை மறித்தான்.

"எலே. ஈச்சமரம்! பேசாதேடா!" தஸௌந்தா சிங் தன் நாவன்மையைக் காட்டினான்.

"வாத்தியாரே! எவ்வளவு நாட்கள் தான் இந்தக் கிளீனர் வேலை வாங்குவாய்?" முன் ஆசனத்தில் இருந்த வண்ணமே முதலில் பின் திரும்பிப் பயணிகளைப் பார்த்தான் கிளீனர். பிறகு தன் பார்வையை தஸௌந்தா சிங் மீது செலுத்தினான்.

"டேய் ஜானி! கச்சடா! இரவல் சட்டை! வாய் திறக்காதேடா!" தஸௌந்தா சிங் அவனை இறக்கினான். "இப்பொழுது உனக்கு என்னடா தெரியும்? ஹாண்டிலைத் தொடத் தெரிந்தால் ஆயிற்று? மனசிலே தோன்றுகிறதைப் பேச ஆரம்பித்து விட்டாயே!" என்றும் மடக்கினான்.

"கச்சடா, இரவல் சட்டை என்கிறீர்களே, அதற்கு என்ன பொருள், சர்தார்ஜி?" என்று கேட்டாள் பெண் சிரித்தவாறு.

தஸௌந்தாசிங் எதிரேயுள்ள கண்ணாடி வழியே பார்த்தான். ஒல்லியான கொடிபோன்ற பெண்ணின் நீட்டு வாகு முகத்திலே பெரிய பெரிய கண்கள் வட்டமிடுவதைக் கணக்குப் போட்டுப் பார்த்தவாறே கூறினான்: "பத்தாவது குரு சொன்னது, அம்மா! அவர் என்ன சொல்லிப் போயிருக்கிறார், தெரியுமா? 'க'வில் தொடங்கும் ஐந்து பொருள்கள் சீக்கியர்களிடம் இருக்கணுமாம்; காப்பு, கேசம், கூந்தல் சீவும் சீப்பு, கத்தி. நாலு ஆயிற்று? ஐந்தாவது கச்சடா! அதாவது மேலங்கி! ஒரு தடவை சாத்தான் தெருவிலே மண்வெட்டி கொண்டு பனிக்கட்டியை அகற்றிக்

கொண்டிருந்தபொழுது இவன் மேலங்கி தொலைந்துவிட்டது. எனக்காக நான் ஜம்முவில் தைத்துக்கொண்ட மேலங்கியை எடுத்து இந்தப் பயலுக்குக் கொடுத்தேன். அது முதற்கொண்டு இந்தத் திருட்டு ஜானி தன் சம்பளத்திலிருந்து மேலங்கி தைத்துக் கொள்வதே இல்லை. மேலங்கி கிழிந்துவிட்டால், இவன் வாத்தியாரே என்று கூப்பிடமாட்டான். சித்தப்பன் உறவு கொண்டாடிக் கொண்டு கைகூப்பி நிற்பான்!''

மலர்க்கொடி போன்ற அந்தப் பெண் தன் இரு தோழர்களையும் நோக்கி, ''சர்தார்ஜிக்கும் நம்முடைய ஏதாவது ஒரு 'டிராமா'வில் 'பார்ட்' கொடுத்தால் நன்றாயிராது?'' என்று கேட்டாள்.

''எனக்கு டிராமாவில் பங்கு கொடுப்பதை அப்புறமாக வைத்துக் கொள்ளுங்கள்!'' கேட் திறக்கும் செய்தியைக் கேட்டதும் தஸௌந்தா சிங் மெய்யுருக வேண்டினான்: ''இந்தச் சாத்தான் சாலையிலிருந்து எங்களைக் காப்பாற்று, ஆண்டவனே! அப்புறம் பிழைத்துக் கிடந்தால், டிராமாவில் பங்கு பெறவும் எனக்குத் தடையில்லை!''

முன் வண்டிகள் விரைவாகக் கேட்டைத் தாண்டிக் கொண்டிருந்தன. தஸௌந்தா சிங்கும் கேட்டைத் தாண்டிவிட்டான்.

சமமான சாலையில் மேலே ஏறும்பொழுது மலை உச்சியைக் கண்டு அவன் இரு கைகளாலும் காதுகளைத் தொட்டு, ''ஸத்நாம் ஸ்ரீ வாஹ குரு! அகால புருஷனே! ஆண்டவனே! காலங்கடந்த மெய்யுறை பொருளே! நீயே துணை!'' என்று வேண்டினான். மீண்டும் ஒரு முறை காதுகளைத் தொட்டுவிட்டு, வண்டி ஓட்டியவாறே, ''மெய்ப் பொருளே! மறை பொருளே! உன் லீலையை என்னவென்பது? ஐம் பொருளைக்கொண்டு மாக்களைப் படைத்தாய், மக்களைப் படைத்தாய். ஆயினும் ஒருவனை டிரைவர் ஆக்கினாய், இன்னொருவனைக் கிளீனர் ஆக்கினாய். வேறு சிலரை நாடக நடிகர் ஆக்கினாய்! என்னே, நின் செயல்!'' என்றான். பிறகு அந்தக் கொடி இடையாளின் நீண்ட முகத்தில், நீட்டுப் போக்கான மோவாயில் பளிச்சென்று தெரிந்த பெரிய கரு மச்சத்தில் தன் பார்வையை ஓட்டியவாறே, ''அம்மணி! நீங்கள் டிராமா போடுகிறீர்களா? உங்களுக்கு என்ன 'பார்ட்' கிடைக்கிறது?'' என்று கேட்டான்.

அந்தப் பூங்கொடியின் தோழன் ஒருவன் சர்தார்ஜியின் தோளைத் தட்டிக் கொடுத்து, ''எங்களுடைய இந்த குல்ஹிமா

இருக்கிருளே, இவள் ஹீரோயினுக்குக் குறைந்த 'பார்ட்'டை ஏற்பதே இல்லை!'' என்ருன்.

''இவர் எங்கள் டைரக்டர், சர்தார்ஜி! இவருடைய ஆதரவினுல் தான் எனக்கு ஹீரோயினுகை நடிக்கும் வாய்ப்பே கிட்டுகிறது. ஸேட்ஜிக்கும் என் நடிப்புப் பிடிக்கத்தான் செய்கிறது என்ருலும் இவருடைய தயவு தான்.......''

குல்ஹிமா முடிக்கவில்லை, அதற்குள் டைரக்டர் கோழியைப் போலத் தம் வயிற்றைத் துருத்திக் காட்டிக் கூறிஞர்: ''குல் ஹிமா! நீ ஹீரோயினுக்காகவே பிறந்திருக்கிருய். இதை ஸேட்ஜி எத்தனையோ முறைகள் சொல்லி யிருக்கிருர். சொல்லப்போனுல் எல்லாமே அவருடைய செல்வத்தின் விளையாட்டுத்தானே?''

மூன்ருவது நபர் வெகு வினயத்தோடு, ''குல்ஹிமாவின் 'டயலாக்' எல்லாம், சர்தார்ஜி, நான் தான் எழுதுகிறது!'' என்ருன்.

''அப்படியா? நீங்கள் டிராமா எழுதுகிறீர்களா?'' ஸர்தார்ஜி வேகமாக வண்டியின் ஸ்டியரிங்கைத் திருப்பியவாறே கூறிஞர்: ''பலே, பலே! ஆண்டவனே! எங்கள் பத்தாவது குரு குரு கோவிந்த சிங் கூட 'விசித்திர நாடகம்' என்று ஒன்று எழுதியிருக்கிருர். எங்கப்பா கூட அடிக்கடி சொல்வார், எங்கள் பத்தாவது குரு பெண்களின் இயல்புகளையெல்லாம் பிட்டுப் பிட்டு வைத்திருக் கிருர் என்று! ஒரு தடவை எங்கள் பாட்டி கேட்டாளாம், 'மகனே! என்னிடமும் பெண்களின் அத்தனை இயல்புகளும் இருக்கின் றனவா?' என்று. அதற்கு அப்பா பதில் சொன்ஞராம், 'நீ எங்கள் அன்னை. அதனுல் இரண்டொரு இயல்புகள் குறை வாகவோ, இல்லாவிட்டால் அதிகமாகவோதான் இருக்கும்.' என்று.''

தஸௌந்தா சிங் உயர்ந்த மலைச் சிகரத்தை ஒரு முறை நோக்கி விட்டு, ''இனி சாத்தான் சாலை தொலைவில் இல்லை. எங்களு டைய இந்த இரண்டரை சீவன்களையும் பொறுப்பாகக்கொண்டு சேர்க்கவேண்டியது உன் கடமை, ஆண்டவனே! இந்தச் சாத் தான் தெரு நாடகத்திலிருந்து எங்களை நல்லபடியாகக் கரை கொண்டு சேர்த்து விடு. பனிக்கட்டிகளோடு நமக்கு என்ன தோழமை வேண்டிக்கிடக்கிறது!....உய்-பலே, பலே! நமக்கு நெருக்கம் நெருப்பு. அது தான் ஐம்பொருள்களால் ஆன இவ் வுடலுக்கு அன்னை. அதுவே இதைத் தின்பதும்!'' என்ருன்.

சாலையோரமாக ஓர் இடத்தில் தஸௌந்தா சிங் வண்டியை நிறுத்தினான். பின்னால் வந்து கொண்டிருந்த வண்டிகள் எல்லாம் முன்னே போய்விட்டன.

"ஏன் நிறுத்தி விட்டீர்கள், சர்தார்ஜி?" வியப்போடு கேட்டாள் குல்ஹிமா.

தஸௌந்தா சிங் வண்டியிலிருந்து வெளியே இறங்கி, "எலே திருட்டுப் பயல் மகனே! கச்சடாப் பயலே! இறங்கி வந்து பாரடா, ஜானி! காற்றின் நாடி எப்படித் துடிக்கிறது, சொல்லு!" என்றான்.

அடை மொழிகளுக்கு உள்ளான ஜானி, வண்டியிலிருந்து இறங்கிய பொழுது, சன்னலில் மாட்டிக்கொண்ட அவன் தலைப்பாகை சாலையில் போய் விழுந்தது. அவன் அவிழ்ந்து விட்ட தன் கூந்தலை மீண்டும் முடி போட்டான். பிறகு பல வண்ணமுள்ள தன் தலைப்பாகையை இறுக்கித் தலையில் சுற்றிக்கொண்டான். "காற்று எதுவும் சொல்லவில்லை, வாத்தியாரே! சரியாகத்தான் இருக்கிறது! உன் இந்தச் சந்தேகம் எப்பொழுது தான் போகுமோ?" என்றான்.

'மகேஷ்ஜி! நம்முடைய அடுத்த நாடகத்திலே இரண்டொரு 'டயலாக்' இந்த ஜானிக்கும் கொடுக்கவேண்டும்!" என்ற குல்ஹிமா, டைரக்டர் பக்கம் தன் பார்வையைத் திருப்பி, "அக்தர் ஸாஹப்! வரப்போகிற நமது நாடகம் ஒன்றில், இந்த ஜானி சோப்பு நுரைபோல வரணும், ஒரு நிமிஷம் தன் நிறங்களைக் காட்டி விட்டுப்போகணும்: அப்பொழுது என்ன பிரமாதமாக இருக்கும், தெரியுமா? நாடகத்தின் சுவையே நூறு மடங்கு கூடி விடும்!" என்றாள்.

"நான் சர்தார்ஜிக்கு ஒரு நல்ல 'ரோல்' யோசித்துக் கொண்டிருந்தேன்!" அக்தரின் குரல் உரத்து ஒலித்தது. பிறகு அவன் வண்டியின் கூரையை நோக்கியவாறே தன் குரலைத் தாழ்த்திச் சமநிலைக்குக் கொண்டு வந்து, "உன் கருத்து என்ன, குல்ஹிமா?" என்று கேட்டான். டைரக்ட் செய்து செய்து அவனுக்குக் குரலைப் பல படியாக மாற்றிக்கொள்ளும் பழக்கம் நன்றாக ஏற்பட்டிருந்தது.

"அதைப் பற்றி மகேஷ்ஜியைக் கேளுங்கள்! 'டயலாக்'குக்கு முதலாளி அவர்! அவருக்குத் தெரியாதது எனக்கு என்ன தெரியும்?" கூறும்பொழுது குல்ஹிமாவின் இதழ்களில் குறுநகை பூத்தது, இசையின் நிரவலில் புதிய சங்கதி புரள்வதுபோல.

"நான் உன் டயலாக்கை அல்லவா '.:பிட்' பண்ணிக் கொண்டிருந்தேன் குல்ஹிமா!" மகேஷ் குரலில் கம்பீரம் தொனிக்கக் கூறினன். தொடர்ந்து, "உன் அம்மா உன்னைச் சினரின் உலர்ந்த சருகுக் குவியலிலிருந்து எடுத்து வந்தாள் என்னும் விவரத்தை நீ மேடையில் உன் வாயால் சொன்னல் எப்படிச் சுவை கூட்டும்?" என்றும் கேட்டான்.

"எல்லாக் குழந்தைகளுமே இப்படித் தான் கிடைக்கின்றனவா? சினர் மரத்தின் உலர்ந்த சருகுக் குவியலிலிருந்தும், உமி கொட்டிக் கிடக்கும் குதிருக்குள்ளிருந்தும் தாஞ கிடைக்கவேண்டும்?—ஆமாம், சகுந்தலை கூடக் கண்வ மகரிஷிக்குக் காட்டின் ஒரு மூலையில் சருகுக் குவியலுக்குள்ளிருந்து தானே கிடைத்திருக்கிருள்!" அக்தர் தானே கேள்வியைக் கேட்டு, விடையும் சொல்லிக் கொண்டான்.

தஸௌந்தா சிங் முன்னேறுவதை விட்டுப் பின்னே சென்ருல் என்ன என்ற புதுக் கருத்தை இந்நேரம் பார்த்து வெளியிட்டான்.

"இதெல்லாம் வீண் பிரமை, வாத்தியாரே! சாலையிலே எங்குமே பெயருக்குக் கூடப் பனியைக் காணேம்! காற்றும் சரியாகத்தான் இருக்கிறது. என்னைக் கேட்டால், இந்நேரம் நாம் சுரங்கத்தைத் தாண்டியிருக்கலாம்!" என்ருன் ஜானி.

"ஜானி சொல்கிறது மெய்தான், சர்தார்ஜி!" குல்ஹிமா தன் இருக்கையில் எழும்பி உட்கார்ந்து இமைகள் படபடக்கக் கூறினள்: "நாம் விரைவில் போய் ஆகவேண்டும். நம்முடைய 'அட்வான்ஸ் ஸ்குவாட்' ஸ்ரீநகரில் நம்மை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்!"

"அம்மா! உங்களுக்குத் தெரியாது!" தஸௌந்தா சிங் இரு கைகளாலும் இரு காதுகளையும் தொட்டுச் சொன்னவன், "காற்றில் ஓர் ஒலி வருகிறது. யாரோ சீக்கிய மறை 'ஜபுஜி'யைப் படிப்பதுபோலக் கேட்கிறது. இதே இடத்தில் தான் சென்ற ஆண்டு என் நண்பன் டிரைவர் அஜித் பனியில் புதைந்து செத்துப் போனன். மூன்று தோலாவுக்கு அவன் ஒரு ஜோடித் தங்கத் தோடு செய்து கொண்டு வந்திருந்தான். அன்றுதான் அவனுடைய சொர்ணவுக்குப் பிறந்த நாள். அஜித் 'ஜபுஜி'யைப் பாராயணம் செய்து கொண்டே இறந்தான். உங்களுக்கு அஜித்தின் குரல் கேட்கவில்லையா?" என்று கேட்டான்.

"நான் இந்த விஷயங்களை யெல்லாம் என் நாடகத்திலே சரி

யாகப் பொருத்திவிட முடியும்?'' மகேஷ் சீப்பை எடுத்துத் தலை வாரிக்கொண்டே சொன்னான்.

ஜானியும் அக்தரும் வண்டியை எடுக்கவேண்டும் என்று சர்தாரை வற்புறுத்திக் கொண்டிருந்தனர்.

''ஒருமுறை உரக்கக் கைதட்டுங்கள், இரண்டரைகளே!'' தஸௌந்தா சிங் தன் பிடிவாதத்தை விட்டு வண்டியை எடுத்து முன்னேறினான்.

குல்ஹியா ஒரு சொடுக்குச் சொடுக்கி, ''சர்தார்ஜி கண் இமைக்கும் நேரத்தில் சாத்தான் சாலையைத் தாண்டி விடுவார்!'' என்று ஊக்கினாள்.

வண்டி சாத்தான் சாலையின் நட்ட நடுவில் போய்க் கொண்டிருந்த பொழுது, ''சர்தார்ஜி, வண்டியை நிறுத்துங்கள்!'' என்று குல்ஹியா உரக்கக் கூவினாள்.

வண்டி நின்றதும் குல்ஹியா இறங்கி வெளியே வந்து, ''இந்த மலைத்தோற்றம் எவ்வளவு அழகாயிருக்கிறது! அடுத்த தடவை வரும் பொழுது நாம் சேட்ஜியையும் அழைத்து வருவோம்!'' என்றாள்.

''ஆமாமாம், ஓர் ஓவியரையும் கூட அழைத்து வரவேண்டும். இந்தக் காட்சியை அப்படியே திரையில் எழுதவும் செய்யவேண்டும்!'' என்றான் அக்தர்.

பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே மலைச் சரிவிலிருந்து பனிப் படல்கள் விழலாயின. தஸௌந்தா சிங் பதறிப்போய், ''பருவ நிலை கெட்டு விட்டது. காற்று குறும்பு செய்யத் தொடங்கி விட்டது! இது நல்லதற்கு இல்லை. ஆண்டவனே! உன் திருவுள்ளம் எதுவோ, யார் கண்டார்கள்? இன்று பனிப் பாயில் படுத்துப் பனிப் போர்வைக்குள் புகவேண்டியது தானே?'' என்றான். வண்டியை எடுக்க வீண் முயற்சியெல்லாம் செய்தான். ஜானியும் தன் பலம் கொண்ட மட்டும் பிடியைச் சுழற்றி இயந்திரத்தை இயங்க வைக்க முயன்றான்.

தஸௌந்தா சிங் வாய் கொண்ட மட்டும் வண்டியை இளக்காரமாகத் திட்டினான்: ''அடி மூதி! நீ காயலான் கடைக்குப் போகிற நாள் கிட்டிவிட்டது! உன் சளிக்கும் சலதோஷத்துக்கும் சிகிச்சை இனி எங்களிடம் கிடையாது!''

ஜானியோ களைகொத்தியினால் பனியை அகற்ற முனைந்து கொண்டிருந்தான். தஸௌந்தா சிங்கோ, ''இனி என்ன செய்வது, அம்மா? என்ஜினின் பகுதி ஏதாவது உடைந்து கிடைந்து

போயிருந்தால் வாஹே குருவின் மீது ஆணை, என் பற்களைப் பிடுங்கி அங்கே இணைத்திருப்பேன். டயர் வெடித்திருந்தால், டயர் இல்லாமலேயே கூட வண்டியைக் குடை வரைப் பாதையின் வாய்க்கு இட்டுச் சென்றிருப்பேன்!'' என்றான். பிறகு ஆகாயத்தை அண்ணாந்து பார்த்து, ''ஆனால் ஆண்டவனே! பனிக் கட்டியினால் நீ என்னையும் அல்லவா உறைய வைத்துவிட்டாய்!'' என்றான்.

''ஏதாவது மலையடி வாரத்தில் சாகவேண்டும் என்று எனக்கு எப்பொழுதுமே ஆசை. என் இஷ்டத்துக்குச் சில கணங்களாவது இருக்கவேண்டும் என்றும் எண்ணியது உண்டு. அக்தர்! அந்த நேரம் வந்து விட்டது என்று தோன்றுகிறது!'' என்றாள் குல்ஹிமா.

தஸௌந்தா சிங் இறங்கிக் கீழே வந்தான். ஜானியை மார்புறத் தழுவிக்கொண்டு, ''ஜானி, நீ என் உயிர்! அட, எதிர்த்தாற்போல மரணம் அல்லவா நின்று கொண்டிருக்கிறது, மகனே!'' என்றான்.

தஸௌந்தா சிங்கின் விழிகளில் கண்ணீர் பெருகுவதைக் கண்டான் மகேஷ். ''பார்த்தாயா, குல்ஹிமா? ஆனால் எனக்கு மரணம் நம்மைத் தழுவப் போகிறதே என்று துளிக் கூட வருத்தம் கிடையாது. நான் என்னுடைய நாடகக் கதாநாயகியோடு அல்லவா மடியப்போகிறேன்!'' என்றான்.

''மகேஷ்! எப்பொழுதும் பேசுகிறபொழுது, அக்கம் பக்கம் பார்த்து யோசித்துப் பேசு!'' அக்தர் உபதேசத்தின் திரையில் தனது பொறுமையையும் எரிச்சலையும் மறைத்துக் கொண்டு கூறினான்: ''நாம் எங்கே போகவேண்டும், என்ன செய்யவேண்டும் என்பதையெல்லாம் சற்று யோசித்துப் பார்!''

''ஆண்டவனே! முதலில் என் டிராமா முடியட்டும். அப்புறம் வேண்டுமானால் திரையை விடு!'' என்று தஸௌந்தா சிங் தன் போக்கில் சொல்லிக் கொண்டிருந்தான்.

''சர்தார்ஜி! நீங்கள்தான் எங்கள் டிராமாவின் ஹீரோ!'' என்றான் மகேஷ்.

தஸௌந்தா சிங் வாட்ட முற்றாற்போல முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு, ''தாடிக்காரன் எப்பொழுதாவது ஹீரோ ஆனதுண்டா? நண்பர்களே! ஆசை ஆசையாகவே இருந்துவிட்டது!'' என்றான். பிறகு எதையோ செவிமடுப்பவன்போல வியந்துபோய், ''இதென்ன? இங்கேயும் கூட அஜீத் 'ஜபுஜி' படிக்கும் குரல் கேட்கிறாற் போலிருக்கிறதே!'' என்றான்.

மகேஷ் சர்தாரின் பேச்சைக் காதில் வாங்கிக்கொள்ளாமலே, "குல்ஹிமா! வண்டியின் சக்கரங்கள் 'ஜாம்' ஆவதற்குள்ளாகவே, உன் உதட்டு முறுவல் உறைந்துவிடும் போலிருக்கிறதே!" என்றான்.

"நாம் இறந்த பிறகு, இந்தப் பக்கமாகப் போகிறவர்களின் செவியில் நம்முடைய 'டயலாக்' விழும். அதனால் ஜாக்கிரதை யாக 'டயலாக்' கைப் பொருத்து!" என்றான் அக்தர்.

"உயிர்வாழ வேண்டும் என்று இருந்தால், எவன் சாகத் துணிவான்? என்ன நான் சொல்கிறது, குல்ஹிமா?" என்றான் மகேஷ்.

"ஓ ஜானி! ஜபுஜியைக் கொஞ்சம் படித்துக்கொள். பரலோகத் துக்கு நல்வழி தேடிக்கொள்!" என்ற தஸௌந்தா சிங் வானத்தை நோக்கினான். "வாஹ் குருஜி! உனது இந்த அடிமை பெரும் பாவி! உன் ஜபுஜியை என்னால் சரிவரப் படிக்க முடியவில்லை!" என்றான்.

ஜானி இன்னும் கலைக் கொத்தியைக் கொண்டு பனிப்பட லத்தை அகற்றுவதில் முனைந்திருந்தான். அவன் உரத்த குரலில், "வாத்தியாரே! நான் சொல்கிறதையும் கேட்டுக்கொள்! நெருப் பில் எரிந்து மடிகிறதைக் காட்டிலும் பனிக் கட்டிக்கு அடியில் அமுங்கிச் சாவது ஆயிரம் மடங்கு மேல்!" என்றான்.

குல்ஹிமா மகேஷின் பக்கம் திரும்பி, "இந்த வசனத்தையும் குறித்துக் கொள்ளுங்கள்!" என்றாள்.

"இதைத்தான் சொல்கிறார்கள் டிராமா வென்று!" அக்தர், தான் அறிவாளி என்பதை முத்திரையிட்டாற்போல வெளிப் படுத்தினான். "கட்டிலில் காலைத் தேய்த்துக்கொண்டு சாவதைக் காட்டிலும் இந்தச் சாவு நல்லதுதான்!— ஏன் குல்ஹிமா! உன் பெயரை 'நோஷே லப்' (அமிர்த வசனி) என்று வைத்திருந்தால் எப்படி யிருக்கும்?" என்று ஒரு கேள்வியில் முடித்தான்.

தஸௌந்தா சிங் சட்டென்று கூறினான்: "அஜீத்! ஜபுஜி படிப் பதைச் சற்று நிறுத்து. குல்ஹிமா சொல்வதைக் கேட்கவிடு!"

"என் மனைவி—மகள் நிலை என்ன ஆகும்? இந்தச் சாத்தான் சாலை, இந்தப் புயல் வீசும் மாலை, இந்த குல்ஹிமா! இவளுக்கு 'நோஷேலப்' என்ற பெயர்தான் வைத்திருக்கவேண்டும், அது தான் பொருத்தம்!" என்றான் அக்தர்.

"நாம் என்ன, ஒத்திகை பார்க்க உட்கார்ந்திருக்கிறோம் என்ற

நினைப்பா? அப்பொழுது தான் டைரக்டர் சொல்கிற படியெல்லாம் நான் ஆடியாகவேண்டும்!'' குல்ஹிமாவின் கலகலச் சிரிப்பு கேலியின் எல்லையைத் தொட்டது.

மகேஷினுல் பேசாமல் இருக்க முடியவில்லை. "குல்ஹிமா! எனக்கு மனைவியும் கிடையாது; மக்கட்பேறும் கிடையாது. ஷேக்ஸ்பியரைப்போல ஒரு ஹாம்லெட் நம்மால் எழுத முடியவில்லையே என்று நான் இறந்த பின்னரும் நான் ஏங்கிமாய்வேன்!'' என்ருன்.

"சர்தார்ஜி ஒரு ஹீரோ; மிகப் பெரிய ஹீரோ. அவருடன் வாழ்க்கை விளையாடிவிட்டது! அதனுல் தான் ஹீரோவாக வேண்டியவர் 'பி' வகுப்பு பஸ் டிரைவராயிருக்கிருர். உண்மையில் டிரைவராக இருக்கவேண்டியவர்கள், இல்லை, இல்லை; கிளீனராக இருக்கவேண்டியவர்கள் ஹீரோவாகிக் கிடக்கிருர்கள். இந்த உலகம் இருக்கிறதே, இது ஒரு விந்தையான இடம்!'' என்ருள் குல்ஹிமா.

காற்ருேடு கலந்து இத்தனை இருட்டும் எங்கிருந்துதான் வந்ததோ, தெரியவில்லை! பாதையே சரியாகப் புலப்படவில்லை. அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாகப் பனி மழை பெய்யலாயிற்று. அந்த இரண்டரை டிக்கட்டுகளைப் போல தஸௌந்தா சிங்கும் ஜானியும் பஸ்ஸுக்குள் முடங்கி உட்காருவதைத் தவிர வேறு எதுவும் வழி தோன்றவில்லை.

அக்தர் மௌனமாஞன். குல்ஹிமா பல முறை கூப்பிட்டும் அவனுக்குப் பேசத் தோன்றவில்லை. அவன் உட்கார்ந்து சிகரெட் புகையை உறிஞ்சலாஞன்.

மகேஷ் குல்ஹிமாவின் அருகில் நகர்ந்த வண்ணம், "வாழ்வுக்கும் சாவுக்கும் இடையே சில முழங்கள் தான் இடைவெளி இருக்கிறது. மாலை இருள் கவியத் தொடங்கிவிட்டது. குலாபோ கூஜரியின் நினைவு ஏனே எழுகிறது? அந்த ஆயர்குலப் பெண் திருவிழாக் காலங்களில் மிட்டாய்க் கடைக் காரனுக்குப் பால் கொண்டு வந்து தருவது உண்டு. நான் என் டயலாக்குகளைக் கோடிப்பதற்காக, ஒரு சேர் பால் வேண்டி அந்தத் திருவிழாக் கடையில் போய் நிற்பது உண்டு. அப்பொழுதுக்கும் இப்பொழுதுக்கும் இடையே பத்தாண்டுகள் இடைவெளி ஓடிவிட்டது. ஆனுல் என்னவென்று விளங்கவில்லை, குல்ஹிமா! உன் முறுவலில் குலாபோவின் மூச்சுக் காற்றின் மணம் இழைந்து வருவதாகத்

தோன்றுகிறது. குலாபோ நிற்கும் இடங்களில் எல்லாம் ஒரு தேர்த்திருவிழாக் கூட்டம் கூடி விடும். நீ ஒரு தடவை சொன்னது பசுமையாக நினைவிருக்கிறது, குல்ஹிமா! 'மகேஷ்! நான் நெருப்பு என்றால் நெருப்பு. என்னை நெருங்குபவர்கள் பஸ்மமாகி விடுவார்கள்' என்று நீ சொன்னாயே, உனக்கு நினைவிருக்கிறதா? இன்று நான் அந்த நெருப்பில் பஸ்மமாக ஆசைப்படுகிறேன்!" என்றான்.

குல்ஹிமா இள நகைபுரிந்து கூறினாள்: "பெயர் குல்ஹிமா. இந்தப் பெயருக்குப் பொருள் என்ன, தெரியுமா? பனி மலர்! ஆனால் பனி மலரான நான் உண்மையில் என் இதயத்துக்குள்ளே பெரு நெருப்பை மூடிவைத்திருக்கிறேனாக்கும்!"

"பனியை எதிர்கொள்ளத் தீயினால் தான் முடியும் என்பது உண்மைதானே?" என்று கேட்டான் மகேஷ்.

வெளியே பனி மழை பெய்து கொண்டிருந்தது. தஸௌந்தா சிங்குக்கும ஜானிக்கும் மரத்துப் போய்விட்டது. அக்தரும் சிகரெட்டை அணைத்து விட்டான்.

"குல்ஹிமா! என்னோடு நீ 'போரும் அமைதியும்' திரைப்படம் பார்த்தபொழுது சொன்னாயே, 'உனக்கும் பியரேக்கும் எத்தனை ஒற்றுமை, மகேஷ்! நீயும் பியரேயைப்போல் உயரமாயிருந்து, கண்களுக்குக் கனத்த மூக்குக்கண்ணாடியும் அணிந்திருந்தால் நன்றாயிருக்கும்' என்று! நினைவிருக்கிறதா? இந்தப் பனிக்கும் புயலுக்கும் தப்பிப் பிழைத்தால், நான் என் கண்களுக்கு நல்ல கண்ணாடியாகக் கட்டாயம் போட்டுக் கொள்ளுகிறேன். ஆனால் உயரமாவது ஒரு பிரச்னைதான்! அதையும் சமாளித்து விடுகிறேன். உயரமான மேடைமீது நின்று என் நதாஷாவுடன் பேச முயல்கிறேன்!" என்றான் மகேஷ்.

குல்ஹிமா சிரித்துவிட்டாள், புல்லாங்குழல் இசை சமத்திலிருந்து பஞ்சமத்துக்கு எழுந்தாற்போலிருந்தது.

வெளியிலோ பனிமாரி பொழிந்து கொண்டிருந்தது. தஸௌந்தா சிங் மௌனப் பாதையைவிட்டு விலகிச் சிற்சில நேரங்களில் அகால புருஷனை ஆண்டவனின் பெயரைக் கூவி அழைத்தான்.

அக்தர் எதுவும் தோன்றாமற்போகவே, ஒரு புது சிகரெட்டை எடுத்துப் பற்றவைத்தான்; நீள நீளப் புகையாக இழுத்தான். அப்புறம் அதை அணைத்துத் தூரப் போட்டு விட்டான்.

"நண்பர்களே! நீங்கள் தங்கள் தங்கள் தெய்வங்களையும் குருமார்களையும் மகான்களையும் தியானித்து வேண்டிக்கொள்ளுங்கள். மரணத்தைச் சந்திக்கும் நேரம் வெகு தொலைவில் இல்லை!" என்று தஸௌந்தா சிங் பிரகடனப் படுத்தினன்.

"நீங்கள் தானே எங்கள் ஹீரோ!" என்ருள் குல்ஹிமா.

மகேஷ் குல்ஹிமாவின் பக்கமாகக் குனிந்து "உன் குரலில் மென்மையோடு ஒரு கூர்மையும் ஒலிக்கிறதே, அதை எங்கிருந்து தான் பெறுவதோ? கல்சுரல் டெலிகேஷனில் கடல் தாண்டிப் போகும் பொழுது உன் அன்பின் நினைவாக சரிகை வேலைப்பாடு செய்த கைக் குட்டையைக் கொடுத்துப் போகாதே. நான் ஸ்ரீநகரின் லால் சௌக்கில் நின்று கொண்டு ஒரு கோல்ட் பிளேக் பாக்கெட்டுக்காக அன்பின் அந்த நினைவுச் சின்னத்தை விற்ருலும் விற்று விடுவேன்!" என்ருன்.

குல்ஹிமா குரலில் கம்பீரத்தை வரவழைத்துக்கொண்டு "ஸ்ரீநகரின் லால் சௌக்கில் யார் விற்கிறது. யாருடைய கைக் குட்டையை? ஒரு கைக் குட்டைக்காக வாழ் நாள் முழுவதும் நீங்கள் தவித்துத் தவம் கிடந்தாலும், இலேசில் கிடைத்து விடுமா அது?" என்று கேட்டாள்.

மகேஷ் கோல்ட் பிளேக் பாக்கெட்டிலிருந்து கடைசிச் சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தான். "குல்ஹிமா! நான் எத்தனை நல்லவனைத் தோற்றம் அளிக்கிறேனே, ஒரு வேளை நான் அத்தனை நல்லவன் இல்லையோ என்றும் தோன்றுகிறது. நான் வாழ்க்கையில் பதின்மூன்று முறைகள் காதலித்திருக்கிறேன். கடல் கடந்து சென்று புன்னகையையும் பெரு நகையையும் வழங்கும் பொழுது என்னையும் நினைவு வைத்துக்கொள்! அதுவே போதும்!" என்ருன்.

தஸௌந்தா சிங் நினைவு என்னும் வண்டியைப் பின்புறமாகத் திருப்பி, "ஐயாவுக்கு அவ்வளவு அழகாகச் சொல்ல வர வில்லையென்று நினைக்கிறேன். மெய்யரசரான வாஹ் குருஜி குலாபோ கூஜரியைக் கட்டரயம் பனி மலராகத்தான் படைத்திருப்பார். ஒரு விஷயம் பாருங்கள், காதல் வழி என்பது பெரும் நெருப்பு வழி. நானும் ஒரு சமயம் ஒருத்தியைக் காதலித்ததுண்டு. அவளது நினைவில் தான் இந்த வழிகளில் வண்டி ஓட்டிக் கொண்டிருக்கிறேன். இப்பொழுது என் காதல் எல்லாம் மதுச்சாருேடுதான். அப்படி ஒரு பழக்கம் பழக்கிக் கொண்டுவிட்டேன். மதுச்சாறு நெருப்பு.

உறைந்த பனியிலும் நெருப்பு தேவைப்படத்தான் செய்கிறது!'' என்ருன். பிறகு நினைவு என்னும் கணப்பில் விறகைச் சொருகி, "அவளும் இந்தச் சாலையில் தான் கிடைத்தாள்! அந்தப் பூங் குயிலியின் பெயர் லாலாருக்; படோத்தில் உள்ள அஞ்சல் அலு வலகத்தில் சாய்வு நாற்காலியில் அமர்ந்து அவள் இனிக்க இனிக் கப் பேசுவது போலத்தோன்றும்!'' என்ருன்.

"நாம் எல்லோரும் அவரவர் டிராமாக்களைத்தானே ஆடிக் கொண்டிருக்கிருேம்!'' என்ருள் குல்ஹிமா.

"ஆமாம், ஆனால் பிற பாத்திரங்களுடன் அழவும் சிரிக்கவும் கூடச் செய்யலாம் நாம்!'' என்று மகேஷ் 'ஆமாம்' போட்டான்.

"ஆனால் சர்தார்ஜி ஒரு நாடகத்தின் கதாநாயகியை வேறு நாட கத்தின் கதாநாயகியோடு அல்லவா இணைக்கிருர்!'' அக்தரால் பேசாமல் இருக்கமுடியவில்லை, "வாஹ், சர்தார்ஜி! இருந்தாலும் உங்களைப் பற்றிச் சொல்லவேண்டுமா?'' என்ருன்.

மலையிலிருந்து விழ வேண்டிய பனியெல்லாம் விழுந்து விட்டது என்பதை தஸௌந்தா சிங் கண்டான். பனி மழை நின்றுவிட்டது. திடீரென்று தாழ்வரையிலிருந்து ஓர் ஒளி தென்பட்டது. அவன் தன் உறைந்த கைகளை ஓர் உதறல் உதறித் தொண்டையின் வலு முழுவதையும் காட்டி, "நெருப்பு! நெருப்பு! நாம் உயிர் பிழைத் தோம். மலர் உயிரே! வாழ்க! வாழ்க!'' என்று கூவினன்.

அவன் வெளியே வந்து பார்த்தான். பனி பெய்வது நின்றிருந் தது. பனி மூட்டத்தினுல் ஏற்பட்ட இருளும் குறைந்திருந்தது. பனி மீதே நின்று கொண்டு ஏதோ பாட்டை முணு முணுக்கத் தொடங்கினன்.

'பெண்ணே! பேரொளியே!

பனித்துயர் மாய்ந்தது; இன்பப் பயிர் முளைத்தது!'

மகிழ்ச்சி எல்லை மீறவே, அவன் கும்மாளக் கூத்திட்டுக் கூறி ஞன்: "விளக்குறை வானம் பாடியே! லேடீஸ் அண்ட் ஜெண்டில் மென்! உயிர் தப்பிேேம், மெய்யன்பர்களே!''

வண்டிக் குள்ளிருந்த இரண்டரை டிக்கட்டுகள் வெளியே வந் தார்கள். குல்ஹிமா முறுவலித்துக் கூறிஞள், "ஸர்தார்ஜி! உங்கள் டயலாக்கைத் திரும்பவும் கூறுங்கள், கேட்போம்!'' என்று.

தஸௌந்தா சிங் மகிழ்ச்சியில் மூழ்கித் தழுதழுக்கும் குரலில், "பிஞ்சிளம் பெண்ணே! மலர் உயிரே! விளக்குறை வானம்

பாடியே! முதலில் நாம் கணப்பின் அருகில் செல்வோம். அப்புறம் நான் உனக்கு வேண்டியது கூறுவேன், சிலம்பொலி எழுப்பிப் பாடுவேன்! அதைக் கேட்டு உனது இந்த டைாக்டரும் டிராமா எழுத்தாளனும் ஊமைக் கோட்டான் ஆகவில்லையென்றால் என் பெயரை மாற்றிவை, என் மலர் உயிரே!'' என்றான்.

குல்ஹிமாவினால் தன் சிரிப்பை அடக்கவே முடியவில்லை.

அக்தர் சிகரெட்டைப் பற்ற வைத்து ஒரு 'தம்' பிடித்தான். பிறகு மகேஷின் தோள் பட்டையில் ஒரு தட்டுத் தட்டி, ''எனக்கு இன்கிரிமெண்ட் கிடைத்து விடும்!'' என்றான்.

ஜானி மண்வெட்டியை எடுத்துச் சாலையை விட்டுத் தாழ்வரையில் வழி சமைக்கலானான். ஏதோ கல்லில் கால் படவே, வழுக்கி விட்டது. இரண்டு முழம் கீழே சென்று முழங்கால் அளவுப் பனியில் புதைந்து விட்டான். எப்படியோ சிரமப்பட்டு அந்த அளவோடு தன்னைச் சமாளித்துக் கொண்டான். அக்தரும் மகேஷும் இரண்டு மூன்று டப்பாக்களைத் தூக்கிக்கொண்டு ஜானிக்குப் பின்னால் புறப்பட்டனர். குல்ஹிமாதான் முன்னும் போகமுடியாமல் பின்னும் போகமுடியாமல் சிரமத்தில் சிக்கிக் கொண்டாள். தீக் கணப்பு எத்தனை அருகில் இருந்தென்ன, போகும் பாதை படுசிரமமாக அல்லவா இருந்தது!

தஸௌந்தா சிங் மதுப் புட்டியைப் பெட்டியில் எடுத்து வைத்துக் கொண்டு குல்ஹிமாவை நோக்கி, ''வெறும் சோற்றைத் தின்னும் இவர்களால், பூவொத்த மேனியாள் ஆனாலும் உன்னை எப்படித் தூக்கிச் செல்ல முடியும்? வாஹ் குருவின் மீது ஆணை! உன்னைத் தூக்கிச் செல்லுவதென்றால் தந்தூரி ரொட்டி சாப்பிடுபவர்களால் தான் முடியும்! பயப்படமாட்டாயே, என் பூமேனிப் பெண்ணே!'' என்று கேட்டான்.

அப்புறம் குல்ஹிமா தஸௌந்தா சிங்கின் கைகளில் இருந்தாள். ''மலர் உயிரே! நான் உன்னை மலரைப் போலவே தூக்கிச் சென்று அங்கே இறக்கிவிடுவேன்! ஓ விளக்குறை வானம் பாடியே! லேடீஸ் அண்ட் ஜெண்டில்மென்!'' என்று கூறிக் கொண்டே அவன் நடந்தான்.

இருவருடைய உடல் சூடும் எத்தனை பனியை உருக்கியதோ, தெரியாது.

கணப்புக் காய்ந்து கொண்டிருந்த கிழவன் கூஜர், தன் பெயர் ரஹீமு என்று கூறினான். அவனது நாய்க்குட்டி குரைத்துக் குரல்

எழுப்பி வந்த விருந்தினர்களை வரவேற்றுக் கொண்டிருந்தது.

தஸௌந்தா சிங்கின் வாய்மொழியாகப் பனியில் வண்டி சிக்கிக்கொண்ட கதையைக் கேட்டு, "பனியிலிருந்து தப்ப எல்லோருக்கும் கணப்பு கிடைப்பதாக!" என்று ஆண்டவனை வேண்டினன் ரஹீமு. டப்பூ என்னும் அவனுடைய நாய்க்குட்டியும் நீண்ட குரல் எடுத்துக் கூவித் தன் எஜமானனை ஆதரித்தது.

தஸௌந்தா சிங் பெட்டியிலிருந்து மதுப் புட்டியை எடுத்தான். பையிலிருந்து கண்ணாடிக் கோப்பையையும் எடுத்தான். "ஓ ரஹீமுச் சித்தப்பா! இதுதான் நமது கணப்பு! நாம் படியாலா பெக் அருந்துவோமா?" என்றான். பிறகு இரண்டையும் கீழே வைத்து, "மலர் உயிரே! உன் கையால் எங்கள் வயிற்றுத் தீக்கு விருந்து வை!" என்றான்.

அவன் சாடையைப் புரிந்துகொண்ட ரஹீமு நான்கு கோப்பைகளும் தண்ணீர்க் குவளையும் எடுத்து வந்தான்.

முதல் கோப்பை குல்ஹிமாவின் கையை அடைந்தது. பிறகு எல்லோருடைய கைகளையும் அவரவர் கோப்பை அலங்கரித்தது. ஆனால் ரஹீமு மட்டும் மது அருந்தச் சம்மதிக்கவில்லை.

தஸௌந்தா சிங் நான்கு வாய் மதுச் சாற்றை அருந்திய பின், "ஓ சித்தப்பா! வெள்ளைத் தாடியுள்ள 'பீர்' வெள்ளைக் குதிரை மீது ஏறி நம் கஷ்டங்களைத் தீர்க்க ஏன் வரவில்லை? இப்பொழுதெல்லாம் பீர் குதிரை யேறும் தகுதி உள்ளவராக இல்லையா?" என்று கேட்டான்.

ரஹீமு விடை அளித்தான்: "சர்தாஜி! பருவம் குதிர்ந்து பனி உருகத் தொடங்குமபொழுது பீர் தன் வெள்ளைக் குதிரை மீதேறி வந்து நமக்குத் தன் உருவத்தைக் காட்டுவான். அப்புறம் பீர் செல்லும் பாதை திறக்கப்படும். ஆனால் இப்பொழுது தான் பீருக்கே குகைப் பாதை தயாராகி விட்டதே! பீரின் பாதையில்தான் பன்னிரண்டு மாதங்களும் போக்கு வரத்து நடைபெறுகிறதே!"

தஸௌந்தா சிங் தனது கோப்பையில் இன்னும் இரண்டு வாய்க்கு மதுச் சாற்றைச் சாய்த்துக் கொண்டு, 'ஓ சித்தப்பா! பீருக்கு மட்டும் மனம் இல்லை யென்றால், இந்தச் சுரங்கப்பாதை ஏற்பட்டிருக்க முடியுமா? வாஹே குருவின் மீது ஆணை! பயணிகள் வண்டிகளில் உட்கார்ந்து வருவதைப் பார்த்துப் பார்த்துப் பீர் மிகவும் சுகவாசியாகிவிட்டார். அதனால் அவர் குதிரை சவாரியையே விட்டுவிட்டார்!" என்றான்.

ஜானி போதை மயக்கத்தில் ஆடியவாறு, "பீரின் தாடி பனி போல் வெளுத்துவிட்டது. காளைப் பருவத்தின் வலு இல்லை இப்பொழுது!" என்றான்.

அக்தர் தொடர்ந்தான்: "ஆமாம், 'என் மேல் போவதாயிருந்தால் என் மார்பைத் துளைத்துக் கொண்டு போ!' என்று கூறிப் பீர் பேசாமல் உட்கார்ந்துவிட்டாருக்கும்!" என்றான்.

மகேஷினால் பேசாமல் இருக்க முடியவில்லை.

"பீரின் மார்பைத் துளைத்தால், நீர் வெள்ளமாக ஓடிவரும். பள்ளத்தாக்கு முழுவதும் மூழ்கிவிடும். அது ஏரியாக உருவாகிவிடும், பழங்காலத்தைப் போல! அன்று மக்கள் இவ்வாறு எண்ணினார்கள். ஆனால் இன்று அப்படியெல்லாம் ஒரு கஷ்டமும் ஏற்படவில்லை!" என்றான்.

குல்ஹிமா முறுவலோடு, "நான் சொல்வதைக் கேளுங்கள்" விடுங்கள் இந்தக் கதையை! குளிர் இன்றே பற்றுவேன் என்கிறது; பசி இன்றே தொற்றுவேன் என்கிறது! அதற்கு வழி பாருங்கள்!" என்றாள்.

மதுச் சாற்றோடு டப்பாக்களில் நிறைத்து வந்திருந்த உணவுப் பொருள்களையும் அவர்கள் ஒரு கைபார்த்துத் தீர்த்துக் கட்டிவிட்டார்கள்.

தஸௌந்தா சிங் குடி வெறியில் ஆடிப் போய்விட்டான். "ஜானி! இப்பொழுது நீ டிரைவர் ஆகிவிட்டாய்!" என்றான்.

ரஹீமு கணப்பில் விறகைச் செருகினான். தஸௌந்தா சிங் தலைப்பாவை எடுத்துக் கழுத்தில் போட்டுக் கொண்டான். பிறகு முடியை ஒருங்கே இணைத்து முடி போட்டவாறே, "என் தாடி அரை நரையாகியிருக்கிறதே ஒழிய ஒரேயடியாக நரைத்து விடவில்லை. பூவுயிரே! ஆனால் தலைக் கேசங்களில் பீரின் பனி பெய்திருக்கிறது, பெண்ணே! அதனால்தான் அப்படி வெளுத்துக் காட்சி அளிக்கிறது. பீரின் பனி இன்னும் அதிகமாகக் கூடப் பெய்யலாம். என் தலை வெளுக்கலாம். ஆனால் வாஹ்குருவின் மீது ஆணை! என் உடலில் உயிர் இருக்கிறது, வலு விருக்கிறது!" என்றான். தன் கோப்பையில் இருந்த கடைசி இரண்டு மூன்று மிடறுகளை நாய்க் குட்டியின் வாயில் ஊற்றினான். நாய்க் குட்டியும் நாக்கைச் சொடக்குவிட்டுக்கொண்டு ருசித்துக் குடித்துத் தஸௌந்தா சிங்குக்கு நன்றி கூறியது.

''நாம் இன்னும் எத்தனையோ நாடகங்கள் ஆடியாகவேண்டும்'' என்று சிரித்துக் கூறிய குல்ஹிமா தன் கோப்பையைக் காலி செய்து, கீழே வைத்தாள்.

தஸௌந்தா சிங் அவளுடைய கோப்பையில் மீண்டும் மதுச் சாற்றை ஊற்றினான். அவள் ஒரு வாய் பருகிவிட்டு, ''நாம் இன்னும் வெகு தொலைவுக்குப் போயாகவேண்டுமே!'' என்றாள்.

''பெண்ணே! என் கண்ணே!'' தஸௌந்தா சிங் தொடர்ந்தான்: ''நீயும் ஒரு மாயைதான்! முடிவில்லாத மாயைபுரிபவள் நீ. அந்த அலகிலா ஆண்டவனின் மாயையைப் பார்ப்பதா, அல்லது உன் மாயையைப் பார்ப்பதா? ஆண்டவன்மீது ஆணை, என் உயிர்ப் பூவே! நாடகக்காரரிடம் நீ உன் நிலையை மட்டும் எழுதச் சொல்லுவாயா? என் கதையும் அதில் இருக்குமா, என் ஆருயிரே!'' என்று கேட்டான்.

அதைக் கேட்டு எல்லோரும் சிரித்துவிட்டார்கள்.

எல்லோருடைய பேச்சும் முடிந்துவிட்டது போலத் தோன்றியது. தூக்கம் கண்களைச் சுழற்றிக்கொண்டு வந்தது.

நாய்க்குட்டி வெகு அன்போடு வாலை ஆட்டித் தஸௌந்தா சிங்கின் உடலோடு தன் முதுகை உராய்ந்துகொண்டிருந்தது. எல்லோரும் தூங்கிவழியலானார்கள். எல்லோருக்கும் முதலில் ரஹீமு குறட்டைவிடலானான், தான்தான் காஷ்மீரத்தில் உள்ள இமயமலைத் தொடரின் பீர் பாஞ்சால் என்ற நினைப்பில்!

தஸௌந்தா சிங்குக்குத் தூக்கம் வரவில்லை. நாய்க்குட்டி அவன் முதுகோடு தன் முதுகை உராய்ந்து கொண்டிருந்தது. தஸௌந்தா சிங் மதுச் சாற்றின் கடைசி மிடறை அதன் வாயில் கவிழ்த்து, ''குடிமகனே, குடி! குடித்துவிட்டு நன்றாகத் தூங்கு! கனவிலே பீர் பாஞ்சாலைக் காண நேர்ந்தால், அதனிடம் முறையிட்டு வேண்டிக்கொள்—ஓ பக்கிரிகள் தலைவனே! உன் ஆட்சியின் எல்லையில் டிரைவர் தஸௌந்தா சிங்குக்கு எவ்விதத் துயரும் ஏற்படக்கூடாது என்று கூறு!'' என்றான்.

நாய்க்குட்டி நன்றியுணர்வோடு தஸௌந்தாசிங்கைப் பார்த்தது. பிறகு அப்படியே தூங்கியும்விட்டது.

'உன்னெதிரே உட்கார்ந்து புலம்பவா?
என் துயரை எடுத்து இயம்பவா?'

என்று தஸௌந்தா சிங் ஒரு பாட்டின் அடியை ராகம் போட்டு உணர்ச்சியோடு முணு முணுக்கலானான்.

தெளஸந்தா சிங்கின் பார்வை அடிக்கடி குல்ஹிமாவின் மீது ஓடிப் பதிந்தது. அணையும் தீயின் ஒளியில் அவளது முகம் இன்னும் வசீகரமாகக் காட்சி அளித்தது. தீ பனியில் அழுந்துவது போலவும் பனி தீயில் இறங்குவது போலவும் தோன்றியது. அவளை எழுப்பி அவள் கதையைக் கேட்டால் என்னவென்று அவனுக்குத் தோன்றியது. ஆனால் இந்தப் பாதையில் எத்தனை தடவைகள் லாலாருக் என்ன என்ன உருவங்கள் ஏற்றுக் காட்சி தருவாளோ என்ற நினைப்பில் அவன் பேசாமல் இருந்துவிட்டான்.

அவன் பார்வை குல்ஹிமாவின் மீது விழும்பொழுதெல்லாம், அவனது கை அவனையறியாமலே தூங்கிக்கொண்டிருக்கும் நாய்க்குட்டியின் முதுகைத் தடவிக் கொடுக்கும். அவனுக்குத் தான் எத்தனை முயன்றும் தூக்கமே வரவில்லையே!

குல்ஹிமா புரண்டு படுத்தவள் அரைக் கண்ணைத் திறந்து தெளஸந்தா சிங்கைப் பார்த்தாள். அவன் அவளையே இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான்.

# கோரைப் புல்

பாகிஸ்தான் பிரிந்து மூன்று நான்கு மாதங்கள்தான் ஆகியிருந்தன. இங்கே எல்லாப் பொருள்களுமே இடம் பெயர்ந்து விட்டாற்போலத் தோன்றின. காவல் நிலையங்களிலும் சுங்கச் சாவடிகளிலும் சாமான்கள் குவிந்து கிடந்தன. டிரங்குப் பெட்டிகள், கட்டில்கள், தொட்டில்கள், மேஜைகள், நாற்காலிகள், சோபா செட்டுகள், படங்கள் எல்லாமே இருக்கவேண்டிய இடங்களிலிருந்து பெயர்ந்து காவல் நிலையத்தை நிறைத்தன. இந்தத் தொட்டில்களுக்கும், கட்டில்களுக்கும் பாத்திரங்களுக்கும் காவல் நிலையத்தில் என்ன தான் வேலையோ? வீடுகளில் ஒருவேளை இந்தப் பொருள்களுக்கு ஒரு முக்கியமான இடமும் பங்கும் இருக்கலாம். அம்மாதிரி நேரங்களில் இதுபோன்ற பொருள்களைக் குறித்த இடத்தைத் தவிர வேறு இடங்களில் வைத்தால் அழகு கெட்டுவிடும் என்று கூட வீட்டைச் சேர்ந்தவர்கள் நினைக்கலாம். ஆனால் இங்கே அத்தகைய பொருள்கள் மலையாகக் குவிந்து கிடந்தன. வீட்டுப் பாத்திரம்—பண்டங்கள் எல்லாம் அலமாரிகள், சமையற் கட்டுகள் ஆகியவற்றிலிருந்து வெளியேறி அரசாங்க அலுவலகங்களின் வாசலிலே கேட்பாரற்றுக் குவிந்து கிடந்தன. இப்பொழுது இவற்றைப் பளிச்சென்று தேய்த்து, மெருகிட்டு அக்கறையோடு கவிழ்த்து வைத்துக் கொள்பவர்கள் யாருமே இல்லை. பல மாதங்களாக இவற்றை ஒரு பெண்ணோ ஆணோ கைகளால் தொட்டுக்கூடப் பார்த்தில்லை.

பாகிஸ்தானில் ஒவ்வொரு பொருளுமே வாரி இறைந்து கிடந்தது. பல வீடுகளில் முளையைப் பிடுங்கிக்கொண்டு வந்த ஆடு மாடுகள் கூட இருந்தன. நம்பிக்கை இழந்த கண்களோடு அவை அக்கம்பக்கம் பார்க்கும். புதிய இடங்களில் பயந்து பயந்து அடி எடுத்து வைக்கும். இத்தனை களேபரத்திலும் நிலம் மட்டும் தன் இடத்திலேயே உறுதியாக இருந்தது. அந்த நிலத்தில் எண்ணற்ற அகதிகள் கால் பாவாமல் ஊர்ந்து கொண்டிருந்தார்கள். பாகாவின் பெரிய முகாமிலிருந்து இவர்களைப் பிடித்து முன்னே தள்ளி வந்தார்கள். எனவே, இடந்தேடி இந்த அகதிகள் நடந்தும் மாட்டு வண்டிகளில் ஏறியும் ஒருநாள் இருந்த இடத்தில் மறுநாள் இல்லாமல் இடம் மாறி இடம் சுற்றினார்கள்.

அகதிகள் விஷயம் ஒருபுறம் இருக்கட்டும். அங்கிருந்த பழைய ஆசாமிகளே இடம் பெயர்ந்துவிட்டார்கள். உற்ருரும் சுற்ருரும் பிரிந்து விட்டனர். நண்பர்களும் விலகிவிட்டனர். கூலிகள் ஆலை முதலாளிகளைப் பிரிந்தனர். ஆலை முதலாளிகள் தங்கள் கூலி களைப் பிரிந்தனர். இவர்கள் எல்லோருக்கும் பதிலாகப் புதுப் புது மக்கள் வந்து விட்டனர். அந்தப் புது மக்களும்தான் எப்ப டிப் பட்டவர்கள்! அழுக்கும் அவலமும் சொல்லி மாளாது. பழைய மக்களோடு அவர்களால் இணைந்து பழக முடியவில்லை. ஸலாம் அலேகும் கூறி அருகில் அமர்ந்து அவர்கள் ஆதரவோடு பேசுவதில்லை. ஆனல் வாசலில் நின்று ஐயப் பார்வையுடன் வெளியே எட்டிப் பார்த்தவண்ணம் இருந்தனர். வருந்தி அழைத்து வார்த்தை ஆடினலும் அவர்கள் பேசுவதில்லை. இவர் களால் கிராமத்தின் ஆணி வேரே ஆடிவிட்டது. நீண்ட நெடுங் காலமாக வாழ்ந்து வந்தவர்களுக்குக் கூடத் தங்கள் கிராமங்கள் புதிதாகத் தோன்றலாயின. ஏனென்ருல், அவர்களுடைய கிராமங்கள் அவர்கள் பிறந்து வளர்ந்த கிராமங்களாகவே இப் பொழுது இல்லை. அப்படி அடியோடு தலை மாறிப் போயிருந்தன. அவர்களுடைய வீடுகளுக்கு அருகில் ஓடிக் கொண்டிருந்த சுனை களும் வாய்க்கால்களும் கூட அவர்களுக்குப் புதிதாகத் தோன்ற லாயின. தொழுகைக்குமுன் அவர்கள் கைகால்களைக் கழுவி 'வஜூ' செய்து கொள்வதுகூட இல்லை. பல நாட்களாக அந்தக் கால்வாய்களில் சிவப்பு நிற நீர் ஓடிக் கொண்டிருந்தது. உருக் குலையாத பிணங்களும் கைகால் சிவப்பட்ட கண்ட முண்டங்களும் எந்த நேரமும் மிதந்தவண்ணம் இருந்தன. அந்த நீரினல் யாரா வது கைகால் கழுவ முடியுமா? தங்கள் பிள்ளை—குட்டிகளைக் கூடக் கால்வாய்க்குக் குளிக்கப் போகக்கூடாது என்று மக்கள் தடுத்துவிட்டார்கள். உண்மையில் ஒவ்வொன்றுமே தலை கீழாக மாறிப் போயிருந்தது. ஆயினும் தனது பழைய நிலைமைக்கு மீண்டும் திரும்ப முயற்சியும் நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஒவ்வொன்றுமே பழையபடி முற்றிலும் நிலைபெறவே விரும்பின.

"நாடே அழிந்து ஒழிந்துவிட்டது!" ஜாட் இனத்தைச் சேர்ந்த ஓர் இளைஞன் அக்கம்பக்கத்துப் பாழ்நிலையைப் பார்த்துவிட்டுத் தன் பிராயம் முதிர்ந்த தந்தையிடம் கூறினன்.

"அழிந்து ஒழிந்து போனது மெய்தான்! இருந்தாலும் சற்று ஊன்றிக் கவனி! மக்கள் தனித்தனி இடங்களில் குடியேறிச் சமைய முயன்றுகொண்டிருக்கிருர்கள். எல்லாம் நாளடைவில்

தானாகச் சரியாகிவிடும்!'' என்றார் தந்தை.

"இதெல்லாம் வெறும் பேச்சு, வெட்டிப் பேச்சு! இனி இவர்கள் எங்கே போய்க் குடியேறுவது, தங்களை நிலை நாட்டிக் கொள்ளுவது? ரொட்டியைப் பிட்டு வாயில் போட்டுக்கொள்ளக் கூடத் திராணியற்றவர்களாக அல்லவா போய் விட்டார்கள்!'' என்றான் மகன்.

"அப்படி இல்லையடா, பைத்தியக்காரா! மேலெழுந்தவாரியாகப் பார்ப்பதற்கு அப்படித் தோன்றுகிறது. கொஞ்சம் யோசித்துப் பாரு! வயலில் கோரைப் புல் முளைக்கிறதே, தெரியுமா? ஏர் பிடித்து உழும்பொழுது அதை யாரும் விட்டு வைப்பதில்லை. வேரோடு களைந்து அதை வயலுக்கு வெளியே வீசி விடுவார்கள். ஆனால் பத்து நாட்களுக்கெல்லாம் ஏதாவது ஒரு வேர் மீண்டும் முளை விடும். ஒரு மாதம் கழித்துப் பார்த்தால் யாருமே கலப்பை பிடித்து அந்த வயலை உழவில்லை என்றே எண்ணத் தோன்றும்!''

உண்மையில் கிழவனின் பேச்சில், உண்மை அங்கங்கே கோரைப் புல்லெனத் தலை தூக்கித்தான் நின்றது. நிலம் கிடைத்தவர்கள் அங்கேயே குடியேறித் தங்க முயன்றனர். தாற்காலிகமாக அவர்களுக்குத் தரப்பட்ட நிலங்கள் கூட அவர்களுக்கு நம்பிக்கை அளித்தன; வாழ்க்கையில் ஒரு பிடிப்பை ஏற்படுத்தின. தங்கள் புதிய மாட்டுத் தொழுவத்துக்கு அருகில் அவர்கள் சிறு சிறு குழிகள் வெட்டி, அவற்றில் வரட்டியை இட்டுப் புகை மூட்டம்போடுவார்கள். வேண்டுமென்று தோன்றினால் எல்லோரும் சேர்ந்து அமர்ந்து ஹுக்கா பிடிப்பார்கள். கொஞ்சம் கொஞ்சமாக அவர்களுடைய எருமைகளுக்குப் பயம் குறையலாயிற்று. தொழுவத்துக்குள்ளே அடிக்கப் பட்ட முளைகளில் அவை சில சமயம் தலையைச் சொரிந்து கொள்ளும். சந்தோஷம் மிகுந்தால் தொழுவத்துச் சுவரிலே தங்கள் உடலைத் தேய்த்துக் கொள்ளும்.

எப்பொழுதாவது தாசில்தாரோ அல்லது வேறு அதிகாரிகளோ அவர்களுடைய புதுக் கிராமத்துக்கு வந்தால், இவர்களில் பலர் தங்களைத் தாங்களே தலைவர்களாகவும் பஞ்சாயத் தாரர்களாவும் வெளிக் காட்டிக்கொள்ள முனைவார்கள். கிராமத்தார் படும் துன்பங்களையும் துயரங்களையும் தாசில்தாருக்கு எடுத்துச் சொல்லுவார்கள். இப்படியாக அக்கிராமத்து மக்கள் அனைவருக்

கும் தங்களைப் பிரதிநிதியாக்கிக் காட்டிக் கிராமத்தில் தங்களுக்குத் தலைமைப் பதவியைத் தேடிக்கொள்ள முயல்வார்கள். நைச்சியமாகப் பேசி மக்களைப் பின்னால் அமரச் செய்து விட்டு, ஒருவர் சொன்னால் போதும் என்று ஒரு கோட்பாட்டைக் கூறி அதிகாரிகளின் சௌகரியத்தைச் கவனிப்பவர்கள் போலத் 'தாகத்துக்கு ஏதாவது வேண்டுமா? ஹுக்கா எடுத்துவரவா?' என்றெல்லாம் கேட்டு அவர்கள் கவனத்தைத் தன் பக்கம் இழுக்க முயல்வார்கள், இது போன்ற காரியங்களினால், அந்தப் பேரதிர்ச்சியிலும் அவர்கள் மனம் குன்றி மாய்ந்து போகவில்லை என்பது தெளிவாக விளங்கியது.

இப்படியாக அழிவும் ஆக்கமும் பெற்றுக் கொண்டிருந்த பாகிஸ்தானில், இந்திய அரசாங்கத்தின் தொடர்புத்துறை அதிகாரியாகப் பணியாற்ற நான் நியமிக்கப்பட்டேன். பலாத்காரமாகத் தூக்கிச் செல்லப் பட்ட பெண்களையும் வலுக் கட்டாயமாக இஸ்லாமைத் தழுவும்படி வற்புறுத்தப்பட்ட குடும்பங்களையும் இந்தியாவுக்குத் திரும்பக் கொண்டு வருவது என் வேலை. இந்தியப் படையைச் சேர்ந்த ஒரு சிறு குழுவும் பாகிஸ்தானின் ஸ்பெஷல் போலீஸ் துறையைச் சேர்ந்த சில சிப்பாய்களும் எனக்கு உதவி புரிந்து கொண்டிருந்தனர்.

மற்ற மறைந்த பொருள்களைத் தேடுவது போலவே, பெண்களைத் தேடும் வேலை சிரமமாகவும் இருந்தது; சுலபமாகவும் இருந்தது. சில சமயம் ஒரு சில பெண்கள் வெகு சிறிய முயற்சியிலேயே கிடைத்து விடுவார்கள். பல சமயம் பெரு முயற்சி எடுத்தாலும் கிடைக்கமாட்டார்கள். பாகிஸ்தானிப் போலீஸ்காரர்கள் அந்தப் பெண்களைத் திருப்பி அனுப்பும் விஷயத்தில், அதாவது தங்கள் நாட்டை விட்டு வெளியேற்றும் விஷயத்தில் ஓரளவு உதவினார்கள். ஆனால் அத்தகைய பெண்களைப் பற்றித் தலை போனாலும் உளவு தரமட்டும் மறுக்காமல் மறுத்தார்கள். ஆயினும் அவர்கள் உண்மையான மனத்தோடு என்னுடன் புறப்பட்டால், என்னுடைய பணி வெகு எளிதாக முடிந்து வந்தது.

இந்தத் தடவை, நான் போன பகுதியின் காவல் நிலைய அதிகாரி என்னோடு வந்ததோடு மட்டுமன்றித் தூக்கிச் செல்லப் பட்ட பெண் ஒருத்தியின் தடயங்கள் அவ்வளவையும் தந்தார். அதோடு, அவருடைய தொகுதிக்கு உட் பட்ட ஒரு கிராமத்துப் பெருந்தனக்காரரின் மனைவி அவள் என்பதையும் எடுத்துரைத்தார். நாங்கள் போய்க்கொண்டிருந்த கிராமம் பக்காச் சாலை

யிலிருந்து வெகு தொலேவில் இருந்தது. வெகு நேரம் வரை நாங்கள் மண் சாலேயிலும் ஒற்றையடிப் பாதையிலும் நடந்து துன்புற்ருேம்.

நாங்கள் போய்ச் சேர்ந்ததும் சேராததுமாகக் கிராமத்தில் பெரிய புள்ளிகள் பலர் காவல்துறை அதிகாரியை வரவேற்கக் கூடிவிட்டனர் பாகிஸ்தானில் அந்த நாட்களில் ஆட்சி பீடத்துக்குப் பெரு மதிப்பும் அச்சமும் இருந்தன. போலீஸ் அதிகாரி அந்தப் பெண்ணேப் பற்றிக் கேட்டதும் சௌதுரிக்கள் சட்டென்று ஓர் அறையைக் காட்டிவிட்டார்கள். சிறிய அறை அது. ஒரு பெரிய காம்பவுண்டுக்குள் ஒரு மூலேயில் இருந்தது. போலீஸ் அதிகாரியும் மற்றவர்களும் வெளியிலேயே தங்கிவிட்டார்கள். நான் மட்டும் தனியாக அறைக்குள் சென்றேன். மிக மோசமான அறை அது. அதில் மூன்று கட்டில்கள்தான் போட முடியும். ஒருபுறம் மரத்தால் ஆன 'ஷெல்ஃப்' ஒன்றில் சில கோப்பைகளும் கிண்ணங்களும் தட்டுக்களும் வைத்திருந்தன. அறையின் ஒரு மூலேயில் சில படுக்கைகளும் வேறு பல கண்டான் முண்டான் சாமான்களும் கிடந்தன.

அந்தப் பெண் ஒரு கட்டிலில் படுத்திருந்தாள் பல நாட்களாக அவளுக்குச் சுரம் வந்துகொண்டிருந்தது. அவளது ஒரு கையில் கட்டுப் போடப்பட்டிருந்தது. ஒருவேளே ஏதாவது சிரங்கு, கொப்புளம் புறப்பட்டுக் கொண்டிருந்ததோ, என்னவோ? அப்பொழுது அவள் மிகவும் பலவீனமுற்றுக் கிடந்தாள். அவள் மிகவும் மெதுவான குரலில்தான் பேசினுள். நான் அவளுடைய பக்கத்துக் கட்டிலில் போய் உட்கார்ந்துகொண்டேன்.

''என்ன சமாசாரம்?''

அவள் நிலேயை அறிவதற்காக நான் நேரிடையாகவே கேள்வியில் இறங்கினேன்.

''நான்கைந்து நாட்களாக ஜுரமாக இருக்கிறது!'' என்ருள் அவள்.

''உன்னேக் கவனித்துக்கொள்வதற்கு இங்கு யாருமே பெண்கள் கிடையாதா?''

''இல்லே, அக்கம் பக்கத்தில் யாருமே கிடையாது!''

இதற்கு முன் நான் பலாத்காரமாகத் தூக்கிச் செல்லப்பட்ட எத்தனேயோ சிறுமிகளேயும் பெண்களேயும் பார்த்திருக்கிறேன். அவர்களோடு ஒப்பிட்டு நோக்கும்பொழுது இப்பெண்ணின்

பகைப் புலன் முற்றிலும் மாறுபட்டிருந்தது; வேறு விதமாக இருந்தது. அந்தப் பெண்களுக்கு அருகில் ஆண்களும் பெண் களும் இருந்தார்கள். அவர்களில் யாராவது ஒருவருடைய கண் காணிப்பில்தான் நான் அந்தப் பெண்களைப் பார்க்க முடிந்தது. என்னைத் தனிமையில் எந்தப் பெண்ணையும் அவர்கள் சந்திக்க விட்டதில்லை. இந்த அறையிலோ அவள் மட்டும் தனியாக இருப் பதாகத்தான் எனக்குப் பட்டது. அவளை அவள் இஷ்டத்துக்கு அவர்கள் விட்டுவிட்டார்கள் போலும்! ஆனால் மக்கள் அவளுக்கு உதவி புரிந்திருப்பதாகவும் கூடத் தோன்றியது. அவளுடைய கிராமத்தார்களும் வீட்டார்களும் எப்படித் தீர்த்துக் கட்டப்பட் டார்கள் என்பதை நான் முன்பே கேட்டுத் தெரிந்து கொண்டிருந் தேன். இரண்டாம் தடவையும் அவள் வாய் மொழியாக அதைக் கேட்டுத் தெரிந்து கொள்வதில் ஒரு விதப் பயனும் இல்லை. அவ ளது அந்த நேரத்து நிலையை அறிந்து கொள்வதில்தான் என் ஆர்வம் அதிகமாயிருந்தது.

"நீ இங்கே வந்து எத்தனை நாட்கள் ஆகின்றன?"

"கிராமம் அழிந்ததே, அன்றிலிருந்து இங்குதான் இருக் கிறேன்."

"இந்தப் பாத்திரம்-பண்டங்களும் துணி-மணிகளும் உனக்குக் கொடுத்தது யார்?"

"நீங்கள் ஒரு முழு முட்டாள்!"

நான் புரிந்துகொண்டு விட்டேன். அவள் அங்கே தனியாக இல்லை என்பதையும், அங்கு கிடந்த பொருள்கள் அவளுக்குச் சொந்தமானவை அல்ல என்பதையும் அவளுடைய அந்தப் பதில் எனக்கு உணர்த்திவிட்டது. அந்த அறை, அந்தப் பொருள்கள், அந்தப் பெண்ணின் உடல்—இவற்றுக்கு எசமானன் கண் ணெதிரே தென்படவில்லை, அவ்வளவுதான்!

இங்கே அந்த விஷயத்தை வெகு இலகுவாக எழுதிவிட்டேன். ஆனால் அப்பொழுது, அந்த விவரத்தை அறிந்தபொழுது, என் உள்ளத்தை ஒரு பேரதிர்ச்சியே தாக்கிவிட்டது. போலீசார், பொது மக்கள் இவர்களுடைய உதவியின் பயனை, இந்த உலகத் தையும் இந்த உலகத்தில் உள்ளவர்களையும் பற்றி என் மனத் தில் என்னவெல்லாம் நல்ல எண்ணங்கள் தோன்றிக் கொண் டிருந்தனவோ, அவை யெல்லாம் ஆளைவிட்டால் போதும் என்று என்னிடமிருந்து விடுபட்டு ஓடி மறைந்துவிட்டன. இப்பொழுது

நான் கசப்பான உண்மைகளைத் தான் எதிர்கொள்ள வேண்டியிருந்தது. அந்த மோசமான அறையில் யாருடைய மனைவியோ பலவந்தமாகத் தூக்கி வரப்பட்டு என்னெதிரே கட்டிலில் அசைவற்றுச் சக்தி இழந்து கிடந்தாள். மனிதனிடம் மனிதன் புரியும் பெருங் கொடுமைக்கு இதைக் காட்டிலும் வேறு என்ன உதாரணம் வேண்டும்? மிகக் கடுமையான ஓவியமாக அக்கொடுமை என் பார்வையிலே விரிந்தது!

கிழித்த நாராகத் திரஸ்கரிக்கப்பட்டு அவள் அங்கே நோய் வாய்ப்பட்டுக் கிடந்தாள். அவள் இனத்தைச் சேர்ந்த, சாதியைச் சேர்ந்த, சுற்றத்தைச் சேர்ந்த, மதத்தைச் சேர்ந்த யாருமே அங்கே இல்லை. பிரிந்துபோன உற்றார் உறவினரை அவள் மீண்டும் சந்திக்கமுடியும் என்று அவளுக்கு யாரும் ஆறுதல் மொழியும் கூறவில்லை. அப்படி யாராவது சொன்னால்கூட அவள் அதை நம்ப மறுத்திருப்பாள். இத்தனை பெரிய சக்தி வாய்ந்த பாகிஸ்தானிலிருந்து அவளை ஒருவன் எப்படி வெளியேற்றி அழைத்துச் சென்று விடமுடியும்? அதைப் பற்றி யோசித்துப் பொழுதை வீணுக்குவதே வீண் என்பது அவள் முடிவு.

அப்பொழுது அவளைத் திருப்பி அழைத்துச் செல்லும் பிரச்னையே எழவில்லை. தை—மாசிக் குளிரில், நோயுற்றிருக்கும் அந்த நிலையில் அவளை அங்கிருந்து அசைப்பது கூடச் சரியல்ல. அவர்களும் அவளை இப்பொழுது எங்கும் கொண்டு மறைத்துவிட முடியாது. ஏனென்றால் அவளை நாங்கள் பார்த்துவிட்டோம். நாங்கள் பார்த்துவிட்டோம் என்பதை அவர்கள் அறிந்தும் இருந்தார்கள்.

"சரி, அம்மா! நான் மீண்டும் ஒருநாள் வருகிறேன்!" என்றேன். மீண்டும் வருகிறேன் என்று நான் சொன்னதன் பொருள் ஒரு நாள் வந்து அவளை அழைத்துச் செல்கிறேன் என்பதுதான். ஆனால் அது கனவிலும் முடியக் கூடிய காரியம் இல்லை என்பதை அவள் அறிந்திருந்தாள் போலும்!

"நீங்கள் புறப்பட்டு விட்டீர்களா?" என்று கேட்டாள்.

"ஆமாம்!"

"சற்று உட்காருங்கள்! என் ஒரு வார்த்தையைக் கேட்டு விட்டுப் போங்கள்!"

நான் மீண்டும் பக்கத்துக் கட்டிலில் உட்கார்ந்து கொண்டேன்.

"உங்களால் முடியுமானல், நான் உங்களிடம் ஒன்று வேண்டிக்

கொள்ள விரும்புகிறேன். உங்களுக்கு ஒரு வேலை தர விரும்புகிறேன்'' என்றாள் அவள்.

''என்ன வேலை?''

''நீங்கள் என் சீக்கிய சகோதரர். நானும் ஒரு காலத்தில் சீக்கிய மதத்தைச் சேர்ந்தவள் தான். இப்பொழுது நான் இஸ்லாமைத் தழுவி விட்டேன். இன்று இந்த உலகத்தில் எனக்கு யாரும் இல்லை. நான் மிகவும் துயரப்பட்டவள். நீங்கள் என் கையைப் பிடித்து, ஒன்று கூறுங்கள். எனக்கு ஒரு சின்ன நாத்தி இருக்கிறாள். அவளை அந்தச் சனியன் பிடித்த பதினொரு கிராமத்தார் கொண்டு போய் விட்டார்கள். அன்றையத் தாக்குதலின் பொழுது அவர்களுடைய கூட்டம் தான் பெரிதாக இருந்தது. அவர்கள் தான் என் நாத்தியைக் கொண்டு சென்றிருக்கிறார்கள். இப்பொழுது உங்கள் தலைமைக்குப் பெருமதிப்பு இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. நீங்கள் அவளை இங்கே என்னிடம் அழைத்து வாருங்கள். எல்லோருமே உங்களிடம் மரியாதை வைத்திருக்கிறார்கள்: போலீஸ்காரர்கள் கூட உங்கள் பேச்சைக் கேட்கிறார்கள். என் சார்பிலும் அவளை வேண்டிக் கொள்ளுங்கள். நான் அவளுக்குப் பெரிய அண்ணி. நான் அவளை என் கைகளால் வளர்த்திருக்கிறேன். நான் அவளுக்குத் தாய்க்கு ஒப்பானவள். அவள் கட்டாயம் என்னிடம் வருவாள். நான் என் கையால் அவளை யாரிடமாவது ஒப்படைப்பேன். அதனால் எனக்குப் பெருமை சேரும். நானும் கைபடைத்தவள் ஆகிவிடுவேன். என்னுடையவள் என்று ஒருவரைச் சொல்லிக்கொள்ள வழி பிறக்கும் அல்லவா?'' என்றாள் அவள்.

அந்த ஜாட் கிழவனின் சொற்கள் என் மூளையில் வட்டமிடத் தொடங்கின: ''கொஞ்சம் யோசித்துப்பாரு! வயலில் கோரைப் புல் முளைக்கிறதே, தெரியுமா? ஏர் பிடித்து உழும்பொழுது அதை யாரும் அகற்றாமல் விட்டு வைப்பதில்லை. எல்லாவற்றையும் வேரோடு களைந்து வயலுக்கு வெளியே வீசி எறிந்துவிடுவார்கள். ஆனால் பத்து நாட்களுக்கெல்லாம் ஏதாவது ஒரு வேர் எப்படியாவது மீண்டும் முளைவிட்டு விடும்.''

# ஒரு பெருமூச்சு

கீர்மோ லோட்டாவில் மோர் வாங்கிக்கொண்டாள். பாதிக்கும் மேல் லோட்டா காலியாக இருக்கவே, "இன்றைக்குப் பெரிய சர்தாரிணியை எங்கே காணோம்? உடல் நலம்தானே?" என்று கேட்டாள்.

சர்தாரிணி நிஹால் கௌர் இப்பொழுதுதான் சிறிது நேரத்துக்கு முன்னால் சமையலறைக்கு வந்திருந்தாள். அடுப்பில் திகு திகு வென்று தீ எரிவதையும் பால் பாயசம் கொதிப்பதையும் கண்டவள், விறகுகளைக் கொஞ்சம் பின்னுக்கு இழுத்து தீயைக் குறைத்தாள். "அடி பெண்ணே, வீரோ! இப்படி 'ஒஹாய்' என்று அடுப்பை எரியவிட்டா பாயசம் வைக்கிறது? பாயசம் கொதிக்கத் தீ குறைவாக அல்லவா இருக்கணும்!" என்று சொன்னவள் ஓர் ஆசனப் பலகையை எடுத்துப் போட்டுக் கொண்டு அடுப்படியில் உட்கார்ந்தாள். உருளியில் கொதித்துக் கொண்டிருந்த பாயசத்தை அகப்பையினால் ஒரு கிளறு கிளறி, இரண்டு ஆற்றல் ஆற்றினாள். காலையில் தயிர் கடைந்ததும் அவள்தான். வெண்ணெயும் மோரும் பிரித்து வெண்ணெயைத் தனியே எடுத்துக்கொண்டிருந்தபொழுது, தான் ஒரு நாழிகை இளைப்பாறப் போவதாகவும் வருகிற ஏழை-பாழைகளுக்கு வீரோவையே மோர் கொடுக்குமாறும் சொன்னாள்.

மோர் வாங்க வந்தபொழுது மற்றப் பெண்களும் கர்மோ கேட்ட கேள்வியையே கேட்டிருக்கலாம். ஆனால் நிஹால் கௌருக்கு அவர்கள் கேட்டது கேட்காதது தெரியாது. அப்பொழுது அவள் உள் அறையில் இருந்தாள். இப்பொழுது சமையலறையில் இருந்ததால், இடைக்கட்டில் உட்கார்ந்திருந்த கர்மோவின் குரலைக் கேட்டுவிட்டாள்.

"நான் நலமாயிருக்கிறேன். நீயும் நலம்தானே கர்மோ?" என்று உள்ளே இருந்தவண்ணமே குரல் கொடுத்தாள்.

கர்மோ சட்டென்று இடைகழிக்கு வந்து உள்ளே எட்டிப் பார்த்தாள். ஒரு கையினால் நெற்றியைத்தொட்டு நெட்டி முறித்து, "நீ நூறு ஆயுசு நல்லா இருக்கணும், சர்தாரிணி! இன்றைக்கு நான் உன்னைப் பார்க்கவில்லையா? அதனால் உடல்-கிடல் நலம் இல்லையோ என்று எண்ணினேன்!" என்றாள்.

எல்லா ஏழை-பாழைகளுமே நெட்டிமுறித்து நிஹால் கௌருக்குத் திருஷ்டி கழிப்பார்கள், வாழ்த்தி வணங்குவார்கள். இது ஒன்றும் புதிதல்ல. ஆனாலும் மோர் வாங்கிக்கொண்டபொழுது கர்மோ அவளை நினைத்ததினாலே, கட்டாயம் ஏதோ இருக்க வேண்டும் என்று நிஹால் கௌருக்குத் தோன்றியது, எனவே, நிஹால் கௌர் கர்மோவைப் பார்த்தாள். கர்மோ லோட்டாவின் வாயைச் சாய்த்து நிஹால் கௌரின் கண்களில் படும்படியாகக் காட்டினாள். நிஹால் கௌருக்குப் புரிந்துவிட்டது. உடனே அவள் வீரோவைப் பார்த்து, "கர்மோவுக்கு லோட்டா வழிய மோர் கொடு என்று நான் சொல்லியிருக்கிறேனே, இல்லையோ? சின்னச் சின்னக் குழந்தைகள் இவளுக்கு. எல்லாம் மோர் குடிக்கும்!" என்றாள்.

"ஆண்டவன் உனக்கு நிறையத் தருவான், அம்மா! உன் கை தாராளக் கை; மனசும் அதற்குயேலே. அதனாலே என் குழந்தைகள் நாளைக்கு இரண்டு தடவைகள் நல்லா மோர் குடிக்கிறதுகள்!"—இன்னும் மோர் வாங்கிக்கொள்ளும்பொழுது கர்மோ சொன்னாள். இப்பொழுது மோர் வார்க்கும் கைகள் வீரோவினுடையவை என்றாலும், கர்மோ சொல்லிக்கொண்டிருந்ததெல்லாம் நிஹால் கௌரின் கைகளைப் பற்றித்தான்.

கர்மோ விடைபெற்றுக்கொண்டதும், நிஹால் கௌர் அவள் வாழ்த்தியது அவ்வளவையும் மறந்துவிட்டாள். அவளுக்கு நினைவிருந்ததெல்லாம் ஒரே ஒரு சொல்தான். "பெரிய சர்தாரிணி...."

நிஹால் கௌர் ஒரே நாளில் சர்தாரிணியிலிருந்து பெரிய சர்தாரிணி ஆகிவிட்டாள். அவளைப் பெரிய சர்தாரிணி என்று அழைக்கவேண்டும் என்ற எண்ணம் எல்லோருக்கும் முன்னால் யாருக்குத் தோன்றியது என்பது தெரியாது. ஒருவேளை எல்லோருக்குமே ஒருமித்தாற்போல இந்த எண்ணம் வந்ததோ? வீட்டு வேலைக்காரியிலிருந்து, தொழிற்சாலையின் மானேஜர் குமாஸ்தா, ஏழை-பாழைகள்வரை எல்லோருமே அவளைப் பெரிய சர்தாரிணி என்று கூப்பிடலாயினர். ஏன், வீட்டு எஜமானரான அவர் கணவர் சர்தார்ஜிகூட நேற்று அவளைப் பெரிய சர்தாரிணி என்றுதான் கூப்பிட்டார். அப்புறம்தான் அவளுக்கு ஒரு விஷயம் நினைவு வந்தது. 'போய்ச் சின்ன சர்தாரிணியை என் அறைக்கு அழைத்து வா' என்று முந்தாநாள் வேலைக்காரியிடம் அவள்தானே சொன்னாள்! அதனால் ஒருத்தி சின்ன சர்தாரிணி

என்று இருக்கும்பொழுது அவள் பெரிய சர்தாரிணி ஆகவேண்டியதுதானே?—நிஹால் கௌர் இதை நினைக்கவும் எத்தனையோ எண்ணங்கள் சிறிய பெரிய அரிசியைப்போல அவள் மனம் என்னும் பாலில் கொதிக்கலாயின.

அப்படிக் கொதிக்கும் எண்ணங்களில் இதுவும் ஒன்று. வீரோ இந்த வீட்டுக்குச் சின்ன சர்தாரிணியாக வந்த நாள் முதற்கொண்டு, அவள் தினமும் ஒழுங்காக மறக்காமல் நிஹால் கௌரின் அறைக்கு வருவாள். அவள் கட்டிலில் கால்மாட்டில் உட்கார்ந்துகொண்டு அவளுக்குக் கால்பிடித்து விடுவாள். நிஹால் கௌர் மகளுக்கு மணம் செய்வித்துக் கணவன் வீட்டுக்கு அனுப்பியவள் அல்ல. மகனுக்கு ஓரிடம் சென்று பெண் எடுத்தவளும் அல்ல. ஆனால் சக்களத்தி வீரோ—அவளைத் தன் கணவருக்கு மணம் முடித்துத் தன் வீட்டுக்கு அழைத்து வந்தவளே நிஹால் கௌர்தான்—கால் பிடிக்க வரும்பொழுதெல்லாம் மகளையும் மருமகளையும் ஏககாலத்தில் பெற்றுவிட்டதுபோல் இன்பம் உறுவாள். நிஹால் கௌர் ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டு உள்ளுக்குள் சிரிக்கும் தன் உதடுகளைக் கொண்டே மனத்துக்கு ஆறுதல் அளித்துக்கொள்வாள். சக்களத்தி வீரோவே தனக்கு மகளாகவும் மருமகளாகவும் செயல்படுவதைக் காணக் களிப்புறுவாள்.

நிஹால் கௌர் தனது கணவர் சர்தாருக்கு மறுமணம் முடிக்கத் தீர்மானித்தபொழுது, இந்தப் பெண் வீரோவைத் தானே தேடிப் பிடித்து வந்தாள். வேறு பல நல்ல இடங்களிலிருந்தும் சம்பந்தம் நாடி வந்ததுண்டு. ஆனால் அவை சர்தாரை உத்தேசித்து அல்ல, சர்தாரின் மாளிகையில் கண்ணை வந்தன சர்தாரின் வயதுக்குப் பயந்து, யார் சம்பந்தம் நாடிவந்தாலும், உறவுமுறை ஏற்படுவதற்கு முன்பாகச் சர்தார் வீட்டைத் தங்கள் பெண்ணின் பெயரில் எழுதி வைத்துவிட வேண்டும் என்றே விரும்பினர். சர்தார் தன் வீட்டுக்கு ஒரு வாரிசு வேண்டுமென்று விரும்பியது என்னவோ உண்மைதான். ஆனால் அதற்காக அவருடைய வாரிசைக் குடல் விளக்கம் என்று செய்வாள் என்று தெரியாத ஒரு பெண்ணுக்குத் தன் வீட்டை எழுதிவைக்க அவரால் சம்மதிக்க முடியவில்லை வாரிசு உண்டு என்று வருங்காலம் உரைக்கும் ஒருத்தியைத்தான் அவர் விரும்பினார்.

எனவே, இந்த நிபந்தனைக்கு உட்படாத அவர் மறுமணம் செய்துகொள்ள மறுத்தார். ஆனால் அந்த மறுப்புச் சொல்லில் ஒரு பெருமூச்சு ஒளிந்திருந்தது. நிஹால் கௌர் அந்தப் பெரு

மூச்சைக் கேட்டுவிட்டாள். அதனால் மிகவும் ஏழைக் குடும்பத்தில் பிறந்த வீரோவைத் தேடிப் பிடித்து வந்து தன் சர்தாருக்குக் கொடுத்தாள். அவருக்குப் பதிலாக அந்தப் பெருமூச்சைத் தானே ஏற்றாள்.

ஒரு நாள் சர்தார் சுவரில் புதைத்திருந்த இரும்பு அலமாரியைத் திறந்தவர், வெகுநேரம்வரை அலமாரி திறந்திருக்க அதன் எதிரே நின்றுகொண்டு ஏதோ யோசித்துக்கொண்டேயிருந்தார். பிறகு பொறுமை இழந்து, "பெரிய சர்தாரிணி எங்கே போய்விட்டாள்!" என்று வீரோவைக் கேட்டார்.

பெரிய சர்தாரிணி வீட்டில் இல்லை என்பது தெரியவரவே, அலமாரியைச் சாத்திப் பூட்டிச் சாவியைப் பையில் போட்டுக்கொண்டார். தொழிற்சாலைக்குப் புறப்படுவதற்கு முன்பாக, "நிஹால் கௌர் எப்பொழுது வீட்டுக்குத் திரும்பினாலும் கீழே கணக்குப்பிள்ளைக்குக் குரல் கொடு. தொழிற்சாலையில் எனக்கு விவரம் தெரிவிக்கச் சொல்!" என்று வீரோவுக்கு உத்தரவிட்டுச் சென்றார். நிஹால் கௌர் திரும்பியபொழுது வீரோ வீட்டு முற்றத்துக் குறட்டில் பதற்றத்தோடு உட்கார்ந்திருந்தாள். அப்பொழுதுதான் அவள் ஒருமுறை வாந்தி எடுத்திருந்தாள்.

நிஹால் கௌர் வீரோவின் கைகளைப் பற்றித் தூக்கித் தோளைப் பிடித்து அணைத்தவாறு கட்டிலுக்கு அழைத்துச்சென்று படுக்கவைத்தாள்.

ஆனால் வீரோ கால்கள் நடுங்கக் கீழே இறங்கி நிஹால் கௌரின் கால்களை இறுகப் பிடித்துக்கொண்டாள்.

"சர்தாரிணி! என்னை மகளாகவும் மருமகளாகவும் பாவிப்பதாக ஒருநாள் சொன்னீர்களே, நினைவிருக்கிறதா? இன்று என்னை மருமகளாகவோ மகளாகவோ நினைத்து நீங்கள் காப்பாற்றித்தான் ஆகவேண்டும்!" என்று கூறி வீரோ விம்மி அழத் தொடங்கிவிட்டாள். அந்த விம்மல்களுக்கிடையே அவள் நிஹால் கௌரிடம் விவரமும் கூறினாள்: "சில நாட்களுக்குமுன் என்னை என் உடன்பிறந்தான் பார்க்க வந்தான். மிகவும் பணமுடை என்று கூறினான். என்னிடம் இருந்த பணத்தைக் கொடுத்தேன். அது பற்றாது என்றான். அதனால் சர்தாரின் பையிலிருந்து சாவியைத் திருட்டுத் தனமாக எடுத்து இரும்பு அலமாரியைத் திறந்தேன். அதிலிருந்த வெள்ளிப பாத்திரங்கள் சிலவற்றை எடுத்து என் சகோதரனிடம் கொடுத்து விட்டேன்!"

நிஹால் கௌரிடம் வீரோ எதையும் மறைக்கவில்லை. "இது உன்னுடைய வீடு. நீயே உன் வீட்டை உன் கையால் அழிப்பாயானால்..." நிஹால் கௌர் சொல்ல வந்ததைச் சொல்லி முடிக்கவில்லை, வீரோ தனது மனக் குமுறலைக் கொட்டிவிட்டாள்: "இந்த வீடு எனக்கு எப்பொழுதுமே என்னுடையதாகப் படவில்லை; படவும் படாது. ஆனால் நான் உங்களுக்கு ஒரு வாக்குறுதி மட்டும் அளிக்கிறேன், சர்தாரிணி! இனி நான் இந்த வீட்டுப் பொருளை எடுத்து யாருக்கும் கொடுக்கமாட்டேன். இது உறுதி. அன்று நான் செய்தது தவறுதான். அப்பொழுதிருந்த வேகத்தில் தெரியாமல் தவறுசெய்து விட்டேன். அப்புறம் மிகவும் மனம் வருந்தினேன். என் திருமணத்தின்பொழுது என் அப்பா என் அண்ணனின் தொழிலுக்காக வேண்டி உங்களிடம் இரண்டாயிரம் ரூபாய் வேண்டும் என்று காலில் விழாத தோஷமாகக் கெஞ்சினார். நீங்களும் பெரிய மனது பண்ணி இரண்டாயிரம் ரூபாய் விள்ளாமல் விரியாமல் தூக்கிக் கொடுத்தீர்கள். நினைவிருக்கிறதா? அப்புறம் தானே என் அப்பா என் திருமணத்தை முடித்தார்? சொல்லப் போனால் என்னை விற்காமல் விற்றார். இரண்டாயிரம் ரூபாய்க்காக வேண்டி இந்தக் கிழட்டு சர்தாரின் கழுத்தில் என்னைக் கட்டினார். அப்பாவும் அண்ணனுமே என் உறவை உறவாக எண்ணவில்லையே! அப்படியிருக்கும்பொழுது நான் பிறர் வீட்டை அழித்து என்ன இன்பம் காணப் போகிறேன்?"

"வீரோ!" நிஹால் கௌர் வீறிட்டுக் குரல் கொடுத்துவிட்டு வீரோவின் முகத்தைப் பார்க்கலானாள்.

நிஹால் கௌர் வீரோவின் மானத்தைக் காப்பாற்றிவிட்டாள். அலமாரியில் இருந்த பல வெள்ளிப் பாத்திரங்களும் பழைய மோஸ்தராகி விட்டன. அதனால் அந்தப் பாத்திரங்களோடு தன்னிடமிருந்த வெள்ளியையும் கொஞ்சம் போட்டுப் புதுப் பாத்திரங்கள் செய்யத் தட்டாரிடம் அனுப்பி யிருப்பதாகக் கூறி சர்தாரை அதை நம்பவும் வைத்துவிட்டாள்.

சர்தார் கவலை யொழிந்து பெருமூச்சு விட்டார். ஆனால் நிஹால் கௌர் வீரோவின் முகத்தைப் பார்க்கும் பொழுதெல்லாம் அவள் மனத்தில் ஒரு கவலை பிறக்கும். வீரோவின் விழிகள் வண்டெனக் கருத்திருந்தன. உடல் நிறம் மாநிறத்துக்கு ஒரு மாற்றுக் குறைந்ததுதான், அந்த மாநிறத்திலும் இளமை இறுகப் பிசைந்த மாவென ஒட்டிக் கொண்டிருந்தது. அவளது கைகள்

அப்பளக் குழவிபோல உருண்டையாகவும் வாட்டமாகவும் இருந் தன. அந்தக் கைகளில் கிள்ளி அள்ளும் அளவுக்குச் சதைப் பற்றுத்தான் இல்லே. நிஹால் கௌர் சர்தாரிடமிருந்து வாங்கிக் கொண்ட பெருமூச்சை வீரோ அவளிடமிருந்து வாங்கிக் கொண்டு இதயத்தில் பொத்தி வைத்துக்கொள்வதாக அவளுக் குத் தோன்றியது.

அப்புறம்.......? மெய்யிட்ட வீரோவுக்கு மாதங்கள் ஏறின. சர்தாரின் வீடு மிகப் பெரிய வீடுதான். ஆனால் வந்து குவிந்த வாழ்த்துக்களை வைக்க இடம் இல்லை. அவ்வீட்டில் வாழ்த்துக்கள் பெருகி விடு சிறியதாகிவிட்டது. சர்தார் மகிழ்ச்சியில் மிதந்தார். பூமியில் அவருக்குக் கால் பாவவே இல்லை. நிஹால் கௌர் வீரோவைத் தாங்கினாள். அதனால் அவள் பாதங்களும் பூமியில் படவில்லை. ஆனால் மக்கள் சர்தாரையும் வீரோவையும் காட்டி லும் நிஹால் கௌரைத்தான் வாயார வாழ்த்தினர்

“பிறந்ததும் குழந்தையை என் மடியில் போட்டு விடவேண்டும். அப்புறம் அப்படி இப்படி என்று மாற்றிப் பேசக்கூடாது. இப் பொழுதே சொல்லிவிட்டேன். நான் பெரிய சர்தாரிணி; நீ சின்ன சர்தாரிணி. அதனால் முதல் பிள்ளை பெரியவருக்குத்தான் சொந்தம். அப்புறம் எது உண்டானாலும் எத்தனை உண்டானா லும் உன்னைச் சேர்ந்தது...” நிஹால் கௌர் சிரித்துக்கொண்டே வீரோவிடம் சொல்லுவாள். தன் மனத்தில் துளியாவது வருத் தமோ துயரமோ இலை மறை—காய் மறையாகக்கூட ஏன் ஏற்பட வில்லை என்பது நிஹால் கௌருக்கே சரியாக விளங்கவில்லை. அவள் தன் கைகளால் தன் கணவனை வேறு ஒரு பெண்ணிடம் முன்பே ஒப்படைத்து விட்டாள். இப்பொழுது தன் சொத்து, சுதந்திரம் அனைத்தையும் இன்னொருத்தி பெற்றெடுக்கப் போகும் பிள்ளைக்கு ஒப்படைக்கச் சித்தமாகிவிட்டாள்.

“அடி கள்ளி! நான் உன்னை எந்த வேளையில் மகள் என்றும் மருமகள் என்றும் சொன்னேனோ! உண்மையிலேயே இப்பொ ழுது ஒரு மாமியாரையும் அம்மாவையும்போல மகிழ்ச்சி கொள்ளு கிறேன். எனக்கு ஒரு நாளும் இந்த நினைவே எழமாட்டேன் என் கிறது, நீ எனக்கு என்ன உறவு முறையென்று!” என்பாள்.

நிஹால் கௌரைப் பேசவிடாமல் வீரோ குறுக்கிடுவாள். “சர்தாரிணி! வேறு எந்த உறவு முறை எப்படி வேண்டுமானாலும் போகட்டும். நான் உங்களுக்குச் சக்களத்தி என்ற நினைவே

எனக்கு எழுவதில்லை!'' என்று இளநகையோடு முடிப்பாள்.

நிஹால் கௌர் தச்சரைக் கூப்பிட்டுத் தொட்டில் செய்வித்தாள். அதில் வெள்ளி மணிகள் கட்டினாள். உண்மையான நல்ல பட்டினால் ஒரு சின்ன மெத்தை தைத்துப் போட்டாள். நகரத்தில் உள்ள ஓர் ஆங்கிலேய அதிகாரி விடுமுறை பெற்று வெளிநாடு போய்க் கொண்டிருந்தார். வெளிநாட்டு ஸ்வெட்டர்கள் பட்டுப்போல் இருக்கும் என்று கேள்விப்பட்டாள் நிஹால் கௌர். வெளி நாட்டிலிருந்து திரும்பும்பொழுது சின்னச் சின்ன ஸ்வெட்டர்கள் உயர்ந்த ரகமாகக் கட்டாயம் வாங்கி வரவேண்டுமென்று அவரை வேண்டி உறுதிப்படுத்திக் கொண்ட பின்னரே மன அமைதி பெற்றாள்.

நிஹால் கௌர் தனக்குத் தெரிந்த கைதேர்ந்த மருத்துவச்சிகளை யெல்லாம் கூப்பிட்டுக் காட்டினாள், போதாக் குறைக்குப் பெரிய நகரங்களுக்கு இட்டுச் சென்று பிரபல டாக்டர்களிடம் எல்லாம் காட்டினாள். ஆனால் எந்தத் தெய்வத்துக்கும் நேர்த்திக் கடன் கழிப்பதாக அவளால் இயன்ற அளவு வேண்டிக்கொள்ளவில்லை. வீரோவுக்கு இடுப்பு வலி எடுத்து முழுசாக மூன்று நாள் ஓடிவிடவே, ஒருநாள் இலேசாக இரத்தக் கறையும் பட்டுவிடவே, நிஹால் கௌரினால் பொறுக்கமுடியவில்லை, தன் வாழ்விலேயே முதன் முறையாக அன்று தான் தெய்வங்களுக்கே வேண்டிக் கொண்டாள்.

அதுவோ மசக்கைக் காலம். மசக்கை ஆசையில் வீரோ கிட்டாத பொருளையும் கேட்டாளானால் கிடைக்கக் கூடியகாலம். தூரம்—தொலைவைப் பார்க்காமல் வாங்கி வந்து தரும் காலம். சர்தார் இப்பொழுதெல்லாம் அவள் முகத்தையே நோக்கிக் கொண்டிருந்தார். அவள் வாயிலிருந்து என்ன ஆணை பிறந்தாலும் நிறைவேற்றத் துடித்துக் கொண்டிருந்தார். ஆனால் நிஹால் கௌருக்குத் தெரியும், வீரோ எப்படி யெல்லாம் வெட்கப்படுகிறாள் என்று! ஓர் ஊறுகாய்த் துண்டம் வேண்டுமென்றாலும் ஒரு முறைக்கு இரு முறையாக வெட்கப்பட்டுக் கேட்காமலே வீரோ தன் முகத்தைப் பார்க்கிறாள் என்பதை நிஹால் கௌர் நன்கு அறிவாள். அதனால் நிஹால் கௌர், தானே வீரோவின் ஆசைகளைப் பார்த்துப் பார்த்து நிறைவேற்றி வந்தாள். இடையில் வீரோ ஒருமுறைதான் தன் வாயைத் திறந்து உரக்க ஒரு விஷயம் கூறியிருக்கிறாள்: "முற்றத்தில் கயிற்றில் தொங்கும் 'பீட்ரூட்'

கிழங்கு மாலையை எடுத்து எங்காவது தூரக் கடாசுங்கள்! இவற்றைப் பார்த்தால் என் மனசை என்னவோ செய்கிறது! உலர்கின்ற பீட்ரூட் கிழங்குகள் எனக்கு நொய்ந்து போகும் இறைச்சித் துண்டங்களை நினைவுப்படுத்துகின்றன. எனவே இந்தக் கிழங்குகளைக் கண்டு விட்டால் எனக்கு வயிற்றைக் குமட்டிக் கொண்டு வருகிறது!'' என்று.

அப்புறம் வீரோவின் மனத்தில் என்ன தான் தோன்றியதோ, தெரியவில்லை! ஒன்பதாவது மாதம் பிறந்ததும், மகப்பேறுக்குப் பிறந்தகம் தான் போவேன் என்று பிடிவாதம் பிடிக்கத் தொடங்கி விட்டாள். சர்தார் அவளுடைய இந்தப் பிடிவாதத்துக்கு இணக்கம் காட்டவில்லை. நிஹால் கௌரும் வீரோவிடம் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். ஆனால் வீரோ, தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்பது போலத் தன் பிடிவாதத்தைச் சிறிதும் விட்டுக் கொடுக்கவில்லை, தன் கிராமத்தில் ஒரு மருத்துவக் கிழவி இருப்பதாகவும், அவள் மிகக்கெட்டிக்காரி, கைராசிக்காரி என்றும், அவளுக்கு அவள் மீது தான் நம்பிக்கை என்றும் மற்ற எவர் மீதும் நம்பிக்கை இல்லை என்றும் சொல்லிவிட்டாள். இங்கிருந்தால் பட்டணத்துப் பெண் டாக்டர்களின் கையில் மாட்டிக்கொண்டு, தான் கட்டாயம் செத்து விடுவோம் என்றும் அவள் நம்பினாள்.

"இப்படி அஞ்சுவதாயிருந்தால் அது தீமை பயக்கக் கூடும்!'' என்று டாக்டர்கள் அபிப்பிராயப் பட்டார்கள். அவள் இஷ்டத்துக்கு விடுமாறும் சர்தாருக்கு ஆலோசனை கூறினார்கள். ஆனால் சர்தாரின் மனத்தை வேறு ஒரு பயம் ஆட்கொண்டிருந்தது. எனவே, நிஹால் கௌரை ஓர் ஒதுக்குப் புறமாக அழைத்துச் சென்று, "எனக்கு ஓர் அச்சம், இவளுக்குப் பெண் பிறக்கிறது என்று வைத்துக்கொள். இவளுடைய பெற்றோர் இன்னொருவருடைய பிள்ளைக்கு அந்தப் பெண்ணை மாற்றிவிட்டால் என்ன செய்வது? இதுபோல் எத்தனையோ நிகழ்ச்சிகள் நடந்திருப்பதாக நான் முன்பே கேட்டிருக்கிறேன். பிள்ளை பிறந்தால், அவன் பெரியவனாகிப் பெருஞ் சொத்துக்கு வாரிசு ஆகலாமே என்ற ஆசையில் அப்படிச் செய்து விடுவார்களாம்!'' என்றார்.

"அப்படியானால் எனக்கு ஒரு வழிதான் தோன்றுகிறது, நானும் இவளோடு அவள் ஊருக்குப் போய் விட்டால் என்ன? அங்கு நான் இருந்தால், நீங்கள் சொல்வது போன்ற குழப்பங்களை விளை

விக்க முடியாதல்லவா?'' என்று யோசித்து யோசித்து வார்த்தைகளை நிறுத்து நிறுத்துக் கேட்டாள் நிஹால் கௌர்.

சர்தார் சம்மதித்து விட்டார். வீரோவும் தடை சொல்ல வில்லை. நிஹால் கௌர் கூட மாட ஒத்தாசைக்காக வீட்டு வேலைக்காரியையும் அழைத்துக் கொண்டாள். ஒரு நல்ல நாளில் வீரோவுடன் அவள் பிறந்தகத்துக்குச் சென்றாள்.

வீரோவின் பிரசவம் ஒன்றும் சிரமமாயில்லை. இளம் வயது. அதோடு உடல் நிலையும் நன்றாயிருந்தது. அவள் அம்மாவும் அண்ணிகளும் அவளைக் கேலி செய்தனர். ''இவள் வீணில் பயப்படுகிறாள். குழந்தை பெறுகிறது என்ன பெரிய கஷ்டமா? ஒரு முக்கல் முக்கினால் பிள்ளை தானாகப் பிறந்து விட்டுப்போகிறது!'' என்றார்கள்.

நிஹால் கௌர் வீரோவின் பிறந்தகத்தாருக்கு எவ்விதமான சுமையும் வைக்கவில்லை. பணங் காசுகளைத் தாராளமாகச் செலவிட்டாள். எல்லோரும் இவளை 'சர்தாரிணி! சர்தாரிணி!' என்று கூறி மதிப்போடு வளைய வந்தனர். நிஹால் கௌரும் வேடிக்கையாகச் சிரித்து, ''ஒரு முக்கல் முக்கினால் பிள்ளை பிறக்கும், சரி, பெண் பிறக்கவேண்டுமென்றால்....?'' என்று கேட்டாள்.

வீரோவின் அண்ணிகள் கலகலவென்று சிரிப்பார்கள். அப்புறம், ''இது தெரியாதா? இரண்டு முக்கல் முக்கினால் பெண் பிறக்கிறது!'' என்பார்கள்.

''பெண் என்றால் இரண்டு படியா?'' என்று கேட்டுச் சிரிப்பாள் நிஹால் கௌர்.

''ஒரு முக்கல் வலிக்கு! ஒரு முக்கல் பெண் பிறக்கும் துயரத்துக்கு!'' என்று கூறி வீரோவின் அண்ணி விளக்குவாள்: ''மகிழ்ச்சியென்பது பிள்ளை பிறந்தால் தானே? பெண் பிறந்தால் மகிழ்ச்சி ஏது?''

நிஹால் கௌரின் முகத்திலே ஒரு முறை பலத்த வேதனை எழுந்தது, 'நான் வாழ்க்கையில் ஒரு முக்கலும் முக்கவில்லை, இரண்டு முக்கலும் முக்கவில்லையே!' என்று. ஆனால் சிரிக்கும் உதடுகளைக் காட்டி அந்த வேதனையை விழுங்கிவிட்டாள். வேதனையும் அவள் முகத்தின் எழிலைக் கண்டு நாணிக் கோணி ஓடி ஒளிந்து விட்டது.

ஒரு நாள் இரவு வீரோவுக்கு வலி எடுத்தது. பல்லுக்கு அடியில் அமுங்கிய அவளது இளம் உதடுகள் அந்த வலியை

வெகு அலட்சியமாகப் பொறுத்துக்கொண்டன. அதனால் வேதனைக் குரல் பிறர் செவிக்கு எட்டவே இல்லை. ஒரே ஒரு முறை அவள் கதறி முக்கியது கேட்டது. அடுத்த கணம் வீரோவின் தலை மாட்டில் உட்கார்ந்திருந்த நிஹால் கௌரை நோக்கி மருத்துவச்சி கூறினாள்: "சர்தாரிணி! நல் வாழ்த்துக்கள்! வாருங்கள், உங்கள் மடியில் பிள்ளையைக் கிடத்துகிறேன்!"

நிஹால் கௌர் நல் வாழ்த்துக்களோடு பிள்ளையைத் தன் மடியில் போட்டுக்கொண்டாள். ஆனால் விடியற்காலையில் நிஹால் கௌர் தந்தியடிக்க முயன்றபொழுது, வீரோ அவளைத் தன் அருகில் அழைத்தாள். அருகில் அவள் வந்ததும், தன் இரு கைகளையும் அவளது காலடிகளில் வைத்துக் கூப்பி, "நான் உலகத்துக்கெதிரே பொய் சொல்லலாம். ஆனால் உங்கள் எதிரே பொய் சொல்ல என்னால் ஆகாது. இந்தக் குழந்தை உங்கள் மடிக்கு உகந்ததல்ல!" என்றாள்.

"நீ என்ன சொல்லுகிறாய், வீரோ?"

"நான் விளையாட்டாக ஒரு காரியம் செய்தேன். அது இப்படி வினையாகும் என்று நினைக்கவில்லை. விளையாட்டின் முடிவெல்லாம் ஒருவேளை இப்படித்தான் இருக்குமோ, என்னவோ? ஆனால் உண்மையைச் சொல்லுகிறேன், நான்! எனக்காக நான் வருந்தவில்லை. வருந்துவதெல்லாம் உங்களுக்காகத்தான்!"

"வீ....ரோ!"

"ஒருமுறை நான் பிறந்தகம் ஆட வந்தேனே, நினைவு இருக்கிறதா, உங்களுக்கு? போன ஆண்டு நடந்தது தானே...? எப்படி மறந்திருக்கமுடியும்? என்னைப் பிறந்தகம் கொண்டு விடுவதற்காக உங்கள் கணக்குப்பிள்ளை என்னோடு வந்திருந்தார். என் அப்பா—அம்மா பணத்தை வாங்கிக் கொண்டு ஒரு கிழட்டு சர்தாருக்கு என்னை மணம் முடித்து விட்டதாக இங்கே ஊரெல்லாம் வதந்தி பரவியிருந்தது! சர்தார் இந்தக் கிராமத்துக்கு வந்ததே இல்லை. என் அப்பாதான் என்னை அழைத்துக்கொண்டு உங்கள் நகரத்துக்கு வந்திருந்தார். குருத்வாராவில் தீ வளர்த்து மந்திரம் ஓதி உங்கள் வீட்டில் விட்டுச் சென்றார். நான் கிராமத்துக்குத் திரும்பியபொழுது, 'உன் சர்தார் எத்தனை கிழவன்?' என்று ஒவ்வொரு பெண்ணும் என்னைக் கேட்டாள். அப்பொழுது எனக்கு என்ன தோன்றிற்றோ, தெரியவில்லை, என்னை ஆளைவிட்டால் போதும் என்பதற்காகக் கிழவனோடு எனக்குத் திருமணம் நடக்கவில்லை என்று சொல்லி வைத்தேன். உங்கள் கணக்குப்

பிள்ளை நல்ல இளைஞராக, ஆள் அழகாக இருந்தார். நான் அவரைக் காட்டி 'இவர்தான் என் கணவர்' என்று சொல்லி வைத்தேன். எல்லாப் பெண்களும் என் அதிர்ஷ்டத்தை எண்ணி வியந்தார்கள். ஏன், பொறாமைகூடப் பட்டார்கள். நான் இந்த விஷயத்தை உங்கள் கணக்குப்பிள்ளையிடமும் சொன்னேன். அவரும் அதற்கேற்ப நாடகம் ஆடினார். என் தோழிகள் அவரிடம் 'கலீசடியா' அதாவது வெள்ளிச் சுற்றுகள் கேட்டார்கள். உங்களுக்குத்தான் தெரியுமே, பஞ்சாபிக் கிராமங்களில் பெண்கள் அக்காள் புருஷனிடம் வெள்ளிச் சுற்றுகள் கேட்டு வாங்கிக் கொள்ளும் பழக்கம்! அவரும் தட்டாரிடம் சொல்லி வெள்ளிச் சுற்றுகள் செய்து கேட்ட தோழிகளுக்கெல்லாம் வழங்கிவிட்டார். நான்கைந்து நாட்கள் நான் இங்கே இருந்தேன். தினமும் கேலியும் கூத்துமாக இப்படியே பேச்சு நடக்கவே, எனக்கு அவருடனேயே திருமணம் ஆகியிருப்பதுபோல உணர்ந்தேன். வேறு ஒருவருடன் எனக்குத் திருமணம் ஆனதாகவே என்னால் எண்ணிப் பார்க்க முடியவில்லை!''

''நம் கணக்குப்பிள்ளை மதன் சிங்கையா......?''

''ஆமாம். அதனால் இனி நான் திரும்பவும் சர்தார் வீட்டுக்கு வரமாட்டேன். இந்தப் பிள்ளையையும் எடுத்துக் கொண்டு போகக் கூடாது. அதனாலேதான் அவ்வளவு பிடிவாதம் பிடித்துக் கொண்டு இங்கே வந்தேன். நான் செய்த காரியத்தின் பலன் இதோ என் எதிரே இருக்கிறது! நான் உங்களிடம் வேறு ஒன்றும் கேட்கவில்லை, சர்தாரிணி! ஒரே ஒரு வேண்டுகோள் மட்டும் இருக்கிறேன். சர்தாரிடம் அந்தக் கணக்குப்பிள்ளையின் பெயரைச் சொல்லாதீர்கள். தெரிந்தால் அவர் அவரை வேலையை விட்டே நீக்கி விடுவார்.''

''ஆனால் மதனசிங் திருமணம் ஆனவன் ஆயிற்றே! அவனுக்கு வீட்டில் இரண்டு குழந்தைகளும் இருக்கின்றனவே!''

''அதனால் தான் அவர் பயப்படுகிறார். சர்தாருக்குத் தெரிந்து விட்டால், தனக்கு வேலைபோய் விடுமே என்று! நான் ஒன்றும் அவரை என் வீட்டில் வைத்துக்கொள்ள விரும்பவில்லை! அப்படியிருக்கும்பொழுது அவர் வேலையைப் போகும்படி செய்யலாமா? அவர் எங்கிருந்தாலும் சந்தோஷமாக மகிழ்ச்சியாக இருக்கட்டும். எனக்கு ஒன்றும் தடை இல்லை. ஆண் இளைஞன் எப்படி இருப்பான் என்பதை நான் ஒரு முறை பார்த்து விட்டேன்...!''

நிஹால் கௌர் பயந்து பதறிக் கண்களை மூடிக்கொண்டாள். அவள் கண்களைத் திறந்தபொழுது வீரோவின் மடியில் அவள் குழந்தை படுத்துப் பால் குடிப்பதற்காக மார்பைத் தேடி வாய் அளைந்து கொண்டிருப்பதைக் கண்டாள்.

சர்தாரின் எந்தப் பெருமூச்சைப் போக்க நிஹால் கௌர் பொறுப்பேற்றாளோ, அந்தப் பெருமூச்சை வீரோ வாங்கித் தன் இருதயத்தில் பதித்துக் கொண்டாள். இப்பொழுது அந்தப் பெருமூச்சை அவளது மார்பகத்திலிருந்து பருக அவள் பெற்ற பிள்ளை முயன்று கொண்டிருந்தது. அதைக் கண்ணுற்ற நிஹால்கௌர் ஒரு பெருமூச்சு விட்டாள்!

# விடியும் வரையில்

**ப**க்காக் கிணறுக்கு அருகில் உள்ள வயல்களில் ஏர் ஓட்டி விட்டுக் களைத்துச் சலித்து இரவு வெகு நேரம் கழித்தே சன்னன் ஊட் வீடு திரும்பினுன். ஆடி மாதத்து முதற் கோப்பு மழை 'கரீ:ப்' [இலையுதிர் காலத்தில் அறுவடை செய்யக் கூடிய] பயிர் செய்வதற்கு வேண்டிய தெம்பைக் கொடுத்திருந்தது. எனவே தான் அந்தச் சுறு சுறுப்பு. நிலமும் ஈரக்கசிவோடு உழுவதற்கு ஏற்றபடி அமைந்திருந்தது. பின்னுல் யார் கண்டார்கள், அடை மழை பிடித்துக் கொள்ளுமோ அல்லது மாரி பொய்த்து வறட்சி யில் நிலம் வாடுமோ என்று! காலந் தாழ்ந்தால் அறுவடை நல்ல பலன் தராதே!

உழுத மாடுகளுக்குத் தீனி வைத்துவிட்டு அவன் கை கால் களைக் கழுவிக்கொண்டு மேல் கூரைக்குப் போனுன். ரொட்டி தின்று விட்டுக் கண்களை மூடுவதற்காகக் கட்டிலில் படுத்தான். விடியற் காலையில் சீக்கிரமாக எழுந்து சென்று புஞ்சை நிலத்தில் கம்பு விதைக்கவேண்டும். அப்புறம் மாலையில் கிணற்றடி நிலத் துக்கு இரு முறை நீர் தெளித்துச் சோளம் விதைக்கவேண்டும்.

சுகமாகக் காலை நீட்டிக்கொண்டு, வானத்தில் மலர்ந்திருந்த நட்சத்திரப் பூக்களைப் பார்த்தவாறே படுத்தவனின் கண்களை உறக்கம் அழுத்தியது. அவனுடைய இமைகள் மூடும் நேரத்தில், பக்கத்துக் கூரையில் கட்டிலைப் போட்டுக்கொண்டிருந்த குத்தா குரல் கொடுத்தான். கிணற்றடி நிலம் முழுவதையும் நீ உழுது விட்டாய் என்று தெரிகிறது. சன்னு! என்ன பேசக் காணும்? நான் கேட்கிறது காதில் விழவில்லையா? களைப்பிலே கண் உறங்கி விட்டாயா?'' என்று கேட்டான் அவன்.

சன்னன் கட்டிலில் படுத்தபடியே, "அதுதான் சொல்லு கிறேனே, நமக்குள்ளே என்ன, பகையா, பூசலா? இருந்து உழுணும் என்று தான் பார்த்தேன். இந்த மட்டிப் பயல் மாடு நடக்கவில்லை. நின்று நின்று சண்டித்தனம் செய்து விட்டது!'' என்றுன்.

"எது? மீனுவா!''

"இல்லை, இன்னென்று—லாகா. அடி எடுத்து வைக்கமாட்டேன்

என்று அடம் பிடித்து விட்டது. அதனால்தான் வீடுதிரும்ப இத்தனை நேரம்பிடித்தது!''

''தம்பி! எல்லாம் தீனிபோடுகிறதிலே இருக்கிறது!'' குத்தா உண்மை நடப்பைச் சொன்னான்.

''தீனி போடாமல் என்ன? நம் நிலைக்கு ஏற்பத் தீனி போடத்தான் போடுகிறோம்!'' சன்னனின் குரலில் இயலாமை தொனித்தது.

''ஆ ஹோ...'' குத்தாவும் கட்டிலில் நீட்டி முடக்கிப் படுத்து விட்டான்.

நட்சத்திரங்கள் பதிந்த நீலவானத்தைப் பார்த்தவாறே சன்னனின் விழிகள் கனத்தன. அடுத்த ஓர் இமைப்பில் உறக்கம் மந்திரம் போட்டு விட்டது. அவன் கண்களில் ஜொலித்துக் கொண்டிருந்த நட்சத்திரங்கள் உழுத நிலத்துப் புழுதிகளாக மாறின. கிணற்றடி நிலத்தில் பசுமை ஓடும் பாத்திகள் அவன் கனவிலே தோன்றி விரிந்தன.

கிராமத்தின் இன்னொரு புறத்தில் குரைத்துக் கொண்டிருந்த நாய்களின் குரலும் சிறுகச் சிறுக அடங்கி அவனுடைய நினைவிலிருந்து அகன்றது.

ஒரு பாத்திரத்தில் பால் எடுத்துக்கொண்டு பசனோ சன்னனின் கட்டில் அடிக்கு வந்தாள். ''இந்தா, இதை வாங்கிக்க, பாலைக் குடி!'' என்றாள்.

சன்னனுக்கு நல்ல தூக்கம் வந்து விட்டது.

''நான் கூப்பிடுகிறேன், கேட்கவில்லை? அதற்குள்ளாகவா தூங்கிவிட்டாய்?'' என்று கேட்டு அவள் சன்னனின் தோளைப் பற்றி உலுக்கினாள்.

''உம், உம்'' சன்னன் பதற்றமடைந்து எழுந்தான்.

''இந்தா, எழுந்து சூடாகப் பாலைக் குடி!''

சன்னன் எழுந்து கட்டிலில் உட்கார்ந்தான். தூங்கி வழிந்த வண்ணமே பால் பாத்திரத்தை வாங்கிப் பருகினான். குத்தாவும் தூங்கிவிட்டான் என்று தோன்றியது. பசனோ கட்டிலின் கால் மாட்டில், சட்டத்தில் உட்கார்ந்துகொண்டாள். பயங்கரமாகப் புழுக்கி எடுத்துக்கொண்டிருந்தது. சட்டென்று ஒரு நீர்க் காற்று அடித்தது. தொலைவில் மலையின் மடியில் கரிய மேகங்கள் சூழ்ந்து வந்தன. அவற்றிலிருந்து ஒரொரு மின்னல் கண்களை வெட்டியது.

பசனே மெதுவான குரலில், "இன்று மேகங்கள் நமது கட்டில் களைக் கீழே இறக்கிவிட்டுத்தான் மறு காரியம் பார்க்கும் போலிருக்கிறது!" என்றான்.

வெற்றுப் பாத்திரத்தைப் பசனேவிடம் கொடுத்தவாறே சன்னன் ஓர் 'உம்' கொட்டினன். "நல்ல தூக்கம் நம் தலையிலே எங்கே எழுதியிருக்கிறது? இரண்டு இரவுகள் இப்படித்தானே ஓடியிருக்கின்றன!" என்றான்.

தூக்கக் கலக்கத்தில் இதைக் கூறிவிட்டுச் சன்னன் மீண்டும் கட்டிலில் கால்களை நீட்டிவிட்டான். பிறகு கால்மாட்டில் கிடந்த போர்வையை இழுத்துக் கால்களில் போட்டுக்கொண்டான்.

பசனேவின் கட்டிலில் சின்னப் பெண் முனகினாள். அவள் எழுந்து குழந்தையின் அருகில் போய்ப் படுத்தாள். மீண்டும் இறுக்கம் புழுக்கியது. அரை நாழிகை கழிந்திருக்காது, சன்ன னின் உடம்பில் ஏதோ ஊசிபோல் குத்தியது. அவன் புரண்டு படுத்தான். திரும்பவும் இன்னொரு ஊசி குத்தியது. அவனுடைய உறக்கம் கலையலாயிற்று.

தூற்றல் போடுகிறது ஒவ்வொன்று!" அவன் செவிகளில் யாரோ கூறினார்கள். குத்தா தன் கட்டிலில் அசைவதுபோலத் தெரிந்தது.

"நான் சொன்னேனே, ஸீபோவுக்கு அப்பா......" பசனே சற்று உரக்கவே சொன்னாள்: "கட்டில்களைக் கீழே இறக்கத்தான் வேண்டும் போலிருக்கிறது!"

"இந்தா, பிள்ளை! சொல்கிறதைக் கேளு! எல்லாரும் பேசாமல் படுத்திருங்கள். எங்கும் பிரளயம் வந்துவிடவில்லை!" என்று கூறிய சன்னன் போர்வையை இன்னும் மேலே இழுத்து நன்றாகப் போர்த்திக்கொண்டான்.

"அப்புறம் சிரமமாகப் போய்விடும்!" பசனே கவலையினால் கலவரமுற்றாள்.

"ஒன்றும் போகாது. பேசாமல் கிட!"

சன்னன் இதைச் சொல்லி முடித்திருக்கமாட்டான். தடித் தூற்றல்களாக விழுந்து எச்சரிக்கை விடுத்துக் குழப்பின. அக்கம்பக்கத்துக் கூரைகளில் எல்லாம ஒரு பரபரப்புத் தோன்றி யது. கட்டில்கள், தொட்டில்கள், கனத்த போர்வைகள், கந்தல் துணிகள்—ஆகியவற்றில் ஆழ்ந்து தூங்கிக்கொண்டிருந்த குழந் தைகள் எல்லாம் விழித்திருந்து கத்தின.

சன்னன் சடபுடவென்று எழுந்து கட்டிலில் கிடந்த விரிப்பைச் சுருட்டினான். "இப்படி மசமசவென்று நின்றால் ஆயிற்றா? நீ கீழே இறங்கிக் கட்டில்களைப் பிடி! நான் மேலே இருந்து எடுத்து எடுத்துத் தருகிறேன்!" என்று பசனோ சொல்லில் வேகம் காட்டினாள்.

தூற்றலுக்குப் பயந்து அரைகுறைத் தூக்கத்திலிருந்த குழந்தைகள் அழுதன.

தெருவில் நின்று சன்னன் கைப்பிடிச் சுவர் வழியாகக் கட்டில்களையும் படுக்கைகளையும் பிடிக்கலானான். பசனோ மழை வலுக்கவே அலறிப் புடைத்துக் கொண்டு சட்டுச் சட்டென்று பொருள்களைக் கீழே கொடுத்துக் கொண்டிருந்தாள். வறண்டிருந்த வானத்தில் எங்கிருந்துதான் இப்படி வெள்ளமாக மழை வந்ததோ? பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பல இடங்களில் மழை நீர் வாய்க்கால் இட்டுக்கொண்டு ஓடலாயிற்று.

விளக்கு ஏற்றிவைத்துவிட்டு, மழைக்குப் பயந்து ஓடிவந்த குழந்தைகளைச் சன்னன் கட்டில்களில் படுக்கவைத்தான். முற்றத்துக்கும் அறைகளுக்கும் வெளிச்சம் வருவதற்காகப் பொருத்தியிருந்த சாளரங்களை மூடிவிட்டுப் பசனோ கீழே இறங்கிவந்தாள். அவளுடைய உடையிலிருந்து நீர் சொட்டிக்கொண்டிருந்தது. அவள் தனது சட்டைத் தலைப்பைப் பிழிந்துகொண்டே, கோபத்தில் மனம் வெதும்பக் கூறினாள்: "நான் எத்தனை நேரமாகச் சொல்லிக்கொண்டிருந்தேன், தலைக்கு மேலே மேகங்கள் இருக்கின்றன என்று! ஆனால் இவர் தலைஎடுத்துப் பார்த்தால்தானே?"

எல்லோரும் முற்றத்தில் கட்டில்கள், கனத்த ஜமுக்காளங்கள் ஆகியவற்றைப் போட்டுக்கொண்டு அங்கங்கே படுத்துவிட்டார்கள். மழைத் தூற்றல்கள் படபடவென்று எத்தனை வேகமாக வந்தனவோ, அதே வேகத்தில் போயும் விட்டன. வாய்க்கால் கட்டி ஓடிய மழை நீர் சிறுகச் சிறுகக் குறைந்து கம்பியென இழைந்தது. வீட்டுக்குள்ளே பயங்கரப் புழுக்கம் நிலவியது. நேரம் போகப் போகக் காற்றே கூட நின்றுவிட்டது. விளக்குச் சுடர் ஆடாமல் அசையாமல் குத்திட்டு நேராக நின்றது. ஆளைப் பிடுங்கித் தின்னும் கொசுக்கள் காதருகில் வீணை வாசிக்கலாயின. தூங்கிக்கொண்டிருந்த குழந்தைகள் வியர்வையில் தெப்பமாயின. சுண்ணாம்புக் காளவாயைப் போலப் புழுக்கம் உடலைத் தகித்தது. சன்னன் சலித்துக் கொண்டான், 'வெளிச்சம் வருகிற சாளரத்தையாவது திறந்து வைத்திருக்கக்கூடாதா?' என்று.

"மழை மேகம் கட்டிக்கொண்டு வந்ததைப் பார்த்தால் அல்லவா தெரியும்?— இப்பொழுது இரண்டாம் தடவையும் யார் மேலே போய் வருவது?"

"இங்கே உள்ளே வந்ததிலே நெருப்புமூட்டம் போட்டாற்போல் அல்லவா இருக்கிறது!.... அதோடு கொசுக்கள் ஆளைக் கொத்திக் கொத்தியல்லவா தின்கின்றன!"— சன்னன் தன் உடலைச் சொறிந்து கொண்டே கூறினான்.

வியர்வையில் சொட்டச் சொட்ட நனைந்துவிட்ட குழந்தை கைலோ தொட்டிலில் ஒப்பாரியே வைக்கத் தொடங்கிவிட்டாள். அழுகின்ற சின்னப் பெண்ணை அவள் பசனேவைப் பிரிந்து ஒரு கணம் கூட இருந்ததில்லை. பசனே விசிறி யெடுத்து வந்து விசிறி அவள் அழுகையை நிறுத்த முற்பட்டாள். பெரிய பெண் வியர்வையால் சொட்டச் சொட்ட நனைந்துபோய்க் கட்டிலில் எழுந்து உட்கார்ந்துவிட்டாள். "அப்பா!... தூக்கம் வரவில்லையே!" என்று அடிக்கொரு தடவை கூறினாள்.

"இல்லை, அக்கா! அந்த விளக்கை அணைச்சுடணும்... அப்புறம் தான் தூக்கம் வரும்!" சீபோவைக் காட்டிலும் வயதில் சிறிய பிந்தர் சொன்னான். அவனுக்கு அந்த விளக்கிலிருந்துதான் சூடு வந்து தாக்குகிறது என்று தோன்றியது.

சன்னன் எழுந்து வெளியே தெருவுக்கு வந்தான். "தூற்றல் நின்றுவிட்டது. மேகங்களை எங்கும் காணோம் இப்பொழுது!" என்றான்.

"நாசமற்றுப் போக! இந்தக் காலத்து மேகங்களே இப்படித் தான்! வீணில் திகிலை உண்டு பண்ணுகின்றன!" என்றாள் பசனே உள்ளே படுத்தபடியே.

"ஓ, அம்மா! தெருவிலே கொண்டு போடு, அம்மா கட்டில்களை!" என்றாள் ஸீபோ அவசரம் அவசரமாக.

"சரி, அம்மா! தெருவிலே கொண்டு போடுகிறேன் இதோ!" என்று கூறிக்கொண்டே சன்னன் உள்ளே வந்தான். வெளியே கொண்டு போடுவதற்காகக் கட்டில்களை எடுக்கலானான்.

பசனேவும் எழுந்து வாசலுக்கு வந்தாள். ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தவள், "இப்பொழுது எங்கேயுமே காணோமே மேகத்தை! வானம் தூய்மையாயிருக்கிறதே!" என்றாள்.

பக்கத்து வீட்டிலிருந்து கேஸரி தர்கானி என்பவள் குரல் கொடுத்தாள்: "ஆமாம், அத்தை! ஒவ்வொரு நட்சத்திரத்தை

யும் எண்ணிவிடலாம் போலிருக்கிறது. வந்தால் மேகம் ஊரைக் கூட்டிக்கொண்டு வருகிறது! போனாலும் அப்படியே போகிறது!''

"அப்பா, ஆண்டவனிடம் யார் போய் எப்படி முறையிடுகிறது...?'' தனது வீட்டுக் கீழ்க் கைப் பிடிச்சுவரில் கட்டிலின் கால்களைச் சாயவைத்துக் கொண்டே குத்தா கேட்டான்.

"நான் சொல்கிறதைக் கேளுங்கள்! உயரவே கட்டிலைப் போடுங்கள். தெருவிலே படுத்துத் தூங்க முடியாது!''—தெருவில் கட்டிலைப்போட்டுக் கொண்டிருந்த சன்னனிடம் பசனோ கூறினாள்.

"இதோ பார், பிள்ளை! இன்னும் இரண்டு மணி நேரத்துக்காக எடுப்பானேன், போடுவானேன்? நள்ளிரவுக்குமேல் ஆகிவிட்டது. வானத்தைப் பாரு! சப்த ரிஷி நட்சத்திரங்கள் கூட நகர்ந்து எங்கேயோ போய்விட்டன!''

"அதுசரி! இருந்தாலும் எத்தனை கட்டில்களைத் தெருவிலே போடுகிறது? எத்தனை எத்தனை ஆடுமாடுகளோ, புழு பூச்சிகளோ? மேலே போங்க, நான் கட்டில்களை எடுத்துத் தருகிறேன்! நாழிகைப்பொழுது தான் என்றாலும் நல்லபடியாகத் தூங்கலாம், பாருங்க!'' என்றாள் பசனோ.

"சரி, அப்படியானால் எடுத்துக்கொடு! வீபோ, சின்னப் பிள்ளைகளைத் தூக்கிக்கொள். பிந்தர், எலே எழுந்திருடா! கட்டில்களை வெளியே எடுத்துவா!'' என்று கூறிவிட்டுச் சன்னன் ஏணிப் படிகள் வழியே ஏறி மொட்டைச் சுவரில் போய் உட்கார்ந்தான்.

பசனோ ஆள் உயரம் கைகளைத் தூக்கிக் கட்டில்களையும் படுக்கைகளையும் எடுத்துக் கொடுத்தாள். அதன் பின்னர் சன்னன் குழந்தைகளை அந்த அந்த இடங்களில் படுக்கவைத்தான். பசனோ விளக்கை அணைத்து வாசற் கதவைப் பூட்டினாள். பிறகு ஏணியின் கடைசி மேல் படியில் ஏறிக்கொண்டே கூறினாள்: "வாஹ் குரு! கீழிருந்து மேலே வந்த பின்னர் மூச்சாவது சரியாக விட முடிகிறதே!''

குழந்தைகளைக் கட்டிலில் சரியாகப் படுக்கவைத்துவிட்டு பசனோ சாளரங்களைத் திறந்துவிடப் போனாள். அறைக்கூரையில் அவளுடைய குதிகால்கள் நொடித்தன. திரும்பி வரும்பொழுது கைப்பிடிச் சுவருக்கு அருகில் அவள் கால்கள் வழுக்கிவிட்டன. விழப்போனவள் எப்படியோ தட்டுத்தடுமாறிச் சமாளித்துச் கொண்டாள். "எத்தனை தடவை சொல்லியிருப்பேன், இந்தப்

பாவிகிட்டே? இந்த அழுமூஞ்சிக் கருவேல மரத்தை வெட்டி இந்த அறைக்கு மேலே ஒரு கூரை வேயவேண்டும் என்று! கூடவே அறைக்கு ஒரு பூட்டுச் சாத்தும் தேவை! நம் ஜாட்துரை எதை யாவது காதில் வாங்கிக் கொண்டால்தானே? ஜனங்கள் எப்படி எப்படியெல்லாம் சுகமாக இருக்கிறார்கள்? இங்கேயோ ஒரு வேளைப் பொழுதைப் போக்குகிறேதே பெரும் பாடாக இருக் கிறது!'' என்று புலம்பித் தள்ளிவிட்டாள்.

''இதோபார், பிள்ளை! இந்த நேரத்திலா நாப்....'' குதிராக வளர்ந்து விட்ட தனது பெரிய பெண்ணின் திருமணத்தைப் பற்றிப் பேச்செடுத்தான். ஆனால் பக்கத்திலேயே படுத்திருக்கிற வயது வந்த பெண்ணின் நினைவுவந்ததும் சட்டென்று நாக்கைக் கடித்துக்கொண்டான்.

''என்ன நேரம் வேண்டிக்கிடக்கிறது? என்னத்தை, நீங்கள் எளிதாகப் புரட்டிவிடப் போகிறீர்கள்?'' சண்டை போடுவதற்கு ஆயத்தமாக அவள் கட்டிலின் அருகில் வந்து விட்டாள்.

''சரி, சரி! பேசாமல் போய்த்தூங்கு! எதற்காகச் சண்டைக்கு வரிந்து கட்டிக்கொண்டு வருகிறாய்? நம்மைக் காட்டிலும் கீழ் நிலையில் உள்ளவர்களைப் பார்த்து, நாம் நம் காலத்தை ஓட்ட வேண்டும்; நிலையை மெச்சிக் கொள்ளவேண்டும்.''

''ஆமாம், தம்பி! சன்னன் சொல்கிறது மெய்யான வார்த்தை!'' பக்கத்து வீட்டுக் கிழ்த்தளத்திலிருந்து கரம் சிங்கின் அம்மா ஒத்துப்பாடினாள்.

புழுக்கத்தில் மீண்டும் மூச்சுத்திணறத் தொடங்கியது. மழை பெய்து ஓய்ந்தாற்போலவே தோன்றவில்லை. அத்ரி அம்மாவின் முற்றத்தில் வளர்ந்திருந்த கருவேல மரம் ஆடாமல் அசையாமல் நின்றது. வேட்கையினால் வியர்த்து விறு விறுத்துப்போன சன்னன் இயற்கையின் நியதிக்கு எதிரிடையாகக் குரல் கொடுத் தான். ''எவனோ தீமையே உருவான பாவி உட்கார்ந்திருக்கிறான் போலிருக்கிறது காவலுக்கு! அதனால் தான் இன்று இலை கூட அசையவில்லை!'' என்றான்.

''ஏழைகளுக்குத் துன்பத்துக்குமேல் துன்பம்தான்!'' கீழே மாட்டுத் தொழுவத்தை ஒட்டினாற்போலிருந்த கட்டிலில் இருந்த மைங்கல் கூறினான். அவன் தன் கட்டை ஒட்டினாற்போலத் தெரு வில் வாசலுக்கு நேரே கட்டிலைப்போட்டுக் கொண்டு படுத்திருந் தான். அவனும் தன் இடத்தில் தரையில் போடப்பட்ட மீனைத் தான் துடித்துக் கொண்டிருந்தான்.

"அடே அம்மா! கொசு எப்படிக் கடிக்கிறது என்கிறேன்!" கட்டிலின் விட்டத்தில் இழுத்துக் கட்டியிருந்த கயிற்றில் கணுக் காலை உரசிச் சொறிந்து கொண்டே பிந்தர் கூறினான்.

அத்தரி அம்மாவின் வீட்டுக் கருவேலமரத்தின் கிளைகளில் இலேசாகச் சலசலப்புக் கேட்டது. காற்று இலேசாக வீசியது. நனைந்த கூரைகளின் நமுப்பும் அதில் கலந்திருந்தது. குத்தா நிம்மதியாக ஒரு நீண்ட மூச்சுவிட்டுத் தன் கட்டிலில் படுத்த வண்ணமே கூறினான்: "ஓ சன்னண்ணே! காவல் மாறிவிட்டாற் போலிருக்கிறது! இப்பொழுது உட்கார்ந்திருப்பவன் அறவழியில் செல்பவனாயிருக்க வேண்டும்!"

"ஆமாம், மகனே!" தொலைவிலிருந்தே கர்ம் சிங்கின் அம்மா கூறினாள்: "உலகத்திலே ஒருநாளும் நல்ல மனிதர்களுக்குக் குறைவில்லை!"

"நன்றாகச் சொன்னீர்கள்! நல்லவர்கள் கட்டாயம் இருக்கிறார் கள். இது உறுதி!" குத்தா கம்மென்று வீசும் காற்றின் இன் பத்தை நுகர்ந்து கொண்டே கூறினான். சன்னனுக்கு உறக்கம் வந்து விட்டது. அவன் பேசாமல் இருப்பதைக் கண்ட குத்தா உரக்கக் குரல் கொடுத்துக் கூப்பிட்டான். "சன்னா! ஓ சன்னா!"

"ஊம்"— சன்னன் அரைத் தூக்கத்தில் இருந்தான்.

"தூக்கம் வந்து விட்டதா?"

"ஆ. ஹாம்."

"சரி, அப்படியானால் தூங்கு!" என்று கூறிவிட்டுக் குத்தாவும் புரண்டு படுத்தான்.

குளுகுளு வென்று இலேசாக வீசும் காற்று எல்லாத் துயரங் களையும் துடைத்தெறிந்தது. தனது அன்பான தளிர்க் கரங் களால் எல்லோரையும் தட்டிக் கொடுத்துத் தாலாட்டே பாடியது. சிறிது நேரத்துக்கெல்லாம் எல்லாருமே தூங்கிவிட்டார்கள். சன்னன் தன் கையைத் தலைக்கு உயரமாக வைத்துக்கொண்டு, புரண்டு படுத்துத் தன்னை மறந்து நிம்மதியாகத் தூங்கிக் கொண் டிருந்தான்.

திடீரென்று பசித்த சிங்கமெனக் கிராமத்து வானில் மேகங்கள் கர்ஜிக்கலாயின தூக்கிவாரிப் போட்டது சன்னனுக்கு. நன் றாக விழிப்பும் கொடுத்தது. பெரிய பெரிய பழுப்பு நிறமேகங்கள் சந்திரனை மூடிக்கொண்டு வானத்தில் குமுமின. இலேசாக மண்

நிற இருள் பரவியது. சன்னன் எழுந்து கட்டிலில் உட்கார்ந்து கொண்டான்; கால்களால் தன் செருப்புகளைத் தேடினான்.

வெள்ளைவெளேர் என்று ஒரு கொடி மின்னல் வெட்டியது; மொட்டைமாடி முழுவதும் பளிச்சிட்டது. அடுத்த நிமிஷம் காது செவிபடும்படியாக இடிமுழங்கியது. எங்கேயாவது இடிவிழுந்திருக்குமோ என்று கூடத் தோன்றியது. அச்சத்தால் குழந்தைகள் அழத் தொடங்கின. நாய்கள் குரைக்கத் தொடங்கின. 'ராம், ராம்' என்று எல்லோரும் இறைவனைக் கூப்பிடலாயினர். சன்னனின் கூசிய கண்களுக்கெதிரே இருட்டில் சிவப்பு, பச்சை, மஞ்சள் என்று இழைகள் நெளியோடிக் கொண்டிருந்தன. காற்று வேகமாக வீசியது. அது சுழன்று சுழன்று அடிப்பதைப் பார்த்தால் கருவேல மரத்தின் கிளைகளில் சிக்கிக்கொண்டு விட்டதோ என்று தோன்றியது.

"சனியன் பிடித்ததுகள்!" பசனை நடுங்கிப்போய் சிறிய பெண்ணை நெஞ்சோடு அணைத்துக் கொண்டாள். "இந்தப் படுபாவி மேகங்கள் ஆளைவிடாது போலிருக்கிறதே! எங்கிருந்து தான் இப்படிப் படபடவென்று குழுமி வந்தனவோ?" என்று கூறியவள் கவலை பொங்கும் குரலில் சன்னனைப் பார்த்து, "என்ன இது? இப்படி உட்கார்ந்து என்ன யோசித்துக் கொண்டிருக்கிறீர்கள்? கட்டில்களை மீண்டும் கீழே இறக்கவேண்டும் போலிருக்கிறதே!" என்றாள்.

"இப்பொழுது எப்படிக் கீழே இறக்குவது?" சன்னனுக்கு எலும்புகள் இரணமாக வலித்தன.

"கீழே இறக்கவில்லை என்றால் என்ன செய்வது? மேகங்கள் மழையைக் கொட்டத் தயாராக நிற்பதைக் கவனிக்கவில்லை? எழுந்திருங்கள், சீக்கிரம்!" என்றாள் பசனை.

"ஒரு மணி நேரத்துக்கு முன்னால் எங்கேயும் மேகத்தைக் காணோம். இப்பொழுது என்னடாவென்றால் அப்பன் ஆயியோடு......" குத்தா கட்டிலில் எழுந்து உட்கார்ந்தவண்ணம் கூறினான்.

காற்று நின்றுவிட்டது. மேகங்கள் கரைந்து கொண்டிருந்தன. மாடியில் அறையுள்ளவர்களும் கூரை வேய்ந்தவர்களும் சாளரங்களையும் சன்னல்களையும் திறந்து வைத்துக்கொண்டு சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். ஒரு நிமிஷம் யோசித்துவிட்டுச் சன்னன் கூறினான்: "குழந்தைகளின் கட்டில்களைச் சார்ப்புக்குக்

கீழே போட்டு விடுகிறேன். நீயும் ஸீபோவும் கீழே போய் விடுங்கள். நான் இங்கேயே........''

சிறுசிறு தூற்றல்கள் விழலாயின.

பசனோ கவலையில் உழன்றவளாக, ''ஐயோ, ஐயோ! உங்கள் புத்தி போகிறதே! என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? இந்தச் சார்ப்புக்குக் கீழே யார் யாருடைய கட்டில்களைப் போடமுடியும்? வாங்க, கீழேயே போடுவோம் கட்டில்களை!'' என்றாள்.

''சரி, தொலை!'' அவன் அலுத்துக்கொண்டு குரல் கரகரக்க உரக்கவே கூறினான்.

பசனோவும் ஸீபோவும் அவசரம் அவசரமாகத் துணி மணிகளையெல்லாம் சுற்றி எடுத்துக் கொண்டு, சின்னக் குழந்தைகளையும் ஜாக்கிரதையாக அழைத்துக் கொண்டு கீழே போனார்கள். கைலோவும் பிந்தரும் தூக்கக் கலக்கத்தில் ஏணிப் படிகளைத் தடவித் தடவிப் பார்த்தவாறே இறங்கினார்கள். சன்னன் அங்கேயே கட்டிலுக்குக் கால்மாட்டில் கிடந்த விரிப்பை எடுத்து இழுத்துப் போர்த்திக்கொண்டு குறட்டையும் விடலானான்.

மழைத் தூற்றல் போட்டுக் கொண்டே இருந்தது.

''இன்றைக்குத் தூங்கவிடாது போலிருக்கிறதே இந்த மழை!'' என்றான் குத்தா, தூற்றலின் தொந்தரவு பொறுக்கமாட்டாமல்.

''ஆமாம், தம்பி! நாம் வந்த வழி இப்படி! பகலிலும் சுகம் இல்லை, இரவிலும் தூக்கம் இல்லை!'' என்றான் சன்னன். அவன் கண்களை மண் விழுந்தாற்போல உறுத்தியது.

''மச்சு வீட்டுக்காரர்களுக்கு என்ன, சுகமாகத் தூங்குகிறார்கள்!'' — சீனர்களின் மச்சில் விளக்கின் ஒளி தெரிவதைக் கண்டு குத்தா பொறாமையோடு கூறினான்.

''எல்லாம் ஆண்டவன் செய்கிற வேடிக்கை, தம்பி!'' சன்னன் ஒரு பெருமூச்சு விட்டான். ''அப்பா! இந்த வீட்டுக்கஷ்டம் இருக்கிறதே, இது ரொம்பப் பொல்லாது!—ஏன் குத்தா! இரவு இன்னும் எத்தனை நேரம் பாக்கியிருக்கும்?'' என்று கேட்டான்.

''இன்னும் வெகு நேரம் இருக்கிறது, அண்ணே!''

''மேக மூட்டத்தினாலே, இருட்டு வேறே! எதுவுமே விளங்கவில்லை! இல்லையா?''

''இல்லை, இல்லை! நள்ளிரவு போயிருந்தால் பெரிய காரியம்.

வெள்ளி முளைக்க வெகு நேரம் இருக்கிறது. மேகத்திலே தெரியவில்லை என்கிறது மெய்தான். இருந்தாலும் ஒரு குத்து மதிப்பு இருக்கிறதில்லை? நீ என்ன, மாடு மேய்க்கப்போகணுமா?''

''ஆமாம்!''

''இப்பொழுது படுத்திரு! இன்னும் விடிய வெகு நேரம் இருக்கிறது. மனிதன் சற்று நேரமாவது ஒரு நாழிகைப் பொழுதாவது களைப்பாறவேண்டாம்?''

''அப்பனே! 'ஜாட்'டுகளுக்கெல்லாம் களைப்பாறப் பொழுது எங்கே இருக்கிறது?''

''ஆமாமாம். நீ சொல்வதும் மெய்தான்!'' என்று ஒத்துப்பாடி விட்டு குத்தா மௌனமானான்.

சிறு சிறு தூற்றல் கொஞ்சம் கொஞ்சமாக வலுத்தது. வெளுத்த மேகங்களுக்குக் கீழே பிடிவாதமாக உழன்று நின்ற புழுக்கத்தைக் காற்றின் அலைகள் இஷ்டத்துக்குக் கிழித்துப்போட்டன. குத்தாவும் சன்னனும் பேசியவாறே இனிமையான உறக்கமயக்கத்தில் தங்களைப் பறி கொடுத்துவிட்டனர். சன்னனின் கண்கள் மூடியிருந்தது என்னவோ, உண்மைதான். ஆனால் அவன் மனத்தில் ஒரு புதிய கலக்கமும் அச்சமும் இடம் பெற்றிருந்தன "எங்கே யாவது இப்படிப் படுத்து நாம் கண் அயாந்து பொழுது புலர்ந்து பொழுதும் ஏறிவிட்டால் என்ன ஆவது?'' இப்படி ஓர் எண்ணம் உண்டாகவே, தூங்கியவாறே தன் காதுகளை விழித்தெழும் தெரு ஓசையைக் கேட்பதற்காகத் தீட்டிக்கொண்டான். மழைத் தொந்தரவு, எலும்புகள் வரை ஏறியிருந்த உடல் வலி, குத்தாவின் பேச்சு எல்லாவற்றையும் மறந்து அவன் பாலையாரின் நெற் களஞ்சியம் வரை போய்விட்டான். அப்பொழுது இருள் பிரிந்துகொண்டிருந்தது. அக்கம் பக்கத்தில் அறுவடை செய்யப் பட்ட கம்புத்தாள்கள் மெதுவாக வீசிய காற்றில் சலசலத்துக் கொண்டிருந்தன. மொச்சை, உளுந்து, வயல் பயறு, பச்சைப் பயறு போன்ற செடிகள் செவி நிமிர்த்தி நின்றன. தொலைவில் மேட்டு நிலத்தில் ஜீதாலம்பர் ஏர் உழுது கொண்டிருந்தது தெரிந்தது. மணிகளின் இலேசான ஒலியினூடே பஞ்சாபிக் காதல் காவியமான 'மிர்ஜா-ஸாஹிபா'னின் பாடல்கள் மிதந்து வந்து கொண்டிருந்தன.

அவன் பரபரப்போடு எழுந்தான். கைப்பிடிச் சுவரில் அமர்ந்து இருளில் கோழி கூவிக் கொண்டிருந்தது. தெருவில் போகும்

உழு மாடுகளின் மணி ஒலி கேட்டது. மேகங்களுக்குப் பின்னலி ருந்து பொழுது புலரும் அறிகுறி தென்படவேண்டிய நேரம்.

கொட்டிலிலிருந்து மாடுகளை அவிழ்த்துக்கொண்டு மேட்டு நிலத்துக்குப் புறப்படும் பொழுது, "பசன்கௌர்! ஸிபோவைப் பெயரைக் கொடுக்கச் சொல்லிவிட்டுச் சீக்கிரமாகவே அனுப்பு. தேநீர் சற்று காட்டமாகவே இருக்கட்டும்!" என்ருன். அவன் பேச்சு ஒடிந்த மூங்கில் எனக் கரகரத்து ஒலித்தது.

## கசாப்புப் பருவம்

கனல்கின்ற கரித் துண்டங்கள் திணித்தாற்போல் நிரம்பியிருந்த உலையில் குனிந்து வேலை செய்து கொண்டிருந்த கருமான் தீனுவின் இரும்பு உடலில் வெண்கலத்தின் ஒளி ஏறியிருந்தது. அவன் வெண்கலத்தால் ஆன உடல் நலம் மிகுந்த ஒரு கூலியின் சாக்ஷாத் உருவச் சிலையெனக் காட்சி அளித்தான். வலு மிகுந்த கரங்களில் பெருஞ் சுத்தியலை ஏந்தி அவன் சுழற்றியபொழுது, கட்டமைந்த உடலின் சதைப்பற்று திரண்டு வந்தது. பட்டறையில் வைத்திருந்த நெருப்புத் துண்டம் போன்ற இரும்புத் துண்டில் ஒரு பயங்கர அடி விழுந்தது.

அந்த அடி இடைவிடாமல் எதிரொலித்தது. தீனு உலக நினைவே சிறிதும் இன்றித் தன் காரியத்தில் கண்ணுயிருந்தான். புரட்டாசிக் காய்ச்சலில் உலை நெருப்புப்போன்ற வெய்யில் சன்னல் வழியாக வந்து அவன் எலும்பு வரை ஊடுருவிய பொழுதுதான் அவனுக்கு நினைவு வந்தது. துக்னுகுற்று அவன் சன்னல் வழியே வெளியே எட்டிப் பார்த்தான். சூரியன் தலை உச்சிக்கு வந்திருந்தான். இத்தனை விரைவிலா நடுப்பகல் வந்து விட்டது? இன்னும் அவன் அலுவல் பாதிகூட முடியவில்லையே! வெய்யில் சூடு தாளாமல் அவன் சன்னல் கதவைச் சாத்தினுன். ஆனுல் சன்னலைச் சாத்தியதனுல் அவனுக்கு மூச்சுத் திணறலாயிற்று. அவனது நெற்றியிலே பசபச வென்று வியர்வை பெருகியது. முதல் நாள் இரவு நல்ல மழை பெய்திருந்தது. வானத்திலிருந்து வாய்க்காலாக மழை நீர் ஊற்றியிருந்தது. காலையில் கூடத் தூற்றல் போட்டுக் கொண்டுதான் இருந்தது. ஆனுல் சூரியன் தலைக்குமேல் ஏறியபொழுது, பெரும் புழுக்கமும் ஏற்பட்டுவிட்டது. அவன் சன்னலைத் திறந்துவிட்டான். மீண்டும் உலையில் குனிந்து வேலையில் ஆழ்ந்துவிட்டான். அவனுடைய காதுகள் வழியே ஓடிய வியர்வை முதுகில் அருவியாக இறங்கியது. தனது வலுவான விரைப்புள்ள கரத்தால், அவன் நெற்றி வியர்வையை வழித்தான். உலையில் வியர்வைத் துளிகள் விழுந்தன. 'சூ' என்னும் ஒலி வந்தது. ஒரு கணநேரத்துக்கு எரிகின்ற தொரு கரித்துண்டின் வாழ்க்கையும் வியர்வைத் துளிபட்டுச் சிறிது இலேசாகியது போலிருந்தது.

வெய்யில்—உலைத் தீ இரண்டும் சேர்ந்து அவன் உடலை வாட்டி வதக்கி எடுத்து விட்டன. இந்தத் தீ அவனுடைய இரத்தத்திலும் கலந்து விட்டாற்போலத் தோன்றியது. அதன் சூடு அவனுடைய எலும்புகளையும் அதன்மேல் போர்த்திருந்த தோலையும் வாட்டி எடுத்துவிட்டன. உலையின் கடுந் தீப்பொறிகள் அவன் விழிகளில் தெறித்தன. அவன் உடலில் உள்ள ஒவ்வோர் உரோமமும் ஒவ்வொரு திரியெனத் தோன்றின. ஏதாவது ஒரு திரியில் தீப் பிடித்துக் கொண்டால் போதும்; அவனுடைய உடல் பெரிய பலூனைப்போலப் படார் என்று வெடித்து விடுமோ என்பது போலத்தான் பட்டது.

அவன் தன்னையறியாமலே உலையைவிட்டுச் சன்னல் அருகில் வந்து நின்றான். வெளியில் வானம் முழுவதும் புரட்டாசிக் காய்ச்சலில் பற்றி எரிந்து கொண்டிருந்தது. அவனது விழிகள் வெய்யிலுக்குப் பழக்கப்படாமையினால் திறக்க முடியாமல் கூசின. அவன் பார்வை சற்றுத் தெளிவானதும், அவன் தன்னெதிரே வெகு தொலைவுக்கு விரிந்து பரந்திருந்த வயல்களைப் பார்த்தான்; பிறகு மணல் திட்டை நோக்கினான். அது வயல்களுக்கு நடுவே நிலாக்கோடுபோல நீண்டு தொடுவானத்தைத் தொட்டுக் கொண்டிருந்தது. கரும்புப் பயிருக்கு இடது புறமாகப் பருத்தித் தோப்பு இருந்தது. சிற்சில இடங்களில் கரும்புத் தோட்டத்தில் தேங்கியிருந்த நீர் வெள்ளிபோலப் பளபளத்துக் கொண்டிருந்தது. இடது புறத்தில் இருந்த நிலங்களை உழுது படிக்காரம் தூவப்பட்டிருந்தது. அவை விதை விதைப்பை எதிர்நோக்கிக் கொண்டிருந்தன. புது மழையினால் நனைந்து நிலம் பரப்பிய மண் மணம் அவனுக்கு மிகவும பிடித்திருந்தது. திடீரென்று அவன் மனத்தில் ஏதோ ஒரு வலி எழுந்தாற்போலிருந்தது. 'திறந்த சன்னல் வழியாகக் குதித்து வெளியே போனால் என்ன, வயல்களில் விழுந்து புரண்டால் என்ன, நனைந்த மண்ணின் ஈரனைப்பைத் தனது ஒவ்வோர் உரோமத்திலும் ஒற்றிக்கொண்டால் என்ன?' என்றெல்லாம் அவன் மனத்தில் தோன்றியது.

அவனுக்கு வயல்களிடம் வெகு பிரியம், விதை விடும்பொழுதும் அறுவடை செய்யும் பொழுதும் அவனுடைய இரத்தத்தில் ஒரு புத்துணர்வு பிறக்கும். அவன் எலும்புகள் விரிந்து நிற்கும். அவன் கிராமத்துக் கருமான். ஆனால் கிராமத்தில் கருமானுக்கு அப்படி என்ன வெட்டி முறிக்கமுடியாத வேலை இருந்து விட முடியும்? அதனால் அவன் பெரும்பாலும் வயல்களில் குடியானவர்

களுக்கு உதவியாக இருந்து வந்தான். அவனைப் போல் அறுவடை செய்யக் கூடிய ஆற்றல் பெற்றவர்கள் அந்த வட்டாரத்தில் எந்த ஊரில் தேடினாலும் கிடைக்க மாட்டார்கள். அவனைப் போல் சுமை தூக்கவும் யாராலும் முடியாது. திடீரென்று அவன் கைகள் அறுப்பு அரிவாளைப் பிடிக்கத் துடித்தன.

அறுப்பு அரிவாள், அறுத்துப் போட்ட தானியக் கதிர்கள், சந்திரனின் ஒளியில் ஆடும் கரும்புத் தோகைகள், மைல் கணக்கில் சலசலத்து நிற்கும் பொன்னிறக் கதிர்கள், மண்ணின் மடியில் பிறந்து தவழும் இசையின் இனிய சுரங்கள் — எல்லாம் அவனுக்கு நினைவுவந்தன. தன் முதுகுக்குப் பின்னால் நரகத் தீயைக் காட்டிலும் ஒரு படி மேலான உலைத்தீ கொதித்துக் கொண்டிருக்கிறது என்பதையே அவன் அக் கணம் மறந்தான். கடந்த இருபது ஆண்டுகளாக அவன் கோடரிகள், அரிவாள்கள், ஈட்டிகள் செய்வதைத் தவிர வேறு எதுவுமே செய்ததில்லை. ஆனால் இப்போது அறுப்பு அரிவாள், கனைகொத்தி இவற்றின் காலம் மலையேறி விட்டது. இது கசாப்புக்கத்திக்கும் ஈட்டிகளுக்கும் காலம். இருமுறை என்ன அறுவடை ஆயிற்று, தெரியுமா? கோதுமை போன்ற தான்யங்களின் அறுவடைக்குப் பதிலாகக் கோதுமை விதைத்தவர்கள், கதிர் அறுத்தவர்கள் — ஆகியவர்களை அறுவடை செய்தது தான் அதிகம்.

அவன் யோசித்துப் பார்த்தான் அப்பப்பா! அவன் எத்தனை பெரிய ஆபத்தை விலைக்கு வாங்கிக்கொண்டிருந்தான்? எந்த விதமான கூலிக்கு மார் அடிக்கும் வேலையைக் கூட அல்ல; கூலியில்லா வேலையைத் தன் கழுத்தில் கட்டிக் கொண்டிருந்தான்! எந்த நேரம் பார்த்தாலும் அவன் ஒரே வேலையில் உழன்று கொண்டிருந்தான்; புதிதாக உருவாகிய பாகிஸ்தானின் அறங்காவலர்கள் அத்தனைபேருக்கும் ஆயுதங்கள் செய்து தரும் முழுப் பொறுப்பும் அவன் தலையிலேயே சுமந்திருந்தாற்போல அல்லவா பேயாக உழைத்துக் கொண்டிருந்தான்! பாகிஸ்தான் பிரிந்தது என்னவோ மெய்தான். ஆனால் பாகிஸ்தான் முழுமை பெறுவதற்குப் பாகிஸ்தானில் வாழும் ஹிந்துக்கள் — சீக்கியர்களின் தொல்லையைத் தீர்த்துக்கட்டுவது அல்லவா மிகமிக அவசியம்! அவர்களும் தங்களோடு இருப்பதில் என்ன தொல்லை என்ற விவரம் இதுவரை தீனுவின் அறிவுக்கு எட்டவில்லை. இருந்தாலும் எல்லோரும் இப்படியே கூறிக்கொண்டிருந்தார்கள். கிராமத்துத் தலைவர்களிலிருந்து, ஜாமா மசூதியின் இமாம்கள் வரை —

எல்லோருமே இதையே சொல்லிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் என்ன அறியாதவர்களா? அவன் உலை எந்த நேரமும் ஆறாமல் கொதித்துக்கொண்டே இருக்கவேண்டும், கசாப்புக்கத்திகள், ஈட்டிகள் உருவில் மரணதேவன் தன் நாக்குகளை உமிழ்ந்து கொண்டே இருக்கவேண்டும். அப்பொழுது தான் அவர்கள் தொடுத்த அந்த அறப்போர் (!) வெற்றி காணமுடியும் என்பது அவர்கள் கருத்து.

அவன் பின் திரும்பிப் பார்த்தான் கரித்துண்டுகளுக்கு இடையே காய்ந்து கொண்டிருந்த இரும்புத் துண்டங்கள் தீத் துண்டங்களைக் காட்டிலும் சிவந்திருந்தன. அவற்றைக் கண்டதும் அவனுக்குத் தலை சுற்றியது. அவன் தன் வயிற்றை இறுகப் பிடித்துக்கொண்டான். ஏதோ சூடான கூரிய பொருள் அவன் வயிற்றைக் கிழித்தாற்போலிருந்தது. சட்டென்று அவனுக்கு நினைவு வந்தது, தனக்கு நல்ல வயிற்றுப் பசி என்று! காலையிலிருந்து அவன் வயிற்றுக்குள் ஒரு வாய்த் தண்ணீர் கூடப்போகவில்லை. அந்தப் பசி தான் அவன் வயிற்றை எரித்துக் கொண்டிருந்தது, குடலைத் தீய்த்து வாட்டிக் கொண்டிருந்தது. அவன் உதடுகள் உலர்ந்து மரத்து விட்டன.

அவன் வீட்டுக்குள்ளே எட்டிப்பார்த்து உரக்கக் குரல் கொடுத்தான்: "ஓ பஷிருக்கு அம்மா! சல்தி குடிக்க நீர் கொண்டுவா!"

ஏறக் குறைய நாற்பத்தைந்து வயதுள்ள ஒரு பெண்மணி வெண்கலக் கிண்ணத்தில் தண்ணீர் கொண்டு வந்தாள். அவள் மூக்கில் மூக்குத்தியும் காதுகளில் வெள்ளி ஒலையும் ஒளிர்ந்து கொண்டிருந்தன. தாகத்திலுல் தவித்துக் கொண்டிருந்த தன் கணவனைப் பார்த்தாள் அவள். காலையிலிருந்து மூன்று முறைகள் அவள் 'ரொட்டி கொண்டு வரவா, தாகத்துக்கு நீர் கொண்டு வரவா?' என்று கேட்டுப் போயிருந்தாள். ஆனால் அப்பொழுது தீனு அவள் சொல்லைக் காதுகளிலேயே வாங்கிக் கொள்ளவில்லை. உலை வேலையிலேயே கருத்தாயிருந்தான். இப்பொழுது திடீரென்று எப்படி அவனுக்குப் பசி தாகம் நினைவுக்கு வந்தது? அவள் உலையில் கனன்று கொண்டிருந்த நரகத் தீயைக் கண்டாள். நாற்புறமும் கருங் குட்டமெனப் பரவிச் சிதறிக்கிடந்த இரும்புக் கம்பிகளையும் துண்டங்களையும் கண்டாள். அதோடு ஒரு மூலையில் குவிந்து கிடந்த கொலைகாரக் கசாப்புக்கத்திகளையும் ஈட்டிக் குவியல்களையும் கண்டாள். அப்புறம் அவள் பார்வை எத்தனை நேரம் தன் கணவனின் முகத்தையே சுற்றி வந்ததோ,

தெரியாது. தன் கணவனையே இன்னார் இனியார் என்று அடையாளம் கண்டு கொள்ள முடியாமல் தவித்தாளோ என்று தோன்றியது.

தீனா கிண்ணத்து நீர் அவ்வளவையும் ஒரே வாயில் குடித்து முடித்தான்.

"இன்னும் கொஞ்சம்!"— மூச்சிரைக்கக் கூறினான் அவன். அவள் உள்ளே சென்று இன்னுமொரு கிண்ணி நீர் எடுத்து வந்தாள். அவன் தண்ணீர் அருந்துவதையே வைத்த கண் வாங்காமல் பார்க்கலானாள்.

"போதும்!" என்றான் தீனா முறுக்கேறி நின்ற அவனுடைய வயிற்று நரம்புகளும், புடைத்து நின்ற நெற்றி நரம்புகளும் தளர்ந்தன. மூச்சிரைப்பும் நிதானத்துக்கு வந்தது. ஆனால் அதே நேரம் அவன் முகத்தில் ஒரு வெட்கமும் கலவரமும் ஒளிவிட்டன. "என்னை ஏன் இப்படிப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்? என்னோடு ஏன் பேசமாட்டேன் என்கிறாய்? எனக்கு என்னவோ பிளேக் பிளவை ஏற்பட்டிருக்கிறாற்போல் அல்லவா தூரதூர விலகி நிற்கிறாய்!" என்றான். அவள் ஒன்றுமே பதில் பேசவில்லை. பேசாமல் உள்ளே சென்று உணவு எடுத்து வந்தாள்.

"இதோ பார்! நான் உன் அருகில்தான் இருக்கிறேன்!" என்று கூறிய தீனா அவள் தோள்பட்டையைப் பிடித்து உலுக்கினான்: "என்னோடு ஏன் பேசமாட்டேன் என்கிறாய்? உன் வாயில் என்ன கொழுக்கட்டையா, பட்டாணியா?" என்றான்.

அவள் அப்பொழுதும் வாய் மூடி மௌனியாகவே இருந்தாள்.

தீனா ஒரு ரொட்டியை விண்டு பெரும் பெரும் கவளமாகக் கொஞ்சம் விழுங்கினான். அப்புறம் உணவு உள்ளே செல்லவே மறுத்தது. அவன் நீரை மடக் மடக்கென்று கசப்பு மருந்தைப் போலக் குடித்தான். பிறகு ரொட்டித் தட்டைத் தொலைவில் நகர்த்திவிட்டு, "என்னோடு பேசமாட்டாயா? என்னவோ அப்படிப் பார்த்துக்கொண்டே இருக்கிறாயே! ஏதோ பேய்—பிசாசு என் உடலில் ஒட்டிக்கொண்டிருக்கிறாற்போலே!" என்றான்.

"ஆண்டவன் அப்படி ஒரு நிலை ஏற்படுத்தவேண்டாம்!" அவள் வாய் திறந்தாள்: "ஆனால் எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது!" என்றாள்.

தீனாவின் வாய் வியப்பினால் விரிந்தது. பஷீராவின் தாயார் பேசுவாள், இத்தனை நாளும் பிடிவாதமாகக் கடைப்பிடித்து வந்த

மௌன விரதத்தை இப்படித் திடுதிப்பென்று கைவிடுவாள் என்ற நம்பிக்கையே இதுகாறும் அவனுக்கு ஏற்படவில்லை.

சிறிது நேரத்துக்கு அவனால் அந்த வியப்பிலிருந்து விடுபெற முடியவில்லை. தன் உணர்வுபெற அவனுக்கு வெகு நேரம் பிடித்தது. அப்புறம்தான் அவனே வாய் திறந்து பேசினான்: "உன் மனத்தில் உள்ளதை நான் அறிவேன். ஆனால் நான் என்ன செய்யட்டும், சொல்லு! உன் பிள்ளைகள் தானே என்னை உயிர் வாழவிட மாட்டேன் என்கிறார்கள்! இப்பொழுதுதான் பஷீரா சொல்லிப் போனான்; நாளை மாலைக்குள் ஐம்பது கசாப்புக் கத்திகள் தயாராகி விடவேண்டுமாம். நான் கொஞ்சம் ஆறப் போட்டால் கூட என் கழுத்திலே ஏறி உட்கார்ந்துவிடுவான். நீ என்னவோ 'அது, இது' என்று சொல்லுகிறாய். நான் என்ன சொல்கிறேன் என்றால், நான் அவர்கள் பேச்சைக் கேட்கவில்லையென்றால், என்னைத் துண்டம் துண்டமாக வெட்டிப் போட்டுவிடுவார்கள். என் உயிரையே குடித்துவிடுவார்கள்!"

"பிள்ளைகள் உங்கள் பிள்ளைகள் தானே? வேறு எவருடைய பிள்ளைகளும் இல்லையே!"— பஷீராவின் தாயார் கேட்டாள். பிறகு தன் மனத்துக்குள்ளேயே தனது இந்தக் கேள்விக்காக வெட்கிக் குறுகினாள்.

"என் பிள்ளைகள் தான்!" தீனாவும் முட்டாள்களைப்போலப் பதில் அளித்தான்.

"அப்படியிருக்கும் பொழுது அவர்கள் உங்களிடம் பயப்படுகிறதா? நீங்கள் அவர்களிடம் பயப்படுகிறதா?"

நீ இப்படி எளிதாகச் சொல்லி விட்டாய்! உன் பிள்ளைகளைப் பற்றி உனக்குத் தெரியாததுபோல! அவர்கள் எப்படிப்பட்ட அரக்கர்கள், தெரியுமா? நான் அவர்களிடம் ஏதாவது மாறு சொல்லிப் பிழைத்துவிட முடியுமா? உயிரை வைத்து என் தோலை உரித்துவிடுவார்களே!" என்றான் தீனா.

"பிள்ளைகள் என் பிள்ளைகளும் தான்!" தீனாவின் மனைவியின் குரலில் கொஞ்சம் மென்மை இழையோடியது. "உங்களுக்குத் தான் தெரியுமே, எப்பொழுது பார்த்தாலும் என்னையும் நாயாகக் கடிக்க வருகிறார்கள், கழுகாகப் பாய்ந்து கொத்த வருகிறார்கள் என்று! இருந்தாலும் நான் அவர்களுக்குக் கத்தியும் ஈட்டியும் செய்து கொடுத்துக் கொண்டு உங்களைப்போல நிற்கவில்லை! தெரிந்துகொள்ளுங்கள்!" என்றாள்.

"அதனால் என்ன? நானும் கத்திகள் செய்யத்தான் செய்கிறேனே யொழிய மக்களை ஒன்றும் வெட்டிச் சாய்க்கவில்லை!" என்றான் தீனு.

"இந்த வேலை வெட்டிச் சாய்ப்பதைக் காட்டிலும் கெட்ட வேலை. வெட்டுகிறவன் ஒருவர் இருவரை, அதிகமாகப் போனால் ஐந்து ஆறு பேரை வெட்டுகிறான். ஆனால் உங்கள் கையினால் செய்யப் படுகிற கத்தி இருக்கிறதே. இது எத்தனையோ பேர்களுடைய தலைகளைக் கொய்கிறது!" என்றாள் அவன் மனைவி.

தீனுவின் முதுகெலும்பில் ஒரு நடுக்கம் ஏற்பட்டது. பிறகு அவனுடைய ஒவ்வொரு மயிர்க்காலும் நடுங்கியது. வெகு நேரம் வரை அவனால் பேசவே முடியவில்லை, வாய்திறந்து. குரல் திரும்பி வந்தபொழுது, "என்னிடம் சொல்லுகிறாயே! உன் பிள்ளைகளிடம் சொல்வதற்கு என்ன? பெருந் தலைகளாகச் சுற்றிக்கொண்டு திரிகிறார்களே! ஒவ்வோர் இரவிலும் இரண்டு இரண்டு கிராமங்களைச் கொள்ளி வைத்துக் கொளுத்துகிறார் களே!" என்றான்.

"என் பேச்சை என்ன, நீங்கள்தான் கேட்கிறீர்களா அல்லது அவர்கள் தான் கேட்கிறார்களா?" — மனைவியின் குரல் மிக வாட்டத்துடன் ஒலித்தது. "யாரை என்ன சொல்ல எனக்குத் தகுதி இருக்கிறது? அவன் அவன் பண்ணிய பாவத்துக்குப் பதில் சொல்லி விட்டுப்போகிறான்! நான் எதற்காகப் போய் ஒன்று சொல்லணும், கட்டி வாங்கிக் கொள்ள வேண்டும்?" என்றாள்.

சிறிது நேரம் இருவரும் பேசாமல் பூமியையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

பிறகு திடீரென்று, "நீங்கள் ஏன் ரொட்டியே சாப்பிட வில்லை? பட்டினியினால் வாடவேண்டுமா, என்ன?" என்று மனைவி கேட்டாள். அப்படியே ரொட்டிப் பாத்திரத்தைத் தள்ளித் தீனுவுக்கெதிரே வைத்தாள் அவள்.

வெளியே வாசற் கதவண்டை இலேசாகச் சப்தம் கேட்டது. தீனு நடுங்கிப்போனான். படபடவென்று எழுந்து நின்றான். பகீராகவே அல்லது அவனுடைய தோழர்களாகவோ இருக்க வேண்டும். வேறு யாராகவும் இருக்கமுடியாது என்று அவன் எண்ணினான். அவர்கள் தான் நினைவுபடுத்தி விட்டுப்போக வந்திருப்பார்கள் என்றும் தீர்மானித்தான். தாழ்ப்பாளில் வைத்த கை சட்டென்று கதவைத் திறக்கத் தயங்கியது.

அவன் உலையை நோக்கினான். உலை பகபக வென்று எரிந்து கொண்டிருந்தது. எல்லாப் பொருள்களும் சரியாகவே இருந்தன. எனவே அவன் அச்சம் நீங்கித் தாழ்ப்பாளைத் திறந்தான். ஆவணி-புரட்டாசி மாத மழையில் நனைந்து ஊறி விம்மிய கதவின் குடுமிகள் கிறீச்சிட்டன.

பயந்துபோய் தீனு உள்ளே ஓடினான். உலையில் இடறி விழப் போனவன் நல்ல வேளையாகச் சமாளித்துக்கொண்டு தப்பினான். அவன் மனைவியின் நிறம் ஆய்ந்த பஞ்சுபோல் வெளுத்துவிட்டது. அவள் தன்னையறியாமலே கிறீச் சென்று வீறிட்டாள். வாசலில் கோயில் பூஜை செய்யும் புரோகிதர் குடும்பத்துக் கிழவி நின்று கொண்டிருந்தாள். மஞ்சள் போன்ற அவளுடைய மஞ்சள் நிற முகத்தில் சதைச் சுருக்கங்கள் வலை பின்னியிருந்தன. அவளு டைய நரைத்த தலை ஆடிக் கொண்டிருந்தது. தீனுவும் அவனு டைய மனைவியும் அச்சம் மிகுந்த பார்வையோடு கிழவியைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவள், தான் உயிர் வாழ்ந்த காலத்தில் எப்படித் தோற்றம் அளித்தாளோ, அப்படியே தான் இப்பொழுதும் காட்சி அளித்தாள். ஆனால் இப்பொழுது அவள் பேயுருவம் அல்லவா தரித்திருந்தாள்!

கடைசியில் தீனுவின் மனைவி துணிவை வரவழைத்துக் கொண்டு கேட்டாள்: "ஏன் புரோகிதர் வீட்டு அம்மா! நீ இன்னும் உயிருடன் இருக்கிறாயா?"

கிழவி ஒன்றும் பதில் சொல்லவில்லை. அப்பொழுது தான் தீனு வின் மனைவிக்கு நினைவு வந்தது, உரக்கப் பேசினால் தான் கிழ விக்குக் காது கேட்கும் என்று! ஒரு வேளை இறந்த பிறகும் அவளு டைய செவிடு சரியாகவில்லைபோலும்! இப்படி எண்ணியவள் கிழவியின் அருகில் நெருங்கித் தான் முன்பு கேட்டதையே பலங் கொண்ட மட்டும் உரக்கக் குரல் கொடுத்துக் கேட்டாள்.

விஷயத்தைப் புரிந்து கொண்ட கிழவியின் விழிகள் பளிச் சிட்டன. "உனக்கு விளங்கவில்லையா? நான் உயிருடன் தான் இருக்கிறேன்! ஏழு நாள் முறை ஜுரம் என்னைப் படாதபாடு படுத்திவிட்டது. வீட்டின் அறைக்குள்ளே தனியாக வெந்து மடிந்து கொண்டிருந்தேன். யாரும் என்னைத் தாகத்துக்குத் தண்ணீர் வேண்டுமா என்று கூடக் கேட்கவில்லை. வெகு நாட் களாகத் துளசி வேறு, எங்கேயோ வெளியே போயிருக்கிறான். அவன் அருகில் இல்லாமலே இந்த உயிர் பிரிந்துவிடுமோ என்று

கூடத் தோன்றியது. மனிதப் பிறவியைப் பற்றி நிலையாக என்ன சொல்லமுடியும்? இன்றைக்கு என் ஜுரம் இறங்கிவிட்டது. என்னால் எழுந்து நிற்கக் கூட முடியவில்லை. இருந்தாலும் மனத்திலே தெம்பைக் கூட்டிக்கொண்டு இது வரைக்கும் வந்து விட்டேன். ஆமாம், நீங்கள் இருவரும் ஏதோ மாதிரி இருக்கிறீர்களே, ஏன்?'' என்று கேட்டாள்.

இத்தனை பேசுவதற்குள் கிழவிக்கு வியர்த்துக் கொட்டிவிட்டது. அவளுக்கு மேல் மூச்சு கிழ்மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது.

அவள் கால்களை மடக்கித் தரையில் உட்கார்ந்து கொண்டாள். அவளது விழி மணிகள் உயிரே அற்றவையாகக் காணப்பட்டன. அவள் விடும் ஒவ்வொரு மூச்சும் கூடக் கடைசி மூச்சாகத் தோன்றியது.

நீனுவும் அவன் மனைவியும் ஒருவரை ஒருவர் விந்தையான ஆறுதல் பார்வையோடு பார்த்துக் கொண்டனர். அவள் உண்மையில் புரோகிதர் வீட்டுக் கிழவிதான்; கிழவி உருவத்தில் வந்த ஆவியோ பேய்—பிசாசோ அல்ல என்பதும் அவர்களுக்கு உறுதியாயிற்று. முறைக் காய்ச்சல் ஊராருக்கு நேர்ந்த உயிர்க் கேட்டிலிருந்து கிழவியைக் காப்பாற்றியிருந்தது. கிழவிக்குக் காது செவிடாகப் போனதும் இன்னொரு வகையில் நல்லதாயிற்று. முந்தாநாள் வியாழன் இரவு அவ்வூரில் நடைபெற்ற உயிர் குடி விளையாட்டின் விவரமும் மக்களின் துயர முடிவும் அவளுடைய செவிக்கு எட்டவில்லை. அவளுடைய கிராமம் பாகிஸ்தானோடு பிணைந்துவிட்டது என்னும் செய்தி அவளுக்கு அதுவரை தெரியாது. 'பாகிஸ்தான் அவள் கிராமத்தில் புகுந்து விளையாடி விட்டது. அதன் பலனாக அந்தக் கிராமத்தில் வசித்து வந்த ஹிந்துக்கள் சீக்கியர்களில் ஒருவர் கூட பிழைக்கவில்லை, கலகக்காரர்கள் கட்டாயப்படுத்திக் கடத்திக்கொண்டு போன ஒரு சில பெண்களைத் தவிர!' என்பது போன்ற விவரங்களையும் அவள் அந்த நேரம் வரை அறியாள்.

திடீரென்று புரோகிதர் வீட்டுக் கிழவி கேட்டாள்: ''ஏண்டா நீனு! என்னுடைய ஆட்டை எங்கேயாவது பார்த்தாயோ?''

ஆடு?

நீனு யோசித்தான்: என்ன ஆயிற்று? கலகக்காரர்கள் கும்பல் கைப்பற்றிய ஆடு – மாடுகளைக் கன்று – காலிகளோடு சமைத்துச் சாப்பிட்டுச் சீரணித்தும் விட்டனவே! இப்பொழுது போய் இந்தக் கிழவி தன் ஆட்டின் நலன் விசாரிக்கிறாளே!

கிழவி கூறிக்கொண்டே போனாள்: "எங்கே அலைந்து திரிகிறதோ, என் ஆடு! யார் கண்டார்கள்? போதாக்குறைக்கு அது சினை வேறு! என்னை என்னாலேயே பார்த்துக் கொள்ள முடியவில்லை. ஆட்டை நான் எங்கே என்றுதான் போய்த் தேடுவேன்? அப்படியே அகப்பட்டாலும் அது என்னைப் பிடிக்கத்தான் விடுமா? பாய்ச்சுக் காட்டி என்னைக் கொல்லும். ஆண்டவன் உனக்கு அருள் புரிவான். எங்கேயாவது உன் கண்களில் பட்டு விட்டால் கட்டிப் போட்டுவிடு. இதோ பார், அது எப்பொழுது குட்டி போடுமோ? எங்கேயாவது வெளியிலே குட்டிபோட்டால் என்ன ஆவது? அதனாலே........"

"பெரியம்மா! எங்கேயும் இல்லை, உன் ஆடு! அதைத் தின்று சீரணித்தாயிற்று. அதைத் தின்றவர்கள் சுகமாக ஏப்பம் விட்டுக் கொண்டிருக்கிறார்கள்!" என்றான் தீனா. ஆனால் கிழவிக்கு ஒன்றும் கேட்கவில்லை. தீனா உரத்த குரல் எழுப்பித் தான் சொன்னதையே மீண்டும் சொல்லலுற்றான். ஆனால் அதற்குள்ளாக அவன் வீட்டுக்காரி ஜாடை செய்து தடுத்துவிட்டாள்.

"இதோ பார்த்தாயா, தீனா?"—கிழவி மேலும் கூறினாள்: "இந்தச் சங்கிலி எனக்குக் கோயில் வாசலண்டை கிடைத்தது. அந்தப் போக்கிரி ஆடு எப்படித்தான் இந்தச் சங்கிலியை அறுத்துக் கொண்டதோ, தெரியவில்லை! இதோ பாரு, அந்தச் சங்கிலியைக் கோக்கிற வளையமே ஒடிந்துபோய்க் கிடக்கிறது! இந்தச் சங்கிலியைச் சரியானபடி பொருத்திக் கொடு என்று நம் தீனாவிடம் சொல்லவேணும் என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன்!"

கிழவி தன் கையில் அறுந்துபோன ஆடு கட்டும் சங்கிலியோடு வந்திருப்பதைத் தீனா அப்பொழுதுதான் கண்டான். ஆட்டின் முதுகைப் பதம் பார்த்த கூரான வெட்டரிவாள் சங்கிலியையும் இரு துண்டுகளாக்கி யிருக்கிறது என்பது அவனுக்குப் புரிந்தது.

வெகு நேரமாக தீனாவின் மனைவி கிழவியை வேறு ஒரு நோக்குடனேயே பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் உள்ளத்தை ஏதோ குடைந்து கொண்டிருப்பது போலத் தோன்றியது. அந்தக் கடைசலில் கடைசியாக அவளுக்கு ஒரு வழியும் விளங்கியது. அதன் பலனாக, "புரோகிதர் வீட்டுப் பாட்டியம்மா! நீ எங்கள் வீட்டுக்கே வந்து விடு. கோவிலில் நீ தனியாகக் கிடந்து சாவானேன்? இன்றைக்குத்தான் உனக்குச் சுரம் கூட இறங்கியிருக்கிறது. இங்கேயே வந்து நீ தனியாகப் பொங்கித் தின்றுகொள்.

போய் உன் பண்டம்—பாத்திரங்களை எடுத்து வா. நீ ஹிந்துப் பிறவி ஆயிற்றே! துளசி வந்ததும் நீ திரும்பப் போய்க் கொள்ளலாம்!'' என்றாள்.

கிழவிக்கு முன்னைக் காட்டிலும் அதிகமாகக் காது கேட்கவில்லை என்று தோன்றியது. ஒருவேளை முறைக் காய்ச்சல் அவள் காதுகளை இன்னும் அடைத்துவிட்டதோ, என்னவோ? இத்தனை நீண்ட பேச்சுக்களுக்கிடையே அவள் செவிகளில் விழுந்தது துளசியின் பெயர் மட்டும்தான்.

''துளசி வெளியூருக்குப் போயிருக்கிறாள் என்று நான் தானே உன்னிடம் சொன்னேனே! ராமேஷாவின் மகளுக்குத் திருமணத் தேதி வைக்கும் விஷயமாகப் பிள்ளை வீட்டார்களைப் பார்த்து வர புதுப் பிண்டிக்குப் போயிருக்கிறாள். ஐப்பசி மாதம் முதல் தேதி பிரீதோவின் திருமணத்துக்கு நாள் பொருத்தமாயிருக்கிறது. இந்தத் தடவை எனக்கு நீ ஒரு பசு வாங்கித் தர வேண்டும் என்று நான் ஷாவிடம் சொல்லியிருக்கிறேன். ஆமாம், ஷாவின் வீட்டிலே தினம் தினமா கல்யாணமும், கார்த்திகையும் வருகின்றன! நீயும் தெரியாதவள் இல்லையே! துளசிக்கு உடம்பு மிகவும் காய்ந்து போகிறது, ஒட்டி உலர்ந்து போகிறது. வீட்டில் பாலும் தயிரும் 'தேம்பத் தெகிழ' இருந்தால் கொஞ்சம் உடல் தேறலாம் இல்லையா?''

கிழவியின் பேச்சைக் காதில் வாங்கிக்கொள்ளாமல் தீனுவின் மனைவி, தீனுவைப் பார்த்தாள். அவள் ஏதோ சொல்ல விரும்பினாள். அதற்குமுன் தீனுவிடம் பார்வையினாலேயே ஆலோசனை புரிய விரும்பினாள். ஆனால் அவள் எதுவும் கேட்பதற்கு முன்னால் தீனு முந்திக்கொண்டான்:

''நான் உன் மனத்தில் உள்ளதை அறிவேன். ஆனால் அந்தக் காரியம் நம்மால் நிறைவேற முடியாது. எனக்கு ஒன்றும் தடை இல்லை. ஆனால் இவளை எந்தக் குதிரிலே ஒளித்து வைப்பாய் நீ? இப்பொழுதே உன் வயிற்றில் பிறந்த பிள்ளைகள் 'மனித வாடை அடிக்கிறது, மனித வாடை அடிக்கிறது' என்று கூறிக்கொண்டு வந்து விடுவார்கள்! உனக்குத் தெரியும், அவர்களிடம் எதையும் ஒளித்து மறைக்கமுடியாது என்று. அவர்களுக்கு இன்றைக்கே விஷயம் தெரிந்துவிடும். அப்புறம் நம்மைச் சாடுவார்கள்! நம் நிலை இசைகேடாகப் போய்விடும்!''

தீனுவின் மனைவி கெஞ்சாத தோஷமாகக் கெஞ்சினாள்: ''கிழ உயிர்! நம் கிராமத்தில் க்ஷத்திரியர்களின் ஒரே சின்னம் இவள்

தான். கோவில் வாசலுக்குப் போனாலும் புரோகிதர் வீட்டு இந்தக் கிழம் 'அல்லா'ப் பெயரைத்தான் சொல்லுகிறது! இரண்டு மூன்று நாட்களில் இவள் பிள்ளை திரும்பி வந்துவிட்டால், எங்கேயாவது வேறு கிராமத்துக்கு அனுப்பி வைத்து விடுவோம்!''

''எந்தக் கிராமத்துக்கு அனுப்புவாய் இவளை?''—தீனு சீறினான்: ''இவள் உயிரோடு தப்பிப் பிழைக்கிறதற்கு எந்தக் கிராமம் நல்ல படியாகப் பாக்கியிருக்கிறது, சொல்லு! அதோடு, இவள் பிள்ளை இந்தத் தடவை திரும்பி வரமாட்டான். அவன் போயிருக்கிற ஊரிலிருந்து யாருமே திரும்பி வருகிறதில்லை. புதுப் பிண்டியில் உள்ள 'கத்திரி'கள் அனைவருமே கொல்லப் பட்டு விட்டார்கள். விதைக்குக் கூட ஒருத்தரைவிட்டு வைக்கவில்லை, படுபாவிகள்!''

அவன் மனைவியின் முகம் தொங்கிவிட்டது. அவள் கை நடுங்கத் தன் விரல்களை உதடுகளில் வைத்துக்கொண்டாள். ''உங்களால் மெதுவாகவே பேச முடியாதா? இவள் பிள்ளையைக் கொலை செய்து விட்டார்கள் என்பதைச் சொல்லிவிட்டுத்தான் மறு காரியம் பார்க்கப் போகிறீர்களா?'' என்று கேட்டாள்.

இத்தனை நேரமும் அவர்கள் மிகவும் உரத்து ஒன்றும் பேசி விடவில்லை; ஒலி குறைவாகத்தான் பேசிக் கொண்டிருந்தார்கள். அது கூடத் தேவையில்லை. அவர்கள் இன்னும் உரக்கப்பேசினால் கூடக் கிழவிக்கு எதுவும் காதில் விழப்போவதில்லை, அவள் அத்தனை டமாரச் செவிடு ஆகியிருந்தாள்.

கிழவி சுரவேகத்தினால் சிவந்த தன் கண்களை அவ்விருவர் மீதும் ஓட விட்டாள். பிறகு கோபக் குரலில் கேட்டாள்.

''இரண்டு பேரும் 'கசமுச' வென்று என்ன இரகசியம் பேசுகிறீர்கள்? ஏண்டா, தீனு! நீ ஏன் என் பக்கம் திரும்பிப்பார்க்கவே மாட்டேன் என்கிறாய்? துக்கிரிப்பயலே, இதைக் கொஞ்சம் சரி செய்து கொடுடா! இதென்ன ஒரு பெரிய வேலையா உனக்கு?''

''நாளைக்கு வா, அம்மா!'' தீனு கிழவியின் காதருகில் தன் வாயைக் கொண்டுபோய் உரக்கக் கூறினான்: ''இன்றைக்கு எனக்கு நேரம் இல்லை. இப்பொழுது வீட்டுக்குப்போய் விட்டு அப்புறமாக வா!''

''சரி!''—முழங்காலில் கையூன்றிக் கிழவி எழுந்து நின்றாள். பிறகு கரகரத்த குரலில், ''சரி, அப்படியானால் நான் வருகிறேன், நாளைக்கு வரச் சொல்லுகிறாயா? — ஆனால் நம் ஆட்டைக் கொஞ்

சம் நினைவு வைத்துக்கொள்! எங்கேயாவது அது கண்ணில் பட்டால் கட்டிப் போட்டுவிடு. அது எங்கே ஓடித் திரிகிறதோ, தெரியவில்லை!'' என்றாள்.

தீனுவின் மனைவி அவளைத் தடுத்து நிறுத்துவதற்கு முன்பாகவே, தட்டுத் தடுமாறித் தெருவில் இறங்கி அவள் நடக்கலானாள்.

இந்தக் கிழவி எத்தனை நேரத்தை விழுங்கி விட்டாள்? வேலையில் தடை ஏற்பட்டதனால் தீனுவுக்கு எரிச்சல் எரிச்சலாக வந்தது. இத்தனை நேரம் அவன் நான்கைந்து கத்திகள் தயாரித்திருப்பான். பஷீராவின் வாயில் புகுந்து புறப்படாமல் இருக்கலாம், இத்தனை நேரமும் வீண் பேச்சில் பொழுது போகாமல் இருந்தால்! அவன் கேட்ட ஐம்பது கத்திகளை எண்ணி வைத்திருக்கலாம்.

வேலையில் முனைந்து ஈடுபட நினைத்தான். ஆனால் என்ன முயன்றும் அவனால் முடியவில்லை. அவன் மனத்தை ஒரு நினைவு அரித்துக் கொண்டிருந்தது. பரந்து விரிந்து கிடக்கும் வெள்ளி மயிர்க் கொத்து, சுரவேகத்தில் குழி விழுந்துபோன கண்கள் ஆகியவை அடிக்கடி அவன் நினைவை முற்றுகையிட்டன. எரியும் இரு தீப்பந்தங்கள் என அவ்விழிகள் அவனது மூளையில் பாய்ந்து சுட்டன. எல்லாவற்றைக் காட்டிலும் அவனை மிகவும் வாட்டிய விஷயம் கிழவியின் அறியாமையே. அவளுக்கு ஊர் உலகம் எதுவுமே தெரியவில்லை. துளசி இனி திரும்பமாட்டான், திரும்பாத ஊருக்குப் போய்விட்டான் என்பது அவளுக்குத் தெரியாது. பிரீதோவுக்கு இனித் திருமண முகூர்த்தம் இல்லை என்பது அவளுக்குத் தெரியாது. பிரீதோவை அவள் அப்பன் வீட்டோடு சேர்த்துப் பஷீரா தனதாக்கிக் கொண்டுவிட்டான் என்பதையும் அவள் அறியாள்.

பஷீரா மிகவும் தவறான காரியம் புரிந்து விட்டான். தங்கை தமக்கை, தாய் - மகள் ஆகியவர்களின் மரியாதையைக் காப்பது எல்லோருக்குமே பொதுவானது. பிறர் பெண்களானாலும் தங்கள் பெண்களைப்போல அவர்களுடைய மானத்தைக் காக்க வேண்டும். தங்கள் மகள்களின் மானம் பறிபோவதை எவனாவது புண்ணியச் செயல் என்று எண்ணுவானா?

திடீரென்று தீனுவின் நினைவில் ஒரு பயங்கரக் காட்சி மிதந்து வந்தது. பிரீதோ அடித்து அழுதுகொண்டு தன் தந்தையின்

சவத்தோடு பிரிக்க முடியாதபடி ஒட்டிக் கொண்டிருந்தாள். அப்பொழுது சிறிதும் ஈவு இரக்கமின்றி பஷீரா அவளது தலை மயிரைப் பிடித்து இழுத்துச் சென்றான். பிரீதோ அழுது புலம்பி, அவன் காலைப் பிடித்து வேண்டிக் கொண்டே அவன் இழுப்பின் வேகத்துக்கு ஈடு கொடுத்துப் பார்த்தாள். அப்புறம் திடீரென்று மௌனமானாள். பலி ஆடு பலி ஆவதற்கு முன்னால் மௌனமாகி விடுமே, அதுபோல!

அப்பொழுது தினு – பஷீராவின் அப்பன் – பேசாமல் நின்று அந்த நரகக் காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்தான். அவன் பஷீராவைத் தடுக்கவில்லை, முதுகில் ஒரு குத்துக் குத்தித் தரையில் தள்ளி மிதிக்கவில்லை. தன் மகளின் மானத்தைக் காக்க அவன் அப்பொழுது எந்த உபாயத்தையுமே கையாளவில்லை!

பிரீதோவின் அச்சத்தினால் வெளிறிப்போன குழந்தை முகம் தினுவின் கண்களெதிரே நிழலாடியது. அவள் கதறிய கதறல் அவன் செவிகளில் ஒலித்தது. திடீரென்று அவன் உடலில் ஓர் உதறல்; பலத்த உதறல் எடுத்தது. அந்த நடுக்கம் பனியாக உறைத்துச் சில்லிடச் செய்கின்ற சாவின் அறிகுறியாகத் தோன்றியது. அந்த நடுக்கத்திலிருந்து விடுபட ஒரே ஒரு வழி இருப்பதாகத்தான் அவனுக்குப் பட்டது. உலையில் பழுத்துக் காயும் இரும்புத் துண்டங்களை எடுத்துத் தன் நெஞ்சோடு அணைத்துக் கொள்வதுதான் அந்த வழி என்று எண்ணினான் ஆனால் அவன் மூளை எப்படிப் பற்றி எரிந்து கொண்டிருந்தது! கொல்லன் உலையே மண்டைக்குள் புகுந்து விட்டாற்போல! அவன் இரு கைகளாலும் தன் தலையைப் பிடித்துக்கொண்டான். அவன் உள்ளங்கைகள் அந்தச் சூட்டில் வெந்து கருகின.

அந்த நிலையில் பித்தம் தலைக்கு ஏறி நாம் ஒன்றுக்கொன்று செய்து விடுவோமோ என்றே அவன் எண்ணினான். எங்கேயாவது கண்காணாத இடத்துக்கு ஓடிவிட்டால், எல்லாவற்றையும் மறந்து-துறந்து சென்று விட்டால் நல்லது என்று தோன்றியது. அவன் மெதுவாகச் சாளரத்தைத் திறந்தான். வெளியே குதித்து விட்டான். வெகுநேரம் வரை குருட்டாம் போக்கில் வயல் வெளிகளில் அவன் சுற்றிக் கொண்டிருந்தான். மூன்றாவது யாமமும் கழிந்து மாலை சூழ்ந்தது. தொடுவானத்துக்கு அப்பால் யாரோ ஆதவனைக் கொன்றுவிட்டார்கள். வானம் முழுவதும் ஏதும் அறியாத மக்களின் குருதியினால் செக்கரோடிக் காட்சி அளித்தது. அது 'கமலை'ச் சால்கள் இறைக்கும் நீரிலும் வயலுக்குப் பாயும்

நீர் ஓடையிலும் கலந்து காட்சி தந்தது! இனி இரத்தத்துளிகள் தோய்ந்த கரும்பை எவன் சுவைப்பான்? இரத்தம் தோய்ந்த வயல்களில் எத்தகைய கோதுமை வளருமோ, எப்படிப் பலன் தருமோ?

அவன் கைகளினால் செய்த கத்திகளும் ஈட்டிகளும் அல்லவா நாற்புறமும் இரத்த நீரைப் பாய்ச்சின? அவன் கைகளினால் செய்யப்பட்ட அறுப்பு அரிவாளும் வெட்டு அரிவாளும் தானே எலும்பையும் தோலையும் பயிராக்கிச் சாகுபடியும் அறுவடையும் புரிந்தன? இன்னும் இரண்டு மூன்று கிராமங்கள் தான் எஞ்சியுள்ளன. அவற்றுக்கும் அவன் கத்திகளும் ஈட்டிகளும் செய்து கொடுத்துவிட்டான். நாளை இரவுக்குள் அந்தக் கிராமங்களும் ஒழித்துக் கட்டப்படும்.

அவன் பாவி, பெரும் பாவி! பஷீராவின் தாயார் சொன்னது மெய்தான். குறைந்த பட்சம் புதிதாகத் தயாரித்த கோடரிகளையும் ஈட்டிகளையும் பஷீராவுக்கோ அவன் தோழர்களுக்கோ என்ன இன்னல்கள் நேர்ந்தாலும் கொடுக்கக் கூடாது. அப்படிச் செய்வதனால் அவன் செய்த பாவங்களுக்குப் பிராயச் சித்தம் தேடியதாக ஆகாது. இருந்தாலும் இப்பொழுது அவன் இதைத் தவிர வேறு என்ன செய்யமுடியும்?

அவன் படுவேகமாகக் கிராமத்தை நோக்கி ஓடினான், பஷீராவின் ஆட்கள் வருவதற்கு முன்னால் அவன் வீடுபோய்ச் சேர்ந்து விடவேண்டும் என்று எண்ணினான். தான் செய்து வைத்திருந்த கத்திகளையும் ஈட்டிகளையும் ஏதாவது குளம் — குட்டையிலோ கிணற்றிலோ போட்டுவிடவேண்டும். அவர்களுக்கு இவை இருக்கும் இடம் தெரியாமல் செய்து விடவேண்டும் என்பதே அவனுடைய அந்த முனைப்புக்குக் காரணம்.

அவன் கிராமத்தை நெருங்கியபொழுது இருட்டிவிட்டது. இளம் நிலவு மண் நிறத்தில் தெருவிலும் வீட்டுக் கூரைகளிலும் மங்கலான ஒளி பரப்பிக் கொண்டிருந்தது. முன் இரவு பெய்த மழையினால் தெருவெங்கிலும் சகதியாக இருந்தது. அவன் கால்கள் அடிக்கடி சேற்றில் புதைந்தன. ஆயினும் அவன் நடையில் ஒரு வேகம் இருந்தது. திடீரென்று அவன் மெய்சிலிர்த்து நின்றான். சற்றுத் தொலைவில் அவனுக்குப் பல குரல்கள் கேட்டன. அந்தக் குரல்கள் அவன் வீட்டிலிருந்துதான் வந்து கொண்டிருந்தன. அப்படியானால் அவர்கள் வந்து விட்டார்களா? அவன்

திரும்பிய நேரம் தவருனதோ? பஷீராவின் அட்டகாசச் சிரிப்பு அவன் செவிகளில் தெளிவாக விழுந்தது. வீட்டு வாசலில் ஏதோ பெரிய பொருளில் அவன் இடறிக்கொண்டான். அந்த வேகத்தில் குப்புற விழுந்து விட்டான். அவன் எழுந்திருக்க முயன்ருன். ஆனுல் எழுந்திருக்க முடியவில்லை. ஏதோ பனி போலச் சில்லிட்ட பொருள் அவன் கால்களைப் பற்றிக்கொண்டது. அவன் தன் கால்களை விடுவித்துக்கொள்ள முயன்ருன். ஆனுல் பிடிப்பு இன்னும் இறுகியது. அவன் பதறிவிட்டான். ஓர் ஐயப்பாடும் அச்ச உணர்வும் அவன் மனத்தில் புகுந்து கொண்டன. அவன் நெற்றியிலிருந்து வியர்வை பெருகிக் குளிர்ந்து வழியலாயிற்று. உடலின் முழு வலுவையும் காட்டி அவன்பின் திரும்பிப் பார்த்தான். நிலவின் ஒளியில் சில வெள்ளி மயிர்க் கொத்துகள் அசைவது தெரிந்தது. கிழவியின் சுருக்கம் வாய்ந்த நெற்றியிலே கசாப்புக் கத்தி கொண்டு தாக்கிய நீண்ட பெரும் பச்சைக்காயம் தெரிந்தது. வெளியே தெறித்து நிலைக் குத்தலிட்டு நின்ற விழிகள் ஏதேதோ சாபங்கள் இடுவதுபோலத் தோன்றின. தீனு தன் கால்களைக் குனிந்து பார்த்தான். கிழவியின் கைகளில் இருந்த சங்கிலி அவன் கால்களைச் சுற்றிக் கட்டுப் போட்டுப் பிணைந்திருந்தது.

அவன் வாயிலிருந்து ஒரு வீறிட்ட ஒலி எழுந்தது. அடுத்த கணம் அவன் மூர்ச்சையற்றுச் சாய்ந்து விட்டான். அன்று இரவு அவனுக்குப் பயங்கரமான ஜுரம் வந்து விட்டது. இரவு முழுவதும் அவன் உடல் கட்டிலில் கிடைகொள்ளவே இல்லை ஒரு முழு உயரத்துக்கு உடலைத் தூக்கிப்போட்டது. கிராமத்தின் அமைதி சூழ்ந்த மௌனத்தைக் கீறிக்கொண்டு அவன் புலம்பிய புலம்பல் இரவு முழுவதும் ஒலித்தது: "என்னைக் கொல்லாதே, என் இடுப்பைச சுற்றியிருக்கும் இந்தச் சங்கிலியை அவிழ்த்து விடு. ஐயோ! என் மகள்! என் மகளை ஒன்றும் சொல்லாதே! என் பிரீதோவை ஒன்றும் செய்யாதே! ஐயையோ! இந்தச் சங்கிலிகள்! அல்லாவின்மீது ஆணை! ஆண்டவன்மீது ஆணை! என்னைக் கொல்லாதே, என்னைக் கத்தியால் வெட்டாதே!"

# விதியின் நாலிழை

கிராமம் முழுவதும் சக்தி வாய்ந்த சாமியாரை எதிர்நோக்கிக் கொண்டிருந்தது. எப்பொழுது அவர்கள் கிராமத்தில் அவருடைய பாத தூளிகள் படுமோ, கால் நடைகளுக்கு மந்திரித்துத் தருவாரோ என்று ஏங்கிக் கொண்டிருந்தது. தோட்டி தேஜுவுக்குத் தனது விதியின் தலைக் கயிறு சாமியாரின் கையில் இருப்பதாகத்தான் பட்டது. வயல் வரப்பில் பயிராகியிருந்த மிளகாய்ச் செடிகள் பூ வைத்திருந்தன. சிலர் கரும்புத் தோட்டங்களில் கொத்திக் கொண்டிருந்தனர். சிலர் நாற்றங்கால்களில் முளைத்திருந்த புல் பூண்டுகளைப் பிடுங்கிக் கொண்டிருந்தனர். ஆனால் தேஜுவிடம், அவன் கிடாரியை விட்டால் வேறு எதுவுமே கிடையாது.

அன்றாடம் கிராமத்தில் சில கால்நடைகளாவது காதுகளைத் தொங்கப்போட்டு வந்தன. அவை பயிர் பச்சைகளைக் கடிப்பதை நிறுத்திவிடும். அவற்றின் கண்களில் பீளை சாய்க்கும். பிறகு சிறிது நேரம் கழித்து வாயைப் பிளக்கும். வாயிலிருந்து நுரை வழியும். மூச்சு விடமுடியாமல் சிரமப்படும், தொண்டையைப் பிடித்து விட்டாற்போலத் திணறும். மக்கள் என்ன வெல்லாமோ செய்து பார்த்தார்கள். ஆனால் எதுவுமே பலன் அளிக்கவில்லை. கிராமத்துக் கால் நடைகளில் எத்தனையோ இறந்து போயின.

இதில் இன்னுமோர் அநியாயம் என்ன வென்றால், பால் தரும் உயர்ந்த சாதி மிருகங்களைத்தான் இந்த நோய் சட்டென்று பிடித்தது. மாட்டு மந்தையில் எந்த மாடு மிக நன்றாக இருக்குமோ, அதைத்தான் இந்த ஏழரை நாட்டான் நோய் பற்றியது.

"சாமியார்—கீமியாரை யெல்லாம் விடு, அப்பா! இந்தத் தடவை வட்டார வளர்ச்சித் துறைக்கு மனு எழுதிப்போட்டு, எல்லா மாடுகளுக்கும் ஊசிபோட்டுப் பார்ப்போம்!" என்றார்கள் கிராமத்தைச் சேர்ந்த சிலர்.

பெரியவர்கள் இந்த யோசனையைச் சிறிதும் கேட்கவில்லை. "ஊசி—கீசியெல்லாம் பிரயோசனப்படாது!" என்று சொல்லி விட்டார்கள்.

"சர்க்கார் காரியம் என்றாலே எப்பொழுதும் மசமசப்புத்தான். இது யாருக்கும் தெரியாததல்ல."

"முதலில் கிராமத்தில் உள்ளவர்களிடமெல்லாம் கையெழுத்து வாங்கணும். அப்புறம் மனு அனுப்பணும்."

"அந்த மனுக்கள் ஆபீஸை எத்தனை நாட்கள் சுற்றுமோ தெரியாது. அப்புறம் அப்படியே உத்தரவு வந்தாலும் கால்நடை டாக்டர் 'ஊசி மருந்து கைவசம் இல்லை' ஒரு தலையசைப்பில் கூறி விடுவார், போன ஆண்டைப்போல!"

கடைசியில் யாரெல்லாம் ஊசிபோடக் குரல் கொடுத்தார்களோ, அவர்களே சாமியாரைச் சரண் அடையச் சம்மதித்து விட்டார்கள். அவன் மந்திரம்—மாயம் தெரிந்த ஆற்றல் மிகுந்த சாமியார் என்பது அவர்கள் முடிவு. இப்பொழுது அவனுக்கு வயது ஆகிவிட்டது. ஆனால் நல்ல வயசு காலத்திலே அவன் இருப்பிடம் தேடி வந்த நல்ல வயசுப் பெண் ஒருத்திக்கும் அவனுக்கும் முடி போட்டுக் கெட்ட பெயர் சூட்டி விட்டார்கள். இந்த அவப்பெயருக்கு ஆளாகக்கூடாது என்பதற்காக அவன் தன் இந்திரியத்தையே அறுத்துக் கொண்டு விட்டதாகப் பேசிக் கொண்டார்கள்.

இன்று ஊர் நாட்டாண்மைக்காரர்கள் அந்தச் சாமியாரை அழைத்து வருவதற்காகத்தான் போயிருந்தார்கள்.

முன்பெல்லாம் மக்கள் தங்கள் கால்நடைகளைக் கட்டையிலே போக என்று வாய்க்கு வாய் வெகு இயல்பாகத் திட்டுவது உண்டு. ஆனால் சில நாட்களாகத் தவறிக்கூட இதுபோன்ற சொற்களைக் கூறுவதில்லை.

தோட்டி தேஜூ தன் கிடாரியை முன்பெல்லாம் கூடத் தவறான சொல்லைக் கூறித் திட்டியதில்லை. அவன் மிகவும் கவனித்துக் கவனித்துக் கன்றைக் கிடாரியாக்கி யிருந்தான். அவன் ரொட்டி தின்ன உட்கார்ந்தால், கிடாரி அவன் உட்கார்ந்திருக்கும் திண்ணைக் கருகில் வந்துவிடும். அவன் சிறு சிறு கவளங்களாக அதற்கும் ஊட்டிக் குழந்தையைப் போல அதை வளர்த்தான். கிடாரி எங்கிருந்தாலும் அவனைப் பார்த்துவிட்டால் நீண்ட குரல் எழுப்பி அவனுக்குத் தன் இருக்கையை உணர்த்தும். அதோடு சேதே ஷா கடனைத் திருப்பிப் பெறத் தேஜூவை நெருக்குகிறான் என்பதும் அதற்கு உள்ளூறத் தெரியுமோ, என்னவோ? அதனால் மூன்றரை வயது முடிவதற்குள்ளாகவே அது ஒரு கடாக் கன்று ஈன்றுவிட்டது.

கடன் தீரத் தன்னிடம் எருமைக் கிடாரியை ஓட்டிவிடுமாறு சேதே ஷா தேஜூவை நெருக்கினான். பதிலுக்கு நோட்டைக்

'காது கிள்ளி'க் கொடுத்து விடுவதாகவும் ஆசை காட்டினுன். ஆனல் தேஜூ கிடாரியைத் தொட்டுப் பார்க்கக்கூட அவனே அநுமதிக்கவில்லே. ஆனுல் கிடாரி கன்று போட்டதும் முதல் காரியமாக ஜௌலேக் கோனரிடம் ஒரு நூறு ரூபாய் முன் பண மாகப் பெற்றுச் சேதேயின் கடனில் முதல் தவணையாகத் திருப் பிக் கொடுத்துவிட்டான். தன் கிடாரி முதல் ஈற்றில் தரும் பாலேக் கொண்டே கடன் முழுவதையும் அடைத்துவிட முடியும் என்று அவனுக்கு நம்பிக்கை இருந்தது.

ஆனல் இப்பொழுதெல்லாம் கிராமத்தில கன்றுகள் இறந்து போவதும், கன்று இல்லாத எருமைகள் பால் தராமல் போவதும், எருமைகளே நோவாய்ப் படுவதும்கூட சர்வ சகஜமாகிவிட்டது. அதைக் காணத் தேஜூவுக்கு மிகவும் அச்சமாகிவிட்டது. ஆனல் அவனுக்கு அந்தக் கீர்த்திச் சாமியார்மீது பெருத்த நம்பிக்கை இருந்தது.

சாமியாரைக் கூப்பிடச் சென்றிருந்தவர்கள் நிராசையாகத் திரும்பியிருந்தார்கள். ஒரு சாமியார் அவர்களோடு வந்திருந் தான். ஆனல் அவன் அந்தக் கீர்த்திச் சாமியார் அல்ல; அவரு டைய சீடர்களில் பெரியவன். கீர்த்திச் சாமியாரை அவர்களுக்கு முனபாக, வேறு ஏதோ ஒரு கிராமத்திலிருந்து வந்து தங்க ளோடு அழைத்துப்போய் விட்டிருந்தார்கள்.

கிராமம் முழுவதிலும் தம்பட்டம் அடித்துப் பறை அறிவிக்கப் பட்டது: "சகோதரர்களே! கால் நடைகளுக்குச் சிகிச்சை செய்யச் சாமியார் வந்து விட்டார். பஞ்சாயத்தாரின் உத்தரவு என்ன வென்ருல், இரவு பத்து மணி முதல் விடியும் வரை, கிராமத்தில் உள்ள கால் நடைகளுக்கு மந்திரம் போட்டு முடியும் வரை, விளக்கில் யாரும் திரிபொருத்தக்கூடாது. அடுப்புக் கூடப் பற்ற வைக்கக் கூடாது. கிணற்றிலிருந்து தண்ணீர் இழுக்கவோ, குழாய் அடித்துத் தண்ணீர் சேந்தவோ கூடாது. எருமை—பசுக் களைக் கறக்கக்கூடாது. கிராமத்திலிருந்து வெளியே போகக் கூடாது. வெளியிலிருந்து கிராமத்துக்குள்ளே வரவும் கூடாது. இந்தச் சட்ட திட்ட விதிகளே மீறினல், அவன் கிராமம் முழுவதற் கும் கடன் பட்டவனகக் கருதப்படுவான். முகத்தில் கரியைப் பூசி அவனேக் கழுதையில் ஏற்றி வைக்கப்படும்; அதோடு ஐம்பது ரூபாய் அபராதமும் வசூலிக்கப்படும்."

சாமியார் சேதே ஷாவின் கடையிலிருந்து அரை கஜம் சிவப்புச்

சாயத்துணி, தேங்காய், வெற்றிலை, பாக்குத் தட்டுகளை வாங்கிக் கொண்டான். ஷாவே இரண்டு சேர் நாட்டு நெய்க்கும் ஏற்பாடு செய்தான். எல்லாப் பொருள்களும் ஏறக்குறைய இருபத்தைந்து ரூபாய் பெறும். அவற்றை மலர்ந்த முகத்தோடு சேதே ஷா கடனாக அளித்தான். பொழுது விடிவதற்குள் சாமியாருக் கெதிரே கோதுமை அம்பாரமாகக் குவிந்து விடும்.

சாமியார் ஒரு வெற்றுத் தோண்டி தருவித்தான். அதன் அடியில் ஒரு துவாரம் செய்வித்தான். பிறகு 'மடக்கு' ஒன்றில் மந்திரம் ஓதி நீரும் பாலும் ஊற்றினான். நான்கைந்து இளைஞர்கள் மடக்கையும் தோண்டியையும் எடுப்பதற்குச் சாமியாரைச் சுற்றிக் கூடினர். சாமியார் புனித நீரையும் பாலையும் மடக்கிலிருந்து எடுத்துத் தோண்டியில் ஊற்றினான். அந்தத் தோண்டியைக் கிராமத்துக்கு வெளியே எடுத்துச் சென்று ஒரு முறை சுற்றி வரச் செய்தான். அதன் துவாரத்தின் வழியாக விழுந்த நீரைக்கொண்டு கோடிழுத்தாற் போல ஒரு வட்டமிடச் சொன்னான்.

அந்தக் கோட்டுக்கு வெளியே யாரும் போகக்கூடாது. உள்ளேயும் வரக்கூடாது என்று உத்தரவு போட்டான்.

அந்த எல்லைக்குள் இருக்கும் அத்தனை பேய் பிசாசுகளையும் மந்திரம் போட்டுப் பொழுது விடிவதற்குள் பொசுக்கிவிடுவதாக இருந்தான் அந்தச் சாமியார். எல்லைக்கு வெளியே இருக்கும் எந்தப் பேய் பிசாசும் இந்தக் கோட்டைத் தாண்டி வர முடியாது. ஆனால் யாராவது மனிதன் இந்தக் கோட்டைத் தாண்டினால், அவனோடு பேய் பிசாசுகள் உள்ளே வந்து விடக்கூடும் என்று ஓர் ஐயம் இருந்தது அதனால் அன்று நள்ளிரவிலோ, விடியற் காலை நான்கு மணிக்கோ எவரெவருடைய வயல்களுக்குத் தண்ணீர் விட வேண்டிய முறையோ, அவர்கள் எல்லோரும் வெகு முன்பாகவே கிராமத்தை விட்டு வெளியேறி விட்டார்கள்.

சாமியார் ஹோமம் வளர்த்தான். மந்திரம் ஓதியவாறே நாட்டு நெய்யையும் மற்ற ஹோமப் பொருள்களையும் தீயில் வார்த்தான். கிராமத்து குருத்வாராவில் உள்ள சகோதரர்களும், கோயில் பூஜாரிகளும் பக்கத்தில் உட்கார்ந்து பாராயணம் செய்து கொண்டிருந்தார்கள். சீக்கியத் தோழர்களோ நூற்றொரு முறை ஜபுஜியை ஜபித்தாகவேண்டும்.

நெறி முறை அறிந்த மக்கள் ஐந்து குழுவாகப் பிரிக்கப் பட்டனர். ஒவ்வொரு குழுவும் ஒரு பாத்திரத்தை எடுத்துக் கொண்

டது. சாமியார் ஹோம குண்டத்திலிருந்து கொஞ்சம் தணலை எடுத்து அந்தப் பாத்திரங்களில் போட்டான். மேலே சாம்பிராணிப் பொடியைத் தூவினன். கம்மென்று நறுமணம் கமழும் அப்பாத்திரங்களைக் கையில் ஏந்தி அந்தக் குழுக்கள் கிராமத்தில் பல இடங்களுக்கும் பிரிந்து சென்றன.

எல்லோரும் கதவுகளை முன்பே திறந்து வைத்திருந்தனர். தப்பித் தவறி எங்கேயாவது கதவு மூடியிருந்தால், மக்களே அதைத் திறந்துகொண்டனர். மாட்டுத் தொழுவங்களிலும் தொட்டிகளிலும் சாம்பிராணிப் புகையைக் காட்டிவிட்டு மேலே சென்றனர். கூடவே, யாராவது பஞ்சாயத்தின் ஆணையை மீறியுள்ளார்களா இல்லையா என்பதையும் கவனித்துக்கொண்டே சென்றனர்.

எல்லோரும் சக்கிலி பஷீர் மீது ஒரு கண் வைத்திருக்கவேண்டும் என்று கூறப்பட்டிருந்தது. கால் நடைகள் மரிப்பதால் பயன் அடைபவன் அவன். சாம்பிராணிப் புகை போடும் ஆட்கள் சக்கிலியின் வீட்டுக்குப் போனபொழுது வாசல் கொல்லை இரு கதவுகளும் மல்லாந்து திறந்திருப்பதையும் பஷீர் விழித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பதையும் கண்டனர். "சகோதரர்களே! நீங்கள் எப்பொழுது வேண்டுமானாலும் இங்கு வந்து உங்கள் ஐயம் தீர்த்துக் கொள்ளலாம். நான் கிராமத்துக்குத் துரோகம் செய்ய மாட்டேன்!" என்றான் அவன்.

ஹோமமும் பாராயணமும் இரவு முழுவதும் தொடர்ந்து நடைபெற்றன. இந்தக் குழுக்களும் இரவு முழுவதும் வீடு வீடாகச் சென்று ஊர் சுற்றி வலம் வந்தன. பொழுது புலரும் அமுத வேளைக்குள் எல்லாக் காரியங்களும் செவ்வனே நிறைவேறின.

பலபலவென்று விடியும் நேரத்தில் சாமியார் நிவேதனம் செய்து முடித்தான். கிராமத்தில் உள்ள ஆடு மாடுகளை அவிழ்த்து விடும் நேரமும் வந்தது.

சாமியாரின் எதிரில் பால் கலந்த நீரோடு பெரும் பாத்திரம் ஒன்று வைத்திருந்தது. எந்தத் திருப்பத்தின் வழியாகக் கிராமத்து ஆடு மாடுகள் எல்லாம் இங்கு வந்து சேரவேண்டுமோ, அங்கே தெருவின் இரு புறங்களிலும் ஏறக்குறைய இருபது தட்டிகள் கயிற்றினால் கட்டப்பட்டன.

ஒவ்வொருவருக்கும் அவசரம், முதலில் தங்கள் கால் நடைக்கு மந்திர நீர் தெளித்து விட்டால் விடைபெறலாம் என்று! பல்வகை

யான எருமைகள் அந்தப் பக்கம் வந்தன. எல்லாவற்றுக்கும் முன்னால் சாதி எருமைகள், அப்புறம் பூனைகள், குதிரைகள், வைக்கோல்-புல்-தழைகள், தும்புக்கயிறுகள் என்று எல்லாவற்றையுமே அங்கே கொண்டுவந்து விட்டார்கள். நாற்புறமும் ஒரே கலகலப்பு, ஆரவாரம்! ஒருவனுக்கு எருமைமாடு காணமற் போயிற்று; இன்னொருவனுக்குக் கன்றுக் குட்டி காணமற் போயிற்று. எங்கு பார்த்தாலும் ஒரே புழுதிமயம்! ஒவ்வொரு குடும்பத்தைச் சேர்ந்தவனும் தன்னுடைய மத்து, லோட்டாவுடன் மாடு ஒன்றுக்குக் கால்படி கோதுமை என்று கணக்கு வைத்துக் கொண்டு முன் தலைப்பில் முடிந்து எடுத்து வந்திருந்தான்.

கால் நடைகள் சாமியாருக்கு அருகில் வந்ததும், சாமியாரும் அவருடைய வேலைக்குக் கூடமாட ஒத்தாசையாக இருந்த பண்டிதர்களும் பெரும் பாத்திரத்தில் தர்ப்பைப் புல்லை நனைத்து ஆடு மாடுகள் மீதும் மத்துகள் மீதும் தெளித்தனர். ஒருவன் எல்லோர்மீதும் கொஞ்சம் புனித நீரைத் தெளித்து அருந்த ஓர் உத்தரணி நீரும் கொடுத்தான். அப்புனித நீரைப் பெற்றுக் கொண்டவர்கள், தங்கள் மடியில் கட்டி வந்திருந்த கோதுமையை ஒரு குவியலில் போட்டு விட்டு அகன்றனர்.

அந்தக் கோதுமைக் குவியல் ஒரு சாதாரணக் குடியானவன் பயிர் செய்து அறுவடை புரிந்து சேமிக்கும் அளவுக்கு இருந்தது.

கிராமத்துக் கால் நடைகள் அவ்வளவின்மீதும் மந்திர நீரைத் தெளித்து முடிந்த பின்னரே ஒவ்வொரு வீட்டிலும் அடுப்புப் புகைந்தது. தயிரில் மத்துகள் கடையப் போடப்பட்டன. கிணறுகளில் இராட்டினங்கள் சுழன்றன. அதற்கு முன்பு சாமியார் உட்கார்ந்திருந்த இடத்தில் திருவிழாக் கூட்டம் கூடியிருந்தது. கிராமத்தின் மற்ற பகுதிகள் எல்லாம் ஜனச் சந்தடியற்றுக் கிடந்தன, அரக்கன் ஒருவன் புகுந்து அசுரவேட்டையாடி விட்டாற்போல.

சாமியாருக்கு அருகில் ஏறக்குறைய முப்பது மணங்கு கோதுமை சேர்ந்துவிட்டது. சேதே ஷாவுக்கு அவன் கொடுத்த பொருள்களுக்கும் நெய்க்கும் பதிலாக இரண்டு மணங்கு கோதுமை கொடுக்கப்பட்டது. மற்ற கோதுமையை மூட்டைகளாகக் கட்டி இரண்டு வண்டிகளில் ஏற்றிச் சாமியார் தன் முகாமுக்கு எடுத்துச் சென்றான்.

ஒரு குழு தோட்டி ஹர்நாமாவைப் பிடித்து இழுத்து வந்தது.

அவன் பஞ்சாயத்தாரின் ஆணையை மீறி விட்டதாகக் குற்றச் சாட்டு. அவன் அத்தனை கால் நடைகளும் போவதற்கு முன்னால் தலை முழுகிவிட்டானும்.

"இல்லை. இது பச்சைப் பொய். நான் என் மாடுகளுக்கு நீர் தெளித்து முடிந்தபின் தான் குளித்தேன். வேண்டுமானால் சாமி யாரையே கேட்டுப் பாருங்கள்!" என்றான் அவன்.

"சாமியார் போன பிறகு இவன் சாக்குப்போக்குச் சொல் கிறான்!"

"சாமியாருக்கு என்ன தெரியும்? அவருக்கெதிரே ஆயிரக் கணக்கான மாடுகள் சென்றன. அதைப் போலவே பல மனிதர் களும் சென்றார்கள். அவர் யார் யாரைத்தான் நினைவு வைத்துக் கொள்ள முடியும்?"

"நீ உன் ஆடு மாடுகளுக்கு நீர் தெளித்தபின் தான் குளித்தாய் என்பதை ஒப்புக்கொள்ளுகிறோம். அப்பொழுது கிராமத்தில் உள்ள அத்தனை கால் நடைகளுக்கும் மந்திர நீர் தெளித்தாகி விட்டதா, சொல்?"

ஹர்நாமாவுக்கு இந்தக் கேள்விக்குச் சரியான விடை விளங்க வில்லை.

ஒரு கழுதை கொண்டு வரப்பட்டது.

ஓர் ஆள் ஓடிச் சென்று தன் வீட்டிலிருந்து இரும்பு வாணலி யின் அடிக்கரியை எடுத்து வந்தான்.

அவர்கள் ஹர்நாமாத் தோட்டியைக் கழுதையில் உட்கார வைத்து இரண்டொரு சுற்றுத்தான் சுற்றியிருப்பார்கள், அதற் குள் ஒரு கும்பல் ஓடோடி வந்தது.

"கழுதையை இங்கேயே பிடித்துக் கொண்டிருங்கள். மிகப் பெரிய வேட்டை ஒன்று வகையாகச் சிக்கிக்கொண்டிருக்கிறது!"

"ராம் சுந்தர் இரவில் விளக்கேற்றியிருக்கிறான்."

"விளக்கென்ன, மின்சார பல்பே ஏற்றியிருக்கிறான்!"

ராம் சுந்தர் அந்த ஊர் மாப்பிள்ளை. அவன் அங்கே பலசரக்குக் கடை ஒன்று நடத்தி வந்தான். மிகவும் நல்லவன், படித்தவன். அவன் காங்கிரஸின் கருத்துக்களைக் கொண்டிருந்தான். ஆத லால் சில குடியானவர்கள் அவனை அரசாங்கத்தின் ஆதரவாள னாக எண்ணினார்கள். எனவே, அவனைத் தங்களுக்கு எதிரியாக பாவித்தனர். தூய வெண்மையான கதராடை உடுத்தி எங்கேயோ வெளியே போய்க் கொண்டிருந்த அவனை பந்தா என்பவனின் கும்பல் பிடித்து இழுத்து வந்துவிட்டது.

ராம் சுந்தர் வியர்வையினால் சொட்டச் சொட்ட நனைந்து விட்டான். எல்லோருக்கும் எதிரில் கைகூப்பி நின்று, ''என்னைக் கழுதையின் மீது மட்டும் ஏற்றாதீர்கள். வேறு என்ன தண்டனை வேண்டுமானாலும் கொடுங்கள்!'' என்றான். பிறகு நடுங்கும் கரங்களுடன் பத்துப் பத்து ரூபாய் நோட்டுகளாக ஐந்தை எண்ணி வைத்தான்.

''பார் ஐயா இவரை! கேள் ஐயா இவர் சொல்கிறதை! இந்த மகாப் பெரிய மனிதனைக் கழுதையின்மேல் ஏற்றக் கூடாதாம். இவருக்கு என்ன கொம்பா முளைத்திருக்கிறது?''

அக்கம் பக்கத்தில் ஒரே கூட்டம் கூட்டிவிட்டது. கால் நடைகள் செத்தவர்களுக்கு எல்லைமீறிய கோபம் வந்து விட்டது.

''என்ன கொடுமை! கிராமத்தின் நடைமுறை ஒழுங்கே தவறி விட்டது!''

''மட்டு—மரியாதை யெல்லாம் மலையேறிவிட்டது! அதனால் தான் இவ்வளவு நோயும் நொடியும் பெருகுகின்றன!''

''இரந்து உண்கின்ற பிராமணர்களும் நாய்ப் பிழைப்புப் பிழைக்கும் இந்தத் தோட்டிகளும் என்ன அக்கிரமம் செய்திருக்கிறார்கள்! ஆயிரம் ஆயிரம் ரூபாய் போட்டு வாங்கிய எருமைகள் மடிந்துகொண்டிருக்கின்றன. என்ன சொல்லியும் இவர்கள் காதில் வாங்கிக் கொள்ளவில்லையே! திரும்பத் திரும்பத் தங்கள் இஷ்டத்துக்கு அல்லவா செய்து கொண்டே போகிறார்கள்!''

சிறு பிள்ளைகள் கூட்டம் சில சமயம் கழுதையை உசுப்பிவிடும். சில சமயம் ராமசுந்தரை வம்புக்கு இழுக்கும். கூட்டத்தில் உள்ள சிலர் காரணமின்றி அவனை இரண்டு அடி வைப்பார்கள்.

இதைக் கண்ணுற்ற இரு பெரியவர்கள் குறுக்கிட்டார்கள்: ''பசங்களா! இவர் நம் ஊர் மாப்பிள்ளை. மன்னித்து விடுங்கள்!'' என்றார்கள்.

''பாருங்கள் ஐயா! ஊர் மாப்பிள்ளையாம். விட்டுவிடவேண்டுமாம். பெண்ணைக் கொடுத்தவர்களுக்கு அல்லவா இவர் மாப்பிள்ளை! நமக்கு என்ன ஐயா உறவு?''

''அப்படிச் சொல்லக்கூடாது. ஊருக்கு ஓர் உறவு உண்டு, ஐயா!''

''ஐம்பதுக்கு அறுபதாக ரூபாயைக் கறந்து வாங்கு இவரிடம். இவரைக் கழுதையில் ஏற்றவேண்டாம்.''

"ஏன், ஹர்நாமா மட்டும் மனிதன் இல்லையா? அவனை நாம் கழுதை மேல் ஏற்றவில்லையா?"

"நாம் வெள்ளையுடுப்புக்குத் தனி மரியாதை தரமாட்டோம். ஆண்டவனுக்கு எதிரே அத்தனை பேரும் சமம்தான்!" என்றான் ஒரு காமரேட்; தோழன். பந்தா ஜாட் முதலில் தோழர்கள் கோஷ்டியில் இருந்தவன். ஒருமுறை குடியானவர்கள் கலகத்தில் சிறை சென்று வந்தவன். அப்புறம் பாகிஸ்தான் பிரிந்த பொழுது கிராமத்து முஸல்மான்களின் பொருள்களைக் கொள்ளையடித்ததனால், தோழர்களின் குழுவிலிருந்து வெளியேறி வந்தவன். அவன் இப்பொழுது எல்லையில் கறுப்புச் சந்தை செய்வதில் முழு மூச்சுடன் இறங்கியிருந்தான். இருந்தாலும் கிராமத்து மக்கள் அவனைக் 'காமரேட்' என்று தான் அழைத்து வந்தனர்.

"சரி, அப்படியானால் ஒன்று செய்வோம். ஹர்நாமா தோட்டியை ஒரு வார்த்தை கேட்போம். அவன் மன்னித்து விட்டால், நாமும் போனால் போகிறது என்று இவனை விட்டுவிடுவோம்!"

ஹர்நாமா தோட்டியை அழைத்து வந்தார்கள். அவன் முகத்தில் அப்பியிருந்த சட்டிக் கரி முழுவதும் போனபாடில்லை. மக்கள் அவன் கரி முகத்தைக் கண்டு சிரிக்கலாயினர். ஹர்நாமா கோபம் கொதிக்கக் கூறினான்; "சகோதரர்களே! என் மானம் இவன் மானத்தைக் காட்டிலும் தாழ்ந்தது என்றால், என்னைக் கேட்கவே வேண்டாம். இவனை மன்னித்து விடுங்கள்! ஆனால் என் மரியாதையும் இவன் மரியாதையும் ஒன்றுதான், எவ்விதத்திலும் தாழ்ந்ததில்லை என்று தீர்மானித்தால், எனக்கு என்ன தண்டனை கொடுத்தீர்களோ, அதே தண்டனையைத் தயங்காமல் இவனுக்கும் அளியுங்கள்!"

மக்கள் ராம் சுந்தர்மீது பாய்ந்தார்கள். சிறுவர்களும் சிறுமிகளும் கைதட்டிக் கொம்மாளம் போட்டார்கள். கழுதையின் முதுகிலே கம்பளி மடித்துச் சேணம் கட்டப்பட்டது.

'என்ன இருந்தாலும் ராம் சுந்தர் நம் ஊர் மாப்பிள்ளை. அவன் முகத்தில் கரி பூசக்கூடாது' என்று இரு பெரியவர்களும் இளைஞர்களிடம் கெஞ்சிக் கூத்தாடி அரும்பாடுபட்டு எப்படியோ விலக்குப் பெற்றார்கள்.

காமரேடும் அவனுடைய தோழர்களும் ராம் சுந்தரைத் தூக்கிக் கழுதைமீது உட்கார வைத்தார்கள்.

"ஐயா, கடைக்காரரே! வியாபாரம் எல்லாம் எப்படி?"

"ஏன் ஐயா! செய்தித்தாளில் ஏதாவது புதிகாகச் செய்தி உண்டா? உன் அரசாங்கத்தைப் பற்றி என்னவோ பிரமாத மாகப் பீற்றிக் கொண்டாயே?"

இப்படி யெல்லாம் நொடிப்புப் பேசி மானத்தை வாங்கிஞர்கள்.

நடுப்பகல் நேரத்தில் இந்தக் கூச்சலும் கொம்மாளமும் கொஞ்சம் அடங்கியது. அந்த நேரம் பார்த்து, கிராமத்தில் இரண்டு எருமைகள் இறந்து விட்டன என்னும் செய்தி வந்தது.

ஆசனத்தில் அமர்ந்து மக்கள் ஆலோசனை செய்யலாஞர்கள்.

"இப்படி மக்கள் நெறிமுறையை மீறிஞல், எப்படி நன்மை ஏற்படும்? நோய் நொடிதான் இறங்கும்?"

"நான் முன்னுடியே சொன்னேன், இந்தச் சாமியார்–கீமியாரை யெல்லாம் விடுங்கள்! டாக்டரை அழைத்து ஊசி போடுங்கள் என்று! கேட்டால் தானே?"

"வந்தவன் போலிச்சாமியார், ஐயா! இப்படிப்பட்டவர்கள் எல்லாம் நல்ல சாமியார்கள் பெயரைக் கெடுக்கிறதற்காகவே வந்திருக்கிருன்கள். கீர்த்திச் சாமியாரை 'பீட்' அடிக்க ஆளே கிடையாது, என்னைக் கேட்டால்!"

"நேற்று இரவு வந்திருந்தானே, ஒரு சாமியார், அவன் நடுவிலே நடுவிலே தூங்கி வழிந்தாஞம், ஐயா! என் பக்கத்து வீட்டுக்காரர் சொல்லிக் கொண்டிருந்தார்!"

"தம்பி! ஆண்டவனுக்கு அடுக்காது. அப்படியெல்லாம் பேசாதே!" என்ருன் சாமியாரை அழைத்து வரச் சென்றிருந்தவர்களில் ஒருவன்.

"ஆனால் தானம் கொடுத்த கோதுமையிலே இரண்டு மணங்கு கோதுமையை, நெய்யும் மற்றச் சாமான்களும் வாங்கியதற்காகச் சேதே ஷாவுக்குக் கொடுத்துச்சென்ருனே சாமியார், அப்படி அவன் ஏன் கொடுத்துச் சென்ருன் என்று கேட்கிறேன்? கிராமத்தார் கொடுத்த தானப் பொருளில், ஒரு குன்றிமணி அளவு கூடக் கிராமத்தில் தங்கக்கூடாது. தங்கிஞல் புண்ணியம் சேராது! பெரியவர்கள் சொல்லுவார்கள். தெரியுமா?"

"இந்த மூளை அந்தக் காட்டுப்பயல் சேதே ஷாவுக்கு ஏன் இல்லாமல் போயிற்று? அவன் ஏன் அந்தக் கோதுமையை வாங்கிக் கொண்டான்? அவன் காசு எங்கேயாவது ஓடி விடப்

போகிறதா? நாளை மறுநாள் முகாமுக்குச் சென்று வாங்கிவருவதுதானே? சாமியாரின் முகாம் வெளி நாட்டிலா இருக்கிறது?''

''இந்தக் கடைக்காரர்களைப் பற்றிப் பேச வந்துவிட்டாயே! இவர்களுக்குத் தங்கள் காசுதான் ஐயா முக்கியம்! ஊரிலே மற்றவர்கள் எக்கேடு கெட்டுப் போகட்டும், நமக்கு நம் காரியம்தான் முக்கியம் என்று இருப்பார்கள் இந்தக் கீழ்ச் சாதிப்பசங்கள்!''

''நான் இன்னொரு செய்தி கேள்விப்பட்டேன். கோயில் நாற்சந்தியிலே நட்ட நடு இரவிலே யாரோ ஒரு பெண் காளைமாட்டின் தலையைக் கையில் தூக்கிக்கொண்டு குளித்து விட்டுப் போனாளாம்!''

''எந்தச் சாமியாராவது குழந்தை பிறப்பதற்கு இப்படிச் செய்யச் சொல்லியிருப்பான்! யாராவது பெண்ணுக்கு மந்திரம் போடப்பட்டால், எலும்புக் குவியலிலிருந்து மாட்டின் தலையைக் கொண்டுவந்து....''

யாரோ புலம்பும் குரல் கேட்டது. நெருங்கிவந்தபொழுது பார்த்தால், தேஜூத் தோட்டி துயரத்தினால் பித்தனாகி, ''என் கிடாரி, என் கிடாரி!'' என்று கூறிக்கொண்டே போய்க்கொண்டிருந்தது தெரிந்தது.

மிகக் சிரமப்பட்டு அவன் வாக்கியத்தை முடித்தான்: ''வெளியே போய் மேய்ந்து விட்டு வந்தது. காது தொங்கி....கண்களில் பீளை ... வாடிய உருவம்....என் கையிலிருந்த ரொட்டியைக் கூட நாக்கை நீட்டிப் பெறுமல் வாயைப் பிளந்து விட்டது. அதற்கு நாட்டு நெய் கூடக் கொடுத்தேன் ஆனால் திமிறிக்கொண்டு ஒரு புறம் போய் விழுந்தது. எப்படிப் பட்ட சாதி எருமை, தெரியுமா? நான் என் கிடாரிக்கு ஒரு குறையும் நேரக் கூடாது என்று....''

எல்லோரும் தேஜூவுக்கு ஆறுதல் அளித்தனர். ''ஆண்டவன் விருப்பம் எதுவோ, அதை ஏற்றுத்தான் ஆகவேண்டும்!'' என்று கூறினர்.

''எனக்குத் தெரிந்த வரை, கீர்த்திச் சாமியார் வராமல் கிராமத்தைச் சூழ்ந்துள்ள ஆபத்துத் தீராது என்று தோன்றுகிறது. அவர் பெருமை அலாதிதான். தன் இந்திரியததையே வெட்டிப் போட்டவராயிற்றே!'' கிராமத்துத் தலைவர் அடித்துச் சொன்னார்.

''நான் சொல்கிறதைக் கேளுங்கள். இப்பொழுது ஒன்றும் கெட்டுவிடவில்லை. கீர்த்திச் சாமியாரை அழைத்து வர இப்பொழுதே ஆள் அனுப்புங்கள்! பொழுது விடியும் வரை யோசித்

துக் கொண்டிருந்தால், நேற்றைப் போல வேறு கிராமத்தார்கள் யாராவது வந்து அவரை அழைத்துப் போய்விடலாம்!''

கிராமம் முழுவதும் கீர்த்திச் சாமியாரை எதிர் நோக்கலாயிற்று, அவருடைய காலடி எப்பொழுது நம் கிராமத்தில் படுமோ, மந்திரம்—மாயம் செய்து ஆடு மாடுகளைக் காப்பாற்றுவாரோ என்று! ஆனால் தேஜூத்தோட்டிக்கு மட்டும் இனி யாரையும் எதிர் நோக்கவேண்டிய தேவை ஏற்படவில்லை. அவனுடைய அதிர்ஷ்டக் கயிறுதான் எப்பொழுதோ அறுந்து விட்டதே!

# மோதி

"இந்தா, மோதி! எடுத்துக் கொள்!" முகவாட்டத்தோடு தித்தா தன் மனைவியின் அருகில் வெகு மெதுவாகச் சென்று கூறினான். பால்போல் வெளுப்பான பத்து நாட்கள் கூட ஆகாத நாய்க்குட்டி ஒன்றை அவள் காலமாட்டில் விட்டான்.

மனைப்பலகையில் உட்கார்ந்திருந்த ரக்கி அட்டக் கோணலாக வளைந்து. "மோதியா?" என்றாள். அவளுடைய அந்தக் குரலில் தான் எத்தனை அருவருப்பு! அலட்சியம்!

அவள் அந்த நாய்க்குட்டியின் கண்களை நோக்கினாள். மது போதை நிறை கிண்ணமாக, கற்கண்டுக் கூஜாவாகத் தோற்றின. அடுத்த கணமே, அவள் அந்த நாய்க்குட்டியை இழுத்துத் தன் வயிற்றோடு அணைத்துக் கொண்டாள்.

நாட்டுப் பிரிவினையின் பொழுது அடிதடி, கொலை கொள்ளை போன்ற தீயச் செய்திகள் பரவலாயின. மக்கள் மூட்டை—முடிச்சுகளைக் கட்டிக்கொண்டு இங்கும் அங்கும் ஓடத் தொடங்கினர். அப்பொழுது தித்தாவுக்கு மிகவும் வேண்டிய நண்பன் ஒருவன், 'நீயும் பாகிஸ்தானுக்குச் சென்று விடு!' என்று அற்புதமான தோர் ஆலோசனை கூறினான். ஆனால் தித்தா தோள்களை நெரித்து, புருவங்களை உயர்த்தி அருவருப்போடு உதடுகளைச் சுழித்தான். கூரான கருவேலமுள் இதயத்தின் அடித்தளம் வரை சென்று தைத்து விட்டாற்போன்ற உணர்வில் துடிதுடித்தான். அவன் அப்பன் இங்கு இருந்தான். அவன் பாட்டன் இங்கு இருந்தான். அப்பனுக்குப் பாட்டனுக்கு அப்பனுக்குப் பாட்டனும் இங்குதான் இருந்திருக்கிறார்கள். அவர்கள் மரிதது மண்ணாகி விட்ட மண்ணில்தான் கோதுமை பயிராகியது; கம்பு பயிராகியது. மிளகாய், கரும்பு உற்பத்தியாயின. அந்த மண்ணின் எத்தனை பகுதி பதாவாசிங்கின் இரத்தத்தில் ஊறியிருக்கிறது, எத்தனை பகுதி ஜகனுவின் இதயத்தில் இறங்கியிருக்கிறது என்பது இப்போது யாருக்கும் தெரியாது.

தேக்கு மரத்தின் அடிப்பாகம் போன்று ஆறு அடி உயரம் எடுப்பாக வளர்ந்த அவனுடைய மகன் ஒரு காவல் துறை அதிகாரியுடன் சண்டையிட்டுக்கொண்டு விட்டான். காந்தி மகானை அவன் கீழ்த்தரமாகப் பேசியதை அவனால் கேட்டுக் கொண்டு

உட்கார்ந்திருக்க முடியவில்லை. பலன், படாத இடத்தில் அடி பட்டதனால், எங்கே எப்படி விழுந்து இறந்தானோ, தெரியாது. அவன் அணிந்திருந்த மலர் ஒன்றின் இதழ் ஒன்று கிடைத்தால் கூட, அதைத் தாயத்தில் வைத்து மூடி எப்பொழுதும் தன்னிடமே பொத்திப் பாதுகாத்தவாறு சுற்றித் திரிவான். ஆனால் மலரின் நறுமணம் கூட அல்லவா அவனை அணுகவில்லை? அவன் இரண்டாவது மகன் ஷரீப் ஸுலங்க், வயோதிக காலத்துக்கு ஊன்று கோலாக இருக்கவேண்டியவன். புதிய லுங்கியும் சட்டையும் அணிந்து, தன் தாய் மாமன் வீட்டைப் பார்த்து வரச் சென்றிருந்தான். ஆனால் போனவன் திரும்பி வரவில்லை. அவன் சவம் எல்லைப்புறக் கால்வாயில் மிதந்து செல்வதைத் தன் கண்களால் நேரிடையாகப் பார்த்ததாக பசித்தர் அறுதியிட்டு உறுதியிட்டுக் கூறினன். எந்தக் கோஷ்டியார் அவனை அடித்துப் போட்டார்களோ? இஸ்லாமைக் கடைப் பிடிப்பவனே கூட அவனைக் கொன்றிருக்கமாட்டான் என்று என்ன நிச்சயம்? அந்த நேரமோ யாருக்கு என்ன தர்மம், யாருக்கு எது கடவுள் என்பது கூடத் தெரியாத நேரம். இங்கேதான் காஹுலாசிங்கே திண்ணையில் படுத்து உறங்கிக் கொண்டிருந்த தனது கூடப்பிறந்த தமையனின் மகனுடைய கழுத்தைச் சீவி விட்டானே! எவனாவது ஒரு முஸல்மானுக்கு இந்தப் பழி போய்ச் சேரும் என்ற எண்ணத்தில்! எல்லாம் எதற்காக? சொத்துக்காக!

மனிதன் மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொள்ளலாம், டிரங்குப் பெட்டி, பீப்பாய்களை எடுத்துக் கொள்ளலாம். அங்கங்கே உறங்கிவிட்ட உற்றத்தார்—சுற்றத்தாரின் ஆத்மாவை என்ன செய்ய முடியும்?"

"பலரும் நீங்கள் பாகிஸ்தானுக்குப் போய் விடுங்கள் என்கிறார்களே!" தித்தா சிரித்துச் சிரித்து அழவே தொடங்கிவிட்டான். "பாகிஸ்தானுக்குப் போவதென்றால் யாரிடம் போவது? அங்கே நமக்கு என்ன இருக்கிறது?"

நாற்புறமும் வெறுப்பு காட்டுத்தீயெனப் பரவவே, கிராமத்தில் உள்ள சில பெரியவர்கள் அல்லாதித்தனிடம் கூறினர்கள்: "இல்லையென்றால் உங்கள் பெயரையாவது மாற்றிக் கொண்டு விடுங்கள்! எங்கிருந்தாவது வெளியிலிருந்து வந்துள்ள விஷமிகள் எப்பொழுது கை ஓங்குவார்களோ, யார் கண்டார்கள்? உன் குடும்பத்துப் பெரியவர்கள் — முன்னோர்கள் கூட முன்னால் நத்து,

போலு என்று தான் இருந்திருப்பார்கள். நேரே மக்காவிலிருந்து இங்கே வந்திருக்கப் போகிறார்களா, என்ன? — பெயரை மாற்றிக் கொள்வது, கொள்ளாதது என்ன பெரிய விஷயமா?''

''உனக்கு இந்த மிருகத்தின் இறைச்சியாயிருந்தால் என்ன, அந்த மிருகத்தின் இறைச்சியாய் இருந்தால் தான் என்ன? ஏதோ வயிற்றுப் பசிக்குச் சாப்பிடவேண்டும் நாவின் சுவைக்கு ரொட்டியோடு உப்புச் சேர்த்துச் சாப்பிடலாம். வேண்டுமென்று தோன்றினால் வெங்காயம் தொட்டுக்கொண்டும் சாப்பிடலாம். இதெல்லாம் என்ன, ரொம்பச் சின்ன விஷயம்!'' தித்தா தன் மனத்தோடு கலந்து ஆலோசித்தான். பலரும் சொன்ன விஷயத்தைக் கேட்கவும் கேட்டுவிட்டான்.

பிறகு, பெயரை மாற்றிக் கொள்வதனால் பெரிதாக எந்த மாறுபாடும் நிகழ்ந்து விடவில்லை என்பதை அவன் உணர்ந்தான். முதலில் மக்கள் அல்லாதித்தனைத் தித்தா என்று கூப்பிட்டுக் கொண்டிருந்தனர். இப்பொழுது ஹர்கித் சிங் என்று அழைக்கிறார்கள். மனைவியின் பெயர முன்பும் ரக்கிதான், இப்பொழுதும் ரக்கிதான்.

ஆனால் கிராமத்தில் உள்ள சில சண்டைக்காரப் பிள்ளைகள் இந்த மக்காவிப் பயல் தித்தாவை இப்படித் தங்களுக்குள் சேர்த்துக் கொண்டதைக் குறித்துக் காட்டமாயிருந்தார்கள். இந்த மத மாற்றம் பெயர் மாற்றத்தை எல்லாம் நாங்கள் ஒப்புக்கொள்ள முடியாது என்று கூறிக் கொண்டிருந்தனர். இந்தக் குயப் பயல் இங்கிருந்து தானாக போய் விடட்டும். இல்லை, நாங்கள் உண்டு, எங்கள் ஆயுதம உண்டு. ஒரு கை பார்த்துக்கொள்ளுகிறோம் என்று கறுவிக்கொண்டும் இருந்தார்கள்.

மகாமேதாவி ஒருவன் தித்தாவிடம் சாடையாகச் சொன்னான்: ''நீ உன் துணி - மணி, சாமான் — செட்டு எல்லாவற்றையும் தாராளமாக உன்னிடம் வைத்துக் கொள்ளலாம். உன் இந்த நான்கு கழுதைகளை மட்டும் பையன்களுக்குக் கொடுத்துவிடு. உன்னைச் சகோதரனாக ஆக்கிக்கொள்ளும் மகிழ்ச்சியில், உன்னை இந்த நாட்டிலேயே இருத்திக் கொள்ளப்போகும் மகிழ்ச்சியில் நாங்கள் இனியதொரு விழாக் கொண்டாடப்போகிறோம் என்று பிடிவாதம் பிடிக்கிறார்கள். அதற்குத் தான்....'' என்று.

இதைக் கேட்டுத் தித்தாவுக்கு மகிழ்ச்சிக் கிறக்கமே ஏற்பட்டது. ''சந்தோஷம், தம்பி! என்னைத் தங்களுடன் சேர்த்துக்

கொள்ள, என்னையும் தங்களுடைய சகோதரர்களில் ஒருவனுக் கிக் கொள்ள இவர்கள் இவ்வளவு விரும்புகிறார்கள் என்றால், என் கழுதைகளை மட்டும் என்ன, எனது இந்தக் கை—கால் நான் கையுமே அர்ப்பணிக்கத் தயாராயிருக்கிறேன்!'' என்றான்.

பொதியேற்றிச் செல்வதற்கு வாடகையாக அன்றாடம் இரண்டு ரூபாய் கிடைத்து வந்தது. கழுதைகளோடு அந்த வரும்படி போய்விட்டது. அதற்காகத் தித்தா வேலையற்றவனாகி விட வில்லை. வெள்ளுடை உடுத்தி வகையாக வாழ்ந்து வந்த நதாரா சிங் தன் கால்நடைகளைக் கவனித்துக் கொள்வதற்காக உண வும் உடையும் கொடுத்து அமர்த்திக் கொண்டான். அதோடு கைச் செலவுக்கு ரொக்கமாகப் பதினைந்துபோய் தரவும் சம்மதித் தான். அறுவடை முடிந்து தான்யம் வீட்டுக்கு வந்ததும் அதைப் பெற்றுக் கொள்ளலாம் என்றும் கெடு குறிப்பிட்டு விட்டான்.

ஐம்பத்தைந்து வயதைக் கடந்துவிட்ட ரக்கியும் சும்மா இல்லை. யாருக்காவது பஞ்சு ஆய்ந்து கொடுத்தாள்; எவர் வீட்டிலாவது மாவரைத்துக் கொடுத்தாள் அரிசி கோதுமை குத்திக் கொடுத் தாள். வீடு—முற்றம் மெழுகிக் கொடுத்தாள். சுவர் பூசிக் கொடுத்தாள். இத்தனை வேலைகளைச் செய்தும் சில சமயம் வீட் டிலே அரைப்படி மாவுக்கே கூடத் தட்டு ஏற்படுவதுண்டு. ஒரு சமயம் மண்குடத்தில் மாவு இருக்கும். ஒரு சமயம் இருக்காது. இதற்காக அவள் அதிகமாக நொந்து கொள்வதில்லை. ஆனால் மனத்தை நூறு விதமான சிக்கல்களிலும் சுழல்களிலும் ஈடு படுத்தி எத்தனைதான் நடந்தவற்றை மறக்க முயன்றாலும், ஒரு கணம் கூட அவளால் தனது இழந்த செல்வங்களை மறக்கமுடிய வில்லை. மற்ற செல்வங்களைப்போல மறக்கக்கூடிய செல்வங் களா அவை? இரவு முழுவதும் தனது மேலாடைத் தலைப்பில் முகத்தை மூடிக்கொண்டு பிழியப் பிழிய அழுது தீர்ப்பாள். என்றைக்காவது எங்கும் வேலை கிடைக்கவில்லையென்றால், பகலிலும் அழுகைதான் அவளுக்கு ஆகாரம்.

ஒரு நாள் மாலை ஜங்கீர் பங்கு அவளை அழைக்கவந்தான். அவன் மனைவிக்குப் பேறு சமயம். இடுப்பு வலி கண்டு விட்டது. மருத்துவச்சி நியமத் கிராமத்தைவிட்டுச் சென்றபின், அக்கம் பக்கத்தில் வேறு மருத்துவச்சிகளே கிடைக்கவில்லை. ரக்கிக்கு மருத்துவம் பார்க்கத் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், அவள் உதவியைத்தான் நாடவேண்டியிருந்தது. தித்தாவுக்குப் பிறந்த நான்கு குழந்தைகளையும் ரக்கி தானகத்தானே பிறர் உதவியின்

றிப் பெற்றெடுத்தாள்! அந்த நாளில் பகலில் ஓடியாடி இரவில் முக்கி முனகி எப்படியோ நல்லபடியாகக் குழந்தைகளைப் பெற்றெடுத்துக் கொடியும் நறுக்கியவள் தானே?

அவளைப் பேறுக்கு அழைத்தவர்கள் நன்றாக உண்டு உடுத்தும் ஜாட் இனத்தைச் சேர்ந்தவர்கள். அறுபது ஏக்கர் நிலத்துக்குச் சொந்தக்காரர்கள். முதல் பிள்ளையின் முகத்தைப் பார்த்ததும் தகப்பனின் முகம் பலாசம்பூப்போல மலர்ந்தது பிள்ளையைப் பெற்றெடுத்தவள் மகிழ்ச்சியோடு, ''ரக்கியம்மா! என்னவேண்டுமோ, கேட்டு வாங்கிக்கொள்! பின்னால் கேட்கத் தயக்கமாயிருந்தது என்று சொல்லாதே. ஆமாம், சொல்லி விட்டேன்!'' என்றாள். ரக்கி முன்னும் யோசிக்காமல் பின்னும் யோசிக்காமல் சட்டென்று கூறினாள்: ''நீ நல்லா வாழணும். எனக்கு ஒரு கழுதை வாங்கிக் கொடு, போதும்!''

ரக்கியின் இந்த ஆசையைக் கேட்ட ஜங்கீருக்கும அவன் குடும்பத்தினருக்கும் சிரித்துச் சிரித்து வயிறு புண்ணாகிவிட்டது. ஆனால் அடுத்த நாள் கருக்கலுக்குள்ளாக அவர்கள் மூன்று மாதங்கூட ஆகாத கழுதைக் குட்டி ஒன்றை ரக்கியின் வீட்டு முற்றத்தில் கொண்டு வந்து நிறுத்திவிட்டார்கள்.

தித்தா தனது மனைவியின் இந்த மழுங்கிய அறிவுக்காக மிகவும் வருந்தினான். ''அடி அசடே! கேட்கத்தான் கேட்டியே! நல்ல பொருளாகக் கேட்டிருக்கக்கூடாதா? இப்பொழுது கொண்டு வந்து கட்டியிருக்கிற மச்சினப் பிள்ளைக்கு எத்தனை நாள் தீனி போட்டு நாம் பாடுபட்டு வளர்த்தாகவேண்டுமோ, யார் கண்டார்கள்? அதோடு ஒரு கழுதையினாலே என்ன பயன்? செங்கல் சுமக்குமா, அல்லது தானியம் தான் சரியாகச் சுமக்குமா?'' என்று கூப்பாடுபோட்டு அவளைத் திட்டவும் செய்தான். ஆனால் ரக்கி அவன் பேச்சைக் காதுகளிலேயே போட்டுக்கொள்ளவில்லை.

கழுதைக் குட்டி நல்ல வெளுப்பு, பஞ்சுபோல. ரக்கி அதை வெய்யிலில் நிறுத்தி நன்றாகத் தேய்த்துக் குளிப்பாட்டுவாள். ஒவ்வொரு சமயம் அதன் உடல் மயிரை அழுத்தித் தேய்த்துப் படியவிடுவாள். அதன் உடலில் பஞ்சையும் மருதாணியையும் கொண்டு கொடிச் சித்திரங்கள் சமைப்பாள். உடலுக்குத் துணி போட்டுக் கோவில் யானையென அலங்கரிப்பாள். தித்தாவும் ஒரு நீண்ட காலத்திட்டம் போட்டுக் கயிறு பின்ன உட்காருவான். ஆனால் ரக்கி பிரி விடும் கொட்டாங்கச்சியையும் குச்சியையும் பிடுங்கிப் பரண் மீது கடாசுவாள். 'உனக்குக் கயிறு வேண்டு

மானால் தாராளமாய்ப் பின்னிக்கொள். நான் வேண்டாமென்று கூறவில்லை. ஆனால் ஏதாவது சாமான் - கீமான் தூக்கவேண்டுமென்றால், உன் தோளில் தான் தூக்கணும். நான் மோதியை ஒரு தோலாச் சுமை கூடத் தூக்கவிடமாட்டேன். ஒரு நாளும் விடமாட்டேன், தெரிந்துகொள்ளு!'' என்பாள்.

ரக்கி தன் கழுதைக்கு மோதி என்று பெயர் வைத்திருந்தாள். எதற்காக அவள் அந்தப் பெயரை வைத்திருந்தாள் என்பது ஜனங்களுக்கு என்ன தெரியும்? அது பார்ப்பதற்கு மிகவும் அழகாயிருந்தது. அதனால் பொறுக்கி அந்தப் பெயரை வைத்திருக்கிறாள் என்று எண்ணினார்கள். ஆனால் ரக்கியே யோசித்துப் பாராத யோசனை ஒன்று அதன் அடித்தளத்தில் இருந்தது. மாம்தீன் அவளுடைய மூத்தபிள்ளை. தௌஃபீக் சின்னவன். 'மோதீ' என்னும் சொல்லில் அவர்கள் இருவருடைய பெயர்களும் இணைந்திருந்தன. ஒருவனுடைய 'ம' என்னும் முதல் எழுத்து, இன்னொருவனுடைய 'த' என்னும் முதல் எழுத்து. அவள் மோதி யென்னும் சொல்லை வாய்விட்டுக் கூறும்பொழுது, அவளுடைய இரு உதடுகளும் தேன் மாந்துவது போல் இனித்தன.

முறைக் காய்ச்சல் வந்து தித்தாவை வாட்டி எடுத்துக் கிழித்த நாராய்ப் போட்டுவிட்டது. தொடர்ந்து இருபது நாட்கள் சுரவேகம் தணியவில்லை. இடையே நான்கு நாட்கள் அது இளைப்பாறியது. மீண்டும் முழு மூச்சுடன் அவனை வாட்டியது. ரக்கி அவனுக்கு வெந்நீர் - கஞ்சி போட்டுத் தருவாள், கைகால்களைப் பிடித்து விடுவாள். இடையில் வீடு வீடாகச் சென்று வேலையும் தேடுவாள். மருந்துப் பொட்டலங்கள், கஷாயங்கள், வெல்லத் துண்டங்கள் என்று எல்லாமே விலைக்கு வந்தன. தேநீருக்காக நான்கு சுரப்பு ஆட்டுப்பால் கூட விலை கொடுத்து வாங்கினாள். ஒரு நாள் ஒருவனிடம் கை நீட்டி ஐந்து ரூபாய் வாங்கினாள், அவனே ஏழாவது நாள் வட்டியும் முதலுமாக எட்டு ரூபாயை வாங்கிச் செல்ல வந்து விடுவான். இப்படியாகப் பத்துப் பேருக்கு அவள் கடனாளியாகிவிட்டாள். அவர்களுக்குப் பதில் சொல்லும்படியாகி விடவே, பொறுமை இழந்த அந்த வாய்களிலிருந்து பேச்சுக் கேட்காமல் இருக்கவேண்டுமே என்பதற்காக அவள் கித்தாமல்லை நாடினாள். வீடு தேடி வந்தவளுக்கு இல்லை யென்று கூறாமல் கித்தாமல் வழங்கினான். ஆனால் மாதம் முடிவதற்குள்ளாக அவனுடைய மகன் லட்சுமணன் மோதியின் கழுத்தில் கயிற்றைக் கட்டி இழுத்துச் சென்றுவிட்டான்.

ரக்கி வீட்டுக்குள் நுழைந்து ஆயிரம் சாபங்கள் இட்டாள் கித்தாமல்லுக்கு! அவனுடைய முந்திய–பிந்திய செயல்களைத் துக்கும் வட்டியும் முதலுமாக வசவுகளை வாரி வீசினாள். ‘இதோ பார்! கித்தாமல்லின் குடும்பத்தோடு நமக்குத் தலைமுறை தலைமுறையாகத் தொடர்பு உண்டு. அவன் கிராமத்திலே இருந்திருந்தால், நீ பார்க்கிற காட்சியே வேருக இருக்கும். லட்சமணன் மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் பொழுது கொடுமைக்காரனைத் தான் தோன்றுகிறான். ஆனால் உண்மையில் அப்படி இல்லை. அவன் உன் பாத்திரம்–பண்டங்களில் கைவைக்காமல் போனானே, பார்த்தாயா? அவன் வட்டிக்கென்று வீட்டுச் சாமான்களையும் திரட்டி எடுத்துக்கொண்டு போயிருந்தால், நாம என்ன செய்திருக்க முடியும்? விட்டுத்தள்ளு, பிள்ளை!'' என்று சமாதானப் படுத்தமுயன்றான் கித்தா.

ஆனால் ரக்கி, வந்த ஆத்திரத்தில் கைகால்களை விரித்துக் கொண்டு அவன் மீது பாய்ந்துவிட்டாள். நகங்களினால் முகம்-நெற்றி பாராமல் பிராண்டி எடுத்துவிட்டாள்.

கித்தாவின் வீட்டுக்கு வருவதற்கு முன்னால், மோதியை அதன் எசமானர் குப்பை மேட்டில் விட்டுவிடுவார். நாள் முழுவதும் அது குப்பையிலே எதையோ மேய்ந்து திரிந்து கொண்டிருக்கும். ஆனால் ரக்கியினிடம் வந்த நாள் முதற்கொண்டு, அவள் அதை இடைகழி தாண்டிக் கூட வெளியே போகவிட்டதில்லை. பொன் போன்ற தூய்மையான கம்புத்தளிர்களைத் தன் கையால் பறித்து வந்து தின்னக்கொடுப்பாள். இஷ்டத்துக்குத் தின்னட்டும் என் பதற்காகக் கொத்துக் கடலையும் சேர்த்துத் தருவாள். அது கொஞ்சம் சாணி போட்டாலும் புடவைத் தலைப்பில் ஏந்திச் சென்று வெளியே போட்டு வருவாள். மோதியின் உடல் கண் இமைகளினால் வருடிவிட்டாற்போலப் பளபளவென்று இருக்கும். ரக்கி இந்தப் பக்கமாகச் சென்றால் அதைக் கைகளால் அணைத் துக்கொள்வாள். அந்தப் பக்கமாக வந்தால், முகத்தில் முத்தம் கொடுத்துச் செல்வாள். இப்பொழுது கித்தாமல லாலாவின் வீடு மோதிக்கு இடுகாட்டைக் காட்டிலும் மட்டமாகத் தோன்றியது. அது வெகு நாட்கள் வரை பொட்டு-தவிடு-புல் எதையுமே வாயால் தொடவில்லை. தலை குனிந்த வண்ணம் நிற்கும்; தன் தலைவிதியை எண்ணி அழுது புலம்புவது போலத் தோன்றும்.

வெள்ளிக்கிழமை இரவு ரக்கி ஒரு கனவு கண்டாள், யாரோ அவளுடைய இரண்டு பிள்ளைகளையும் தலை கீழாகக் கட்டித்

தொங்கவிட்டிருப்பது போலவும், அவர்களுடைய தலையிலிருந்து கொழுப்பு ஒவ்வொரு துளியாகக் கீழே கொதிக்கும் எண்ணெய்க் கொப்பறையில் விழுவதுபோலவும்! அவள் துடிதுடித்துப் போய் எழுந்து உட்கார்ந்தாள். உடனே தித்தாவையும் எழுப்பினாள். ஹிந்து கடைக்காரர்களின் முகத்தில் கூட விழிப்பதில்லை என்று மோதி தன் வீட்டை விட்டுச் சென்ற தினத்திலிருந்து அவள் சபதம் பூண்டிருந்தாள். ஆனால் இப்படி ஒரு கனவு கண்ட பிறகு அவளால் தன் சபதத்தில் எப்படி உறுதியாக நிற்கமுடியும்? அவள் இராப் பொழுதை எப்படியோ ஓட்டினாள். பொழுது புலர்ந்ததும் முதற் காரியமாகக் கித்தாமல்லின் வீட்டை நோக்கி ஓடினாள்.

பசி யானைகளின் ஆணவத்தையே அடக்கி ஒடுக்கிவிடுகிறது. பிள்ளைப் பிராயத்துப் பசியை ரிஷிகளும் முனிகளும் யோகிகளும் கூடப் பொறுப்பதில்லை. பல நாட்களாக மோதியின் கால்கள் ஐம் பூதங்களின் மலைச்சுமை தாளாமல் தள்ளாடின. அதன் மண்டையில் முழ நீள ஆணிகள் அறைந்தாற் போலிருந்தது. வயிற்றில் குடம் திராவகம் கடபுடவென்று கொதித்துக் கொண்டிருந்தது. ஒவ்வொரு கணமும் எழும்பிப் குதித்து உயர்ந்து வளர்ந்த வலி திடுதிப்பென்று நின்றுவிட்டது. ரக்கி அங்கு வந்து சேர்ந்த நேரத்தில் மோதி அழுக்கிலும் மூத்திரத்திலும் வாயைத் திறந்து கொண்டு விழுந்துகிடந்தது. அதன் உயிர் வாசற்படியில் நின்று கொண்டு ரக்கியின் வருகைக்காகவே எதிர் நோக்கி நிற்பது போலவும் கடைசியாக விடைபெற்றுப் பிரியத் துடிப்பது போலவும் தோன்றியது. ஆம், ரக்கிக்கு அந்த 'முழி' தான் கொடுத்துவைத்திருந்தது.

ரக்கியின் உடல் முழுவதும் தந்தி பேசி நடுங்கியது. அவள் வந்த வேகத்திலேயே திரும்பித் தன் வீட்டுக்கு ஓடினாள். அப்படியே தன் ஆசனத்தில் விழுந்து சாய்ந்தும் விட்டாள்.

''இந்தா மோதி! எடுத்துக்கொள்!'' முகவாட்டத்தோடு தித்தா தன் மனைவியின் அருகில் வெகு மெதுவாகச் சென்று கூறினான். பால் போல் வெளுப்பான, பத்து நாட்கள் கூட ஆகாத நாய்க் குட்டி ஒன்றை அவள் கால் மாட்டில் விட்டான்.

''மோதியா?'' — அருவருப்பும் அலட்சியமும் தாண்டவமாட ரக்கி கர்ஜித்தாள். ஊர் சுற்றும் நாய்க் குட்டி ஒன்றோடு, மிகவும் புனிதமானதொரு சொல்லை இணைத்துத் தித்தா அவளுடைய பித்தம் என்னும் வெடி மருந்தில் தீக்குச்சியைக் கிழித்து

வைத்துவிட்டதாக தோன்றியது. அதனால் தான் அவள் அப்படி ஆத்திரம் மீதூரச் சீறி வெடித்தாள்.

"நீ உன் கண்களால் இதைப் பாரேன்!" தித்தா மிருதுவாகத் தன் கையினால் நாய்க்குட்டியின் ரத்ன கம்பளம் போன்ற முதுகைத் தடவிக் கொடுத்தான்.

ரக்கி இமைகளை விரித்துக் கண்களைக் கொட்டாமல் நாய்க் குட்டியின் முகத்தைப் பார்த்தாள். அது உதடுகளை நக்கிக் கொண்டிருந்தது. அதோடு வாலையும் ஆட்டிக் கொண்டிருந்தது. ரக்கி அதன் கண்களில் தௌ:பீக்கின் மயக்கும் இரு விழிகளைத் தேடினாள். மாம்தீனின் கற்கண்டு போன்ற கனிவுப் பார்வையை யும் தேடினாள். பிறகு அதன் வயிற்றின் அருகில் தன் வாயைக் கொண்டு சென்று, "என் செல்வங்களே!" என்று கூவினாள்.

நாய்க்குட்டிக்கு அவள் கூவியதன் பொருள் விளங்கவில்லை. அது முன்பின் தெரியாத அவளை அறியாதவர்களும் அறியாதவர் களும் சந்திக்கும் நோக்கில் உற்று நோக்கியது.

ரக்கி மேலும் பல முறைகள் கூவினாள். ஒவ்வொரு முறையும் குரல் ஓங்கி ஒலித்தது. நாய்க்குட்டி பயந்துபோய் 'கூ—கூ' என்று குரல் கொடுக்கலாயிற்று. கீழே நெருப்பை மிதித்துவிட் டாற்போல அதன் கால்கள் தரையில் பாவாமல் துடித்தன.

ரக்கி மீண்டும் ஒருமுறை கூவினாள், இடமும் வலமும் சிதறிக் கிடந்த துயரமனைத்தையும் கூட்டித் தன் உள்ளத்தில் வைத்துக் கொள்ள முயல்பவள் போல. பிறகு நாய்க்குட்டியைத தன் பக்கம் இழுத்து அதன் முகத்தில் முத்தமிட்டாள். அப்பொழுது அவளு டைய சிரிக்கும் விழிகளில் தாய்ப்பாசம் ததும்பி நின்றது.

# கடைத் தெருவின் துயரம்

அப்புறம் என்ன, அவன் இறந்துவிட்டான்.

சொல்லப் போனால் இன்னும் நள்ளிரவு ஆகவில்லை. புது மோஸ்தர் கடைத் தெருவில் ஷோ கேஸ்களில் இன்னும் விளக்கு கள் தகதக வென்று எரிந்து கொண்டுதான் இருந்தன. நியான் விளக்குகளும் முழு ஒளி பரப்பியவாறு பிரகாசித்துக் கொண்டு தான் இருந்தன. இப்படிக் கண்ணைப் பறிக்கும் ஒளியுடன் இயங்கிக் கொண்டிருந்த கடைத் தெருவில் போய்ச் சாகத் தோன்றியதே அவனுக்கு! இதை என்ன சொல்ல? நல்ல ஆள் ஐயா அவன்? சினிமாக் கொட்டகைகளில் இன்னும் இரண்டாவது ஆட்டம் முடியவில்லை. ரிக்ஷாக்காரர்களும் வேலை முடிந்து நீண்ட வரிசையில் தங்கள் ரிக்ஷாக்களைக் கொண்டு வந்து இன்னும் நிறுத்தவில்லை. நிம்மதியாக வெற்றிலைப் பாக்குப் போட்டு மென்று தம்பலம் உமிழும் மகத்தான அலுவலைத் தொடங்க வில்லை. அது மட்டுமா? மல்லிகை மணம் அந்த வட்டாரத்தில் இன்னும் பரவவில்லை. இன்னும் சொல்லப் போனால் ஸிலியா சூதாடிச் சாராயம் குடித்துவிட்டுக் கால்கள் தள்ளாடத் தன் இருப் பிடத்துக்குத் திரும்பவில்லை. இந்தக் காட்சிகளை யெல்லாம் கண்டு களிக்காமல், நிறைந்த இந்த உலகத்தைவிட்டுக் கத்திரித் துக் கொண்டு போக உனக்கு எப்படித்தான் தோன்றியதோ?" கடைத் தெருவிலே நட்டநடுப்பாதையிலே, உனக்கு உன் மனைவி படுக்கை விரித்திருக்கிறாற்போன்ற மிதப்பில் இப்படிப் படுத்து விட்டாயே! எவ்வளவு தெளிவாக நீ மரணத்தை உன் உடைமை யாக்கிக் கொண்டுவிட்டாய்? இவ்வளவு எளிதாக ஸிலியா சூதாடி உனக்குக் காசு கொடுத்திருக்கமாட்டானே!

அவன் சவம் ஒருமுறை நடுங்கினாற் போலிருந்தது. நியான் விளக்கின் ஒளியில் அவனுடைய முகத்தின் நரம்புகள் விறைத் தாற் போலத் தோன்றின.

ஊஹூம். இன்று நீங்கள் என்னை இப்படிப் பார்க்க முடியாது. இப்பொழுதே நீங்கள் என்னிடம் அநுதாபம் காட்டக்கூடாது. இன்னும் என் உள்ளே உயிர் எஞ்சியிருக்கிறது. இன்னும் என் கண்களில் உங்கள் படம் நிழலாடுகிறது. நான் உங்கள் குரலைக் கேட்க முடியும். ஸிலியா சூதாடியின் தடுமாறும் கால்களையும்

அடையாளம் கண்டு கொள்ளமுடியும். ஸிலியா வெற்றி பெற்று வந்திருக்கிறுஞ, தோற்றுவிட்டு வந்திருக்கிறுஞ என்று கூட என்ஞல் கூற முடியும். ஸிலியா வெற்றியுடன் வந்தால் என்னைக் கட்டிப்பிடிக்க முடியாது. எனக்கு அதிர்ஷ்டம்தான். தோற்று விட்டால் என் அதிர்ஷ்டம் கட்டைதான். ஸிலியா என்ன, ஒரு 'அத்து'க்குத்தான். உண்மையில் பெரிய ஆட்டக்காரர் என்ருல் இவர்தான். இந்தக் கடைத் தெருவிலே மிகப் பெரிய வியாபாரி இருக்கிருரே, என் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்காமல், இருக்கிருஞ, செத்தாஞ என்பதைக் கூடத் தெரிந்து கொள்ளாமல்; —அவர் தான் பெரிய ஆள்!

ஆஞலும் இன்று அவன் இறந்துவிட்டான்.

ஆடையற்ற அவனுடைய உடல் நாகரிக மோஸ்தர் கடைத் தெருவிலே நடைபாதையிலே கிடந்தது. அவனுடைய உடலில் பெயருக்குக் கூடத் துணி இல்லை. ஆஞல் கடைத் தெருவோ புதிய புதிய ரெடிமேட் ஆடைகளால் வழிந்தது. குளிரில் அவன் உடல் உதறல் எடுத்திருக்கவேண்டும். திறந்த வெளியில் பனி நூலென இறங்கிக் கொண்டிருந்தது. எங்கோ தொலைவில் துறவிகள் தீ வளர்த்துக் குளிர் காய்ந்தவாறு அமர்ந்திருந்தனர். வளர்ந்திருந்த தீயில் ஈர விறகுகள் புகைந்து கொண்டிருந்தன. புகை மூட்டமும் பனி மூட்டமும் சேர்ந்து ஒரே புகை மண்டலமாகத் தோன்றின. அவன் வாழ்க்கை முழுவதும் ஈர விறகைப் போலப் புகைந்து புகைந்தே கழிந்தது. புகை படிந்த அவன் கண்களில் நீர் கோத்திருந்தது. திறந்த வெளியில் யாரோ ஒரு துறவியின் குரல் எடுப்பாக ஒலித்துக் கொண்டிருந்தது. 'நீரில் வாழும் மீனுக்குத் தாகமாம். கேட்கக் கேட்க எனக்குச் சிரிப்பாக வருகிறது' என்று பாடிக்கொண்டிருந்தான். மாயைக்கு மத்தியில் உழலாத யோகியே! வந்து பார், நானும் நீரில் மீன் போலத் தாகத்தால் தவிக்கிறேன். துணிகள் அம்பாரமாகக் குவிந்திருக்கும் இந்தக் கடைத் தெருவிலே, நிர்வாணமாக இறந்து கொண்டிருக்கிறனே! இதை நீரில் மீனின் நிலை என்று சொல்லாமல் வேறு எப்படிச் சொல்வது? எனது இந்த நிர்வாணமான உடலில் என் ஆத்மாவும் நிர்வாணமாகத்தான் இருக்கிறது. ஆஞலும் அந்த நிர்வாணமான ஆத்மா உடை மாற்ற—உடலை மாற்றத் துடிக்கிறதே! நினைத்தால் வியப்பாயில்லை?

நியான் விளக்குகள் எரிந்துகொண்டும் அணைந்துகொண்டும் இருந்தன. கண்களைப்பறிக்கும் மின்சார ஒளியிலே அவனுடைய

ஆத்மா காரிருளில் சுற்றுவதுபோலச் சுற்றியலைந்து கொண்டிருந்தது. இருள் சூழ்ந்த தெரு; அதன் நாற்புறமும் மதில்கள் எழுப்பப் பட்டிருந்தன. ஆள் உயரத்துக்கு நல்ல உயரமான மதில்கள்! அவனுடைய ஆத்மா விடுதலை பெறுவதற்காக இருளில் அடிக்கடி முட்டி மோதிக் கொண்டிருந்தது; சுவரில் தலையைப் போட்டு உடைத்துக் கொண்டிருந்தது.

டண், டண். தொலைவில் ஏதோ கடிகாரத்தின் மணி ஓசை கேட்கிறது. அந்த ஓசை அவனுள்ளிருந்து எழுவதுபோலத் தோன்றுகிறது. நேரம் ஆகிவிட்டது. ஒவ்வொருவனும் நேரத்தை உணர்கிறான். ஒவ்வொருவனும் தனக்கென்று ஒரு தருணம் தேடுவதில் முனைகிறான். அங்கு கடிகாரம் டண் என்று அடித்தது. இங்கு ஏதோ குரல் எழுந்தது.

“இதுதான் தருணம். பாய்ந்து பற்றிக் கொள்!”

டண்—டண்!— ஒரு பக்கிரியின் குரல் ஒலிக்கிறது! ‘அப்பனே! உனக்கு ஓர் எச்சரிக்கை! கடிகாரம் என்ன பறை சாற்றுகிறது, தெரியுமா? உன் வாழ்விலே ஒரு நாழிகைப் பொழுது ஓடிவிட்டது, குறைந்துவிட்டது என்று கூறுகிறது. கேட்டு ஆத்மா முணுமுணுக்கிறது. அதுவும் கடிகாரத்தின் குரலைப் புரிந்து கொள்ளுகிறது. கடிகாரம் அடிக்கிறது; அதே நேரத்தில் அடிக்கடி அடியும் படுகிறது. ஆனால் அது நிரபராதி. ஆனால் குற்றவாளிகளாகிய நம் கதி என்ன ஆகும்? விடுங்கள் ஐயா, வெட்டிப் பேச்சை! இதெல்லாம் சும்மாத் துறவிகள் சொல்கிற சொற்கள்! இதையெல்லாம் பொருட்படுத்தக் கூடாது. நீங்கள் தீ வளருங்கள், தவம் புரியுங்கள்! அந்தத் தீயில் ஈர விறகைப்போல் எரிந்து கொண்டே போங்கள்!’ இதை எண்ணிப் பார்த்தவன் உதட்டளவில் முறுவலித்தான். போகும் வேளையில் ஏற்பட்ட புன்னகை அவன் உதடுகளில் அப்படியே தேங்கி நின்றது. அவன் சிரித்த வண்ணமே உலகத்தின் நிலையாமைபற்றி ஏதாவது சொல்லுவானோ என்று தோன்றியது. ஆனால் அவனது மௌன ஒலி அவன் தொண்டைக்குள்ளேயே அடைத்து நின்றது. அவனது விழிகள் திறந்தது திறந்தபடி ஆகிவிட்டன. கண்ணாடி போன்றதொரு பளபளப்பு அதில் அப்படியே தேங்கி நின்றுவிட்டது. அவன் விழிகளில் ஒரு கவலைக் கீற்று ஒட்டியிருந்தது. அது அசையும் வழியாக இல்லை. வண்ண வண்ணமான நியான் விளக்கொளிகள் அவன் கண்களிலே எரிந்து கொண்டிருந்தன; அணைந்து கொண்டிருந்தன. ஒரு சமயம், சிவப்பு, ஒரு சமயம்

மஞ்சள்! ஒரு சமயம் பச்சை! அப்புறம் வெள்ளை என்று இப்படியே சுழன்று சுழன்று எரிந்தன.

'கட் கட்'—ஏதோ ஓர் ஒலி கேட்டது. எவனாவது எந்தக் கடையின் பூட்டையாவது உடைத்துக் கொண்டிருப்பானோ?—ஆமாம், இந்தத் திருடர்கள் ஏன் இரவு நேரங்களில் வருகிறார்கள்? அச்சமோ? தத்தேரி! யாரிடம் எதற்காகப் பயப்படவேண்டும்?—சாவு மட்டும் யாரைக் கண்டும் அஞ்சுவதில்லையே! அறைகளையும் கதவுகளையும் உடைத்துக் கொண்டல்லவா உள்ளே நுழைந்து விடுகிறது! நேரம், போது பார்ப்பதில்லை; மெதுவாக ஓசைப்படாமல் பாதம் ஊன்றி வந்து சாடுகின்றது. ஆனால் இது ஓசை யெழுப்பாத வெறுமையோடிய காலடியாகத் தோன்றவில்லையே! கனத்த, பருத்த பூட்ஸ்களின் ஒலியாக, ஆணிகளும் லாடங்களும் அடித்த பூட்ஸின் ஒலியாக அல்லவா கேட்கிறது! 'கட் கட்' என்னும் இந்த ஒலி பௌஜா சிங்கின் இரும்புப் பூண்போட்ட தடியின் ஓசையாகவும் அல்லவா தோன்றுகிறது! ஆம், புது மோஸ்தர் கடைத் தெருவில் ரோந்து சுற்றிவரும் காவலாளி ஹவல்தார் பௌஜாசிங்கின் கைத்தடி எழுப்பும் ஒலிதான் அது! இரண்டாவது உலகப் போரில் ஜர்மானிய மாகினோல்டு கோட்டைத் தாண்டும் பொழுது கூட நாம் இவ்வளவு வேகம் காட்டவில்லை; அச்சங்காட்டவில்லை. இந்தக் கழிசடைக் சாவுக்குப் பயப்படுவதா, அஞ்சுவதா? ஒரு நாள் இது கட்டாயம் வரத்தான்போகிறது. வேண்டாமென்றாலும் விடப்போவதில்லை. இருந்தாலும் என்ன சொல்ல? இந்தக் காவல் காப்பது என்கிற பித்துக்குளித் தொழில் இருக்கிறதே, இதிலே மிகவும் ஜாக்கிரதையாகத் தான் இருக்கவேண்டியிருக்கிறது! எந்த நேரம் வருமோ, யாருக்கு என்ன தெரியும்? திருடனுக்கும் வாடிக்கைக் காரனுக்கும் நேரம் பொழுதுகிடையாது என்கிறார்கள்! உலகம் ஒரு சந்தை, தம்பி! பகலில் வாடிக்கைக்காரன் வருவான், இரவில் திருடன் வருவான்! ஆனால் ஹவல்தார் பௌஜா சிங் திருடனை அடையாளம் கண்டு கொள்வான், வாடிக்கைக் காரனையும் அடையாளம் கண்டு கொள்வான். ஆனால் சாவைப் புரிந்துகொள்கிற ஆற்றல் அவன் கண்களுக்கு இல்லை. இப்பொழுதோ அவன் அதற்கு வெகு அருகாகச் சென்று கொண்டிருந்தான்.

"அடே! எங்கேயோ நாற் சந்தியில் கிடக்கிறாயே! இன்று வரவில்லையா, அவள்? உனக்கு ஏதோ கூட ஆகணுமே!...." நடைபாதையில் கிடந்த சவத்தின் கண்கள் இமையாமல் உற்றுப்

பார்த்துக் கொண்டிருந்தன. அதன் உதடுகள் ஹவல்தார் பௌஜா சிங்கைக் கூப்பிட்டன. ஆனால் குரல் என்னவோ, தொண்டைக்குள்ளேயே அடைத்துக் கொண்டாற்போலிருந்தது. பௌஜா சிங் அங்கிருந்து அவசரம் அவசரமாகப் போய்விட்டான் என்று தோன்றியது. அவனது கண்கள் எவனோ ஜர்மானியா வீரனைத் தேடிக்கொண்டிருந்தன. தம்பி, இது கடைத்தெரு அல்ல; போர்க்களம். எந்த நேரம் என்ன நிகழுமோ? இங்கே யாருக்குமே எதுவுமே தெரியாது. ஆமாம், பௌஜா சிங், நீ சொல்வது மெய்தான்! ஜர்மானிய வீரர்களுக்கு ஏதாவது ஒரு இருப்பிடம் உண்டு. ஆனால் இந்தக் கூறு கெட்ட சாவு இருக்கிறதே, இதைப்பற்றி யாருக்குமே எதுவுமே தெரியாது.

புதுமோஸ்தர் கடைத்தெருவில் நடைபாதையில் அவன் சவம் விறைக்கலாயிற்று. பல வண்ண நிறங்களில் நியான் விளக்குகள் மாறி மாறி நிறங்களை உமிழ்ந்து வர்ண ஜாலம் புரிந்து கொண்டிருந்தன. கணத்துக்குக் கணம் நிறம் மாறும் உலகம், பச்சோந்தி போல! அதோடு இந்த உலகம் நொண்டியாகி விட்டாற்போல அல்லவா தோன்றுகிறது! மெதுவாக நொண்டி நொண்டி, கால்களை இழுத்து வைத்து, இழுத்து வைத்து அவள் அவனை நோக்கி வந்தாள். அவள் உடல் புகையிலைப் புகையின் வாடையில் குளித்திருந்தது. 'ஹி ஹி ஹி!' எப்பொழுதும் போல் அவள் மட்டமான தொரு சிரிப்புச் சிரித்துக் கொண்டிருந்தாள். அவனுக்கு அவளைத் தெரியும். நொண்டி டாகரி அவள்! இந்தக் கடைத் தெருவில் எல்லோருக்குமே கூட அவளைத் தெரியும். சிலர் அவளைப் பிச்சைக்காரி என்றனர்; சிலர் பைத்தியக்காரி என்றனர். அவள் நாள் முழுவதும் சிகரெட் துண்டுகள் பொறுக்குவதையே அலுவலாகக் கொண்டிருந்தாள். இரவு நேரங்களில் இவனுக்கு அருகில் அமர்ந்து சிகரெட் புகைத்துக் கொண்டிருப்பாள், சிகரெட் புகைத்துக் கொண்டிருப்பாள்; அப்படி சிகரெட் புகைத்துக் கொண்டிருப்பாள்!

டாகரியைப் பார்த்ததும் அவன் கவனம் மேலே சென்றது. மேலே முரளிமனோஹரின் சிலைக்கு அருகில் ஒரு புறம் ஒரு பலகை பிளந்து கொண்டிருந்தது. இந்த இடத்தில் தான் அவன் தினமும் தனது உணவுப் பொட்டணத்தை மாட்டி வைப்பான். அவன் எப்பொழுதுமே டாகரி வருவதற்கு முன்னால் பொட்டணத்தைத் தொங்க விட்டு விட்டு, அதே இடத்தில் அமர்ந்து அவளை எதிர் பார்ப்பான். பிறகு இருவருமாகச் சேர்ந்து ரொட்டி தின்பார்கள்.

ஆனால் இன்று அவனுக்குப் பசியே எடுக்கவில்லை. அவன் வயிறு வெறுங்கட்டையாக மரத்துக்கிடந்தது!

"தூங்கிவிட்டாயா?" டாகரி கேட்டாள்.

ஒன்றும் பதில் வரவில்லை. அவள் அவனுக் கருகில் உட்கார்ந்து கொண்டாள். ஒரு மட்டரகமான சிரிப்பு சூன்யத்தில் மிதந்து நீந்தியது. அவன் உடல் அப்படியே முறுக்கேறிக் கிடந்தது. நிலைக் குத்திட்ட அவன் விழிகள் பளிங்குக் கற்கள் பதித்தாற் போலத் தோன்றின. டாகரி அவன் உடலைத் தொட்டுப் பார்த்தாள்! டாகரிக்குச் சிகரெட் புகை எல்லை மீறிக் குமைந்து விட்டதாகத் தோன்றியது. அவளுடைய அச்சத்தினால் விரிந்த விழிகள் அகன்று நீண்டு மேலும் பெரிதாயின. அவள் விழிகளிலிருந்து பயங்கரக் கரிய நிழல் ஒன்று புறப்பட்டு நியான் விளக்கின் ஒளியில் நிர்வாண முற்றன. டாகரி மீண்டும் அவன் உடலைத் தொட்டுப்பார்த்தாள். ஆனால் அவன் அப்படியே படுத்துக்கிடந்தான். ஆடை ஏதுமின்றி, நிர்வாணமாக. பெயரளவுக்கு ஒரு லங்கோட்டைத் தவிர அவன் உடலில் வேறு துணியே கிடையாது. ஆம், லங்கோடு மட்டும் தான்! அவன் தன் வாழ்நாளின் சம்பாத்தியம் முழுவதையும் அந்த லங்கோட்டில் வைத்துத்தான் பாதுகாத்து வந்தான். ஒரு பைக்குள் வைத்து லங்கோட்டில் மறைத்திருப்பான். ஒரு வெட்டு வெட்டி டாகரி அவன் லங்கோட்டை அவிழ்த்தாள். ஆனால் அந்தப் பையைக்காணோம். அவள் அசிங்கமான ஒரு வசவைத் தன் உதடுகள் வழியே உதிர்த்தாள். ஆடாமல் அசையாமல் கிடந்த அந்த உடலை வெறுப்போடு நோக்கிக் காறி உமிழ்ந்தாள். பிறகு தனக்குத் தானே ஹ ஹா ஹி ஹீ என்று சிரிக்கலானாள். சிரித்த சிரிப்பில் அவள் வயிற்றை என்னவோ செய்தது. ஆம், பசி குடலை வாட்டியது. ஆசை தவழும் விழிகளோடு மேலே தொங்கும் பொட்டணத்தைப் பார்த்தாள். பொட்டணம் அவள் கைகளுக்கு எட்டவில்லை. அவன் சவத்தைக் கொஞ்சம் சுவர்ப்பக்கமாக இழுத்துக்கொண்டாள். பிறகு அந்தச் சவத்தின் மார்பிலே கால்வைத்து ஏறிச் சற்று எழும்பி அந்தப் பொட்டணத்தை எடுத்தாள். பிறகு பின்னால் திரும்பிப் பாராமலே 'ஹி ஹி' என்று சிரித்துக்கொண்டே சென்று விட்டாள்.

அதற்குப் பிறகு ஒவ்வொன்றாக நியான் விளக்குகள் அணையலாயின. காலையில் உலாவச் செல்கிறவர்களின் நடமாட்டம் தொடங்கிவிட்டது. இரண்டு கிழவர்கள் அவன் பக்கமாகச்

சென்றூர்கள்! ஆழ்ந்த நித்திரையில் மூழ்கியிருப்பதாக நினைத்த அவர்கள், "எப்படிக் கவலேயே இன்றி நிம்மதியாகத் தூங்குகிறுன், பார்!" என்று பேசிக்கொண்டனர்.

"நமக்கு இரவு முழுவதும் தூக்கம் வருவதில்லேயே! இவர்களுக்கு மட்டும் எப்படி நிம்மதியாகத் தூக்கம் வருகிறது?"

பொழுது ஏறி வெளிச்சம் கூடக் கூட, மக்களின் நடமாட்டம் அதிகமாகியது. "அட, இவன் செத்தல்லவா கிடக்கிறுன்!" என்றுன் யாரோ ஒருவன்.

"நம் கடைத் தெரு பைத்தியக்காரன்!"

இந்தக் குரல் ஸேட் தனீராமின் குரல். முரளி மனேஹரின் சிலே வைத்திருந்த கடையின் வராந்தாவில் பிணம் கிடந்தது. அக்கடைக்கு இரண்டு கடைகள் தாண்டி ஸேட் தனீராமின் கடை. அவன்—ஆம், இறந்தவன்—ஸேட் தனீராமை நன்கு அறிவான். கீழ்ச் சாதிப் பயல்! இன்றைக்குப் பெரிதாக அநுதாபம் தெரிவிக்கிறுன், இரக்கம் காட்டுகிறுன்! எப்படிப் பச்சோந்திபோல நிறம் மாறுகிறது இந்த உலகம்! அவனுக்கு இன்னும் இந்த விஷயம் நன்ருக நினைவிருந்தது. கோடைக் காலத்துக் கொளுத்தும் வெய்யில்; அதோடு நட்ட நடுப்பகல்! நாக்கு வறட்சியினுல் மேலண்ணத்துடன் ஒட்டிக்கொண்டு விட்டது! அவன் ஓரிரு வாய் தண்ணீர் வேண்டி ஸேட் தனீராமின் கடை வாசலில் போய் நின்றுன்! தனீராம் அப்பொழுது தன் கடைக்குள் வைத்திருந்த மிஷினிலிருந்து ஐஸ்போல் குளிர்ந்திருந்த நீரை எடுத்துப் பருகிக் கொண்டிருந்தான்.

"ஸேட்ஜி! ஒரு வாய் குடிக்கக் குளிர்ந்த நீர் தாருங்கள்!" என்று அவன் கெஞ்சினுன்.

"குளிர்ந்த நீர் கேட்கிறதோ, உனக்கு? போ, போ! பெரிதாக வந்து விட்டான் தண்ணீர் கேட்க! அதோ எதிர்த்தாற்போல மிஷின்காரன் குளிர்ந்த நீர் விற்றுக்கொண்டிருக்கிறுன், கிளாஸ் இரண்டு காசுக்கு விற்கிறுன். போய் வாங்கிக் குடி! ஹி....ஹி... நீசப்பயல் மவனே!" என்று விரட்டினுன் அவன்.

நாவறட்சி தாளாமல் அவன் மிஷின் நீர் கொடுப்பவனிடம் சென்றுன். "போடா, போடா! நான் இங்கே தர்மத்துக்குத் தண்ணீர்ப் பந்தல் வைக்கவில்லே. பார்க்கவில்லே, கோடை எப்படிக் கொளுத்துகிறது! இங்கே வந்து ஐஸ் போட்ட தண்ணீர் கேட்க வந்து விட்டாயே! போ, போ! தூர விலகிப் போ! என்

வாடிக்கை நேரம் இது. வியாபாரத்தைக் கெடுக்காதே!'' என்று அதட்டினான் மிஷின் நீர் விற்பவன்.

''ஆமாம், வாடிக்கைக்கும சாவுக்கும் ஒரு நேரம்—பொழுது இடையாது. எப்பொழுது வேண்டுமானாலும் வரலாம். இவர்கள் எல்லோருமே மட்ட எண்ணக்காரர்கள்! ஒரே மாதிரிப் பேசுகிறார்கள்! எல்லாருமே தன் வாடிக்கைக்காரர்களைத் தான் அடையாளம் கண்டு கொள்கிறார்கள்; அவர்களைத் தாங்குகிறார்கள்! இவர்களுக்குத் தங்கள் வாடிக்கைகளை விட்டு வரப் பொழுது எங்கே இருக்கிறது!''

சிறிது நேரத்துக்கெல்லாம் அங்கு பக்கத்திலே மக்கள் கூட ஆரம்பித்து விட்டனர். மத்தியும் போலாவும் கைகளில் தகரக் குவளைகளை எடுத்துக் கொண்டு, முரளி மனோஹர் சிலை வைத்த கடைக்குப் போனபொழுது அது மூடியிருந்தது. இதென்ன விந்தை! அவர்கள் இருவரும் அங்கே வருவதற்கு முன்னாலேயே அந்தக் கடை திறந்திருப்பது வழக்கமாயிற்றே!

போலா மெதுவாக, ''மத்தி! இன்று லாலாவின் வீட்டிலே ஏதோ நல்லது நடக்கவில்லை. இத்தனை நேரம் கடை திறக்காததற்குக் காரணம் வேறு எதுவாக இருக்கமுடியும்?'' என்று கேட்டான்.

''ஆமாம், தம்பி! பெரிய ஸேட் ரொம்ப நாட்களாகவே நோய் வாய்ப்பட்டுக் கிடந்தார். எங்கேயாவது........''

இருவரும் ஒருவரையொருவர் பொருள் பொதிந்த பார்வையோடு பார்த்துக் கொண்டனர். இருவருடைய பார்வைகளும் தாமாகவே எதிரே சுவரில் ஒட்டியிருந்த திரைப்படப் போஸ்டர் ஒன்றின்மீது பதிந்தன. அதை யொட்டி இருவரும் பார்வையைக் கொண்டே ஒரு முடிவு கட்டினர், இன்று கடைகள் அடைத்திருந்தால் கட்டாயம் சினிமா பார்ப்பதென்று!

''ஆனால், தம்பி! இன்று ஒரு கடைகூடத் திறக்கக்காணோமே!'' அவர்களுடைய பார்வை சட்டென்று கூட்டத்தில் தாவியது. கடைத் தெருவில் உள்ள வியாபாரிகள் அனைவரும் பரக்கப்பரக்க இங்கும் அங்கும் பம்பரமாகச் சுற்றிக் கொண்டிருந்தனர். எல்லோருக்கும் என்ன பைத்தியம் பிடித்துவிட்டதா? பார்த்தால் எல்லோரும் சேர்ந்து சவ ஊர் வலத்துக்குப் பாடை தயாரித்துக் கொண்டிருந்தனர். தேங்காய்களும் ஈச்சங் குலைகளும் அப் பாடையை அலங்கரித்தன. வண்ண வண்ணக் காகிதங்களில்

கொடிகள் தகதகவென்று பிரகாசித்தன. நேர்த்தியான போர்வைகளும் கம்பளங்களும் குதுப் மீனரைப்போலக் குவிந்தன. இப்படிக் குவிப்பதில் வியாபாரிகள் அனைவரும் ஒருவரை யொருவர் போட்டி போட்டுக்கொண்டிருந்தனர். அவர்கள் கட்டிய அந்தக் குதுப் மீனருக்கு இன்னுமோர் அடுக்கு ஏற்பட்டுவிட்டால், வியாபாரிகளின் இதயம் கர்வத்தினால் பூரித்து நிற்கும்.

"யார் இறந்து விட்டார்கள்?" போலா யாரிடமோ கேட்டான்.

"நம் கடைத் தெருவில் உள்ள ஒரு பெரும் புள்ளி. இன்று கடைகள் எல்லாம் அடைத்திருக்கும்!" என்று கூறிவிட்டு அந்த ஆள் கூட்டத்தில் கலந்து கரைந்து சவ ஊர்வலத்துக்கான ஏற்பாடுகளில் முனைந்தான்.

இதற்கிடையில் மத்தி இறந்தது யார் என்பதை அறிந்து வந்திருந்தான். இருவரும் கூட்டத்திலிருந்து விலகி வெளியே வந்து விட்டனர்.

"நேற்றுவரைக்கும் பைத்தியக்காரனாக இருந்தான். இன்றைப் குப் பெரிய ஆளாகிவிட்டான். காலிப் பயல்!" என்றான் மத்தி.

பிறகு இரு தோழர்களும் கைகளில் ரொட்டிகள் நிறைந்த தகர டப்பாவைத் தூக்கிக்கொண்டு கம்பெனி பாக்கின் பக்கம் நடையைக் கட்டினார்கள்.

"தம்பி! உனக்குத் தெரியுமா? யாராவது இறந்து விட்டால், முன்பே ஆக்கிவைத்திருந்த உணவைப் புசிக்கக்கூடாது என்பார்கள்!" என்றான் ஒருவன் குரலில் துயரம் தோய.

"விடு, அப்பா! ரொட்டிக்கு என்ன அப்பா தீட்டு!" என்றான் மற்றவன்.

புது மோஸ்தர் கடைத் தெருவில் பாண்டு வாத்தியங்கள் முழங்க, வெகு விமரிசையோடு சவ ஊர்வலம் புறப்பட்ட பொழுது, மத்தியும் போலாவும் அந்தக் கூட்டத்தில் தாங்களும் ஒருவராக இருந்தனர். சவத்தின் மேல் இடையறாது காசு மழை பொழிந்து கொண்டிருந்தது. பிடி நிறையக் காசுகள் போலாவின் பையில் ஏறியதும் அவன் உரக்கக் குரல் கொடுத்தான்.

"நம் கடைத்தெருப் பைத்தியம்....!"

"வாழ்க!" மத்தி மறுகோஷம் இட்டான்.

இன்னும் கொஞ்சம் காசுகள் சேர்ந்ததும் இருவரும் மாடினிக் காட்சிப் பார்க்கத் திரைப்படத் தியேட்டரை நோக்கி நடந்தனர்.

# காய்ந்த கருவேலங் கிளை

பலந்தோவின் மாமனுரும் மைத்துனன் மாகியும் கழுத்தளவு சாராயம் குடித்துவிட்டனர். இரவு முழுவதும் வாய்க்கு வந்தபடியெல்லாம் திட்டித் தீர்த்துக் கொண்டிருந்தனர். அவளது வயதை ஒத்த பெண் அருகில் படுத்திருந்தாள். அப்படியிருந்தும் அப்பனுக்கும், மகனுக்கும் துளிச்சூட வெட்கம் வரவில்லை. அவளுடைய இரண்டு சிறு பிள்ளைகளும் பயந்துபோய்க் கவுதாரிபோல முரட்டுநூல் போர்வைக்குள் முகத்தையும் தலையையும் மூடி மறைத்துப் படுத்துக் கொண்டிருந்தனர். கியாலா பெண்களைப் போலப் பக்கத்தில் படுத்த வண்ணமே எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் மனம் நிலையில் இல்லை. கியாலாவுக்குக் கொடுத்த வாக்குறுதி அவளுக்கு நினைவு வந்தது. அதனால் முன்னைப்போல, 'வாருங்கள், நடக்கிறது நடக்கட்டும். பார்த்துவிடுவோம்' என்று அவளால் துணிந்து கூற முடியவில்லை. கடந்த சில மாதங்களாக அவள் ஒரு பொழுதும் வாய் திறந்து வார்த்தைகளைக் கொட்டுவதில்லை.

அவளுடைய மாமனுரும் மச்சினன் மாகியும் அவளை இப்படி வாயில் வந்தபடி திட்டியது இது முதல் தடவை அல்ல. பன்னிரண்டு பதின்மூன்று ஆண்டுகளாக, குடிவெறி தலைக்கு ஏறும் பொழுதெல்லாம் அவர்கள் பலந்தோவை இப்படித்தான் திட்டி வந்தார்கள். அவள் தன்னால் இயன்ற வரையில் யாரிடமும் தவருன வார்தைகளை விட்டதில்லை. ஆனால் அந்த இரண்டு படுபாவிகளுக்கும், வாயில் வழங்காத, வழங்கக்கூடாத சொற்களைக் கொண்டு திட்டவில்லை என்றால் வயிற்றுக்குள் சென்ற சாராயம் சரிப்படுவதில்லை. பலந்தோ கூடிய மட்டில் வீட்டு விலங்குகளைக் கூடத் திட்டுவதில்லை. அந்த வசவுகளை அவள் தலையிலேயே கட்டி அவர்கள் மிளகாய் அரைத்தால் என்ன செய்வது என்று எண்ணி வருகிற ஆத்திரத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டு வந்தாள். முன்பெல்லாம் அவள் எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டு வந்தாள். ஆனால் இப்போழுது பக்கத்தில் படுத்திருக்கும் தன்னையொத்த பெண்ணுக்கெதிரே, ஒரு குற்றமும் இல்லாமல் இருக்கும்பொழுது யாராவது அசிங்கமான வார்த்தைகளை உதிர்த்தால் அவளால் பொறுக்க முடிவதில்லை.

இரவு முழுவதும் பலந்தோவுக்குத் தூக்கம் வரவில்லை. அவள் உள்ளத்திலே கை நிறையக் கருவேலம் முள்ளை எடுத்து யாரோ தெளித்து விட்டாற்போன்ற உணர்ச்சியில் துடித்துப் போனாள். அவளால் புரண்டு கூடப் படுக்கமுடியவில்லை. நள்ளிரவு வரையில் அவளது விழிகள் ஆவணி—புரட்டாசி மாதத்து வானமென நினைத்து நினைத்துப் பொழிந்துகொண்டிருந்தன. நள்ளிரவு கழிந்ததும் சிறுகச் சிறுக உலர்ந்து உடலைக் கொளுத்தின. அத் தீயிலும் சூட்டிலும் அவளுடைய விழிகள் தாமாகவே மூடிக்கொண்டன. கண்கள் திறந்தபொழுது அவள் பதறிப்போய் எழுந்து உட்கார்ந்தாள்.

பொழுது விடிந்து நன்றாகப் பொழுது ஏறியிருந்தது. கியாலா மாடுகளுக்குத் தீனி வைத்துக் கொண்டிருந்தான். அவளுடைய மூத்த பெண் அடுப்பில் தேநீர் தயாரித்துக் கொண்டிருந்தாள். அவள் ஒரு முறை சுற்றுச் சூழலைப் பார்த்தாள். தூக்க மின்மையினால் எரிந்துகொண்டிருந்த கண்களால் எதைப் பார்த்தாலும் புதிதாகத் தோன்றியது அவளுக்கு. அவள் விழிகள் அவளையும் மீறிச் சொருகிக் கொண்டன. அவள் தன் உள்ளங்கையினால் கண்களைத் தேய்த்துவிட்டுக் கொண்டாள். திடீரென்று தன் இரு கைகளையும் எதிரே நீட்டி உள்ளங்கைகளை உன்னிப்பாகக் கவனித்தாள்; அவற்றிலேயே முள் முளைத்துக் கண்களை உறுத்துவது போன்ற பிரமையில் ஒரு கணத்துக்குப்பின் கைகளை உதறி மீண்டும் இமைகளைத் தேய்த்துவிட்டுக் கொள்ளலானாள்.

கடந்த இரண்டு ஆண்டுகளாக அவள் தன் கண்களைத் தேய்த்து விட்டுக்கொள்ளும் பொழுதெல்லாம், கேழ்வரகுக் கதிரின் நுனியைத் தேய்த்துத் தான்ய மணியை பிரிப்பதுபோலத் தன் உருவத்தையே தேய்த்து எடுப்பதாக உணர்ந்தாள். ஒவ்வொரு முறையும் அவளுக்குத் தன் அழகின் மணிகள் உதிர்ந்து சிதறுவதாகத் தோன்றும். மிகுந்திருப்பவை வெறும் உமியாகப் படும். அந்த உமியும் குவியலாக இல்லாமல் பறவைகளின் அலகுகளினால் குதறப்பட்டுச் சிதறிக் கிடப்பதுபோலத் தோற்றமளிக்கும்.

திருமணமாகிப் புருஷன் வீட்டுக்கு வந்த புதிதில், பலந்தோவைப் பார்க்க ஊர்ப் பெண்கள் வந்தார்கள். அவள் அழகைப் புகழ எந்தச் சொற்களை உபயோகிப்பது என்றே புரியாமல் அவர்கள் திண்டாடினார்கள். கிராமத்தில் எதற்கும் குற்றங் குறை கண்டு பிடித்துத் 'தொசுக்கு'ச் சொல்கிறவள் என்று

சோதான் நைநுவுக்குப் பெயர். அவளாலேயே ஒரு குறையும் கண்டு பிடிக்க முடியவில்லை. அவள் அழகுக்கு உவமையும் கூற முடியவில்லை. அப்ஸரஸ் போல, வடித்த சிலையென, மலர் அரசியை நிகர்த்த என்று எந்த உவமையை எடுத்தாலும் சுவையற்றதாகவே அவளுக்குத் தோன்றின. உடை உடுக்கக் கூடச் சரியாக வராத இந்த ஜாட்டுகளின் வீட்டிலே நல்ல சிவப்பு ரத்தினம் அல்லவா வந்து விழுந்திருக்கிறது!' என்று கூறி ஒருவாறு ஒப்பேற்றினாள். அவளது கண்கள் உண்மையாகவே அப்பொழுது ரத்தினமெனத்தான் ஒளிர்ந்தன. ஆனால் இப்பொழுதோ—பதினான்கு ஆண்டுகள் கழிந்த பின்போ—அந்த ரத்தின விழிகள் அழுக்கேறிய சோழிகளெனத் தோன்றின. அந்த ரத்தினங்களிலிருந்து சுடர்விட்டுப் பிரகாசிக்கின்ற கதிர்களின் ஒளி மிகவும் மங்கிவிட்டது. அவற்றின் ஒளியில் அக்கம் பக்கத்துப் பொருள்கள் பளிச்சிடவில்லை. உள்ளத்துப் பொருள் எதுவும் உருப்பெறவில்லை; வெளிப்பொருள்களின் நிழலும் படியவில்லை. அவற்றின் இருபுறமும் பதினான்கு வருஷத்திய புழுதி படிந்து மண் நிறம் ஏறிவிட்டாற்போலத் தோன்றியது.

மாடுகளுக்குத் தீனி வைத்துவிட்டு கியாலா அடுப்பின் எதிரே வந்து உட்கார்ந்து கொண்டான். அவன் மூத்த பெண் ஜீதான் கோப்பையில் தேநீர் ஊற்றி அவன் எதிரே கொண்டு வந்து வைத்தாள். கியாலா கோப்பையை எடுத்து வாய் அருகில் கொண்டுபோனபொழுது ஜீதான் தன் பார்வையைத் தூக்கித் தந்தையைப் பார்த்தாள். கியாலாவினால் தன் மகளின் கண்களில் தெறித்த ஒளியைப் பொறுக்க முடியவில்லை. அவன் தலை குனிந்து பார்வையைத் தாழ்த்தினான். ஆனால் ஜீதான் அப்படியே பார்த்துக் கொண்டிருந்தாள். ஒரு சமயம் தந்தையின் ஆழ்ந்து குழிந்த கண்களைப் பார்த்தாள்; மறு சமயம் கரடியாக வளர்ந்த தாடியைப் பார்த்தாள்.

தந்தை—மகளின் இந்தப் பார்வையிலே என்ன கண்டாளோ, தெரியவில்லை! பலந்தோவுக்கு அழுகை அழுகையாக வந்தது. தனது சேலைத் தலைப்பைச் சுருட்டி வாயில் அடைத்துக் கொண்டாள். அதே முள்கள் பலந்தோவின் உள்ளத்தைக் குத்தின. ஒவ்வொரு மயிர்க் காலிலும் முள் குத்துகிறாற்போன்ற வேதனையை உணர்ந்து துடித்தாள். அப்புறம் அப்படியே கட்டிலில் உட்கார முடியாமல் சாய்ந்துவிட்டாள். முதுகுப் புறமாக இது நிகழ்ந்ததனால் கியாலாவுக்கோ ஜீதானுக்கோ இது தெரியவில்லை.

தேநீர் அருந்திவிட்டுக் கியாலா பருத்திப் பயிர்களுக்குக் கொத்திக் கொடுப்பதற்காக வயலை நோக்கிச் சென்றுவிட்டான். ஜீதான் வீட்டைக் கூட்டிக் குப்பை கூளங்களை அள்ளினாள்; கொட்டிலைப் பெருக்கிச் சாணியைக் குவித்தாள். அடுப்படி வேலைகளையும் முடித்துக்கொண்டு, வயலுக்குச் சோறு எடுத்துக் கொண்டு புறப்பட்டாள். பலந்தோ சோர்ந்துபோய்க் கட்டிலில் படுத்துக் கிடந்தாள். அவளுக்கு உணவு கொள்ளவும் தோன்ற வில்லை. இரண்டு சிறிய குழந்தைகளும் தாமாக எப்பொழுது பள்ளிக்குச் சென்றனவோ, அதுவும் அவளுக்குத் தெரியாது. சந்தடியற்றுக் கிடந்த வீட்டில் பலந்தோவுக்கு இருப்புக் கொள்ள வில்லை. திக்திக் என்று மனம் அடித்துக் கொண்டது. ஏதாவது வேலை செய்யும் நோக்கத்தில் அவள் எழுந்து உட்கார்ந்தாள். ஆனால் கட்டிலில் எழுந்து உட்கார்ந்தவளின் கண்களில், எதிர்த் தாற்போலிருந்த குட்டைச் சுவருக்கு அந்தப் பக்கத்திலிருந்து மாமனாரின் தலைப்பாகை தெரிந்தது. பலந்தோவின் உள்ளத் தினுள்ளே சிதறிக் கிடந்த முட்கள் மீண்டும் அவளுடைய உரோமக் கால்களைக் குத்தின. அவள் மறுபடியும் கட்டிலில் விழுந்துவிட்டாள். கியாலாவுக்குக் கொடுத்த வாக்குறுதியை மறந்துவிட்டாள்.

திருமணமாகி இந்த வீட்டுக்கு வந்தநாள் முதற்கொண்டு அவள் மாமியார் அவளைக் கேலி செய்து துளைத்தெடுத்தாள். அவள் அதிகமாகக் குத்திக் காட்டியது வரதட்சிணை விஷயம்தான். "நாங்கள் என்ன உதவாக்கரைகளா, கையால் ஆகாதவர்களா? வெறும் வெள்ளிக் காப்புகளைப் போட்டு இந்தக் கட்டையிலே போறவங்க இவளை ஏங்க தலையிலே கட்டிவிட்டாங்களே! அழகை மட்டும் வைத்துக்கொண்டு என்ன செய்கிறது? தேனை நக்குவதா?" வெகுநாட்கள்வரை அவள் பலந்தோவின் முகத் துக்கெதிரே இப்படியெல்லாம் கேலிசெய்து குறை கூறவில்லை யென்றாலும், அக்கம்பக்கத்து வீட்டுப் பெண்களைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு அவளைப் பற்றிக் குறைகூறத் தவறியதில்லை. அவள் கேலி செய்வது பலந்தோவுக்கு தெரியாது என்பதில்லை இருந்தாலும், பலந்தோ தன்னைப் பொறுத்தவரை எந்தக் குறைக் கும் இடம் வைத்துக் கொண்டதில்லை. அலுக்காமல் சலிக்காமல் வீட்டு வேலைகள் அனைத்தையும் கவனித்து வந்தாள். வீட்டில் உள்ள பத்து ஜீவன்களுக்குச் சமையல் செய்வாள். ஏழெட்டு வாயில்லாப் பிராணிகளுக்குத் தவிடு தீனி வைத்துக் கவனித்துக்

கொள்ளுவாள். யாருடைய உடலிலும் அழுக்குத் துணியைக் காணச் சகியாள். வீட்டைப் பளபளவென்று பளிங்குபோல் வைத்திருப்பாள். இவ்வளவு செய்தும் நாளுக்குநாள் மாமியாரின் கெடுபிடிகளும் ஏசல்களும் அதிகமாகிவிடவே அவளுக்குச் 'சே' என்று போய்விட்டது. நாளடைவில் கிடைத்த சாக்குப் போக்கை வைத்துக்கொண்டு மாமியார் பலந்தோவின் முன்னிலையிலேயே அவளைப்பற்றிக் குறையிட முற்படவே, பலந்தோ பொறுமை இழந்துவிட்டாள்.

ஒருநாள் இரவு அவள் கியாலாவிடம் விஷயம் அத்தனையும் விண்டு கூறினாள். ஆனால் கியாலா பெண்ணின் இயல்பு படைத்த ஆண் மகனாயிருந்தான். அவன் வெகு அடக்கத்தோடு, "நான் பிறந்தது முதற்கொண்டு அப்பா—அம்மாவுக்கு எதிர் நின்று பேசியதில்லை. நீ அவர்களெதிரே வாய் ஆடினால் இருக்கிற கௌரவமெல்லாம் போய்விடும். உனக்குத் தோன்றுகிறதைச் செய். ஆனால் என் அப்பா—அம்மாவுக் கெதிரில் மட்டும் பேசாதே; ஆயுள் உள்ள அளவும் பேசாதே!" என்றான்.

கியாலா தன் தாய்—தந்தையருக்கு எதிரே பேசுவதில்லை என்று அவளிடம் வாக்குறுதி பெற்றுக்கொண்டான். அப்படி வாக்குறுதி வாங்கிக்கொண்டது பலந்தோவுக்குப் பிடிக்கவில்லை. யாரோ திடீரென்று வயலில் பாய்ந்து கொண்டிருந்த நீரின் மடைவாயில் காய்ந்த கருவேலங் கிளையைச் சொருகிவிட்டது போன்ற உணர்ச்சியில் மிதந்தாள். பலந்தோவின் மனம் நீருக்காகக் காய்ந்து கொண்டிருக்கும் வயலைப்போல முதலில் வறண்டது. அப்புறம் அதில் வெடிப்புகள் பாளம் பாளமாகத் தென்பட்டன.

முழுசாக மூன்று ஆண்டுகள் அவள் தன் மாமியாரின் கடுஞ் சொற்களையும் சுடுசொற்களையும் குத்தல் பேச்சுக்களையும் கேட்டு வந்தாள். குடிகார மாமனார், தலைக் கனம் மிகுந்த மைத்துனன்—இவர்களுடைய பொறுக்கமுடியாத திட்டுக்களையும் வசவுகளையும் கூடக் கேட்டுக் கொண்டாள். ஆனால் கியாலாவுக்குக் கொடுத்த வாக்குறுதியை மட்டும் மீறவில்லை. முதல் நாளிலிருந்தே அவளுக்குக் கியாலாவிடம் அளவுக்கு மீறிய இரக்கம் ஏற்பட்டது. அதனால் குழந்தைகளைப்போல அவனைப் பலவகையிலும் பொத்தி பொத்தி வைத்துக்கொண்டாள். அவளது அந்த அநுதாபம் இப்பொழுது மோகமாகவே மாறிவிட்டது. அவள் கியாலாவுக்காக அனைத்தையும் துறக்கச் சித்தமாகிவிட்டாள்.

பிறகு அவளுடைய மைத்துனனுக்குத் திருமணமாகியது அவளுடைய ஓரகத்தி வீட்டின் உள்ளும் வெளியும் சீதனப் பொருள்களால் நிறைத்துவிட்டாள். பலந்தோவுக்குக் கொஞ்சம்—நஞ்சமிருந்த மரியாதையும் தீர்ந்துவிட்டது. அவள் கியாலாவிடம் பல முறைகள் பிரித்துக் கொள்ளுமாறு கூறினாள். ஆனால் அவனுடைய தாயும் தந்தையும், தம்பியும் சேர்ந்து அவன் மனைவியின் மீது இல்லாத பொல்லாத பல குற்றங்களைச் சாட்டி அவனையும் பெண்டாட்டிதாசன் என்று கூறி வீட்டைவிட்டு வெளியேற்றாத வரையில் அவன் அவர்களிடமிருந்து பிரித்துக்கொள்ள முனையவில்லை.

பிரிவினையின் பொழுது கூடக் கியாலா பெண்களைப் போலவே தான் பேசினான். அவன் தகப்பனார் அவன் பங்குக்கான வயல் முழுவதையும் கொடுக்கவில்லை. கொடுத்த வயல்களும் மிகவும் மட்ட ரகமானவை செய் நேர்த்திக் குறைவானவை, முள்ளும் புதரும் மண்டிக் கிடந்தவை. வீட்டுப் பொருள்களிலும் கூட ஐந்திலோ ஆறிலோ ஒரு பங்குதான் கொடுத்தான். ஒட்டி உலர்ந்து கிழடு தட்டிவிட்ட இரண்டு மாடுகள் அவன் வீததுக்குக் கிடைத்தன. உழ கிழ அவை சிறிதும் பயன்படாதவை. பலந்தோ பிறந்த வீட்டிலிருந்துகொண்டு வந்த பாத்திரம் — பண்டங்கள், துணி—மணிகள் ஆகியவற்றில் அவர்கள் பாதிக்குமேல் தங்களிடம் வைத்துக்கொண்டு விட்டனர். கியாலா வாய் திறக்கவில்லை. பலந்தோவும் அவனுக்குக் கொடுத்த வாக்குறுதியை எண்ணி வாளாவிருந்தாள். இருவரும் பொறுமையைப் பருகி மௌனம் சாதித்தனர்.

இப்படியாகப் பொறுமையைக் கடைப்பிடித்துப் பதினொரு ஆண்டுகள் ஓடிவிட்டன. பன்னிரண்டாவது ஆண்டு தொடங்கியிருந்தது; குப்பை—கூளத்துக்கும் கூட ஓர் அதிர்ஷ்டம் அடிக்கும் என்பார்களே, அந்தப் பன்னிரண்டாவது ஆண்டு தொடங்கியிருந்தது. ஆனால் அவர்கள் இருவரையும் பற்றிக் கேட்பார் யாரும் இல்லை. அவர்களுடைய பாதி இடிந்த வீடு அதே பழைய நிலையில் இருந்தது. சுட்டகல் என்ன, சுடாத கல்லைப் பயன்படுத்திக் கூடச் செப்பனிட முடியவில்லை. அதே மாட்டுக் கொட்டில், ஆனி—ஆடி மாதங்களில் மாடுகளின்மேல் நேரிடையாக வெய்யில் விழும். தொழுவத்தில் வேய்ந்திருந்த கூரை அதே பழைய கூரை ஆதலால் வெய்யில் காலத்தில் மாடுகளுக்கு நிழல் தரவேண்டும் என்பதை மறந்து, தானே வெய்யிலில் காய்ந்து மாய்ந்து கொண்டிருந்தது. பின் கட்டில் இருந்த அறை மாரிக்காலத்தில்

குளம் கட்டி நிற்கும். பலந்தோ முடிந்தவரையில் எந்த நேரமும் தன் வீட்டைச் சீர் செய்வதிலேயே பொழுதைச் செலவிட்டு வந்தாள். ஆனால் அவளுடைய கை உழைப்பை மட்டும் கொண்டு அரை நூற்றாண்டுக்குமேல் அந்த வீட்டைத் தாங்கிய சுவர்களும் மரங்களும் புதிதாகி விடமுடியுமா? பிரித்துக் கொண்டபின் அவர்கள் நல்லதோர் எருமையோ, உடல் வலுவுள்ள வண்டி மாடுகளோ வாங்கவில்லை. வண்டியும் என்ன; கூண்டு கூட அதே பழையது. போன—வந்த இடங்களில் சிம்பு வைத்துக் கட்டியிருக்கும். அச்சுகள் தேய்ந்து ஆடும் கிழிந்த செருப்பைப் போட்டுக்கொண்டு இழுத்து இழுத்து நடப்பதுபோல எப்படியோ சமாளித்து வந்தான். அவன் வண்டி வருவதைப் பார்த்தாலே மக்கள் கேலியாக, 'நாகூரிக் காளைகள் பூட்டிய கியாலாவின் வண்டி வருகிறது டோய்!' என்று கேலி செய்து மகிழ்வார்கள்.

கடந்த பதினொரு ஆண்டுகளாக பலந்தோ மாமனார், மாமியார், மைத்துனன் ஆகியவர்களுடைய சுடு சொற்களையும் குளிர்ந்த சொற்களையும் கேட்டுப் பழகிப் போயிருந்தாள்; கியாலாவுக்குக் கொடுத்திருந்த வாக்குறுதி என்னும் காய்ந்து மடிந்த கருவேலங் கிளையை ஒடிந்துபோக விடாமல், பொத்திப் பொத்திக் காப்பாற்றி வந்தாள் இந்தக் கிளையோடு இன்னும் என்ன என்னவோ சிறிய பெரிய பொருள்கள் குப்பைகூளமாகச் சேர்ந்து நீரோட்டத்தை முற்றிலுமே அடைத்து விட்டன.... அவள் மனம் வெகு நாட்களாக இரக்கம் என்னும் நைப்பே காணுமல் வறண்டு உலர்ந்து விட்டதனால், எருக்கம் பழத்தைப்போல வெடித்துப் போயிருந்தது. சிற்சில சமயம் அடைபட்டுத் தேங்கி நின்ற வெள்ளம் புதுவேகத்துடன் தாக்கும். காய்ந்த கருவேலங்கிளை எப்பொழுது விட்டுக் கொள்ளுமோ என்று தோன்றும்.

மற்றவர்கள் ஏதோ சொல்லுகிறார்கள், சொல்லிக்கொண்டு போகட்டும் என்று விட்டாலும் சக்களத்திபோல ஓரகத்தியும், சல்லிக்குப் பிரயோசனமில்லாத விஷயங்களுக்கெல்லாம் அவள் மனத்தைப் புண்படுத்தித் துளைக்கத் தவறுவதில்லை. அவள் எத்தகைய பெருந்தனக் கார வீட்டிலிருந்து வந்தவளோ, தெரியாது. பலந்தோவின் நிலை மோசமாக, மோசமாக அவளது கேலிப் பேச்சும் வெகண்டைப் பேச்சும் வளர்ந்தன. பலந்தோவின் குழந்தைகளில் ஒன்று ஏதாவது வேண்டுமென்று அழுது அடம் பிடித்தால், அதைக் கண்டு அவள் மனம் மகிழ்ச்சியுறும்.

கியாலாவும் பலந்தோவும் வாய் தடித்துப் பேசுவதைக் கேட்டால், அவளுடைய உள்ளங் குளிரும். சுவரோடு சுவராகக் காதை வைத்துக்கொண்டு அவள் பேச்சு முழுவதையும் ஒட்டுக் கேட்பாள். அப்புறம் கடுகை மலையாக்கி ஊர் உலகம் முழுதும் பரப்புவாள்.

தனக்கும் தன் ஓரகத்திக்கும் என்ன பகை என்பது ஆரம்பத்தில் பலந்தோவின் அறிவுக்கு எட்டவே இல்லை. ஒருநாள் ஓரகத்தியின் தகப்பன் திடீரென்று கன்று போட்ட புது எருமை ஒன்றைக் கொண்டு வந்து கட்டிச் சென்றான். பக்கத்து வீட்டுப் பசிந்தியின் மருமகள் வந்து இச்செயலுக்குத் தன் பாராட்டுகளைத் தெரிவித்தாள். அப்பொழுது பலந்தோவின் காதுகளில் விழும்படியாக, விழிகளில் வினைதேக்கிக் கூறினாள் ஓரகத்தி: "ஆண்டவன் புண்ணியத்திலே எல்லாம் இருக்கின்றன எங்கள் வீட்டில். எங்கள் வீட்டுக் கொட்டிலில் ஏழு எருமைகள் யானை யானையாக நிற்கின்றன. 'உனக்கு எந்த எருமை பிடிக்கிறதோ அதை ஒட்டிப் போ' அன்று எங்கள் அப்பா சொன்னார். மற்றவர்களைப்போலக் கையில் செம்பைத் தூக்கிக்கொண்டு வீடு வீடாக நான் மோருக்கு அலையக் கூடாது என்ற எண்ணம் அவருக்கு!"

அப்பொழுதுதான் பலந்தோவுக்கு உண்மை விளங்கியது, தன் ஓரகத்திக்குப் பிறந்த வீட்டுப் பணக்காரப் பெருமை பிடிபடவில்லை என்று! புகுந்த வீட்டிலும் இதனால்தான் அவளுக்கு மட்டும் மரியாதையும் அதிகம் என்பதையும் உணர்ந்தாள். பலந்தோவை அவள் ஈயும் எறும்பும்போல நினைத்ததற்கு இதைவிட வேறு என்ன காரணம் இருக்கமுடியும்?

அப்பொழுதுதான் முதன்முதலாகப் பலந்தோவின் மனத்தில் இந்த விஷயம் முள்ளாகத் தைத்தது. 'நானும் கையில் பசை உள்ள அப்பா-அம்மாவுக்குப் பெண்ணாகப் பிறந்திருந்தால், ஓரகத்தியைப் போலவே நானும் கொட்டிலில் எருமையைக் கொண்டு வந்து கட்ட முடிந்திருந்தால், இதைப் போன்ற கேலிப் பேச்சுகளைக் கேட்கவே நேர்ந்திராது!' என்று எண்ணினாள். ஆனால் அவளுடைய அப்பா அம்மாவுக்கு என்ன 'வக்கு' இருந்தது? அவர்களால் உடுக்க ஓரிரு துணிகள்கூட வாங்கிக்கொடுக்க முடியவில்லையே! அப்பொழுதுதான் அவளுக்கு ஏழைமை எத்தனை சாபக்கேடு என்று புரிந்தது

...அப்புறம் நாளுக்குநாள் நீர் ஏறிக்கொண்டே இருந்தது. கருவேலங்கிளை தன் சக்தியையும் மீறி ஈடு கொடுக்கும்படி இருக்

தது. ஆனால் கிளையின் அக்கம்பக்கத்தில் சேர்ந்த பொருள்கள் அது ஒடிந்து விடாமல் பார்த்துக்கொண்டன. பலந்தோவின் உள்ளத்திலுள்ள நிலத்தில் இன்னும் அதிக வெடிப்புகள் ஏற் பட்டன; புற்களின் வேர்கூடத் தீய்ந்து போகலாயின........

பலந்தோ நாள் முழுவதும் சோர்ந்து படுத்துக்கொண்டிருந் தாள். பொழுது சாய்ந்து கியாலா வீடு திரும்பினான். பலந்தோ கட்டிலில் படுத்துக் கிடப்பதைக் கண்டு அவன் விதிர்விதிர்த்துப் போனான். பலந்தோவிடம் கொஞ்சம் நஞ்சமிருந்த அழகும் நிறமும்கூட விடைபெற்றுக்கொண்டு விட்டாற்போலத் தோன் றியது. கண்கள் மிகவும் உள்ளே போயிருந்தன. கீழிருந்து காணும்பொழுது மை இட்டாற்போலத் தோன்றியது, கறுத்துச் சிறுத்துப்போய். கை, கால், முகம் எல்லாம் மஞ்சள் பூசினாற் போல வெளுத்திருந்தன.

கியாலா வாட்டமே உருவாக மாட்டுத் தொழுவத்தில் போய் உட்கார்ந்துவிட்டான். அவன் தலையிலும் முதுகிலும் வலி ஏறி னாற்போலிருந்தது. அவன் கோடரியின் பிடியில் தலையை முட்டுக் கொடுத்துக்கொண்டு அமர்ந்து விட்டான். அவனுக்குத் தலை சுற்றியது. அவன் பலந்தோவின் அந்தக் காலத்து மூக்கையும் விழிகளையும் நினைவுபடுத்திப் பார்த்தான். பதினைன்கு வருடங் களுக்கு முன்னால் அவளுடைய மேனி எப்படி மெருகிட்டிருந்தது? பால் போன்று வெளுப்பான எண்ணெய்க் காகிதத்தினால் செய் யப்பட்ட பொம்மை போன்றிருந்தாள் அவள்! கைபட்டால் அழுக் காகிவிடுமோ, அழுத்திப்பிடித்தால் எங்கே சுருக்கம் விழுந்து விடுமோ என்று அவன் அஞ்சி அஞ்சியே பழகியிருக்கிறான்.

கியாலா தலையைத் தூக்கிப் பார்த்தபொழுது, மாகி எதிரே தலை மயிரைக் கலைத்துக்கொண்டு வளைய வளைய வந்துகொண் டிருந்தான். வகையாகப் புட்டி போட்டுவிட்டால், அவன் போதை யில் அப்படித்தான் ஆடிப் போவான். கியாலா மாட்டுத் தொழு வத்தில் வருத்தமே உருவாக உட்கார்ந்திருப்பதை அவன் குதி காலில் நின்று எட்டிப் பார்த்தான். உரக்க வெண்கலக் குரல் எடுத்துக் கூறினான்: 'பெண்டாட்டி தாசர் எப்படி இருக்கிறார்?' அவன் கேட்ட அந்தக் கேள்வியில் ஒரு கரகரப்பும் கடுகடுப்பும் தாண்டவமாடின.

கியாலா அவனிடம் எப்பொழுமே உரத்தித் தாழ்த்தி எதுவுமே பேசியதில்லை. அவன் பிரிந்து வந்து பதினேரு ஆண்டுகள் ஓடி

விட்டன. அவனுடைய குடிகாரத் தம்பி எத்தனையோ முறைகள் கசக்கக் கசக்கப் பேசியிருக்கிறான், கேலி செய்திருக்கிறான், குத்தலாகப் பேசியிருக்கிறான். ஏன், பலந்தோவைக் கூட நேருக்கு நேராகவே திட்டியும் இருக்கிறான். ஆனால் அதற்குப் பதில் கியாலா 'டே' போட்டுக்கூடப் பேசியதில்லை. நீர் பருகுவது போல எல்லா விஷயங்களையும் கடகட வென்று தொண்டைக்குள் இறக்கிவிட்டு வீட்டுக்குள்ளே நுழைந்து விடுவான். இன்றும் அதேபோலத்தான் பேசாமல் வீட்டுக்குள்ளே நுழைந்துவிட்டான். அறைக்குள் கூரை நிழலில் படுத்திருந்த பலந்தோ, இப்படிப் பேசாமல் கியாலா உள்ளே நுழைவதைக் கண்டதும் வெந்து மாய்ந்து விட்டாள். பதின்மூன்று வருட வறட்சியில் அவள் மனம் எருக்கம் பழமென வெடித்துப் போய்க் கிடந்தது. அவள் உள்ளுக்குள்ளேயே வெம்பிப் போனாள். சூரியன் கக்கும் அனல்-வெய்யில் அவ்வளவும் தன் தலையிலேயே விழுவதாக எண்ணி மாய்ந்து போனாள்.

பலந்தோ எழுந்து உட்கார்ந்தாள். ஆனால் மைத்துனருக்குப் பதிலாகக் குடிவெறியில் மூழ்கிக் கிடந்த மாமனார் நிற்பதைக் கண்டாள். மாகி எள்ளி நகையாடிவிட்டு அப்பால் நகர்ந்து விட்டிருந்தான். மரண ஓலையை ஏந்தி நிற்கும் பார்வையில் அவள் அச்சத்தோடு தன் மாமனாரைப் பார்த்தாள். அவளை இட்டுச் செல்வந்திருக்கும் எமதர்மனின் தூதர்களைப் போன்றதொரு பிரமையில் மூழ்கினாள். வெகு நேரம் வரை அவளுக்குத் தன் மாமனாருக் கெதிரே தலையில் முக்காட்டுத் துணியின்றி உட்கார்ந்திருக்கிறோம் என்ற நினைப்பே வரவில்லை. கட்டிலில் எழுந்து உட்கார்ந்தபொழுது கூட அவள் தலையிலிருந்து நழுவிய துப்பட்டாவைச் சரி செய்து கொள்ளவில்லை.

....அவ்வளவுதான். வாக்குறுதி என்னும் காய்ந்த கருவேலங் கிளை பட்டென்று ஒடிந்தது. தேங்கி நின்ற நீர் முழுவதும், ஒடிந்த கிளையோடு, அக்கம் பக்கத்தில் அடைந்து தேங்கிக் கிடந்த பொருள்களோடு, பத்தாண்டுகளாகப் பசித்து நசித்துக்கிடந்த வாய்க்கால் வழியே வெள்ள நீரைப் போலப் பெருகி ஓடியது. பலந்தோவின் வெதும்பிய உள்ளத்தில் பிளந்து கல்லைப்போன்று கெட்டிப் பட்டுவிட்ட வெடிப்புகள் நீரின் ஈரம் படவே, இன்னும் வெடித்து இடம்விட்டுக் கொண்டன.

"தத்தேரீ!" — வெறும் தலையோடு அவள் உட்கார்ந்திருப்பதைக் கண்ட அவள் மாமனார் உரத்த குரலில் திட்டத் தொடங்

கிறுன் : "அடி தேவடியா முண்டை! நீ எங்களை நரித் தொம்பர்களாக்கி விட்டாயே? துண்டு துண்டாகச் சதையை வெட்டிப் போடுவேன். வெளியியே யாருக்கும் தெரியாமல் காதும் காதும் வைத்தாற்போலக் காரியம் நடந்துவிடும். எந்தத் தைரியத்திலே நீ இப்படி ஆட்டம் போடுகிறும்?"

ஆனால் இன்று பலந்தோவுக்கு முன்னைப் போல மாமனுரிடம் அச்சம் உண்டாகவில்லை. அவன் திட்டைக் கேட்டுவிட்டுத் துப்பட்டியை எடுத்து அவள் தலையில் போர்த்திக் கொள்ளவும் இல்லை. கண்களைக் கூடக் கீழே தாழ்த்திக்கொள்ளவில்லை. அப்படியே கொட்டக் கொட்ட விழித்து மாமனுரையே பார்க்கலாளுள்.

"என்ன சமாச்சாரம்?" தகப்பன் திட்டுவதைக் கேட்டு மாகி அருகில் வந்து குடிக்காரக் குரலிலேயே தகப்பனைக் கேட்டான்.

"இதைப் பாரேன்! இந்தக் குறத்தி எப்படி ஊர் சிரிக்கும்படியான காரியத்தைச் செய்கிருள், தெரியுமா? எத்தனையோ தலை குனியவைக்கும் செயல்கள் செய்து விட்டாள். இது ஒன்று பாக்கி யிருந்தது. அதுவும் பாக்கி யிருப்பானேன் என்று செய்து முடித்துவிட்டாள். பார்க்கவில்லை நீ? தொம்பச்சிகளைப்போல எப்படி மானம்—வெட்கத்தைவிட்டு உட்கார்ந்திருக்கிருள்? நாற்ற முண்டை! கொஞ்சம் போய்க் கடா வெட்டுகிற கத்தியைக் கொண்டு வா, சொல்கிறேன்! இவள் தொல்லைகளுக்கு ஒரு முடிவு கட்டிவிட்டு மறு காரியம் பார்க்கிறேன்! ஆயுள் முழுவதற்கும் இந்தக் களங்கத்தைக் கட்டிச் சுமக்கவேண்டாம், பாரு!" என்ருன் தகப்பன்.

"நீ எதற்கு உன் வெள்ளை மயிரிலே கரியைப் பூசிக்கவேணும்? அந்தப் புண்ணியத்தை நான் சம்பாதிக்கவிடு. அப்புறம் நம் அண்ணனின் மூளை நிதானத்துக்கு வந்துவிடும். இன்றைக்கு இவள் தலையை வாங்கி விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பேன்!" மாகி தனது அவிழ்ந்த தலையை முடிந்துகொண்டே அறை கூவல் விடுத்தான்.

பிறகு அவன் மாட்டுத் தொழுவத்தில் ஏறிச் சுவர் வழியாகத் தாண்டி பலந்தோவின் முற்றத்தில் போய்க் குதித்தான். பலந்தோவின் மாமனுரும் வாயில் வந்தபடி திட்டிக்கொண்டு தெரு வழியாக அங்கே வந்து சேர்ந்தான். கூச்சலையும் இரைச்சல்களையும் கேட்டுக் கியாலாவும் உள்ளிருந்து வெளியே வந்தான். அரக்கர்களைப்போல் அட்டகாசம் புரிந்துகொண்டு வரும் தன் தம்பியையும் தகப்பனையும் பார்த்து நடுநடுங்கிப் போனுன்.

....ஆனால் கருவேல மரத்தின் காய்ந்த கிளை முன்பே மடித்துப் போய் ஒடிந்து விட்டிருந்தது.

அவர்கள் இருவரும் வருவதற்கு முன்பாகவே பலந்தோ பற்களைக் கடித்துக் கொண்டு எழுந்து விட்டாள். உள்ளுக்குள்ளே போயிருந்த அவளுடைய கண்கள் ரத்தச் சிவப்பாகச் சிவந்தன. அதே வெற்றுத் தலையோடு அவள் ஓடிச் சென்று மூலையிலிருந்த இரும்பு உலக்கையைத் தூக்கிக் கொண்டாள். "வாங்க! எந்தப் பயல் மகன் என் கிட்ட வந்து விடுகிறான், பார்த்து விடுகிறேன்! எவனாவது என் மேலே கையை வைக்கட்டும், அவனைப் பூண்டோடு ஒழித்துக் கட்டி வயிற்றைக் கிழித்து வெளியே எடுத்து வைத்து விடுகிறேன்!" என்று ஆங்காரத்தோடு அவள் கூவல் விடுத்தாள்.

அவள் ஒரேயடியாக உரக்கக் கூச்சலிட்டு விட்டாள். அவள் குரலைக் கியாலாவினாலேயே அடையாளம் கண்டு கொள்ளமுடிய வில்லை. குழந்தைகள் நடுநடுங்கிப்போய்ச் சுவரோடு சுவராக ஒட்டிக்கொண்டன. உரக்க வீறிட்டுக் கத்தவும் தொடங்கின. கியாலா வின் அப்பனும் தம்பி மாகியும் கூடச் சற்று பயந்துதான் போய்விட்டார்கள். பன்னிரண்டு ஆண்டுகளாக வசையையும் திட்டையும் வாங்கிக் கட்டிக்கொண்டு, சுவரைப்போல உணர்ச்சி யற்ற பிண்டமாகச் செருப்படிகளையும் பட்டுக்கொண்டு நின்ற பெண்தான் தங்கள் எதிரே நின்றுகொண்டிருக்கிறாள் என்பதை அவர்களால் ஒருகணம் நம்பமுடியவில்லை! அவர்களுடைய சுடு சொற்களை எப்படியெல்லாம் அவள் பொறுமையாக ஏற்றுக் கொண்டாள்! வாய் திறந்து ஒரு சொல் கூறியிருப்பாளா இவ்வளவு நாட்களும்? ஆனால் இன்று அதே பெண் தானே சாக்ஷாத் காளி உருவம் தரித்துக் கையில் உலக்கை ஏந்தி இரு ஆண் பிள்ளைகளுக்கு எதிரே வீரமே உருவாக நின்று கொண்டி ருக்கிறாள்! இந்தக் காட்சி குடி மயக்கத்தில் இருந்த அவர் களுடைய கண்களுக்குமே விந்தையாகக் காட்சி தந்தது. ஆனால் அடுத்த கணமே குடிபோதையில் இருந்த அவர்களுடைய விழி களே ஆழ்ந்து எதுவுமே சிந்திக்காமல், கோபத்தைக் கனலாகக் கக்கின. அப்பனும் பிள்ளையும் அந்தத் தொம்பப் பெண்ணை அப்படியே கிழித்துத் தின்னும் கொதிப்போடு ஓநாய்களைப் போலப் பாய்ந்தார்கள்.

"பலந்தோ!" கியாலா உரக்கக் குரல் கொடுத்து அழைத்த தோடு மட்டுமின்றி அவளண்டை ஓடினான்.

ஆனல் பலந்தோ...! இப்பொழுது யார் பலந்தோ? எங்கே இருந்தாள் பலந்தோ?— கருவேலமரத்தின் காய்ந்த கிளை ஒடிந்து விட்டது...

கியாலா அவளை நெருங்குவதற்கு முன்பாகவே, பலந்தோ தன்னை நோக்கிவரும் மாகியின் மீது பாய்ந்துவிட்டாள்.

அவள் மாகியின் வலது தோளில் தன் பலம் கொண்டமட்டும் இரும்பு உலக்கையை ஓங்கிப் போட்டாள். உடனே மாகியின் கை ஒடிந்த கிளை போலத் தொங்கிவிட்டது. மாமனர் தன்னை நோக்கி வருவதைக் கண்ட பலந்தோ மாகியை விட்டுவிட்டு அவன் மீது பாய்ந்து விட்டாள். பலமான இரும்பு உலக்கையின் அடி தனக்கும் விழவே, கியாலாவின் தகப்பன் திட்டிக்கொண்டே கம்போ மூங்கிலோ தேடி வரும் சாக்கில் திரும்பி முற்றத்தில் இறங்கி ஓடிவிட்டான். கியாலா ஓடி வந்து பலந்தோவை நெருங்கிய பொழுது சிலம்ப வித்தைக்காரனைப்போல ஹுங்காரம் செய்து கொண்டு பலந்தோ பின் வாங்கினுள். பின்னலிருந்த சுவரில்போய்ச் சாய்ந்து நின்று கொண்டாள். அங்கே நின்றபடியே அவள் அறைகூவல் விடுத்தாள்;

''வரட்டும். அவங்களுக்கு வேண்டியவங்க யாராவது இருந்தால் என் கிட்ட வரட்டும்! இதோ பாரு! பதினன்கு வருஷங்கள் என் இதயத்தைப் போட்டு எரிச்சிருக்கீங்க நீங்க. பெண் பிள்ளைன்னு நினைச்சு! இப்பொழுது கொஞ்சம் கிட்ட வந்து பார்த்தால் தெரியும். உங்கள் இரத்தத்தை உறிஞ்சிவிட்டு மறுகாரியம் பார்க்கிறேன். அந்தப் பூங்கொடி—ராணியம்மா இருக்கிருளே, அவளையும் கூப்பிட்டுக்குங்க. அவள் தானே தினமும் மகாராஜாக்களான தன் அப்பா — அம்மாவிடமிருந்து யானையானையாக எருமைகள் கொண்டு வந்து கட்டுகிருள்! அட, அழுக்குப் பசி பிடிச்சவங்களே! சோமாறிகளே! நீங்கள் ஆம்பிள்ளையாக இருந்தால், இந்த ஏழைப் பெண்ணின் அருகில் வந்து பாருங்க! பதினன்கு வருஷங்கள் உங்கள் பேச்சுக்கு மறு பேச்சுப் பேசாமல் கேட்டு வந்தேனே, அதற்குப் பலனுக என்னை ஏழை யென்று எண்ணி உள்ளத்தைத் துளைத்துப் புண்ணுக்கி வந்தீங்க. வாங்க, இப்போ என் பக்கத்திலே... கொஞ்சம் பாருங்க, பெண்ணின் கை பலத்தையும்! பெரிய வீரர்களாயிற்றே நீங்கள்! கிட்ட வாங்க, வந்து பாருங்க! இரத்தத்தைக் குடிக்கிறனு, இல்லையா என்று! என்னை என்ன வென்று நினைத்தீர்கள்?''

ஒருகண நேரத்துக்கு அவள் முகம் சிவந்துவிட்டது, நிசமாகவே அப்பொழுதுதான் இரத்தத்தைக் குடித்துவிட்டு வந்திருக்கிறவள் போலத் தோன்றியது. அச்சத்தில் யாருமே அவள் அருகில் நெருங்கவில்லை.

கூச்சலைக் கேட்டு அக்கம் பக்கத்து ஜனங்கள் கூடிவிட்டனர். பலந்தோ வெறுந் தலையோடு, கையில் உலக்கை ஏந்தி நிற்பதைக் கண்டும் வரய்க்கு வந்தபடி சுடுசொற்கள் உதிர்ப்பதைக் கேட்டும் பலர் வெட்கித் தலை குனிந்தனர். கியாலாவின் அப்பனுக்கும் தம்பி மாகிக்கும் வேண்டாத சிலர் 'நன்ருகவேண்டும் இவர்களுக்கு!' என்று மனத்துள் எண்ணி முறுவலித்துக் கொண்டிருந்தனர்.

இந்தர் நம்பர்தார் தனது அறுபது வருஷ வாழ்க்கையில் இது போன்ற வெட்கம் கெட்ட பெண்ணைப் பார்த்ததே இல்லை. வெட்கமும் கோபமும் அவனை வியர்க்க விறுவிறுக்க வைத்து விட்டன. இப்படி ஒரு பெண் திட்டுவதை அவனுல் பொறுக்க முடியாமற் போகவே, தனது பெருந்தனத்தையும் நாட்டாண்மையையும் நிலைநாட்டுபவன்போல ஓர் அதட்டல் போட்டான்:

"பேசாமல் இருக்கப் போகிருயா இல்லையா, மானங்கெட்டவளே! தொம்பச்சியைப்போல ஏன் கூச்சல் போடுகிருய்? உனக்கு என்ன பிடிச்சிருக்கு, பேயா, பிசாசா? என்னவோ ஏகிறிப் பேசுகிருயே!"

இப்படிக் கேட்ட வண்ணமே அவன் சற்று முன் வந்தான். அதைக் கண்டதும் பலந்தோ உரக்கக் கூச்சலிட்டு ஊரைக்கூட்டி விட்டாள்:

"இதோ பார், தாத்தா! உன் தலைப்பா ஜாக்கிரதை! வீணை மரியாதை கெட்டுப் போகாதே! உன் நாட்டாண்மை யெல்லாம் உன்னேடு இருக்கட்டும், உன் வீட்டோடு இருக்கட்டும்! இவர்கள் எல்லாருமாகச் சேர்ந்து எனக்குக் கொடுமை இழைத்தபொழுது, பெரிய பஞ்சாயத்துப் பேச இப்போது வந்து நிற்கிற நீ எங்கே போய் விட்டே? இந்த ஊரில்தான் இருந்தாயா, அல்லது வேறு எங்கேயாவது........?"

நம்பர்தார் நாக்கைக் கடித்துக் கொண்டான்; வாயைப் பொத்திக் கொண்டான்.

அப்புறம் திடீரென்று காயே மாறிவிட்டது. பலந்தோவை விட்டுவிட்டு இந்தர் நமபர்தார், பொறி கலங்கினுற்போல் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்த கியாலாவின் மீது பாய்ந்தான்.

"ஏண்டா பயலே! நீயும் ஒரு மனிதனுடா, ஆண் பிள்ளையாடா? இந்தக் குரங்குக்கு இடம் கொடுத்துத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு குதிக்கிறுயேடா! இந்த மாதிரி ஆடுகளுக்குப் பின்னே போய் நீ கிராமத்துக்கே அல்லவா கெட்ட பெயரைச் சம்பாதித்துத் தருகிறுய்! ஏண்டா நாயே, உனக்கு வெட்கமாயில்லை?" என்று ஏசினுன்.

இமை கொட்டும் நேரத்தில் எல்லாரும் பலந்தோவை விட்டு விட்டுக் கியாலாவின் தலையில் ஏறி மிளகாய் அரைத்தார்கள்; எலியைக் கவ்வும் பருந்தாகப் பாய்ந்து குதறினுர்கள்.

"ஏண்டாலே! நீ ஓர் ஆண் பிள்ளையாடா?"

"இவன் மட்டும் ஆண் மகனுக இருந்தால், ஒரு பெண் பிள்ளை இவ்வளவு தூரம் இவன் தலையில் ஏறியிருப்பாளா?"

"இவன் பெண்களுக்குப் பின்னுலே பிறந்தவன் அப்பா! அதனுலேதான் பெண்களைக் காட்டிலும் மட்டமாக நடந்து கொள்ளுகிறுன்!"

"என் பெண்சாதி இப்படி வாயாடினுல் வெட்டி விறகு ஆக்கியிருப்பேன், முண்டையை!"

"வாயில் வந்ததைப் பேசுவது என்றுல் ஒரு பெண்ணுக்கு என்ன துணிச்சல் இருக்கணும்? தலை மயிரைப் பிடித்துக் குலுக்கிப் பிடறியில் நாலு வைச்சாத் தானுகப் படியும் மாடு!"

கியாலா இத்தனை வசவுகளையும் கடுஞ் சொற்களையும் கேட்டுக் கொண்டிருந்தான். எல்லாமே அவனுக்குக் கனவுபோல் இருந்தது. 'பெண்' என்னும் சொல்லைக் கேட்கும்பொழுது, இரண்டு கைகளையும் பிடித்து நூற்றுக்கணக்கானவர்கள் இரண்டு பக்கமும் இழுப்பதுபோன்ற உணர்வில் தவித்துத் தத்தளித்துப் போனுன். அவனுக்காக ஒவ்வொரு விஷயத்திலும் விட்டுக் கொடுத்தவள் பலந்தோ. தன் உடலையே உருக்கிக் கொண்டவள். கதைகளில் வரும் அரசர்களின் உயிர் அரசமரத்துப் பொந்தில் வாழும் கிளியினுள் இருக்கிறது என்பார்களே, அது போலப் பலந்தோவினிடத்தில்தான் தன் உயிர் இருப்பதாக அவன் பல முறைகள் எண்ணியிருக்கிறுன். இவர்கள் பெண்ணிடம் என்ன சொல்லிக்கொண்டிருந்தார்கள்? கியாலாவின் நிலை மூர்ச்சையற்றவனைப் போன்றிருந்தது. அவன் ஒரேயடியாய் பித்தனுகி விட்டான்; வெறியனுகி விட்டான்.

கடைசியில் பல புத்திசாலிகள் தீர யோசித்து மாகியையும் அவன் தகப்பனையும் பலவந்தமாக அங்கிருந்து இழுத்துச் சென்

றனர். ஒவ்வொருவனும் பலந்தோவையும் பெண்டாட்டிதாசன் கியாலாவையும் இஷ்டத்துக்கு வைது தீர்த்தான். அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாக எல்லோரும் அவ்விடத்தைவிட்டு அகன்றனர். முற்றத்துக் கூச்சல் ஊர் முழுவதும் பரவிவிட்டது. ஆனால் பலந்தோ அப்படியே இரும்பு உலக்கையைப் பிடித்துக் கொண்டு சுவரோடு ஒட்டி நின்றுகொண்டிருந்தாள்.

கியாலா வாய் அடைத்துப்போய் அறைக்குள் ஓடிப் புகுந்து கொண்டான். உள்ளே போனவன் எப்பொழுது தனக்குத் தானே சிரித்துக்கொண்டானோ, அவனுக்கே தெரியவில்லை. அவனது விந்தைச் சிரிப்பைக் கண்டு, ஏற்கனவே பயந்துகொண்டிருந்த குழந்தைகள் இன்னும் பயந்துவிட்டன. அந்திக் கருக்கலில் அந்தச் சிரிப்பு அவர்களுக்கு என்ன கிலியைத் தந்ததோ, ஒரேயடியாக வாய் அடைத்துப்போய்க் கிடந்தனர்.

....அப்புறம், அதே நேரத்தில் வெளியே ஏதோ பொருள் விழும் ஒலி அவனுக்கு கேட்டது. புயல் காற்றில் தேக்கு மரத்தின் கிளை ஒன்று ஒடிந்து விழுந்தாற் போன்றிருந்தது. அவன் அலறிப் புடைத்துக்கொண்டு வெளியே ஓடினான். பலந்தோ தப்புற விழுந்து கிடந்தாள். அவன் அவளைக் கைகளில் ஏந்தி உள்ளே தூக்கிக்கொண்டு வந்தான்.

இந்த நிகழ்ச்சிக்கு ஏழாவது நாள் பலந்தோ இறந்துவிட்டாள் என்னும் செய்தி மக்களிடையே பரவியது.

# கழுவில் தொங்கிய கணங்கள்

கீருணு தூங்கி எழுந்தாள். இன்றையப் பொழுதை லீனுவுடன் எப்படிப் போக்குவது என்று அவளுக்குப் பிடிபடவில்லை. அன்று ஞாயிற்க்கிழமை. படுக்கையிலிருந்து எழுந்திருக்கவேண்டும் என்ற எண்ணமே கருணுவுக்கு எழவில்லை. விந்தையானதோர் அரை குறை மயக்கமும் தளர்ச்சியும் அவளது உடலின் ஒவ்வொரு பகுதியிலும் பாசி போலப் படிந்திருந்தன.

எத்தனையோ இரவுகளாக அவளுக்குத் தூக்கமே வரவில்லை. காலையில் படுக்கையிலிருந்து எழுந்தால், இரவு முழுவதும் மைல் கணக்கில் நடந்துபோய் வந்தது போன்றதோர் ஆயாசம் அவளை ஆட்கொண்டிருக்கும். விடியற்காலையில் எழுந்தால் மக்களின் உடல் பூப்போல் இலேசாகவும் உற்சாகம் ததும்பியதாகவும் இருக்கும். ஆனால் அவளோ பெருஞ்சுமை சுமந்திருப்பவள் போல, களைப்போடு விழித்திருப்பவள்போலத் தோன்றுவாள்.

அன்று இரவு அவளுக்குத் தூக்கமே வரவில்லை. விடியற்காலை யில் கோழி கூவும் குரல் கேட்டு அவள் மெதுவாக எழுந்து லீனு வின் கட்டிலில் போய்ப் படுத்தாள். தூங்கிக்கொண்டிருந்த லீனு வையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு அவளது சின்னஞ்சிறிய மாம்பழக் கதுப்புக் கன்னங்களில் தன் கன்னங்களை ஒத்திக்கொண்டாள். அதற்குப்பின் அவள் எப்பொழுது கண் உறங்கினளோ, அவளுக்கே தெரியாது.

காலையில் உறக்கம் நீங்கியதும் கருணு அன்றையப் பொழுதை எப்படிக் கழிப்பது என்று யோசிக்கலானாள். தூங்குவதா, படுத் திருப்பதா? எழுந்து விடுவதா?— இந்த யோசனையில் அவள் வெகு நேரம் வரை அப்படியே படுத்திருந்தாள். லீனுவின் இழைந்து வந்த மூச்சொலியைக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவளது வேலைக்காரி சுடச்சுடத் தேநீர்க் கோப்பையைக் கொண்டு வந்து அவள் அருகில் சிறிய மேஜைமீது வைத்ததும் தான் எழுந்து உட்கார்ந்தாள்.

"அம்மா! இன்னிக்கு என்ன, நீங்க எழுந்திருக்கப் போவ தில்லையா?"

"அப்படி யெல்லாம் ஒண்ணுமில்லை, கடோரியா! இன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை, பாரு........"

"இன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை, நாளைக்குத் திங்கள்கிழமை. திங்கள்கிழமை காலையில்தான்........"

"வேண்டாம், வேண்டாம்! ஒன்றும் யோசிக்காதே. சிந்திக்காதே!" அவள் உள்ளிருந்து யாரோ உரக்கக் குரல் கொடுத்தார்கள்.

தேநீர் அருந்தி முடிந்ததும் அவள் கோப்பையைத் திரும்பவும் மேஜைமேல் வைத்தாள்.

அவள் மண்டைக்குள் ஏதோ பெரும் புயல் வீசுகிறாற் போன்ற இரைச்சல், கோட்டை அடுப்பு எரிகிறாற் போன்ற குடைச்சல்! தொலைவிலிருந்து ஏதோ சீறிக்கொண்டு வருகிறாற் போன்ற பிரமை! அவளுக்கு ஒன்றுமே தெரியவில்லை; ஒன்றுமே தோன்றவில்லை.

இன்று ஞாயிற்றுக்கிழமை, நாளை திங்கட் கிழமை, திங்கட் கிழமை காலையில்........

கருணை கடிகாரத்தைப் பார்த்தாள். எட்டரை மணி ஆகியிருந்தது. நாளைக்குப் பத்து மணிக்குப் பிறகு எந்தநேரமும்........ எந்த நேரமும்........ ஆம், உண்மையில் இன்னும் இருபத்தைந்தரை மணிநேரம் தான் எஞ்சியிருந்தது.

கருணை லீனுவின் முகத்தை நோக்கினாள். லீனுவின் நீண்ட, பட்டுப் போன்ற கரிய இமைகள் அவளுடைய உருண்டைக கன்னங்களின் ஓரத்தில் இலேசாக நிழலேற்றிக் கெண்டிருந்தன. சுருண்டு தொங்கிய அவளுடைய முன்நெற்றி மயிர்கள் கொத்துக் கொத்தாக நெற்றியை மறைத்துக் கொண்டிருந்தன. கருணைவுக்கு ஸ்ரீமதி தீவான் சொன்னது நினைவுக்கு வந்தது. "ஐயோடி அம்மா! உன் பெண் இன்னும் ஐந்தாறு வருஷம் பெரியவளாக இருநதால், நான் என்னுடைய லலித்துக்குக் கல்யாணம் செய்து வைத்து என் மருமகளாக்கிக் கொண்டிருப்பேன்! ஏன் லீனு! நீ ஏழெட்டு ஆண்டுகள் முன்னமே ஏன் பிறக்கவில்லை?"

லீனு வெட்கத்தோடு, "எனக்குத் தெரியாது, அத்தை! ஒரு வேளை எங்கள் அம்மாவுக்குத் தெரிந்திருக்கும். சொல்லேன் அம்மா!" என்பாள்.

அது சிரிப்பா, கண்ணீரா, பெருமூச்சா? என்ன என்று தெரியவில்லை. கருணையின் தொண்டைக்கேறி அடைத்துக்கொண்டது கருணை வெற்று வாயை ஒரு விழுங்கு விழுங்கிக்கொண்டாள். தொண்டையில் அடைத்துக்கொண்டிருந்த பொருளை எப்படியோ மென்று விழுங்க முயன்றாள்.

கருணா அலட்சியமாக ஆர்வமின்றிச் செய்தித் தாளைப் புரட்டினாள். சப்ரு ஹவுஸில் குழந்தைகளுக்கென்று இரண்டு நல்ல படங்கள் வந்திருந்தன. "ஆமாம், அதுதான் சரி. லீனுவை அதற்கு அழைத்துப் போகிறேன். அப்புறம் முடியுமோ, முடியாதோ; தெரியாது" என்று எண்ணினாள். உடனே கருணா லீனுவை எழுப்பினாள். புறப்பட ஆயத்தப்படுத்தினாள். "அம்மா! நான் எந்த 'பிராக்' போட்டுக் கொள்ளட்டும்?" என்று கேட்டாள் லீனு.

கருணா அலமாரியைத் திறந்துவிட்டாள். லீனுவின் பிராக்குகள், ஸ்கர்ட்டுகள், பிளவுஸ்கள் எல்லாம் ஹாங்கரில் தொங்கிக் கொண்டிருந்தன. கருணாவின் துணி-மணிகள் வெகு குறைவாகவே இருந்தன. பாக்கி எல்லாமே லீனுவின் உடைகள் தான். "உனக்கு எது பிடிக்கிறதோ, எடுத்து உடுத்திக் கொள்!" என்றாள் கருணா.

லீனுவின் முகத்தில் இலேசாக நிழலாடியது. அவள் தன் தாயைப் பார்த்தாள். கருணா வேறு புறமாகப் பார்வையை ஓட்டினாள். இரண்டு அடி நகர்ந்து மேஜையில் இருந்த ஒரு புத்தகத்தை எடுத்து நேராக வைக்கலானாள். தனக்குப் பின்னாலிருந்து வந்த ஓசையைக் கொண்டு, லீனு ஹாங்கரிலிருந்து ஏதோ துணியை எடுத்துக்கொண்டிருக்கிறாள் என்பதை மட்டும் குறிப்பால் உணர்ந்தாள். கண்ணாடி வில்லைகள் பதித்த கறுப்பு ஸ்கர்ட்டும், நல்ல மஞ்சள் நிறத்தில் கைத்தறிப் பட்டில் தைத்த பிளவுஸும் அவள் எடுத்துக்கொண்டிருக்கிறாள் என்பதைக் கருணா கண்டாள்.

துணிகளைக் கையில் எடுத்துக்கொண்டு லீனு பேசாமல் பக்கத்து அறைக்குச் சென்றுவிட்டாள். சில நாட்களாக அவள் கருணாவுக்கு எதிரில் உடை மாற்றிக்கொள்ளுவதில்லை. லீனுவுக்கும் தான் பெரியவளாகி விட்டாற்போன்றதொரு எண்ணம் வந்துவிட்டதாகக் கருணா எண்ணினாள். "பைத்தியக்காரி! பெற்ற தாயிடமே வெட்கம் வந்துவிட்டதே!"—கருணாவுக்கு அந்த ஒரு கணம் மனச்சுமை சற்றுக் குறைந்தாற் போன்றிருந்தது.

கருணா முன்போலவே மேஜையருகில் பேசாமல் நின்றுகொண்டிருந்தாள். லீனு உடைமாற்றிக் கொண்டு திரும்பிவிட்டாள். கருணாவுக்கு அன்று லீனு முன்னைக் காட்டிலும் பெரியவளாக, உயர்ந்து விட்டவளாகத் தோன்றினாள்.

கடோரியா மேஜைமீது தேநீர் வைத்துச் சென்றிருந்தாள். "லீனு! சீக்கிரமாக இரண்டு கோப்பை தேநீர் தயார் செய்.

நான் இதோ வந்து விட்டேன்!'' என்றாள் கருணா, தன் முகத்தில் தோன்றிய நிழல் சுமையை லீனுவிடம் மறைக்க விரும்புபவள் போல.

மேஜையெதிரே உட்கார்ந்து கருணா தன் கோப்பையை ஸ்பூனினால் கலக்கிக் கொண்டிருந்தாள். தேநீருக்குப் போட்டிருந்த சர்க்கரை எப்பொழுதோ கரைந்திருக்கும் என்று தெரிந்திருந்த பொழுதிலும் அவள் கைகள் ஓயவில்லை. லீனு வெண்ணெய் தடவிப் பராட்டா சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். லீனுவும் தன் முகத்தில் ஆடிய நிழலை மறைக்க மிகவும் பிரயாசைப்பட்டு முனைந்திருப்பதுபோலக் கருணாவுக்குத் திடீரென்று தோன்றியது.

வெகு விரைவில் லீனு பெரியவளாகிவிட்டது போலவும், தனக்குச் சமமாக வளர்ந்துவிட்டது போலவும் கருணா நினைப்பில் ஆழ்ந்தாள். இருவரும் சமவயதுப் பெண்கள் என்ன, பெண்மணிகளாகவே ஆகிவிட்டாற் போன்றதொரு எண்ணம் அவளை ஆட்கொண்டது. இருவருக்கும் தெரிந்த மொழி ஒன்று. ஆனால் இருவருமே அம்மொழியில் வார்த்தையாடவில்லை. இருவருமே ஒருவருக்கொருவர் ஆறுதலாக இருக்கவெண்ணி, ஏதும் அறியாதவர்கள்போல நடிப்பதாகவும், எனவே பேச்சுக்கு இடம் இல்லாமற் போய்விட்டதாகவும் எண்ணினாள். எனவே, அந்த மௌனத்தைக் கலைக்க, "லீனு! இன்னும் கொஞ்சம் வெண்ணெய் எடுத்துக் கொள்ளேன்!'' என்றாள்.

"போடேன்!'' அம்மாவைத் திருப்திப் படுத்துவதற்காகவே வெண்ணெய் போட்டுக் கொள்பவள்போலத் தோன்றியது.

"லீனு! உன் பால் கோப்பையில் ஓவல்டின் போடட்டுமா?''

"போடேன், அம்மா!''

நாளைக்கு என்ன ஆகுமோ........ கருணா மேல் யோசனையை மிகவும் முயன்று நிறுத்திக்கொண்டாள்.

இருவரும் தங்களைச் சிங்காரித்துக் கொண்டு சப்ரு ஹவுஸுக்குப் போனார்கள். ஹாலில் இருட்டைப் பரவச் செய்ததற்காகத் திரைப்படத்தை வாழ்த்தினாள். படமும், இருட்டும் இருபத்தைந்தரை மணிப் பொழுதில் சில பகுதிகளை விழுங்கின.

படம் பார்த்து முடிந்தபின் அவர்கள் 'க்வீன்ஸ்வே'க்குச் சென்றார்கள். கருணா லீனுவுக்கு ஜயப்பூர் தயாரிப்பான கனத்த முத்து வளையல்கள் வாங்கிக் கொடுத்தாள். சிறந்ததொரு சிறு கதைப் புத்தகமும் வாங்கித் தந்தாள்.

"என்ன சாப்பிடுகிறாய், லீனு?"

"ஒன்றும் வேண்டாம், அம்மா!"

இப்படிச் சொன்ன லீனு தாயாரின் முகத்தைப் பார்த்தாள். அவள் முகத்தில் என்ன கண்டாளோ, சட்டென்று, "அம்மா! குவாலிட்டிக்கு அழைத்துப் போகிறாயா? டபுள் ஸண்டே சாப்பிடுவோம்!" என்றாள்.

லீனு டபுள் சண்டே வாங்கிக்கொண்டாள். கருணை ஒரு கப் காப்பிக்குமட்டும் ஆர்டர் கொடுத்தாள்.

மேஜையில், மேஜைக்கு அக்கம் பக்கத்தில் பொருளற்றதொரு மௌனம் நிலவியது. இருவரும் ஒரு நோக்கமுமின்றி இங்கும் அங்கும் பார்வையை ஓட்டினர், பக்கத்து ஆசனங்களில் அமர்ந்திருந்தவர்களை மாறி மாறிப் பார்த்துக் கொண்டனர்.

பொழுது சாய்ந்து மாலைநேரம் வந்துவிடவே, கனாட் பிளேஸில் ஆரவாரம் அதிகரிக்கலாயிற்று. சிறிது தொலைவு சென்றதும், கருணை லீனுவைப் பார்த்து, "இனி நாம் வீட்டுக்குப் போவோமா, அல்லது வேறு எங்காவது போய் வருவோமா?" என்று கேட்டாள்.

லீனு சற்று யோசித்துவிட்டு, "அம்மா! நாம் ரஜனியைப் போய்ப் பார்த்தால் என்ன?" என்று கேட்டாள்.

'பார்த்தால் என்ன?'— கருணைவுக்குத் தூக்கி வாரிப்போட்டது. 'லீனுவும் ஒருவேளை பயப்படுகிறாளோ, எங்கேயாவது........எங்கேயாவது........'

கருணை தன்னைச் சமாளித்துக் கொண்டு, "தாராளமாக! இப்பொழுதே போவோம்!" என்றாள்.

ரஜனி லீனுவை அழைத்துக் கொண்டு தன் அறைக்குச் சென்றுவிட்டாள். ரஜனியின் தாயார் கருணையின் உள்ளத்தை ஊடுருவிப் பார்ப்பவள்போல் பார்த்துக் கொண்டே ஒரு மோடாவை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தாள். பிறகு, "நான் கேள்விப்பட்டது........" என்று நீட்டினாள்.

கருணைவுக்கு அவளுடைய அந்த ஊடுருவிய பார்வையும் அந்த அநுதாபச் சொற்களும் கட்டோடு பிடிக்கவில்லை. பிறர் எதிரே தன் துயரத்தைக் காட்டிக்கொள்ள, தன் சோகக் கதையைச் சொல்லிக் கொள்ள அவள் நினைத்ததே இல்லை. 'தொழுநோய் வந்த பிச்சைக்காரன், மக்களின் அநுதாபத்தைப் பெற நாலுபேர்

கூடுமிடத்தில் நோயுற்ற அங்கங்களைத் திறந்துகாட்டிக் கொள்வதுபோல...... சீ! என்னவேண்டிக் கிடக்கிறது;' இப்படி ஓடியது சிந்தனை.

எனவே, அங்கிருந்து எழுந்துபோய் விட்டால் என்ன என்று கருணா எண்ணினாள். ஆனால் அது எப்படி முடியும்? அதனால் ரஜனியின் அம்மாவின் பேச்சை நீளவிடாமல் இடையிலேயே வெட்டி, "ஆமாம், நாளைக்குத் தீர்ப்பு ஆகிவிடும்!" என்றாள்.

"நாளைக்குத்தான் தீர்ப்பா?" ரஜனியின் தாயார் மீண்டும் பேச்சைத் தொடர முயன்றாள். அதற்கு இடம் கொடுக்காமல், "ஆமாம் நாளைக்குத்தான்!" என்று முந்திக்கொண்டு முத்தாய்ப்பு வைத்தாள். அப்புறம் மேலே பேச்சுக் கொடுக்க ரஜனியின் தாயாருக்குத் துணிவு எழவில்லை.

இருட்டு விழலாயிற்று. குளிரும் அதிகமாகியது. கருணா லீனுவுக்குக் குரல் கொடுத்தாள். "குழந்தை! நாம் புறப்படலாமா?" என்று கேட்டாள்.

"புறப்படலாம், அம்மா! எனக்கும் ரொம்பக் களைப்பாக இருக்கிறது!"— லீனுவுக்குமே திடீரென்று எப்படித்தான் களைப்புத் தோன்றியதோ, விளங்கவில்லை!

வீடு போய்ச் சேரும்பொழுது நன்றாகவே இருட்டிவிட்டது.

கடோரியா, "அம்மா! ரொட்டி செய்ய வேண்டாமா?" என்று கேட்டாள்.

"அடுப்பிலே நீ ரொட்டிக் கல்லைப் போடு. இதோ நான் வருகிறேன்!"

கருணா தன் கைகளாலேயே சப்பாத்தி தயாரித்தாள். பூப்போல, வட்டம் வட்டமாக மலர்ந்து நின்றன சப்பாத்திகள். அவற்றுக்கு மேலே வெண்ணெய் தடவினாள். சப்பாத்தி செய்யும் பொழுது அவள் கைகள் மாவைப் பிசைந்தது போலவே, மனம் எது எதையோ பிசையலாயற்று. உள்ளத்தை ஏதோ ஒன்று திருகித் திருகிப் போட்டது. அவள் குழந்தையாக இருந்த பொழுது, அவளுடைய அப்பா பல் துலக்கக் குச்சிகளை ஒடிக்கும் பொழுது அப்படித்தான் திருகித் திருகி ஒடிப்பார்.

உணவு அருந்தி முடித்தபின் லீனு பேசாமல் தன் படுக்கையில் படுத்து ரஜாயியில் புகுந்து கொண்டாள்.

அவளது அந்த மௌனம் ஒரு பெரும் அம்மிக் கல்லாக, கனத்த பாறைக் கல்லாகத் தோன்றியது. அதன் சுமையனைத்தும் கருணாவின் இதயத்தை அழுத்தியது.

"லீனு! குழந்தை! நீ உன் கை கால்களுக்கெல்லாம் கிரீம் தடவிக் கொண்டு விட்டாயோ?" என்று கேட்டாள் கருணா, தன் இதயத்தை அழுத்திய அந்தச் சுமைக் கல்லை நகர்த்தித் தகர்க்க முயல்பவள் போல.

"அடடா! மறந்தே போய் விட்டேனே, அம்மா!" லீனு ரஜாயிக் குள்ளிருந்து சட்டென்று எழுந்தாள். அது ஒரு பெரிய காரியம் போல, அதைச் செய்யா விட்டால் தூக்கம் வராதுபோல; அதை மறந்ததுமா பெருந்தவறு போல.

"நீ இரு. நான் எடுத்துக் கொண்டு வந்து தருகிறேன்!" என்று கூறிக் கருணா அலமாரியிலிருந்து கிரீமை எடுத்துச்சென்று லீனு வின் கையில் கொடுத்தாள். அந்தக் கணம் அங்கு நிலவிய இறுக்கத்தையும் புழுக்கத்தையும் ஓரளவு சமனப்படுத்த நினைவு வந்ததே அந்தக் காரியம், அதை மனமார வாழ்த்தினாள்.

கிரீமைத் தடவிக் கொண்டு லீனு படுத்துவிட்டாள். கண்களை யும் இறுக மூடிக்கொண்டாள்.

கருணாவும் விளக்கை அணைத்துவிட்டுப் படுத்தாள்.

எத்தனை நேரம் போயிற்றோ, தெரியாது!

பக்கத்து அறையில் தொலைபேசி மணி ஒலித்தது.

"ஹலோ!" கருணா ரிசீவரை எடுத்தாள்.

"ஹலோ கருணா! என்ன செய்து கொண்டிருந்தாய்?"

"அட, தோஷியா? ஒன்றுமில்லை, சும்மாப் படுத்துக் கிடந்தேன்!"

"நான் மாலையில் கூட உனக்கு 'ரிங்' செய்தேன். நீ வீட்டில் கிடைக்கவில்லை!"

"ஆமாம், நானும் லீனுவும் சற்று வெளியில் போயிருந்தோம்."

"லீனு எங்கே?"

"தூங்கிவிட்டாள்!"

"சரி, வேறு ஒன்றுமில்லை. ஏதோ தோன்றியது, என்ன செய்து கொண்டிருக்கிறாய் என்று கேட்கலாம் என்று! கேட்டேன்!"

"தோஷி!"—

தோஷியும் அவளோடு அப்படி நடிக்கவேண்டாம் என்று கருணா வுக்குத் தோன்றியது. ஏனென்றால் தோஷி அவளுக்கு உயிர்த் தோழி: உள்ளன்போடு பழகுகிறவள்.

"கருணை! நான் சிறிது நேரத்துக்கு அங்கு வரட்டுமா!" தோஷி கெஞ்சுவதுபோலக் கேட்டாள்.

"வாயேன்!" கருணை சிறிது சுணங்கி விடை அளித்தாள். எந்தக் கஷ்டத்தையும் துயரத்தையும் அவளுக்கு தனியே தாங் கத்தான் விருப்பம். ஆனாலும் தோஷியின் விஷயம் வேறு.

சிறிது நேரத்துக்கெல்லாம் தோஷி வந்து விட்டாள்.

"யாரோடு வந்திருக்கிறாய்?" — கருணை கேட்டாள்.

"டிரைவர் வந்திருக்கிறான். வண்டி கீழே நிற்கிறது!" என்றாள் தோஷி.

அப்புறம் இருவருமே பேசாமல் உட்கார்ந்திருந்தார்கள்.

"கொஞ்சம் காப்பி குடிக்கிறாயா?" என்று கேட்டாள் கருணை.

"இந்த நேரத்துக்குக் காப்பி ஒன்றும் தேவை இல்லை!"

தோஷியின் தொண்டையும் ஏனோ அடைத்துக் கொண்டது.

"தோஷி! சூடாக ஏதாவது சாப்பிடவேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது!" என்றாள் கருணை. அவளுக்குச் சும்மா உட்கார்ந் திருப்பதை விட ஏதாவது செய்யவேண்டும் என்று தோன்றியது.

"சரி, காப்பி போடு!"

கருணை அதே அறையில் மின்சாரக் கெட்டிலைப் "பிளக்"கில் சொருகினாள். அப்புறம் அப்படியே தீவானில் வந்து உட்கார்ந்து கொண்டாள்.

தோஷி ஒரு கணம் கருணையையே நோக்கினாள். பிறகு வேறு புறம் முகத்தைத் திருப்பிக்கொண்டாள். இது போன்ற நேரத் தில் யார் யாரிடம் என்ன சொல்லுகிறது? அவள் நீள ஒரு மூச்சு இழுத்தாள். பிறகு மெதுவாக அதை வெளியே விட்டாள். கருணை அவளுடைய ஆழ்ந்த மூச்சின் ஒலியைக் கேட்டுவிடக் கூடாதே என்று பயந்து பயந்தே வெளியேற்றினாள்.

கனத்து வளர்ந்த அந்த மௌனத்தில் இருவருக்கும் கெட்டிலில் தவிக்கும் நீரின் ஓசை நன்றாகக் கேட்டது. இன்னும் நீர் நன்றா கக் கொதிககவில்லை என்பது கருணைவுக்குத் தெரியும். இருந் தாலும் எழுந்துசென்று கெட்டிலின் மூடியை அகற்றிக் கெட்டி லுக்குள் குனிந்து பார்த்தாள். அக்கம் பக்கத்தில் சிறு சிறு நீர்க் கொப்புளங்கள் முத்திட்டுக் கொண்டிருந்தன. கருணை மீண்டும் மூடியை மூடிவிட்டாள்.

"குளிர் காலத்தில் சூடான காப்பி உடலுக்கும் உள்ளத்துக்கும் எத்தனை இன்பம் தருகிறது!" என்றாள் கருணை.

"எனக்கும் குடிக்கணும் போல இருக்கிறது!" என்றாள் தோஷி. உண்மையைக் கேட்கப்போனால் அவளுக்கு அந்த நேரம் காப்பியே தேவையில்லை.

கருணா கோப்பைகள் எடுத்துவரச் சமையலறைக்குச் சென்றாள் காப்பி தயாராயிற்று. இருவரும் பேசாமல் தங்கள் தங்கள் கோப்பையை எடுத்துப் பருகலாயினர்.

"கருணா! ஒன்றும் பேசமாட்டேன் என்கிறாயே!" தோஷி அந்த மௌனத்தைத் தாங்கமுடியாமல் சொன்னாள்.

திடீரென்று கருணாவின் விழிகளில் நீர் நிறைந்தது. அவளுடைய பழைய வீறாப்பு எல்லாம் அப்பொழுது எங்குதான் ஓடி மறைந்ததோ, தெரியவில்லை.

கருணாவின் கைகள் நடுங்கின. அவள் கோப்பையை மேஜை மீது வைத்து விட்டாள். தோஷி சட்டென்று தன் கையை நீட்டிக் கருணாவின் விரல்களைப் பற்றினாள். ஆதரவோடு அவளைத் தடவிக் கொடுத்தாள்.

அப்புறம் தோஷி எழுந்து வெளியே போனாள். கார் புறப்படுகின்ற ஓசை கேட்டது. திரும்பி வந்த தோஷி, "நான் டிரைவரிடம் சொல்லி அனுப்பிவிட்டேன், இரவு இங்கேயே தங்கப் போவதாக!" என்றாள்.

இதைக் கேட்டுக் கருணாவுக்கு ஆறுதலும் ஏற்படவில்லை; மாறுதலும் ஏற்படவில்லை. அப்படியே பேசாமல் பிரமைபிடித்தவள்போல் உட்கார்ந்தபடியே பைக்குள் போட்டிருந்த தன் இரு கைகளையும் எடுத்துப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

தோஷி அவள் கோப்பையை எடுத்து அவளிடம் கொடுத்தாள். தன் கோப்பையை எடுத்துச் சிறுகச் சிறுகப் பருகலானாள்.

"நான் இந்த நேரத்துக்காகத்தான், இந்தக் கணங்களுக்காகத் தான் இத்தனை ஆண்டுகளாகப் பயந்து கொண்டிருந்தேன். இந்த நேரத்துக்குப் பயந்துதான் நான் பதின்மூன்று ஆண்டுகள் அந்த வீட்டில் கழித்தேன். ஆனால் ஒவ்வொரு கணமும் சாகாமல் செத்துக் கொண்டிருந்தேன்." கருணா தோஷியிடம் குறைவாகவும் தன்னிடமே அதிகமாகவும் பேசிக் கொண்டிருந்தாள்.

தோஷி மௌனமாயிருந்தாள்.

"அந்த வீட்டுப்படி தாண்டி வெளியே போய்விடுவது என்று நினைத்த பொழுதெல்லாம் லீனுவின் முகம்தான் என்னெதிரே வந்து நின்றது. இம்மாதிரி ஒரு நேரம் வந்தால் என்ன செய்வது

என்ற அச்சம்தான், என்னை அங்கிருந்து நகரவொட்டாமல் கால்களைக் கட்டிப்போட்டு வந்தது!"

"இதோ பார், கருணா! ஒருமுறை நீ துணிந்து இந்த முடிவு எடுத்திருக்கிறாய். இனி மனத்தைப் போட்டு அரற்றிக்கொள்ளாதே!"

"மாட்டேன், தோஷி! நான் முற்றிலும் உறுதிபூண்டு விட்டேன். துளியும் மாறமாட்டேன்!" என்றாள கருணா. இருந்தாலும் அவள் இதயத்தை யாரோ பிராண்டிக் கொண்டே இருந்தார்கள்.

அவள் எழுந்து கெட்டிலில் இன்னும் நீர் ஊற்றினாள். இரண்டாம் முறையாகப் 'பிளக்'கும் போட்டாள். அப்புறம் எழுந்தும் உட்கார்ந்தும் அவள் தன்னைச் சமாளித்துக் கொள்ள முயன்றாள். சிதறிக்கொண்டிருந்த எண்ணங்களை ஒன்றுகூட்ட முனைந்தாள்.

"வக்கீலைப் பார்த்தாயா?"

"இல்லை. நேற்றுப் பார்த்ததுதான்!"

"என்ன சொன்னார்?"

"முன்னால் சொன்னதையே தான் சொன்னார். குழந்தையைத் தாய்க்குக் கொடுப்பதா, தந்தைக்குக் கொடுப்பதா என்பது நீதிபதியின் கருத்தைப் பொறுத்தது. அவர் என்ன நினைக்கிறாரோ என்றார்!"

"இந்தச் சட்டத்தைக் கொண்டு உடைப்பிலே போடு! தாய்க்குக் குழந்தைமீது உரிமை கிடையாதாமோ? பெறுகிறவள் தாய், எல்லாக் கஷ்டங்களையும் அநுபவிக்கிறவள் தாய்!" தோஷி பொரிந்து தள்ளினாள், வந்த ஆத்திரத்தில்.

தான் பட்ட கஷ்டங்கள் அவ்வளவும் கருணாவுக்கு நினைவு வந்தன. அவள் லீனுவை எப்படி வளர்த்தாள்? தந்தையின் அன்பையும் தாயின் அன்பையும் அவள் ஒன்றியாகவே லீனுவுக்கு எப்படியெல்லாம் கொடுத்தாள்? ஆனந்தனுடைய மனத்தில் தன் குழந்தை யென்று கடுகளவாவது ஆசை—மோகம் இருந்ததுண்டா? சிங்கம்—சிறுத்தைகள் கூடத் தங்கள் குழந்தை குட்டிகளிடம் அன்பாக இருக்கின்றன. அவற்றைக் காப்பாற்றுகின்றன. ஆனால் இந்த ஆனந்தன்........

"உன்னை உபத்திரப்படுத்துவதற்கு நல்ல வழி கிடைத்ததே இந்த ஆனந்தனுக்கு! இரண்டரை ஆண்டுகளில் நீ எத்தனை கஷ்டப்பட்டு நஷ்டப்பட்டு இந்த வீட்டை வீடாக்கினாய்! இப்பொழுது லீனுவும் பெரியவள் ஆகிவிட்டாள். இத்தனை வருஷங்கள்

கழித்து உனக்குக் கொஞ்சம் நிம்மதி கிடைத்தது, மூச்சுவிடப் பொழுது கிடைத்தது. இப்பொழுது போய் அவன் மனுக் கொடுத்திருக்கிறான்; குழந்தையை என்னிடம் ஒப்படைக்க வேண்டுமென்று! யார் அவனிடம் கேட்கிறது? அவன் அதனிடம் அன்பாயிருப்பானா? அதை நல்லபடியாகக் காப்பாற்றுவானா? அதற்கு வேண்டிய செலவுகளைச் செய்வானா? அதெல்லாம் மாட்டான். இந்த மனுக்கொடுத்திருக்கிறதே உன் மனத்தைப் புண்படுத்துவதற்காகத்தான். வேறு என்ன?''— கருணாவின் முகத்தைப் பார்க்கப் பார்க்கத் தோஷிக்கு ஆனந்தன்மேல் கோபம் கோபமாக வந்தது, எரிச்சல் எரிச்சலாக வந்தது.

கெட்டிலில் வென்னீர் தவிக்கும் ஒலி வந்துகொண்டிருந்தது. கருணா எழுந்துபோய் இன்னும் இரண்டு கோப்பை காப்பி தயாரித்தாள். தன் கோப்பையை மேஜைமீது வைத்துவிட்டுப் பக்கத்து அறைக்குச் சென்றாள். தோஷி மெதுவாக எழுந்து அந்த அறையை எட்டிப்பார்த்தாள். கருணா லீனுவின்மீது ரஜாயியை விரித்துப் போர்த்திக்கொண்டிருந்தாள். தோஷி சட்டென்று திரும்பி சோபாவில் வந்து அமர்ந்து கொண்டாள். கருணா அறைக்குத் திரும்பியபொழுது அவள் கண்கள் கலங்கியிருந்தன. சிரமப்பட்டுக் கண்ணீர் பெருக்குவதைத் தடுத்துக்கொள்ள முயன்றதனால், கன்னத்து நரம்புகள் புடைத்துத் துடித்துக் கொண்டிருந்தன. தீவானில் உட்கார்ந்ததும் கருணா தன் இரு கைகளாலும் முகத்தை இறுகப் பொத்திக்கொண்டாள். அடுத்த கணம் விம்மி விம்மி அழலானாள். தோஷியும் எழுந்து வந்து தீவானில் அவள் அருகில் அமர்ந்துகொண்டாள். அவள் பேசாமல் கருணாவின் துடிக்கும் தோள்பட்டைகளைத் தன் கரங்களால் சுற்றிப் பிடித்துக்கொண்டாள்.

''நினைத்துப் பார்க்கிறேன்....ஜட்ஜ்........லீனுவை ஆனந்தனுக்கு கொடுத்துவிட்டார் என்று வைத்துக்கொள்........அவரும் லீனுவை அழைத்துக்கொண்டு போய்விட்டார் என்று வைத்துக்கொள்.... இரவு....இரவு நேரங்களில் இவள்மீது யார் ரஜாயியைப் போர்த்தி விடுவார்கள்...?''

கருணா எங்கேயாவது ஒளிந்து முகத்தை மறைத்துக்கொண்டு அழ விரும்பினாள். அவள் தொண்டைக்குள் ஏதோ பற்றி எரிந்து கொண்டிருந்தது.

கருணா தன்னை எப்படியோ சுதாரித்துக்கொண்டாள்.

"ஏன், தோஷி! நீ இங்கேயே தீவானில் படுத்துத் தூங்குவாய் அல்லவா?"

இரவு நேரங்களில் எப்பொழுதாவது அவள் வீட்டில் தங்க நேர்ந்தால் தோஷி தீவானில்தான் படுத்து உறங்குவாள் என்று கருணுவுக்குத் தெரிந்த விஷயம்தான். இருந்தாலும் ஏனே கேட்டு வைத்தாள். தோஷி தலை அசைத்து "ஆம்" என்றுள்.

கருணு உள்ளேயிருந்து ஒரு வெள்ளைப் போர்வை எடுத்து வந்தாள். ஒரு ரஜாயியும் எடுத்து வந்தாள். அவள் தன் இரவு-உடையைத் தோஷிக்குக் கொடுத்தாள். காலியான கோப்பைகளை ஒரு டிரேயில் எடுத்து வைத்துக்கொண்டு சமையலறைக்குப் போனுள்.

பிறகு....

விளக்கை அணைத்துவிட்டு அவள் தன் கட்டிலில் படுத்துக் கொண்டாள்.

கருணுவுக்கு எதுவுமே விளங்கவில்லை. தான் விரும்புவது என்னவென்று அவளாலேயே ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. இந்த இரவு நீண்டுகொண்டே போகவேண்டும், விடியவே கூடாது என்று விரும்பினுளா? அல்லது சட்டுப்புட்டென்று இந்த இரவு கழிந்து பொழுது விடிந்து விடவேண்டும். மனத்துப் புழுக்கத்துக்கும் ஒரு முடிவு சீக்கிரமே காணவேண்டும் என்று நினைத்தாளா? அவள் எதையுமே விரும்பவில்லை. அவள் எதையுமே எதிர்நோக்கவும் இல்லை. ஏன், அவள் எதையுமே சிந்திக்கக்கூட வில்லை. கழுவில் தொங்கும் கணத்தில் சிந்தனை எங்கிருந்து தோன்றும்?

இரவு வெகுநேரம் ஆகிவிட்டிருந்தது. கருணு மெதுவாக எழுந்தாள். பேசாமல் லீனுவின் அருகில் சென்று அவளை அணைத்தவாறு படுத்துக்கொண்டாள். அப்புறம்.... மெதுவாக லீனுவின் கன்னங்களில் தன் துடிக்கும் உதடுகளைப் பதித்தாள்.

# ஏமாற்றம்

நஸீப் அஸ்ஸாமிலிருந்து விடுமுறையில் வரும்பொழுதெல்லாம் தன் ஊருக்கு வந்து ஜம்முக்காரக் கிழவியைக் கட்டாயம் பார்ப்பான். கிழவியும் ஒரு மூச்சில் அவனுக்கு வாழ்த்துரைகளும் ஆசி உரைகளுமாகக் குவித்துவிடுவாள். 'என் மாளிகைக் கிளி ஊருக்கு எப்பொழுது வந்தது? இன்னும் எத்தனை நாள் வேலையில் இருந்தாகவேண்டும்? வெளியூரில் இருப்பதென்றாலே அது சிறைத் தண்டனை அநுபவிக்கிறாற்போலத்தான். இருந்தாலும் அதிலே என்ன தவறு? வயிற்றுப் பாட்டுக்காக உலகம் என்ன என்னதான் காரியங்கள் செய்யவில்லை?' என்றெல்லாம் வாய் ஓயாமல் ஏதாவது பேசுவாள்.

நஸீபும் 'ஆமாம், ஆமாம்' என்று ஆமாம் போட்டு ஜம்முக்காரப் பாட்டியின் கேள்விகளுக்கெல்லாம் ஏதோ சொல்லிச் சமாளிப்பான். உண்மையைக் கேட்டால், அவன் அவளிடம் இப்படியெல்லாம் பேசிக் கொண்டிருக்கவேண்டும் என்பதற்காக வருவதில்லை. அவன் ஒப்புக்காக ஒரு கடமையை நிறைவேற்றவே தான் போய் வந்தான். எண்பது வயதுக் கிழவி, இன்னாருடைய மகன் வேலை கிடைத்துவிட்ட கர்வத்திலே ஒருமுறை வந்து வணங்கிச் செல்வதைக் கூட விட்டுவிட்டான் என்று மனத்தினால் கூடச் சொல்லிக்கொள்ளக் கூடாதே என்பதற்காகத்தான் அவன் அப்படிச் செய்தான்.

கிழவியின் கேள்விகளுக்குப் பதில் சொல்லும் பொழுதெல்லாம் அவனுடைய மூளை அஸ்ஸாம் ஆறுகளில் பாலம் கட்டுவதற்காகத் தோண்டப்படும் குழிகளைச் சுற்றித்தான் வட்டமிட்டுக் கொண்டிருக்கும். கண்டிராக்டர் சந்த்ராம் என்ன மாய—மந்திரம் தெரிந்து வைத்திருந்தாரோ, தெரியவில்லை! ஒரு பாலம் கட்டி முடித்ததும் அடுத்த பாலம் கட்டுவதற்குக் குத்தகை பெற்றுவிடுவார். குத்தகை எடுக்கும்பொழுது அவருக்கு நல்ல கட்டுமஸ்தான இளைஞர்களே வேலைக்குத் தேவைப் படுவார்கள். சந்த்ராம் அம்மாதிரி நேரங்களில் ஒருமுறை கிராமத்தைப் பருந்தாக வட்டமிடுவார். உடல் வலுவுள்ள இளைஞர்களாகத் தேடிப் பிடித்துப் பல நூறு மைல்களுக்கு அப்பால் இட்டுச் சென்று வேலை வாங்குவார். நஸீப் அவருக்குக் கிடைத்த முதல் காண்டிராக்டிலிருந்தே அவரோடு இருந்தான்.

ஒருமுறை அவன் தன் சகோதரியின் திருமணத்துக்காகக் கிராமத்துக்கு வந்திருந்தபொழுது ஐம்முக்காரக் கிழவிக்குப் பாரிசவாயு ஏற்பட்டு விட்டதாகக் கேள்விப்பட்டான். கிழவியின் உடலில் ஒருபுறம் சொரணையற்றுப் போய்விட்டதாகவும், அந்தப் பக்கத்து உடல் உறுப்புகளை மறு பக்கத்து உடல் உறுப்புகளின் உதவியின்றி அசைக்கக்கூட முடியாது என்றும் அவனுக்கு விளக்கப்பட்டது. சல்லிக்குப் பயனில்லாத சுண்டு விரல், அதற்கென்ன வந்துவிட்டது? அதை அசைக்கக் கூடக் கிழவியினால் முடியாமற் போய்விட்டது! இரவு—பகல் எந்த நேரமும் ஒரு கட்டிலில் படுத்துக் கிடப்பாள். அந்தக் கட்டிலையும அவளுடைய பிள்ளைகள் உமிகொட்டிவைக்கிற அறைக்குள் கொண்டு போட்டிருந்தார்கள். பிள்ளைகள் முன்பே கூட அவளுக்கு அடங்கியிருந்ததில்லை. இப்பொழுது இன்னொரு முன்னேற்றம் என்னவென்றால், வீட்டுக்கு வந்திருந்த மருமகப் பெண்கள் கூட அவள் பேச்சைக் கேட்பதில்லை. உமிகொட்டியிருந்த அறையில் கட்டிலில் படுத்த வண்ணமே, நான்கு மருமகப் பெண்களில் ஒருத்தி அந்தப் பக்கமாக வரமாட்டாளா, அடங்கிக் கிடக்கும் ஆத்திரம் அவ்வளவையும் அவள்மேல் கொட்ட மாட்டோமா என்று கிழவி கொட்டுக் கொட்டென்று விழித்தவாறு தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பாள். அவள் நோய்வாய்ப்பட்டுப் படுத்தது முதற்கொண்டு வீட்டு வேலைகள் எதுவுமே சரியாக நடைபெறுவதில்லை என்பது அவள் எண்ணம். எருமையைப் பசுவின் தொழுவத்தில் கட்டியிருப்பதாகத் தோன்றும். பசுவை ஆட்டின் முளையில் கட்டியிருப்பதாகப் படும். எத்தனையோ முறைகள் அவள் தூக்கத்தில் புலம்பியது காதுகளில் விழுந்திருக்கிறது. "இந்த நாலு கால் பிராணிகளைக் கோழிக் கூண்டில் கொண்டுபோய் ஏன் திணிக்கிறீர்கள்? அந்தச் சேவலை ஏன் மாட்டுச் சங்கிலிபோட்டுக் கட்டுகிறீர்கள்?" என்றெல்லாம் பிதற்றியிருக்கிறாள். இதெல்லாம் கூட ஒரு பெரிய விஷயம் இல்லை, அவளுடைய சின்ன மருமகள் பெரிய மருமகளின் கட்டிலில் போய்ப் படுத்திருப்பதாகவும், பெரிய மருமகள் நடு மகளின் கட்டிலை ஆக்கிரமித்துக் கொண்டிருப்பதாகவும் கூட அவளுக்குத் தோன்றியிருக்கலாமோ, என்னவோ? ஆனால் அவள்தான் சுவாதீனமற்றுக் கிடந்தாளே! எல்லாவற்றையும் மனத்துக்குள்ளேயே வைத்து மறுகிக் கொண்டிருந்தாள்.

கிழவியின் பிள்ளைகள் கிழவியின் நோய்க்காக மிகவும் வருந்தினார்கள். காட்டுப் புறாவின் இறைச்சியைச் சாப்பிட்டால் குணம்

காணலாம் என்று யாரோ ஆலோசனை கூறினார்கள். பிள்ளைகள் அக்கம்பக்கத்துப் பாழுங் கிணறுகளில் இருந்த எல்லாப் புறாக்களையும் ஒவ்வொன்றாகக் கொண்டுவந்து கொடுத்தார்கள். யாரோ ஊசி போட்டால் சரியாகலாம் என்று கூறினார்கள். தங்கள் சக்திக்குத் தகுந்தபடி எவ்வளவு முடியுமோ அவ்வளவு ஊசிகள் போடச் செய்தும் பார்த்தார்கள். உண்டு உடுத்தும் குடியானவக் குடும்பத்தில், சிறிய பெரிய செலவுகள் வந்தால் அப்படி என்ன வேறுபாடு தெரிந்துவிடப் போகிறது? இப்படியொரு காரியம் செய்ததனால் குடும்பம் தொல்லைகளுக்கு ஆளாகியது என்று பிறருக்குத் தெரியக்கூடாது என்றே அவர்கள் முயன்றார்கள். ஆனால், கிழவி புரிந்துகொண்டு விட்டாள், தன் நோய் சிகிச்சையினால் குணமாகக் கூடியது அல்ல என்று. ஏமாற்றம் ஏற ஏற அவள் மண்டையை இல்லாததும் பொல்லாததுமாக எத்தனையோ நினைவுகள் முற்றுகையிட்டன. தன் மருமகள்களைப் பற்றிய—உண்மையைக் கேட்டால், ஊரில் உள்ள அத்தனை மருமகப் பெண்களைப் பற்றிய கருத்துக்கள் அனைத்தும் இப்பொழுது ஏதோ உருவத்தில் வெளிப்படலாயின. அத்தனை கருத்துக்களையும் இத்தனை நாட்களும் அவள் எப்படி அடக்கி வைத்திருந்தாள் என்பதே ஆச்சரியம். கிராமத்தில் உள்ளவர்கள் யாரும் இப்பொழுது அவளைப் பற்றி விசாரிக்கப் போவதில்லை. பெண்களும்—பிள்ளைகளும் கூட அவளுக்கு வேண்டிய உணவைத் தலைமாட்டில் வைத்துவிட்டுத் தன் அலுவல்களைக் கவனிக்கலாயினர். நஸீமைப்போல் யாராவது எப்பொழுதாவது ஊருக்கு வருகிறவர்கள் மட்டும் அவளைக் காண வருவார்கள். நாலு வார்த்தை உட்கார்ந்து பேசிச் செல்வார்கள். பல மாதங்கள் ஊருக்கு வராமலே வெளியூர் வாசம் செய்வதால் இந்தச் சம்பிரதாய விசாரணை.

ஐம்முக்காரக் கிழவியின் உடல்நிலைப் பற்றிக் கேட்டதும் நஸீமுக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. நடமாட்டம் இருந்த நாட்களில் ஊரில் உள்ள ஒவ்வொரு வீட்டுக்காரர்களின் குணநலங்களையும் தெரிந்துகொண்டால்தான் அந்தக் கிழவிக்குத் தூக்கமே வரும். இப்பொழுது நாள் முழுவதும் அவளால் எப்படிக் கட்டிலோடு கட்டிலாகப் படுத்திருக்க முடிந்தது?

கிழவி போகாத இடம் ஏது? எங்கேயாவது யாராவது செத்துவிட்டார்களா? எல்லோருக்கும் முன்னால் கிழவியை அங்கு பார்க்கலாம். யார் வீட்டிலாவது கல்யாணம், கார்த்திகையா?

அவளிடம்தான் யோசனை பாசனைகள் கேட்பார்கள். எங்கே யாவது வீடு கட்டச் சுவர் எழுப்புகிறார்களா, அங்கும் அவள் ஆலோசனை பெறப்படும். எங்கேயாவது கிணறு வெட்டுகிறார் களா, அங்கும் அவள் யோசனைக்கு மதிப்பு உண்டு. தூர்ந்து போகும் கிணறுகூட அவள் பார்வையிலிருந்து தப்புவதில்லை. நில அளவு காலத்தில் ஒவ்வோர் அடி நிலத்தின் அன்றைய மதிப்புக்கூட அவளுக்குத் தெரியும். கிணற்றுக்கும் மரம் மட்டை களுக்கும்கூட ஒரு விலை நிர்ணயிப்பார்கள். அதுமுதற்கொண்டு அவளுக்கு நல்ல மனப்பாடம். தன் பிள்ளைகளுக்குச் செய் நேர்த்தி மிகுந்த நிலங்கள் கிடைக்க வெகு துணிவோடு அவள் முனைந்தாள். அதில் வெற்றியும் கண்டாள். பள்ளி வாத்தியார் எந்தப் பெண்ணைப் பார்த்துக்கொண்டே தெருவில் நடக்கிறான் என்றுகூட அவளுக்குத் தெரியும். கிராமத்துக் கணக்குப் பிள்ளை யார் யார் வீட்டில் போக்குவரத்து அதிகம் வைத்துக்கொண் டிருக்கிறான் என்பதையும் அவள் அறிவாள். கிழவி நோய்வாய்ப் படுவதற்குமுன், பதினைந்து வயதான ஜாட் சிறுவன் பதிமூன்று வயதே ஆன 'ஜீவர்' சாதிப் பெண்ணின் நீர்க்குடத்தைத் தூக்கி விடும்பொழுது, இத்தனை கனமான குடத்தை தூக்கினால் பெண் ணின் இடுப்பு ஒடிந்துவிடும் என்று சொன்னான். இந்தச் செய்தி பிறருக்குத் தெரியுமோ, தெரியாதோ, ஜம்முக் கிழவிக்குத் தெரியும். இதைக் காட்டிலும் இன்னொரு விஷயமும் அவளுக் குத் தெரியும். ஜீவர்ப் பெண் சொன்னதுதான். 'இந்த ஜாட் பிள்ளையை என்னால் இடுப்பில் தூக்கிக்கொண்டு நடக்க முடியும்' என்று அவள் சவால் விட்டாளாம். ஆறு மாதமாகப் படுத்த படுக்கையாகிவிட்டதனால், அந்த ஜீவர்ப் பெண் ஜாட் பிள்ளை யாண்டானைச் சொன்னபடியே இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டாளா என்பது மட்டும்தான் தெரியாது.

நஸீப் அவள் நிலையைக் கண்டு ஆறுதல் சொல்லிவந்த பொழுது அவனுக்குத் தொண்டையை அடைத்தது. ஆறுமாதங் களாகத் தன் உள்ளத்தில் சிறைப்பட்டிருந்த அத்தனை விஷயங் களையும் ஒன்றுகூட விடாமல் எடுத்துச் சொன்னாள் ஜம்முக்காரக் கிழவி. அந்த ஆண்டு பருவம் எப்படிப் பொய்த்து விட்டது? பெய்த மழை எப்படிக் கெடுத்து விட்டது? எலிகளும் வெட்டுக் கிளிகளும் தான்யக் கதிர்களை எப்படித் தொண்டையிலேயே கடித்துக் குதறி விட்டன? வேப்பம் இலைகளைக் கூட விட்டு வைக்க வில்லை, வெட்டுக்கிளிகள்! மரம்—செடிகள் எப்படி மொட்டை

யாகி விட்டன? போதாக் குறைக்குச் சோதிடர்கள் வேறு சும்மா இருக்க விடவில்லை. இதுகாறும் கூடாத எட்டுக்கிரகங்கள் இப்பொழுது கூடப் போகின்றன என்று கூறி வந்தனர். நீர்—நிலம், காற்று எல்லாம் ஒன்றோடு ஒன்று இணைந்து பிரளயமாகி விடப் போகின்றன என்னும் விஷயம் சிறு குழந்தைகளுக்குக் கூடத் தெரிந்திருந்தது. அன்றாட வாழ்க்கை பழையபடியே நடந்து கொண்டிருந்தது என்பது வேறு விஷயம். ஜாட் மக்கள் அதே பழைய உற்சாகத்துடன் வெட்டுக்கிளிகளிடமிருந்து பயிர்களைக் காப்பாற்ற முயன்று கொண்டிருந்தனர். இளம் பெண்களும் ஆண்களும் முன்போலவே, கிணற்றங்கரைகளிலும் கடைகண்ணிகளிலும் வாய்க்கால் கரைகளிலும் சந்தித்துக் கொள்வார்கள்; விழி மொழி பேசி மகிழ்வார்கள். வாளிகளில் தண்ணீர் எடுத்துக் கொண்டோ அல்லது கடை-கண்ணிகளிலிருந்து கடலை—பட்டாணி வாங்கித் தின்ற வண்ணமோ ஏதும் அறியாதவர்கள் போலத் திரும்புவார்கள்.

கிழவியின் காதுகளில் சில விஷயங்கள் விழும்; சில விஷயங்கள் விழாது. ஆம், ஒரு பரபரப்பான வதந்தி பஞ்சாப் மாநிலம் முழுவதும் பரவியிருந்தது. அது கிழவியின் காதுகளிலும் விழுந்தது. பாக்ரா ஏரியில் நீர் மட்டம் மிகவும் ஏறிவிட்டது என்றும், அந்த நீரை இனி அணையினால் கட்டி நிறுத்தமுடியாது என்றும், அணை எந்த நேரமும் உடைந்துக் கொள்ளலாம் என்றும் மக்கள் பேசிக்கொண்டனர். அணை உடைந்தால் என்ன என்ன தொல்லைகள் ஏற்படும் என்பதைக் குழந்தைகள் முதற் கொண்டு அறிந்திருந்தார்கள். பாஞ்சால மண்ணே கடல் வெள்ளத்தில் புகுந்து மறைந்துவிடும் என்று பேசிக் கொண்டார்கள். இலந்தை மரம், கருவேல மரம் மட்டும் அல்ல, அரசும் ஆலும் கூட வேரோடு பறிந்து சாய்ந்து விட வேண்டியது தான். நஞ்சை புஞ்சை, தரிசு, விளைநிலம் என்ற வேறுபாடு இனி இருக்காது. காற்றும் மழையும் ஆறுகளின் போக்கையே கூட மாற்றி அமைத்து விடலாம். சோ வென்று பெருகும் நீரோட்டத்துக்குக் காடு—மேடு, குழி—பள்ளம் இவையெல்லாம் எங்கே தெரியப்போகிறது? ஆறுகளும் வாய்க்கால்களும் பொதுச் சாலைகளைப் போல நேர்க்கோடு பிடித்து ஓடத் தொடங்கலாம். ஒவ்வொருவனுமே மனத்துள் பயந்து கொண்டிருந்தான். ஆனால் வெளியில் சிரித்துப் பேசுவது போலக் காட்டிக் கொண்டிருந்தான். பிரளய வெள்ளத்தை எண்ணி எல்லோருமே பயந்துகொண்டிருந்தனர். பயப்படாதவர்

கள் சிறு குழந்தைகள்தான். யாரோ ஒரு வழிப்போக்கன், அக்ரோட் கொட்டைகளை வைத்து விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களைப்பார்த்து, "இப்படிப் பேயாட்டம் புரியும் புழுதிப் புயலில் இத்தனை உற்சாகத்தோடு உங்களுக்கு எப்படி விளையாடத் தோன்றுகிறது?" என்று கேட்டான். ஓர் அலட்சியம் பிடித்த பையன் அதற்கு பதில் சொன்னான்: "விளையாடாமல் என்ன செய்வது? இன்னும் கொஞ்ச நாட்களில்தான் உலகம் முடியப்போகிறது என்று எங்கள் அப்பா சொல்லுகிறாரே!" விளையாடித் தீர்த்து விடவேண்டாமா என்று கேட்பது போலிருந்தது அவன் பதில். இந்த நிலையிலும் நஸீப் தளர்ந்து விடவில்லை. மற்றவர்களைப்போல் அஞ்சி நஸீப் தன் தங்கையின் திருமணத் தேதியை ஒத்திப் போடவில்லை என்பதை அறிந்து ஜம்முக்காரக் கிழவி மகிழ்ந்து போனாள். தன் பிள்ளைகளிடம் கேட்டுக் கொண்டு அந்தத் திருமணத்தில் போய்க் கலந்து கொள்ளவேண்டும் என்று கூட ஆசைப்பட்டாள். அவள் பேச்சை ஜனங்கள் காதில் வாங்கிக்கொள்ள வில்லை என்றால் என்ன ஆகிறது? கேட்டால் கேட்கட்டும், கேட்காவிட்டால் போகட்டும். அவளுக்கு ஏதாவது சொல்ல வாய்ப்புக் கிடைக்கும் அல்லவா?

"குழந்தாய்! நீ காரணத்தோடுதான் வந்திருக்கிறாய். என்னையும் உன் தங்கை கல்யாணத்துக்கு அழைத்துச் செல்வாய் அல்லவா? நான் இந்த அறைக்குள்ளேயே தான் அடைந்து கிடக்கிறேன். பகல் பொழுதிலே என்னை ஓர் ஆசனத்திலே உட்காரவைத்துத் திருமண மண்டபத்துக்கு இட்டுச் செல்லு. இன்னும் எத்தனை நாள் இப்படி நான் உயிருடன் இருக்கணுமோ, தெரியவில்லை! சாவதற்கு முன்னால் கிராமத்தையாவது ஒரு முறை பார்த்து வைக்கிறேன்!" என்றாள் கிழவி.

அதற்குமேல் ஜம்முக்காரக் கிழவி ஒன்றும் சொல்லவில்லை. சொல்வதற்கு வேறு என்னதான் இருந்தது? அதைத் தொடர்ந்து அவளுக்கு இன்னும் ஒரு யோசனையும் தோன்றியது. 'தன் நோயைப் பற்றிக் கேட்டுப் பார்த்தால் என்ன? இந்தப் பாரிச வாயுவுக்கு யாராவது மருந்து கண்டு பிடித்திருக்கிறார்களா புதிதாக? கல்த்தாவிலே கூட இதற்கு மருந்து கிடைப்பதில்லையா? ஏதாவது நல்ல மருந்தாகச் சாப்பிட்டு அவள் மறுபடியும் கிராமத்தின் சுக—துக்கங்களில் கலந்து கொள்ள வழி இல்லையா? எப்படியாவது, எந்த முறையிலாவது அவள் உடலுக்கு ஒரு காய கல்ப சிகிச்சை செய்ய முடியாதா? முன்போல நோய் நொடி

யின்றி வாழ முடியாதா? தாறுமாருகப் போகும் தன் குடும்பத்தையும், சிறுகச் சிறுகச் சிதறும் தன் கிராமத்தையும் தன் கைப்பிடியில் கொண்டு வந்து ஒன்று கூட்டிவைகக் முடியாதா? அவள் நோய்க்கு இங்கில்லா விட்டால் அங்கே யென்று வேறு எங்கேயாவது மருந்து இல்லாமலும் போகுமா? கண்டிராக்டர் சந்த்ராம் நினைத்தால் அவளுக்கு எதுவும் கிடைக்கும். அவள் முன்போலவே ஆகிவிட முடியும். சந்த்ராம் கிராமத்தில் உள்ள பாதி மக்களை எப்படி எப்படியோ கடைத்தேற்றி இருக்கிருன். ஒரு கிழவியின் குறையை அவனல் தீர்த்துவைக்க முடியாதா?' என்று எண்ணிருள். மேஸ்திரி சந்த்ராமும் நஸீபும் சேர்ந்து கடவுளின் கழுத்தைப் பிடித்து அவளருகில் இழுத்து வந்து நிறுத்தவேண்டும். கிழவியின் காலடிகளில் விழுந்து வணங்கித் தான் கொடுத்த நோயைத் திரும்பப் பெறவேண்டும் என்று விரும்பிருள். கிழவியின் எண்ணத்தில் சந்த்ராம் ஒரு பாம்பாட்டி அல்லது விஷக்கடி மந்திரவாதி. தனது மந்திர சக்தியால் கடித்த பாம்பையே வரவழைத்து விஷத்தைக் கடிவாயிலிருந்து எடுக்கும் ஆற்றல் மிக்கவன். பாம்பு அவன் சொன்னபடி எல்லாம் ஆடி விஷத்தை உறிஞ்சி எடுத்தாகவேண்டும்.

முதலில் திருமணத்தில் கலந்துகொள்ளும் எண்ணம், அதைத் தொடர்ந்து உடல் நலமுறும் நினைப்பு—இரண்டிஞலும் ஜம்முக் காரக் கிழவியின் முகத்திலே புத்தொளி ஒன்று பிறந்தது. நன்ருக இருக்கும் அரை உடலாலேயே கிழவி எழுந்து நடக்கத் தொடங்கி விடுவாள் என்று தோன்றியது நஸீபுக்கு. இன்றைய உலகத்தில் குணப்படுத்த முடியாத நோய்களே கிடையாது. டாக்டர்கள் கட்டாயம் எந்த நோயையும் குணப்படுத்தி விடுவார்கள். அதனல் கிழவி நம்பிக்கை இழக்கத் தேவையில்லை என்று ஆறுதல் அளித்தான் நஸீப். ஆனல் அதைக் கேட்டதும் கிழவியின் முகத்தில் வீசிய ஒளி சட்டென்று குறைந்தது. ஒரு வேளை அவள் முற்றிலும் குணமாக விரும்பவில்லைபோலும்! அவள் நோய்வாய்ப்பட்ட ஆறு மாதத்துக்குள், உலகம் அடியோடு மாறிவிட்டதாக அவளுக்குத் தோன்றியது. கிழவியினல் அதை மீண்டும் தன் ஆதிக்கத்தில் கொண்டு வரமுடியாது என்றும் பட்டது. அவளுடைய பிள்ளைகள், மருமகள்கள், உற்ருர்—உறவினர்கள் எல்லோருமே எப்படி எப்படியோ மாறிப் போயிருந்தனர். முன்போலவே அவர்கள் தனக்கு மரியாதை காட்டவேண்டும் என்று எப்படிக் கிழவியால் கூறமுடியும் அல்லது வலுக்

கட்டாயப்படுத்த முடியும்? கிராமத்தில் மனு எழுதிக் கொடுக்கிற வன் இருக்கிறானே, அவன் சொல்வதுண்டு. சேர்ந்தாற்போல நாலு நட்கள் தாலுக்கா ஆபீசுக்குப் போகவில்லை என்றால், அந்த வட்டாரமே அடியோடு மாறிப் போயிருக்குமாம். அவனுடைய நிரந்தர வாடிக்கைக் காரர்கள்கூடப் புதிதாக ஆளைப் பிடித்துக் கொண்டு விடுவார்களாம். இவன் பக்கம் திரும்பிப் பார்க்கமாட்டார்களாம். அதுபோல...... கிழவிக்கு உடல் நிலை கெட்டு ஆறு மாதங்களுக்குமேல் ஆகிவிட்டது. அவள் ஆட்சி உலகை இப்பொழுது யார் பிடித்துக் கொண்டிருக்கிறார்களோ, யார் கண்டார்கள்? உடல் நலமுற்றாலும், அவள் ஆட்டிப் படைத்த உலகத்துக்கு மீண்டும் எசமானியாக முடியாது என்பதை நினைத்தபொழுது, அவளுக்கே அச்சமாயிருந்தது. இனி அவளை யார் அறிவார்கள், பொருட்படுத்துவார்கள்?.... அவள் மிகவும் வாட்டமுற்றாள். ஆமாம், இனி அவள் யார் வீட்டுத் திருமணத் துக்குப் போய் என்ன ஆகவேண்டும்? பிறர் மகிழ்ச்சியிலே அவளுக்கு என்ன கவர்ச்சி? அவள் நிலைதான் இறந்தவர்களைக் காட்டிலும், பிரிந்தவர்களைக் காட்டிலும் மட்டமாகி விட்டதே!

நஸீப் பேசாமல் ஜம்முக்காரக் கிழவியின் முகத்தையே பார்த் துக் கொண்டிருந்தான். அவள் முகத்தில் மனத்தின் கவலைகள் அனைத்தும் அச்சு எழுத்துக்கள்போலத் தெளிவாகத் தெரிந்தன. அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பது எவ்வளவு உண்மை! அவளுடைய விழிகள் தொலையில் சூன்யத்தில் பதிந்திருந்தன. அவள் தனது உள் கண்களால் மக்கள் எட்டுக் கிரகங்களின் சேர்க்கைக்குப் பயந்து தலை தெறிக்க ஓடுவதைக் காண முடிந் தது. அப்படி ஓடி அவர்கள் தங்கள் தங்கள் சாமான் செட்டு களுடன் குன்றுகளின் உச்சியில் இருப்பிடம் அமைத்துக் கொள் வதைக் கண்டாள். அவளுடைய குடும்பம் முழுவதும் அவளை அந்த உமிகொட்டும் அறையிலேயே விட்டுவிட்டு ராணி அம்மை யின் குன்றில் சரண் புகுந்திருப்பதாகவும் தோன்றியது. அவளுடைய குடும்பத்தில் யாருக்குமே அவளிடம் எவ்விதப் பற்று தலும் இல்லை என்பதையும் அவள் கண் கூடாகக் கண்டாள்.

ஆண்டவன் அலகிலாதவன் தான். பாக்ரா ஏரியில் வாய் ததும்ப, கரை உடைய எத்தனை நீரைச் சேமித்து விட்டான்! அவனைப் போலவே நீரின் அக்கரையையும் அல்லவா காண முடிய வில்லை? ஏரி நீர் உலகில் நஞ்சைக் கலக்குவது போலவும், உள் ளுக்குள் குமுறித் ததளிப்பது போலவும் கிழவியின் கண்களில்

தெளிவானதொரு சித்திரம் தோன்றியது. இதுபோன்ற வதந்திகள் பொய்யாவதில்லை என்று அவள் எண்ணினாள். அவள் இளம் பருவத்தினளாக இருந்தபொழுது குவெட்டா பூமி அதிர்வைப் பற்றி எத்தனையோ செய்திகள் கேள்விப்பட்டதுண்டு. அப்பொழுது அவற்றை யெல்லாம் கேள்விப்பட்டு அவள் மனம் மிக வருந்தியிருக்கிறது. ஆனால் பாக்ரா அணை உடையப்போகும் செய்தி அவளுக்குத் தெய்வம் தரும் சிறந்த வரமாகத் தோன்றியது. அந்த உடைப்பில் பஞ்சாப் மாநிலமே அல்லவா விடுதலை பெற்றுவிடும்! இத்தனை நீரைத் தேக்கி அணைகட்டினானே, அந்த என்ஜினீயரை ஒருமுறை பார்த்தால் என்ன என்ற ஆசை கிழவியின் உள்ளத்திலே எழுந்தது. 'ஒருநாள் இந்தக் கிழவி பாரிச வாயுவினால் பீடிக்கப்பட்டு வாழ்வைச் சுமையாகக் கருதித் தவித்து உருகுவாள். அன்று இத்தனை பெரிய அணை மக்கி மடிந்த சோளக் கொல்லை பொம்மைபோல ஒடிந்து உடைந்து விழும்' என்று அந்த என்ஜினீயருக்குக் கட்டாயம் தெரிந்திருக்கும் என்ற நம்பிக்கை அந்தக் கிழவிக்கு.

கிழவி சூன்யத்திலிருந்து தன் பார்வையைத் திருப்பி அருகில் இருந்த நஸீபைப் பார்த்தாள். "ஆமாம், இந்தப் பாக்ரா உடைப்பைப்பற்றி உனக்கு நன்றாகத் தெரியும் அல்லவா? உண்மையைச் சொல்லு! இன்னும் எத்தனை நாட்கள் பாக்கி இருக்கின்றன? இந்தக் கேடுகெட்ட அணை இன்னும் கொஞ்ச நாட்கள் தாக்குப் பிடிக்குமா, பிடிக்காதா?" என்று கேட்டாள். பாக்ரா அணை உடைவதில் கிழவிக்கு மகிழ்ச்சிதான் என்பதைப் பக்கத்தில் இருக்கும் நஸீப் புரிந்து கொள்ளக்கூடாது என்பதற்காக உள்ளத்தைச் சுமை அழுத்துவது போன்ற கரகரப்பில் சொற்களை உதிர்த்தாள் கிழவி. நஸீபும் கிழவியின் உள்ளத்தில் பாக்ரா அணையைப் பற்றிக் கொதிக்கும் எண்ணங்களைப் புரிந்துகொள்ளவில்லை. சொல்லப்போனால் இது இயல்புதானே? ஒருவருடைய உள்ளத்தின் ஆழத்தில் இன்னொருவர் புகுந்து புறப்படுவதென்பது அவ்வளவு இலேசான காரியமா? அதோடு, அது மாதிரி ஒரு நிகழ்ச்சி அவனுடைய அறிவுக் கெட்டியவரையில் சமீபத்தில் நிகழக்கூடும் என்றும் தோன்றவில்லை. "பாட்டி! நீ என்ன, இல்லாததற்கெல்லாம் பயந்தே சாகிறாயே! உனக்கு என்ன வந்துவிட்டது? அணையும் உடையாது, கிணையும் உடையாது. அதைக் கட்டியிருக்கிறவர்களெல்லாம் ஒன்றும் தெரியாத சாதாரண மனிதர்களா? வேலைத் திறன்மிக்க பலருடைய கைவண்ணம் அதில்

கலந்திருக்கிறது. ஒன்றும் தெரியாத காட்டுமிராண்டிப் பசங்கள் இப்படி ஒரு பொய்யைக் கிளப்பிவிட்டால், விஷயம் தெரிந்தவர்கள் நம்பலாமா? நீ சிறிதும் கவலைப்படாதே. நன்ருகத் தூங்கு! ஒரு தீமையும் வராது உன் அஃணக்கு!" என்று அவன் கிழவிக்கு நம்பிக்கை ஊட்டும் வகையில் பேசினன்.

இதைக் கேட்டுக் கிழவியின் முகம் ஆய்ந்த பஞ்சுபோல் வெளுத்து விட்டதைக் கண்டான் நஸீப். அவள் உடலில் ஒரு புறத்து நரம்புகள் படபடவென்று துடித்தன. 'என்ன?' துடிக்கும் உள்ளத்தோடு கேட்டாள் கிழவி. இப்படியா அவளுக்கு ஓர் ஏமாற்றம் கிட்டவேண்டும்? அதிர்ச்சியில் சோர்ந்துபோய் அப்படியே கட்டிலில் விழுந்து விட்டாள். அவளுடைய உணர்ச்சியுள்ள பாகமும் உணர்ச்சியற்று விட்டாற் போலத் தோன்றியது.

# விஷக்கடி வேளை

ஏறக் குறைய நள்ளிரவு வேளைக்கு ரசனு கனவு கண்டாள். அவள் கால்களில் பாம்பு கடித்து விட்டாற் போல.

அவள் துணுக்குற்று விழித்துக் கொண்டாள்.

எழுந்து உட்கார்ந்து கொண்டாள்.

விளக்கைப் பொருத்தினுள். காலைத் தடவிப் பார்த்தாள். படுக்கையை உதறினுள். ஆனுல் அதுவோ வெறுங்கனவு.

ஒருவேளை முதல் நாள் நிகழ்ச்சி அவளுக்கு நினைவு வந்திருக்க வேண்டும். சினிமா போகும் பொழுது அவள் ஒரு மலரைப் பறித்துத் தன் கொண்டையில் செருகிக்கொண்டிருந்தாள். அப்பொழுது அவள் தாயார் சொன்னுள்: ''காலை மாலைக் கருக்கலில் பூச் செடிகளில் கைவைக்காதே. ஆவணி மாதம், பாரு! செடிகளில் பூச்சி—பொட்டு இருக்கலாம்!''

'ஆவணி மாதத்தில் மழை பொழிகிறது. மலர்கள் மலர்கின்றன செடிகளில்; தாவர மனைத்தும் மகிழ்ச்சியில் மலர்கின்றது. ஊஞ்சல்கள் போடப்படுகின்றன. அப்பம் போன்ற இனிப்புக்கள் செய்யப்படுகின்றன. பண்டிகையைச் சாக்காகக் கொண்டு உடன் பிறந்தவர்கள் வந்து தங்கள் சகோதரிமார்களைப் புகுந்த வீட்டிலிருந்து பிறந்த வீட்டுக்கு அழைத்துச் செல்கிருர்கள். அப்புறம்.... அப்புறம்.... இதே மாதத்தில் பூச்சி-பொட்டுகளும் பாம்புகளும் நிறையத் தென்படுகின்றன'— ரசனு யோசிக்கலானுள்.

எங்கேயோ தொலைவில் நாய்கள் குரைத்துக்கொண்டிருந்தன.

இறக்கைகளை அடித்துக் கொண்டு கன்னங்கரிய பறவை ஒன்று இரவின் இருட்டிலேயே அவர்களுடைய வீட்டுக்கு மேலாகப் பறந்து போய்க் கொண்டிருந்தது.

'எனக்கு இந்தக் கெட்ட கனவு ஏன் வந்தது? பாம்பு கடித்தால் மக்கள் இறந்து கூடப் போய் விடுகிருர்களே! ஆனுல் நான் இறக்க விரும்பவில்லை. எனக்கு இன்னும் சாகும் வேளை வரவில்லை!'

'சாவதற்கும் ஒரு வேளை, ஒரு பொழுது உண்டா?'— ரசனு தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள்.

அவள் வீட்டுக் குழாயிலிருந்து நீர் சொட்டுச் சொட்டாக விழுந்து கொண்டிருந்தது.

அவள் கவனம் மீண்டும் கனவிலேயே போய் லயித்தது.

'ஆம், வேளை-பொழுது, நேரம்-நாழிகை என்பதெல்லாம் வெளியுலகுக்கு மட்டும் இல்லை. மனத்துக்கும் உண்டு. ஒரு நேரத்தில் நமக்கு அக்கம் பக்கம் எதுவுமே தெரிவதில்லை. இன்னொரு நேரத்தில், அந்த நேரம் மலடு தட்டித் தோன்றும். பலத்த காற்று புயலென வீசும், பேயாட்டம் ஆடும். அதுவே சாகும் வேளையாக இருக்கலாம் அல்லவா?' ரசனு தன் மூச்சுக்காற்றில் இரவின் அழுத்தத்தை உணர்ந்தவாறே சிந்தித்தாள்.

'ஆனால் நான் இப்பொழுதே சாகவிரும்பவில்லை. இந்தப்புறம் என்னுடன் அரவிந்தன் இருக்கிறார். அந்தப்புறம் எங்கள் வருங்காலம் நிற்கிறது. வழி நெடுக மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. அரவிந்தன் ஒரு பூவை எடுத்து என் கொண்டையில் சூட்டினார்.'

ஒரு மின்மினி இருளில் விளக்கு ஏந்திப் பறந்தது. இந்நேரம் வரை அது இங்கேதானே சுற்றிக்கொண்டிருந்தது? அதற்குள் இப்பொழுது எங்கே போய்விட்டது, புரியவில்லையே!

ரசனுவுக்கு மீண்டும் கனவில் கண்ட பாம்பின் நினைவு வந்தது. 'இத்தனை பெரிய உலகத்தில் இந்தப் பாம்பு என்னைத்தான் கடிக்கணுமா? ஆனால் அதன் குற்றம் என்ன?—கடிப்பது அதன் இயல்பு....அரவிந்தனின் சுபாவம் எத்தனை நல்லது! குளிர்ந்து ஓடுகின்ற ஆற்று நீர்போல! ஆற்றில் வெள்ளமும் வருவதுண்டே! மக்கள் மூழ்கிச் செத்தும் விடுவதுண்டே! ஹூம், நான் மூழ்கிச் சாக விருப்பவில்லை.'

இருளில் உட்கார்ந்திருந்த கருப்புப் பூனையின் கண்கள் பளிச்சிட்டன.

'இன்றைக்கென்ன, நான் என்னவெல்லாமோ நினைத்துக் கொண்டே போகிறேனே!'—இப்படி எண்ணிய ரசனு புரண்டு படுத்துத் தூங்க முயன்றாள். ஆனால்...இன்று இந்த நேரத்தில் அவளுக்கு அரவிந்தன் ஏனோ இத்தனை நினைவு வந்துகொண்டிருந்தான்! அரவிந்தன் அவளுக்குக் கணவனாக வரப்போகிறவன்—பத்து மைல் தொலைவில் உள்ள வேறு ஒரு நகரத்தில் இந்த நேரம் அவன் நன்றாக உறங்கிக்கொண்டிருப்பான்.

'யார் கண்டார்கள், அவனும் என்னைப் பற்றிக் கனவு கண்டு கொண்டிருக்கிருனே என்னவோ?' இப்படி எண்ணி அவள் மகிழ்ச்சியில் மலர்ந்தாள்.

வானத்தில் ஊர்ந்துகொண்டிருந்த சந்திரன் இப்பொழுது அவள் வீட்டு தலைக்கு நேரே வந்திருந்தது.

'ஆமாம், இத்தனை வேகமாக இந்தச் சந்திரன் எங்கே போய்க் கொண்டிருக்கும்? அரவிந்தனின் நகரத்தை நோக்கியா? —' இந்த எண்ணத்தில் ரசனு மீண்டும் முறுவலித்தாள்.

அவன் எதிரே வந்தால் ரசனு இப்படி முறுவல் பூக்கிருள் என்பதற்காக அரவிந்தன் எத்தனை முறை அவளைத் தூண்டி வேடிக்கை பார்த்திருக்கிருன்! அவள் முகத்தை எத்தனைக்கெத்தனை கம்பீரமாக வைத்துக்கொண்டாலும், அவளுக்கு அந்தச் சிரிப்பு வரத்தான் செய்தது. அதுவும் அவனை வேடிக்கை பார்த்ததோ?

அவளுக்குத் தூக்கம் வரவில்லை. எழுந்து உட்கார்ந்து கொண்டாள். காற்றின் அசைவில் இருவாட்சியின் மணமும் கலந்து வந்தது. ரசனு நீண்ட மூச்சு இழுத்து அத்தனை மணத்தையும் தனக்குள் சேமித்துக்கொள்ள முயன்ருள்.

"இருவாட்சி மலரின் மணத்துக்குப் பாம்பு வந்துவிடும் என்று சொல்கிருர்களே! ஆமாம், இருவாட்சிச் செடியிலே பாம்பு இருக்குமாம்!"

ரசனு எழுந்து விளக்கைப் போட்டாள். கூஜாவிலிருந்து நீரைச் சரித்து எடுத்துப் பருகினாள். பிறகு சுலோகங்கள் சொல்ல உட்கார்ந்துவிட்டாள்.

சுலோகம் சொல்வதில் அவள் மனம் செல்லவில்லை. ஏனோ, தெரியவில்லை! அவளுக்குப் பதறுகிறுற்போலிருந்தது!

ஸ்டேஷனில் வண்டி உரக்கக் குரலெடுத்துக் கூவியது.

அந்த ஒலி அவளுக்கு அன்று புதுமையாகவும் பயங்கரமாகவும் தோன்றியது.

"அம்மா! தேநீருக்கு வென்னீர் போடட்டுமா?" அவள் தன் தாயாரிடம் கேட்டாள். அம்மாவும் விளக்கொளியில் விழித்துக் கொண்டுவிட்டாள்.

"இன்று என்ன இத்தனை சீக்கிரம் எழுந்துவிட்டாய்? நீ படி. நான் போய்த் தேநீர் போட்டு எடுத்து வருகிறேன்!" என்று கூறியவாறே அவளுடைய தாயார் எழுந்துவிட்டாள்.

ரசனா குளிக்கக் குளியலறைக்குள் சென்றாள். குளித்து முடித்துத் தயாரானாள்.

அவள் தேநீர் அருந்தினாள். தினத்தாளை மேலெழுந்தவாரியாக ஒருமுறைப் பார்த்தாள்.

பாட்டிக்கு ராமாயணத்திலிருந்து ஓர் அத்தியாயம் படித்துச் சொன்னாள். ஆனால் அவ்வளவுக்குப் பின்னும் கல்லூரி போக வேண்டிய நேரம் வரவில்லை.

அன்று பொழுது மிகவும் மெதுவாகப் போய்க்கொண்டிருந்தது.

அவள் கல்லூரிப்பக்கம் புறப்பட்டாள். பஸ் ஸ்டாண்டு வழியாகப் போகும்பொழுது அவளுக்கு அரவிந்தனின் நினைவு வந்தது.

அரவிந்தனின் பேட்டைக்குப் போகும் பஸ் ஹார்ன் ஒலி எழுப்பியது. அது ரசனாவை அழைத்தாற்போலத் தோன்றியது.

ரசனா சட்டென்று பஸ்ஸில் ஏறிவிட்டாள்.

"அரவிந்தனிடம் என்ன சொல்வது? எதற்காக வந்தேன் என்று!" இதை எண்ணியவளுக்குத் தன்மீதே கோபம் வந்தது.

"கெட்ட கனவு ஒன்று கண்டேன் என்று சொன்னால் போயிற்று! அவன் என்னைக் கேலி செய்வான், அவ்வளவுதானே!"

இன்னும் அவனுக்கு தூக்கம் கலைந்திருக்காது. பத்து மணிக்குத் தானே அவனது அலுவலகம் தொடங்குகிறது! இன்னும் அவள் இதே யோசனையில் இருந்தாள். அரவிந்தனின் பேட்டை வந்துவிட்டது.

பஸ் ஸ்டாண்டிற்கு வெகு அருகில் தான் அரவிந்தன் இருந்தான்

மின்சாரக் கம்பிகளில் பட்டு ஒரு பறவை மரித்துக் கிடந்தது. அது அந்தக் கம்பியிலேயே தொங்கிக் கொண்டிருந்தது.

அரவிந்தனின் வீடு வந்துவிட்டது.

ரசனா மெதுவாகக் கதவைத் தட்டினாள்.

"யாரது?" அரவிந்தன் உள்ளிருந்த வண்ணமே கேட்டான்.

ரசனா பதில் அளிப்பதற்குப் பதில் மீண்டும் கதவைத் தட்டினாள்.

சில கணங்கள் அமைதி நிலவியிருந்தது.

அவள் மீண்டும் கதவைத் தட்டினாள், சற்றுப் பலமாக. அரவிந்தன் வேகமாகக் கதவைத் திறந்தான்.

ரசனா முறுவலித்தாள்.

அரவிந்தன் கிலி பிடித்தவன் போலானான்.

ரசனா அவனைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தாள்.

உள்ளே நுழைந்ததும் அவள் பிரமித்து நின்றுவிட்டாள்.

"ரசனா! இது சுஷமா... எங்கள் அலுவலகத்து ஸ்டெனா. இரவு... இரவு நேரமாகி விட்டது.... நான் சொன்னேன்.... நான் சொன்னேன்.... அலுவலகத்தில் முக்கியமான வேலையிருந்தது...." அரவிந்தன் பதற்றத்தில் என்ன சொல்கிறோம் என்று தெரியாமல் என்ன வெல்லாமோ சொல்லிக் கொண்டே போனான்.

ரசனா ஒரு முறை சுஷமாவைப் பார்த்து விட்டுக் கழுத்தைத் தூக்கிக் கொண்டு, "நான் ரசனா, அரவிந்தனின் வருங்கால மனைவி"... என்றாள்.

பிறகு கூர்ந்து ஒருமுறை அவள் அரவிந்தனை நோக்கினாள்.

அவள் மனம் அழுந்தி அழுந்திப் போகிறாற் போலிருந்தது.

"மன்னிக்கணும்! முன் அறிவிப்பு இல்லாமல் நான் வந்திருக்கக் கூடாது!" என்று கூறிவிட்டுப் போன காலுடனேயே திரும்பி விட்டாள்.

அரவிந்தன் அவளை அழைத்தான். ஆனால்.... அவளுக்கு அவன் குரல் காதில் விழவில்லை. 'நான் ரசனா இல்லை, இவன் அரவிந்தனும் இல்லை. அப்படியானால் நான் எந்த இடத்துக்கு வந்திருக்கிறேன்? இவர்கள் யார்? இது என்ன வேளை? அக்கம்—பக்கம் எதுவுமே விளங்கவில்லையே!' என்ற எண்ணத்தில் அவள் மூளை சுழன்றது.

அவள் மனத்தில் சுழற்காற்று சுற்றிச் சுற்றி அடிக்கிறாற்போல, அதில் பெரும் பேயாட்டம் நடப்பதுபோலத் தோன்றியது.

அவள் தன் பேட்டைக்குச் செல்லும் பஸ்ஸில் போய் ஏறி உட்கார்ந்தாள். அவள் தன் காலைப் பார்த்தாள். இரவு கனவில் பாம்பு கடித்தாற்போலிருந்ததே, அந்த இடத்தை நோக்கினாள். பாம்பு கடித்த விஷம் இப்பொழுதுதான் வெகு வேகமாகத் தலைக்கு ஏறுகிறாற்போல அவளுக்குத் தோன்றியது.

# சதராம்மா

**தை** மாதத்துக் குளிர் இரவில் சதராம்மாவின் உடல் வெட வெட வென்று நடுங்கியது. அவள் வாயில் ஒன்றிரண்டு மிகுந் திருந்த பற்களும் குளிர் தாளாமல் தந்தி பேசின. அவள் கை—கால்களில் விர்ரென்று குளிர் ஏறி மரத்துப் போகலாயிற்று. கடுங்குளிர் காரணமாக அவள் மூக்கிலிருந்தும் வாயிலிருந்தும் தண்ணீர் தண்ணீராகக் கொட்டலாயிற்று. அவள் நடுநடுவே வழியைக் கண்டு கொள்வதற்காகத் தன் இரு கண்களையும் துடைத்துக் கொள்வாள். ஆனால் கண்களிலிருந்து வடிந்த நீரை அவளால் கட்டுப்படுத்த முடியவில்லை. குளிர் அதிகரிக்க அதிக ரிக்க அவள் தன் செருப்புக் கால்களை இழுத்து இழுத்து வேக மாக நடக்க முயன்றாள். சாக்குத் துண்டு ஒன்றைத் தன் இடுப் பில் சுற்றிக்கொண்டு கையில் இரும்புக் கரண்டி ஒன்றும் ஒரு சிறிய காலிச் சாக்குப் பையும் எடுத்துக் கொண்டு, நாற்புறமும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே அவள் 'யார்டு'க்குள் நுழைந்தாள்.

யார்டில் இடு காட்டைப் போன்றதோர் அமைதி நிலவியிருந் தது. எந்தப் பக்கத்திலிருந்தும் எந்த விதமான சந்தடியும் எழ வில்லை. வெறிச்சோடிக் கிடந்த யார்டு இன்று அவளுக்கு மிகவும் பயங்கரமானதாகவும் சூன்யம் சூழ்ந்ததாகவும் தோன்றிக் கொண்டிருந்தது, கடிக்க வருகிறாற்போல. அவள் நின்றுகொண் டிருந்த வண்டிகளின் நிழலை ஒட்டினாற்போல நடந்தவண்ணமே யோசித்துக் கொண்டிருந்தாள். 'பொழுது புலரும் நேரமாகி விட்டது. ஆனால் யார்டில் ஓர் ஆளைக் கூடக் காணோமே! என்ஜின் எதுவாகிலும் 'ஷண்ட்' செய்யும் ஒலி கூடக் கேட்கக் காணோமே! காரணம் என்னவாயிருக்கும்? இந்தக் குளிர்தான் இன்று எல்லோரையும் வீட்டுக்குள் அடைத்துப் போட்டிருக்கும்! எவனுமே குளிருக்கு அஞ்சித்தான் வெளியே முகத்தைக் காட்ட வில்லை. டியூடியில் இருப்பவர்கள் கூட இந்தக் குளிர் இரவில் 'டிமிக்கி' கொடுத்துவிடுகிறார்கள்! அரசாங்கத்தின் இந்தக் காவல் துறையினர் பிராந்தியைப் போட்டுவிட்டு மெத்தை வைத்துத் தைத்த வண்டிகளில் ஏறிப் படுத்துக் குறட்டை விடுகிறார்கள்! ஆமாம், யாருக்கு என்ன தலைவிதி? இந்தக் குலை நடுங்கும் குளிரில்

கையை எதற்காக வெளியே நீட்டவேண்டும்? இந்தக் குளிரில் யார் யாரைக் கேட்கப் போகிறான்? எல்லாருக்கும் தன் உயிர் வெல்லம், அதைப் பொத்திக் காப்பாற்றத்தான் தோன்றும். ஆனால் நான் ஒருத்திதான் அதிர்ஷ்டக் கட்டை. இரவு—பகல் எந்த நேரமும் எனக்கு நிம்மதி கிடையாது. போன பிறவியிலே என்ன பாவம் பண்ணினேனோ, இந்தப் பிறவியிலே படுகிறேன். இத்தனை வயதிலும் நான் ஒரு நாள் கூட நிம்மதியாக மூச்சு விட்டது கிடையாது. சாவாடு செத்து இத்தனை நாளை ஓட்டியிருக்கிறேன். ஒவ்வொரு கரித்துண்டாகத் தேடி ஓடி என் இளமைப் பருவம் முழுவதும் கரைந்து ஓடிவிட்டது. இன்னும் விட்டபாடில்லை!' இதுபோன்ற விஷயங்களை அசைபோட்டுக் கொண்டே சதராம்மா ரயில்வே லைன்களைத் தாண்டிக்கொண்டிருந்தாள். கண்களைப் பறிக்கும் மின்சார வெளிச்சத்தில் ஒளிரும் இருப்புப் பாதைகள் வாயைப் பிளந்துகொண்டு வளைந்தோடும் பாம்புகளைப் போலக் காட்சி அளித்தன. இந்த வளைந்தோடும் பாம்புகள்தான் பல தடவைகள் அவளை முன்னும் போக விடாமல் பின்னும் போகவிடாமல் தடுத்துள்ளன. அப்பப்பா! அவள் விழுந்து எழுந்து எத்தனை துன்பப்பட்டிருக்கிறாள்!

யார்டிலிருந்து கரிகளைப் பொறுக்கிப் பொறுக்கியே சதராம்மாவின் வாழ்க்கையில் எத்தனையோ ஆண்டுகள் ஓடிவிட்டன. அவள் தில்லி ஸ்டேஷனின் பல மைல்கள் நீண்ட யார்டின் மூலை—முடுக்கு ஒவ்வொன்றையும் நன்கு அறிந்திருந்தாள். எந்த இடத்தில் இருப்புப் பாதைகளின் 'கிராஸிங்' இருக்கிறது, எந்த இடத்தில் பெரிய முள் இருக்கிறது, எந்த இடத்தில் சிறிய முள் இருக்கிறது, எங்கே அழுக்கு நீர் குட்டையாகத் தேங்கியிருக்கிறது என்பது போன்ற விஷயங்கள் எல்லாம் அவளுக்கு அத்துபடி. கரியை எடுக்கும் பொழுது யாராவது காவலாளி பார்த்துவிட்டுத் துரத்தி வந்தால், எடுத்த கரியை எங்கே ஒளிக்கவேண்டும், தான் ஓடி எங்கே மறையவேண்டும், அப்படியே மீறிப் பிடிபட்டு விட்டால் காவலாளிகளுடன் எப்படிப் பேசவேண்டும், காவலாளிக்கும் மேலே ஹவல்தார் வந்து விட்டால், அவனுடன் எப்படி நடந்து கொள்ளவேண்டும், கிளீனரை எப்படித் திட்டி மடக்க வேண்டும், பிட்டர்களுடன் எப்படிச் சிரித்துச் சிரித்துப் பேச வேண்டும் என்பதெல்லாம் கூட அவளுக்கு நன்றாகத் தெரியும்.

சதராம்மா எத்தனையோ முறைகள் தன் உயிரையே பொருட்படுத்தாமல் நிலக்கரிகளைக் காப்பாற்றியிருக்கிறாள். அவள் நிலக்

கரிகளை எடுத்துக்கொண்டு 'ஷண்ட்' செய்ய ஓடிவரும் என்ஜின்களையே கடந்திருக்கிருள். துரத்திவருபவர்களின் பிடியில் அகப்படாமல். அவளுடைய அந்தத் துணிச்சலைக் கண்டு அவர்கள் அயர்ந்து போயிருக்கிருர்கள்.

அவள் அடிக்கடி யோசித்துப் பார்ப்பதுண்டு, 'இந்தக் காசு வாங்குகிறவர்கள் எத்தனை நல்லவர்கள்!' என்று. இரண்டணுவோ ஓரணுவோ இவர்களிடம் தலையைச் சுற்றி எறிந்துவிட்டால் கூடை வழியக் கரியைக் கொண்டுபோய் விடலாம். என்ஜினில் பயர்மேன்கள் இருக்கிருர்களே, இவர்களிடம் இரண்டணுவைக் காட்டினல் போதும், எரியாத கரி எங்கிருந்துதான் கொண்டு வருவார்களோ தெரியாது, எதிரே அம்பாரமாகக் குவித்து விடுவார்கள்! ஆனல் இந்த நாணயக்காரர்கள் இருக்கிருர்களே, இவர்கள்தான் ரொம்ப ரொம்பப் பொல்லாதவர்கள். இவர்கள் வயிறு எது போட்டாலும் நிரம்புவதில்லை. 'உன் தலைப்பில் இருக்கிறதை யெல்லாம் கொடுத்துவிட்டுப் போ' என்பார்கள். ஒன்றுமில்லையா? 'வா, வெற்று வண்டிக்கு! எங்கள் பேச்சைக் கேட்டு விட்டுப் போ!' என்பார்கள். நாய்ப் பசங்கள்! கீழ்ச் சாதிப் பிள்ளைகள்! வெட்கம், மானம் கிடையாது. அம்மா பெண் என்கிற நெறிமுறை கிடையாது இந்த முண்டங்களுக்கு. மாமிசம் வேணும், கிழட்டு மாமிசமா இருந்தால் என்ன, குமரி மாமிசமாயிருந்தால் என்ன? வித்தியாசம் கிடையாது. புலால் புசிக்கிறவன் ருசியா பார்க்கிருன், அந்த வேளைக்கு ஏதோ ஆசை தீரக் கிடைத்தால் சரி! ஆனல் எலும்பும் தோலுமே எஞ்சிச் சாரமற்ற சக்கையாகிப் போனல் எவன் தீண்டுவான்? — அதனலே இப்பொழுதெல்லாம் அவளை யாரும் பார்க்கிறதில்லை, பார்த்துவிட்டால் எரிந்து விழுகிருர்கள், திட்டித் தீர்க்கிருர்கள், மொத்திக் குத்தி விரட்டுகிருர்கள். அப்பப்பா! சில சமயம் என்ன கெட்ட வார்த்தைகள் எல்லாம் பேசுகிருர்கள்!' இப்படி யோசித்துக் கொண்டே சதராம்மா விழிகளிலிருந்து வழிந்த நீரைத் துடைத்து விட்டுக் கொண்டாள். அவளுடைய முகத்துச் சதைச் சுருக்கங்கள் குளிரினல் இன்னும் கெட்டியாகி விட்டது போலத் தோன்றியது.

அவள் மீண்டும் யோசிக்கலானுள். அவள் தன் பருவப் பூரிப்பை மறைத்துத் திரிந்த காலமும் ஒன்று உண்டு. அப்பொழுது ஆண்டவனிடம் அவள் முதுமைக்காக வேண்டித் தவம் இருந்தது கூட உண்டு. 'இந்த இளமைப் பருவம் எரிந்து மாயக் கூடாதா?

என்னை எங்கும் தலை காட்ட விடமாட்டேன் என்கிறதே!' என்று அலுத்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் முதுமை அதைக் காட்டிலும் மோசமாக அல்லவா இருக்கிறது! இப்பொழுது எல்லாரும் என்னைத் திட்டுகிறார்கள்! கிழட்டுச் சனியன் என்று காரித் துப்புகிறார்கள். காசுக்கும் காளைப் பருவத்துக்கும் வெட்கம்—மானம் கிடையாது. இரண்டுமே வெட்கங் கெட்டவைகள்! என்னிடம் இப்பொழுது காசும் இல்லை, இளமையும் இல்லை. எந்த வலுவிலே நான் பேசுவது? இருந்த காசு அத்தனையும் பூதனின் நோயில் தீர்ந்துபோய் விட்டது. எந்த அல்லல்களிலிருந் தெல்லாம் உயிர் தப்பினேனோ, அத்தனையும் மீண்டும் என் கழுத்தை அறுக்க வந்துவிட்டன. புருசன் போனபிறகு எத்தனை இன்னல் பட்டுக் கூலி வேலை செய்து இந்த பூதனைக் காப்பாற்றி யிருப்பேன்? உடலை விற்று அவனுக்கு வேலை செய்து வைத்தேன், திருமணம் செய்து வைத்தேன். ஆண்டவன் குழந்தையும் கொடுத்தான். இனி கலிதீரும் என்று எண்ணினேன். ஆனால் போனபிறவியில் செய்த பாவங்கள் என்னைப் போன்ற துக்கிரிகளை நிம்மதியாக இருக்க எங்கேயாவது விடுமா? திருமணம் முடித்து வைத்தது யமனைக அல்லவா வந்து சேர்ந்தது! மகன் ஒரேயடியாக ஒட்டி உலர்ந்துபோய் எலும்புக் கூடாக அல்லவா கிடக்கிறான்!'

தொடர்ந்து சதுராம்மாவுக்குத் தன் திருமணம் பற்றிய நினைவு வந்தது. அதையொட்டி அவள் சிந்தனை தொடர்ந்தது: 'கல்யாணம் என்றால் கல்யாணம் தான். முதல் நாள் அவள் பூதனின் அப்பாவோடு இந்த வீட்டுக்கு வந்தாளே, அப்பொழுது அவள் மனத்தில் என்ன வெல்லாம் ஆசைகள் தலையெடுத்திருந்தன! அவள் புருஷனும் பாவம், இரவு—பகல் எந்த நேரமும் 'சதுரான், சதுரான்' என்று அவளையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தான். அவனுக்குப் பின்னிரவிலே டியூட்டி போட்டால், அவன் என்னைத் தனியாக விட்டு விட்டு வேலைக்குப் போனதே கிடையாது. உடல் நலம் சரியில்லை என்று சாக்குப் போக்குச் காட்டி எத்தனையோ நாட்கள் அவன் வீட்டை விட்டு வெளியே போனதே கிடையாது 'சதுரான்! நீ கவலைப்படாதே. என் அருகிலேயே உட்கார்ந்திரு. சாப்பாட்டுக்கு வேண்டிய ஏற்பாடுகளை நான் கடைத்தெருவிலேயே செய்து விடுகிறேன்! கிடைக்கிற சம்பளம் ஏராளம், ஏராளம்! மேலே நமக்கு அப்பா—

அம்மா எங்கே யிருக்கிறார்கள், அவர்களுக்கும் எதாவது அனுப்ப வேண்டும் என்பதற்கு?' என்று கூறிவிடுவான்.

ஆமாம், அக்கம்பக்கத்து வீட்டுக்காரிகள் தினம் என்னைக் கேலி செய்து தீர்த்து விடுவார்கள். "மேலே மாமியும் கிடையாது, நாத்தியும் கிடையாது. மருமகளே விட்டுக்கு எசமானி! உனக்கென்னம்மா, நீ ராசாத்தி! அதனாலேதான் நாள் முழுவதும் உன் காலடியிலே உட்கார வைத்துக் கொண்டிருக்கிறாய் கணவனை! கொஞ்சம் குவார்ட்டரை விட்டு வெளியே வந்து பார்த்தால் அல்லவா தெரியும், உலகம் எப்படி இருக்கிறது என்று!" என்று குத்தியும் காட்டுவார்கள்.

"சதரான்! நீ சந்தோஷமாயிரு! சனங்கள் அப்படித்தான் சொல்வார்கள். சொல்லிக்கொண்டு போகட்டும். நீ காதிலே வாங்கிக் கொள்ளாதே! இந்தச் சனங்களுக்குப் பிறத்தியார் சுகமாக இருந்தால் அதைக் காணப் பிடிக்காது" என்பான் கட்டிய கணவன்.

இது போன்ற விஷயங்களை எண்ணிப் பார்த்தபொழுது சதராம்மாவுக்கு அழுகை வந்துவிட்டது. அவள் விசித்து விட்டாள். அப்பொழுது வேகமாக வீசிய குளிர்காற்று அவளுடைய அந்தச் சிந்தனைச் சங்கிலியை அறுத்து விட்டது.

மின்சார ஒளியில் அவள் கண்கள் கூசின. அவளது கால்கள் தாமாகவே இருப்புப் பாதையையும் முட்களையும் தாண்டிக் கொண்டிருந்தன. அவள் நெற்றியில் ஒரு கையை வைத்துக் கொண்டு தனது அறுந்த செருப்பை இழுத்து நடந்தவாறே விரைந்து கொண்டிருந்தாள். கூடவே, திருடர்களைப்போல நாற்புறமும் பார்த்துக் கொண்டாள். ஓரிரு தடவை வண்டி நிழலில் நின்று தன்னை யாராவது எங்காவது பின்தொடருகிறாரா என்பதையும் கவனித்து உறுதிசெய்து கொண்டாள்.

சதராம்மாவின் பார்வையில் பச்சைக் கரிமலை யொன்று தென்பட்டது. கண் கூசும் மின்சார ஒளியில் அந்தக் குவியல்கள் தங்கம்—வெள்ளிக் குவியல்களெனக் காட்சி தந்தன. அவற்றில் இரண்டு பெரிய கட்டிகளைத் திருடிச் சென்று அவள் பூதனுக்கு மருந்தும் அவன் மகனுக்கு அரிசியும் மாமியார்—மருமகள் வயிற்றுக்குச் சோள மாவும் வாங்கி வருவாள். 'இன்றைக்கு எத்தனை நல்ல வாய்ப்பு! என்னதான் குளிர் எலும்புகளையே உறைய வைத்து நடுங்க வைத்தாலும், தங்கு தடையின்றி இரண்டு

மூன்று சுற்றுகள் அவள் சுற்றி வரலாம் அல்லவா? இன்று சிரமத்தைப் பாராட்டாமல் இரண்டு மூன்று முறைகள் கரி பொறுக்கிச் சென்றுவிட்டால், வருகின்ற இரண்டு மூன்று நாட்கள் குளிரில் அடிபடாமல் பிழைத்துக் கொள்ளலாமே! பகல் வேளைகளில் பாதி எரிந்த 'வேகா வெரி'க் கரிகளைப் பொறுக்கிக் கொள்ளலாம் சாம்பல் குவியலிலிருந்து பாதி எரிந்த கரிகளைப் பொறுக்கிக் கொண்டால் யார் அவளைத் தடுக்கமுடியும்?'

இந்த எண்ணம் அவளுக்கு இன்னொரு நினைவைக் கொண்டு வந்தது: 'பூதன் இந்தச் சாம்பற் குவியல்களில் வளர்ந்து பெரியவன் ஆகியது போலவே, அவனுடைய மகனும் இதே குவியலில் வளர்ந்துதான் பெரியவன் ஆகிறான்.'

பச்சைக்கரி இரண்டு முறை எடுத்துச் சென்றால், வீட்டில் உள்ள எல்லோருக்கும் இரண்டு நாளைய உணவு கிடைக்கும். இன்று நல்ல நேரம். இந்தக் குளிர் இரவில் யாரும் வெளியே வரமாட்டான். இன்று இரண்டென்ன, மூன்று முறைகள் கூட எடுத்துச் செல்லலாம்... இந்த இந்துக்களைக் காட்டிலும் முசல்மான்கள் எத்தனையோ நல்லவர்கள்! இந்த இந்துஸ்தானம், பாகிஸ்தானம் என்று இரண்டுபட்டுக் கிடக்கிறதே, இதன் தலையிலே தீயை வைக்க! ஏழைகளை எத்தனை துன்பத்துக்கு உள்ளாக்கி விட்டார்கள் இந்தப் பிரிவினையின் மூலம்! முதலில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் எப்படி அண்ணன்—தம்பி போலப் பழகினார்கள்! ஒருவர் மற்றவருக்கு உயிரையே தரச் சித்தமாயிருந்தார்கள்! இப்பொழுது நாய்க்கு நாய் கூட அல்லவா எதிரியாயிருக்கிறது! இன்று இங்கே குர்பான் அலிஷா இருந்தால், என் நிலை இத்தனை மோசமாகி யிருக்குமா? அவன் என் மேலே உயிரையே வைத்திருந்தான். எனக்குப் பணம்-காசு விஷயத்திலே சிரமம் ஏற்படவே அவன் விடவில்லை. டிரைவர் நத்தாசிங் கூட அவனுடனேயே தான் இருந்தான். இருந்தாலும் நத்தாசிங் ஷாவுக்கெதிரே அவள் மேல் கைவைத்திருப்பானா? எப்படி வரும் அவனுக்கு அந்தத் தைரியம்? ஆனால் 'அண்ணி, அண்ணி' என்று கூப்பிடுகிறதிலேயே அவன் தொண்டைத் தண்ணீர் உலர்ந்து போகும். நத்தாசிங் எத்தனை முறை அவளுக்குப் படித்துப் படித்துச் சொல்லியிருப்பான், தெரியுமா? "அண்ணி! சொல்கிறதைக் கேளு, குர்பான் அலிஷாவோடு நிக்காஹ் செய்துகொண்டு விடு. இந்த இளமையும் அழகும் எப்பொழுதும் இருக்காது, கை கொடுக்காது. இன்னும் காலந் தாழ்ந்து விடவில்லை. நீ நிக்காஹ்

செய்து கொண்டு விட்டால். உன் பூதனும் வளர்ந்து பெரியவனாக முடியும். நீயும் 'பேகம்' ஆகி வாழலாம். இனி என்ன கட்டுப்பாடு வேண்டிக் கிடக்கிறது, உன் சாதிப் பற்றை விட்டுவிடு!''

''ஐயையோ! அட நத்தா சிங்கா! வாயைக் கழுவிவிட்டுப் பேசடா! ஒரு முஸல்மானை மணந்து கொண்டு என் சாதி—தர்மத்தை விட்டுவிடச் சொல்கிறாயேடா! உனக்கே நன்றாயிருக்கிறதாடா?''

''சரி, அண்ணி, உன் இஷ்டம்! இப்பொழுது நீ என்ன கங்கையிலே குளிச்சிட்டுச் சுத்தமாயிருக்கிறதாக நினைப்போ? தினம் அவன் உன்னை அழைத்துக் கொண்டு வண்டிக்குள்ளே நுழைகிறான்! அப்புறம் எதற்காக இந்தப் பொய்க் கௌரவத்தைப் பொத்திப் பொத்தி வைத்துக் கொள்ளுகிறாய்?— உன்னைப் பற்றி யாருக்கு என்ன தெரியாது? ஷாவுக்குப் பயந்து ஜனங்கள் வாயைத் திறக்கவில்லை. இல்லா விட்டால் உன்னிடம் யாருக்கு என்ன பயம்? நான் சொன்னால் சொன்னதுதான். என் பேச்சை நினைவு வைத்துக்கொள் அண்ணி! என்றைக்காவது ஒரு நாள் அப்படிச் செய்யாமல் போனோமே என்று கையைப் பிசைந்து கொண்டு நீ அழப்போகிறாய்!''

சதராம்மா பெருமூச்சு விட்டவாறே, பழைய விஷயங்களை நினைத்துப் பார்த்துக் கொண்டு கண்களையும் அடிக்கடி துடைத்த வண்ணம் இருப்புப் பாதைகளைத் தாண்டிச் சென்று கொண்டிருந்தாள். வாஷிங் லைனைத் தாண்டும்பொழுது அவள் காலைப் பள்ளத்தில் வைத்து விட்டாள். எற்கனவே குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தவள், காலும் தடுமாறவே குப்புற விழுந்துவிட்டாள். அவளுடைய முழங்கால் எலும்பு நொடித்துக் கொண்டது கையில் இருந்த இரும்புக் கரண்டி கையைப் பதம்பார்த்து விட்டது. அது பட்ட இடத்திலிருந்து இரத்தமே வந்துவிட்டது. வலியினால் அவளால் எழுந்திருக்கவே முடியவில்லை. உரக்கக் குரல் எடுத்து அழவேண்டும் போலக்கூட அவளுக்குத் தோன்றியது. இப்படி வாழ்வதைக் காட்டிலும் செத்து விடுவது எவ்வளவோ மேல் என்று எண்ணினாள் அவள். அவள் இல்லாவிட்டால் இந்த உலகத்துக்கு என்ன பெரிய நஷ்டம்? இப்படி யோசித்தவாறே எப்படியோ எழுந்து தட்டுத் தடுமாறியவாறு அவள் இருப்புப் பாதையைத் தாண்டிச் செல்வதற்கும், 'குப்குப்' என்று ஓலமிட்டுக் கொண்டு அவளருகாக ஓர் என்ஜின் போவதற்கும் சரியாக இருந்தது. அந்த என்ஜினுக்குக் கீழே சிக்கி மடிந்

திருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்குமே என்று எண்ணினாள் அவள். அவள் தலையில் இன்னும் என்ன எழுதியிருக்கிறதோ?

சதராம்மாவால் எழுந்து அடி எடுத்துவைக்க முடியவில்லை. எதிர்த்தாற்போல் எரிந்து கொண்டிருந்த கரிகளுக்கு அருகில் சென்று குளிர் காய்ந்தால் என்ன என்று அவளுக்குத் தோன்றியது. ஆனால் கணப்புக் கருகில் உட்கார்ந்து இருமிக் கொண்டிருந்த குரலை அவளுக்கு நன்றாகத் தெரியும். குளிர் காய அவள் அங்கே சென்றால், அந்தப் படுபாவிக் கிழவன் பழைய கதையை ஆரம்பித்துவிடுவானே என்று அவள் யோசித்தாள் கிழவன் பேரன்—பேத்தி எடுத்துவிட்டான். காடு வா, வா என்று அழைக்கிற வயது. ஆனால் இன்னும் ஆசை நரைக்கவில்லை. வாய்த்தால் கிழவியும் பாடுவாள் என்கிறது கதை. கிடைத்தால் விட மாட்டான்......... சதராம்மாவுக்கு வலிபொறுக்க முடியவில்லை. இருந்தாலும் எப்படியோ காலைப் பிடித்துக்கொண்டு எழுந்தாள். எல்லாவற்றுக்கும் முதலில் கரியை எடுத்துக் கொள்வது என்று முடிவுக்கு வந்தாள். இரண்டு நடை இல்லாவிட்டாலும் ஒரு நடையாவது கொண்டு போகலாமே! அவள் கொஞ்சம் முன்னே சென்றாள். ஏதோ வெளிச்சம் வருவதுபோலத் தெரிந்தது. காவல்காரர்கள் தங்கள் தலைப்பாகையைச் சரி செய்து கொண்டு வண்டியிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தார்கள். இதைக் கண்டதும் அவளுக்கு இதயம் நின்றுவிட்டது. வலி யனைத்தும் மீண்டும் அவளைப் பற்றிக் கொண்டன.

சதராம்மா வெறுங்கையோடு வருவதைக் கண்டதும் அவள் மருமகள் ஜோமான் மொல்லு மொல்லு வென்று பிடித்துக் கொண்டு விட்டாள். "இந்தக் கிழட்டுப் பிசாசு சாகவும் மாட்டேன் என்கிறது. சரியாக இருக்கவும் மாட்டேன் என்கிறது. இருப்பவர்கள் உயிரை வாங்கித் தொலைக்கிறது! சூடு—சொரணை, மானம்—வெட்கம் எதுவும் கிடையாது. குடும்பத்துக்குச் சாபத்தீடாக வந்து சேர்ந்திருக்கிறது. வெளியிலே போகவும் வேண்டாம். சோறு தின்னவும் வேண்டாம். இருட்டோடு வீட்டைவிட்டுப் போனவள், இப்பொழுது வெறுங்கையோடு திரும்பி வந்திருக்கிறாள். அதோடு அழுது புலம்பிக் கொண்டு! சுத்த மோசக்காரி! உடம்பு முழுவதும் விஷம்! இவளுடைய பூவுடலில் ஓர் எலும்பு அசையக்கூடாது. துரும்பு எடுத்துப் போடமாட்டாள். தின்கிறதற்குமட்டும் நாக்கைத் தீட்டிக் கொண்டு வந்து விடுவாள்! காலையில் எழுந்து கணப்பு எரிகிற

இடமாகப் பார்த்து உட்கார்ந்து உடம்பை வாட்டிக் கொண்டு உல்லாசமாகத் திரும்பி வந்திருக்கிருள், வெறுங்கையோடு! எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன். நீ ஒன்றும் போய்த் தொலேக்கவேண்டாம். வீட்டிலேயே கிடந்து சா என்று! உன்னுலே முடியவில்லை யென்ருல், வீட்டிலே உட்கார்ந்து தண்டச் சோறு தின்று தொலைக்கிறது தானே? நான் போய்க் கொண்டு வருவேனே, இல்லையோ? நான் போனல் இந்த அம்மாளுக்குக் குடும்ப கௌரவமே குலைந்துபோய் விடுமாம். என்னை வெளியிலே போகவே கூடாது என்கிருள்! நான் என்ன சீனியா, சர்க்கரையா, வாயிலே போட்டால் கரைந்து போவதற்கு? இன்றைக்கு எல்லோரும் பட்டினியாகக் கிடந்து செத்துத் தொலையுங்கள்! வீட்டில் ஒரு பொட்டு மா என்ருல் ஒரு பொட்டு மா கிடையாது. நான் இந்த வீட்டுக்கு வந்த நாள் முதலாக இதே ரோதனை தான்!''

சதராம்மாவுக்கு அழுகை அழுகையாக வந்தது. ஆனல் அவளால் ஒரு பதிலும் சொல்ல முடியவில்லை. அவள் அப்படியே ஏதாவது சொல்ல முயன்ருலும் மருமகள் ஜோமான் கடித்துக் குதறி விடுபவளைப்போல் அவள் மீது சீறிப் பாய்வாள். "நாளைக் காலையில் நான் கரி எடுத்து வரப்போகிறேன்! பாரு மூட்டை மூட்டையாகக் கட்டி எடுத்து வருகிறேனு, இல்லையா என்று! நல்ல மனசு இல்லை, கெட்டு அலைகிற மனசு! அதுனலே இல்லாததும் பொல்லாததும் எத்தனையோ பேசச் சொல்லுகிறது! சும்மா உட்கார்ந்து சோறு தின்கிறது சுலபம்!'' என்று சூளுரைத்தாள்.

இதுபோல மாமி — மருமகளின் பகல்பொழுது முழுவதும் சண்டையிலேயே போய்விட்டது. சதராம்மா இரவு முழுவதும் தன் கடந்த காலவாழ்க்கையையே நினைத்து நினைத்து அழுது கொண்டிருந்தாள். பட்ட காயத்தின் வலி ஒருபுறம்; மருமகள் கொடுத்த சூட்டின் வலி மறுபுறம். அவள் முரட்டுப் போர்வையை இழுத்துப் போர்த்திக்கொண்டு படுத்தவாறே யோசிக்கலானுள்: 'ஜோமான் எத்தனை வாயாடியாகி விட்டாள்! யார்டுக்குப் போய்க் கரி எடுத்து வருவது என்பது இலேசான காரியம் இல்லை என்பது அவளுக்குத் தெரியவில்லை. தன்னுடையது என்று எண்ணும் எல்லாவற்றையும் அங்கு கொண்டுபோய்ப் பறிகொடுத்தால்தான் இரண்டு கட்டி நிலக்கரி கிடைக்கும்! இதை எப்படி விளங்க வைப்பது அவளுக்கு?'

இந்த யோசனையில் சதாரம்மாவுக்கு எப்பொழுது தூக்கம் வந்ததோ, அவளுக்கே தெரியாது!

அவளுக்குத் தூக்கம் கலைந்தபொழுது ஜோமான் குடிசைக்குள் இல்லை என்பதைக் கண்டாள். இரும்புச் சட்டுவத்தையோ காலிச் சாக்குப் பையையோ கூடக் காணவில்லை. அவள் மனம் கிடந்து அடித்துக் கொள்ளலாயிற்று. அவள் நெற்றியில் வியர்வை முத்துக்கள் தோன்றிக் குளிர்ந்தன. வாசல் வாசற் படிக்கு எழுந்து வந்து கொட்டக் கொட்ட வழியையே பார்க்க லானாள். வாசற்படியில் நின்றிருந்தவளுக்கு, ஒரு பெரும் புயல் அடித்துக் குடிசையையே தலைகுப்புறப் புரட்டிவிட்டது போல வும், குடிசையின் ஒவ்வோர் ஓலையும் பறந்து சிதறுவது போலவும் தோன்றியது. சதாரம்மா வெகு நேரம் வரை வாசலிலேயே நின்று வெளியே பார்த்துக் கொண்டிருந்தாள். தொலைவிலிருந்து வரும் ஒவ்வோர் உருவமும் அவளுக்கு ஜோமானாகவே தோன்றும்.

பொழுது புலரும் நேரத்தில் ஜோமான் கரி மூட்டை ஒன்றைத் தூக்க முடியாமல் தூக்கி வந்து குடிசை வாசலில் போட்டாள். மாமியார்—மருமகள் இருவரும் ஒருவரை யொருவர் கண்களுக் குள்ளேயே பார்த்துக் கொண்டனர். ஜோமானின் நீர்த்திரை யிட்ட விழிகள் மேலெழும்ப மறுத்தன. சதாரம்மா மருமகளின் கலைந்த கேசங்கள், அழுது வீங்கிய கண்கள், கிழிந்த உடைகள் ஆகியவற்றைக் கண்டாள். அவளுக்கு மூர்ச்சைபோட்டுவிடும் போலாகிவிட்டது. சதாரம்மாவுக்குத் தனது மருமகள் கரி மூட்டை எடுத்து வந்தவளாகத் தோன்றவில்லை. ஏதோ பெரும் போர் நிகழ்த்திவிட்டு வந்திருப்பவளாகவே தோற்றினாள்.

## அவரவர் எல்லை

வெளிக் கதவைத் திறந்து கொண்டு, மலர்ச் செடிகளின் வழியே நான் வராந்தாவுக்கு வரும் பொழுது தர்சியின் ரோஜா வண்ண முகம் இனியதொரு புன்முறுவலை உதிர்த்து என்னை வரவேற்கிறது. அந்நேரம் ஒன்று அவள் வீட்டைத் துப்புரவு செய்வதில் ஈடுபட்டிருப்பாள், அல்லது தையல் வேலை—பூவேலை செய்வதில் முனைந்திருப்பாள். வேலையற்ற வாழ்க்கை பொருளற்றது என்ற நினைப்பு அவளுக்கு··· அவள் என்ன வேலை செய்து கொண்டிருந்தாலும் என்னைப் பார்த்ததும் அந்த வேலையை மறந்துவிட்டு என்னை வரவேற்கத் தவறமாட்டாள். காலையிலிருந்தே என்னை எதிர் நோக்கிக் கொண்டிருப்பதாகத் தோன்றும் அவளது அந்த வரவேற்பு வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்தையும் எனக்கு அர்ப்பணம் செய்ய அவள் தயாராயிருக்கிறாள் அவள் தனது அன்பான விரல்களால் என் உடலைத் தொடும் பொழுதும், என் உடைகளை வாங்கிக் கொடியில் மாட்டும் பொழுதும் எனக்கு எத்தகையதோர் உணர்வு தோன்றும், தெரியுமா? அவள் சிவபெருமானது உருவம் தரித்து, நாள் முழுவதும் நான் சேமித்து வந்த அவமானம், அதனால் ஏற்பட்ட மனத்துயரம் ஆகிய நஞ்சைத் தான் ஒருத்தியே பருகி 'நீல கண்டி'யாகத் தோன்றுகிறாளோ என்று படும். அம்மாதிரி நேரங்களில் நான் இவ்வுலகம் கண்டறியாத மயக்கமோக நிலையை அடைவேன், பேரின்ப நிலைபெற்று மெய்யுலகில் சஞ்சரிப்பதாக எண்ணி இறுமாந்து போவேன்; என்னையே மறந்து போவேன். அந்த மெய்யுலகில் வாழ்பவர்கள் என்னைக் காட்டிலும் அதிக இன்பம் துய்ப்பார்களோ....? நான் வாழும் அந்த சொர்க்கத்தில் நான்தான் இந்திரன். எனது தர்சி தான் அலகா. முறுவலிக்கும் மலர்கள் ஒருபுறம், என் தர்சி மறுபுறம்! இரண்டும் இணைந்த என் அலகா தர்சிதான்!

ஆனால் ஏனோ, தெரியவில்லை! கடந்த சில காலமாக தர்சி என்னிடமிருந்து என் சொர்க்கத்தைப் பறிக்க விரும்புகிறாற் போலத் தோன்றுகிறது!

மாலைத் தேநீரைப் பருகும்பொழுது, எப்படியோ அதோடு கவலையையும் பருகும்படியாகி விடுகிறது. கடைசி வாய்த்

தேநீர் கவலைகளில் போய் முடிகிறது. நான் எனது அன்றாட அலுவல்களிலிருந்து சுவையான விஷயங்களைச் சொல்ல முற்படுவதற்கு முன்னாலேயே அவள் தன் கதையை ஆரம்பித்து விடுகிறாள். ஊர்ச் செய்திகளை எல்லாம் ஒன்று கூட்டிப் பேசி ஒரு பீடிகை போட்டபின் அவள் கூறுகிறாள்: ''அவள் இருக்கிறாளே, அதுதான் உங்கள் நண்பர் ஸப்பர்வாலின் மனைவி கீர்த்தி...''

''ஆமாம், என்ன ஆயிற்று கீர்த்திக்கு?''

''அவளுக்கும் பள்ளிக்கூடத்தில் வேலை கிடைத்து விட்டது!''

''பூ! இது ரொம்பத் தவறு!'' என்று நான் சலித்துக்கொள்கிறாற்போலக் கூறுகிறேன்.

''எது தவறு?'' அவளும் கசப்பைக் கக்குகிறாள். ஆனால் சூழ்நிலை கசப்பாகிவிடக் கூடாதே என்பதற்காக நான் தணிந்து போகிறேன். ''நீயும் இதைத் தவறாகவே எண்ணு, போதும்!'' என்கிறேன். அப்பொழுது இன்னும் என்ன வெல்லாமோ சொல்ல வேண்டுமென்று தோன்றுகிறது. ஆனால் வாயில் வார்த்தைகளே வருவதில்லை. அதனால் நான் என்ன என்னவோ சுற்றி வளைத்துப் பேசுகிறேன்:

''இதோ பார், தர்சி! பெண்கள் வேலைக்குச் செல்வது மிகவும் ஆபத்தானது. இன்று வேலைக்குப் போகும் பெண்களின் நிலை எப்படிக் கெட்டிருக்கிறதோ, அப்படி வேறு யார் நிலையும் கெடவில்லை!''

''எப்படி?''

''நீயே தான் உன் கணகளால் பார்க்கிறாயே! பஸ்களில் பெண்களின் நிலை என்ன? எத்தனை மோசமாகிவிட்டது, பஸ் பிரயாணம்! போதாக்குறைக்கு மழை நாட்களாகவும் இருந்துவிட்டால் கேட்கவே வேண்டாம்!''

''வருஷம் முழுவதுமா மழை பெய்கிறது?''

''வருஷம் முழுவதும் மழைதான் பெய்யணுமா? மழையைப் போல் ஏதாவது ஒரு சிரமம் வந்து கொண்டே இருக்கும் வருஷம் முழுவதும். ஓர் உதாரணத்துக்கு மழையைச் சொன்னேன். இன்னும்...... இன்னும்......''

எனது இந்தப் பொருளற்ற பேச்சுக்கு எதிர்ப் பேச்சுப் பேச முடியாமல் அவள் நிராயுதபாணியாகும் நிலைமை ஏற்படுகிறது. அவள் முகம் 'சுரத்' இறங்கி விடுகிறது. கண்களின் விளிம்புகளில் உப்பு நீர் கரை கட்டிக் கொள்ளுகிறது. அம்மாதிரி நேரங்களில் உத்தியோகத்துக்குச் செல்ல வேண்டுமென்ற அவளுடைய

ஆசை துடிதுடித்துத் தற்கொலை செய்து கொள்ளுகிறாற்போலத் தோன்றுகிறது. நான் என்ன அவ்வளவு கொடியவனா? இல்லை!

நான் அவளைச் சமாதானப்படுத்த வேண்டிக் கூறுகிறேன்: "என் அன்பே! பெண்கள் வேலைக்குப் போவது எனக்கு உடன்பாடு இல்லை. ஆயினும், உனக்கு ஓர் உத்தியோகம் கிடைக்க வேண்டும் என்று விடாமல் முயன்று வருகிறேன் என்பது மட்டும் உண்மை. நாள் முழுவதும் வீட்டில் அடைந்து கிடந்தால் உனக்கு 'போர்' அடித்துப் போகும் என்பதை நான் நன்கு அறிவேன். உத்தியோகம் பார்ப்பதனால் உன் உடலும் உள்ளமும் மலர்ச்சியுறும் என்பதும் தெரியும். என்ன நான் சொல்வது?"

காகிதப் பூவை மலரக் காட்டி அதில் மணம் காட்டவும் முற்படுகிறேன் நான். அதாவது அந்த நேரம் அவள் மீது ஓர் அன்புப் பார்வையை அம்பாக வீசி அவளைக் கவர முயல்கிறேன். அவளும் மகிழ்ந்து போகிறாள்.

பாவம், பெண் பிறவி!

'எம்பிராய்டரி டிசைனிங்'கில் பயிற்சி பெற்ற நாளாக அவள் வேலையைத் தவிர வேறு எதையுமே சிந்திக்கவில்லை. வேலை பார்க்கவேண்டும் என்ற ஆசை அவளது ஒவ்வொரு நரம்பிலும் குடி கொண்டு விட்டது.

பல முறைகள், நாங்கள் 'லானி'ல் உட்கார்ந்திருக்கும்பொழுது, திடும் திடுமென்று எங்கள் வீட்டு வாசல் வழியே மகிழ்ச்சியே உருவாக, கலகலப்பாகச் சிரித்துக் கொண்டு அழகிய ஜோடி கைகோத்துக் கொண்டு போவதுண்டு. அதைக் கண்டுவிட்டால் தர்சியின் பார்வை அதையே மையப் புள்ளியாகக் கொண்டு ஒன்றிவிடும். வழியே செல்லும் அந்தப் பெண் தன் கணவன் காலடிகளோடு காலடிகள் சேர்த்து வைத்து இணைந்து வெகு மிடுக்கோடு செல்வதுபோலத் தோற்றுவாள். உயரத்தில் கணவனைக் காட்டிலும் சற்றுக் குறைவுதான் என்றாலும் நடையில் தன் கணவனுக்கு இணையாக உயர்ந்து தோற்றமளிப்பாள். என் பேச்சை முந்திக்கொண்டு தர்சி கூறுவாள்: "இந்தப் பெண் கட்டாயம் வேலைக்குப் போகிறவளாகத்தான் இருப்பாள்!"

"உனக்கு எப்படித் தெரியும்?"

"ஒரு பெண் வேலைக்குப் போகாத வரையில், அவளுடைய தன்னம்பிக்கை உணர்வு இப்படித் தலையெடுத்து நிற்கமுடியாது!"

அவள் மீண்டும் தொலைவில் போய்க்கொண்டிருக்கும் அந்த ஜோடியை நோட்டமிடுகிறாள். நானும் கற்பனையில் ஆழ்கிறேன்,

அதோ தொலைவில் செல்லும் கணவனும் மனைவியும் நானும் தர்சியும்தான் என்று! அப்புறம் ஒரு கணக்கும் போட்டுப் பார்க்கத் தொடங்குகிறேன்; தர்சிக்கு வேலை கிடைத்துவிட்டால், அவளுக்கு எந்த அளவு தன்னம்பிக்கை ஏற்படும், தன் நிறைவு ஏற்படும் என்று! அவள் நடையில் எத்தனை அழுத்தம், எத்தனை மிடுக்கு வரும் என்றும் புள்ளிப்போட்டுப் பார்க்க முனைகிறேன். யார் கண்டார்கள், அவள் பெருமையில் சிறந்து என் வாழ்க்கையையே கூட அடித்துவிடலாம். நான் அவளுக்கு அடங்கி நடக்கும்படியாகவும் ஆகலாம்...... இந்த இடத்துக்கு வந்ததும் என் யோசனை தடுமாறத் தொடங்குகிறது. தர்சியுடன் அடியொற்றி நடந்து போகும்பொழுது நான் தாழ்ந்துபோய் விட்டதுபோன்ற நினைப்பில் துடி துடித்துப் போய்விடுகிறேன். உலர்ந்த சருகு போல நடுநடுங்கத் தொடங்குகிறேன்! மிக மிகப் பயங்கரக் கனவு கண்டதாக எனக்குத் தோன்றுகிறது. கனவு மெய்யாகி விடுமோ?

அப்பொழுது தர்சி வெகு தொலைவுக்குச் சென்றுவிட்ட அந்த இணையின் நிழலையே நோக்கிக் கொண்டிருக்கிறாள். கழுத்துத் தொங்குகிறது; கண்கள் விரிந்திருக்கின்றன. முகத்தில் சுடர்விடும் நம்பிக்கை யொளி நடுங்கிக் கொண்டிருக்கிறது. இல்லாமை ஓர் உருவெடுத்து வந்தாற்போல தர்சி தோற்றமளிக்கிறாள்; தலை குனிந்து இறைஞ்சி நிற்கிறாள்.

இந்த 'மூடி'லும் மனப்போக்கிலும் கூட எனக்கு அவள் மிகவும் பிடித்திருந்தாள். எனக்கு அந்தக் காட்சி எத்தனை ஆறுதல் அளிப்பதாக இருந்தது! என்னால் மகிழ்ச்சி கொள்ளாமல் இருக்க முடியவில்லை. உள்ளத்துள் பூரித்துப் போனேன். அந்தப் பூரிப்பில் என் உதடுகள் நெளிந்து ஒரு புன்முறுவலை இலேசாக உதிர்த்தன. எனது ரகசிய நிலையைக் கண்டு தர்சியின் சமாதி நிலை கலைந்தது. அவள் துடித்துப் போய்க் கேட்டாள், "உங்களுக்கு என்ன வந்து விட்டது?" என்று! அவள் குரல் நடுங்கிக் கொண்டிருந்தது. நான் மகிழ்ச்சியில் மிதந்தவனாக ஒரு பொய்யைக் கூறினேன். "உனக்கும் ஒரு வேலை கிடைத்துவிட்டால் நமது வாழ்க்கையும் இந்த எழில் மிகு இணையைப்போல ஆகிவிடும் அல்லவா? அப்புறம் நீயும்...... நீயும்....... இதைப் பற்றித் தான் சிந்தித்துக் கொண்டிருந்தேன்..." என்றேன்.

அதற்குமேல் என்னால் ஒன்றும் கூற முடியவில்லை. பொய் பேசுவது எனக்கு மிகவும் சிரமமாகத் தோன்றியது; கொல்லும்

நஞ்சாகத் தோன்றியது. ஆனால் தர்சியின் கண்கள் மகிழ்ச்சியில் மிதந்து, நீரில் குளித்தன. அவள் பிடிபடாத சந்தோஷத்துடன் எனக்குக் காப்பி போடுவதற்காகச் சமையலறையை நோக்கிச் சென்று விட்டாள்.

பல முறைகள் பத்திரிகை படிக்கும்பொழுது திடும் திடுமென்று என்று பார்வை ஏதாவது மட்டரகமான செய்தியைக் கண்டு நின்றுவிடும். நான் அந்தச் செய்தியை வெகு நேரம் வரை படித்துக்கொண்டே இருப்பேன். அந்தச் செய்தி அநேகமாகப் பெண்ணைப் பற்றியதாக இருக்கும். ஒரு பெண், தான் வேலை செய்து வந்த அலுவலகத்தில் ஓர் அஸிஸ்டெண்டைக் காதலித்துத் திருமணம் புரிந்து கொண்டு வேறு ஒரு நகரத்துக்குப் போய் விடுகிறாள் என்பது போன்றதாகவும் இருக்கும். நாக்கைச் சூள் கொட்டி இச்செய்தியை நான் தர்சிக்குப் படித்துச் சொல்லுவேன். கேட்டு அவள் முகம் வெளிறிவிடும். கைகள் நடுங்கிப் போகும். அவளே சடசட வென்று அந்தச் செய்தியில் வேகமாகப் பார்வையை ஓட்டுவாள். அவள் முகத்தின் நிறம் மாறுவதைக் கண்டு நான் உள்ளூற மகிழ்ந்து மாய்வேன். தர்சி கலவரம் என்னும் கழுவில் தொங்குகிறாற்போல எனக்குப் படும். அவளை மேலும் குத்துவதற்காக நான் நக்கலும் கேலியுமாகச் சொற்களை உதிர்ப்பேன்.

“விஞ்ஞானம் வெகுவாக முன்னேறியிருக்கிறது என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். இன்று சந்திரன் வரை போக ‘ஸ்புத்நிக்’கள் கூடத் தயாராகி விட்டன. பெண்களுக்குச் சம உரிமையும் கிடைத்துவிட்டது. ஆனால் பயன் என்ன? பெண்களின் வாழ்க்கையிலும் நடத்தையிலும் செம்மையும் தூய்மையும் ஏற்படாத வரையில் மனிதனது அத்தனை வெற்றிகளும் வீணே!” என்று அடித்துச் சொல்வேன்.

இதைக் கேட்டு தர்சி ஏமாற்றமுற்ற மனத்தோடு கட்டிலில் படுத்துவிடுவாள். பல நாட்கள் வரை அவள் முகத்தில் இலையுதிர் காலத்து வெறுமை இழையோடும். தோட்டத்தில் பூக்கும் அத்தனை பூக்களும் வீணாகத் தோன்றும். இளம் தம்பதிகள் இன்பம் காணும் மாரிக்காலம் கூட எங்கள் வாழ்க்கையில் எந்த விதமான ரோமான்ஸும் நிகழவிடுவதில்லை.

சென்ற சில நாட்களாக தர்சியின் வாழ்க்கையின் வேகத்தை அடக்கி வைப்பதற்காக நான் ஒரு வெறுக்கத்தக்க காரியத்தைச்

செய்து வைத்திருக்கிறேன். அதனால் என் ஆத்மாவே காய முற்ற பறவையைப்போலக் கதி கலங்கிப் போயிருக்கிறது; எந்த நேரமும் துடிதுடித்து மறுகுகிறது.

ஒருநாள் திடீரென்று தர்சி கையில் தினத்தாளுடன் என் எதிரே வந்து நிற்கிறாள். அவள் முகத்திலே கம்பீரமானதோர் அமைதி நிலவி யிருக்கிறது, கடலில் கொந்தளிப்பு ஏற்படுவதற்கு முன் னறிவிப்புப் போல,...... அவள் என்னிடம் அன்றையச் செய்தி ஒன்றின் கடைசிப் பகுதியைப் படித்துப் பார்ப்பதற்காக நீட்டு கிறாள். படித்த பிறகு, அன்று அலுவலகத்தில் ஓர் அஸிஸ்டெண் டைக் காதலித்து வேறு ஓர் ஊருக்கு ஓடினாளே, அவள் உண்மை யில் ஒரு குடும்பப் பெண் அல்ல என்பது தெரிய வருகிறது. அவள் சமூகத்தால் கைவிடப்பட்டவள். தனது கறை படிந்த வாழ்க்கையைப் பொருள் உள்ளதாக்க விரும்பியிருக்கிறாள். நான் திகைத்துப்போய் மூச்சு விடமுடியாமல் விழிக்கிறேன். படபடவென்று இதயம் அடித்துக்கொள்ள தர்சியைப் பார்க்க அஞ்சி மலர்களின் பக்கமாகப் பார்த்துக் கொண்டே கூறுகிறேன்: "தர்சி! இந்த மலர்கள் தோட்டத்தில் இருக்கும்பொழுது எனக்கு மிகவும் அழகாகத் தோன்றுகின்றன. இவை இங்கேயே மணந்து கொண்டிருக்கட்டும், தர்சி! என் அன்பே, இதோ பார்!"

ஆனால் அதற்கு மேல் என்னால் ஒன்றும் சொல்ல முடியவில்லை; ஆம், ஒன்றுமே சொல்ல முடியவில்லை.

தர்சி என்னெதிரே இன்னும் நின்று கொண்டிருக்கிறாள். வாதங்கள் என்னும் எனது ஆயுதங்கள் அத்தனையையும் அவள் மழுங்கச் செய்ய விரும்புகிறாள் என்று தோன்றியது. மனத்துள் நினைத்துப் பார்க்கும்பொழுது இந்தப் பெண் ஒரு நாள் சுதந் திரம் பெற்று என்னை எதிர்க்கத் துணிவாள்; தன்னை எனக்கும் மேலாக எண்ணத் தொடங்குவாள் என்றும் கற்பனை ஓடியது.

நானே மீண்டும் அவளைப் பார்க்க அஞ்சுகிறேன். ஆனால் அவளோ ஒவ்வொரு முறையும் என் பார்வையைத் தன்பால் இழுத்துக்கொள்ளுகிறாள்.

"நேற்று நான் 'எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்சு'க்குப் போயி ருந்தேன்!"

"நீயா?" நான் நடுங்கிப் போனேன்.

"ஆமாம்!" அவள் குரல் உரக்க, நல்ல அழுத்தத்தோடு ஒலித் தது: "டீலிங்க் கிளார்க்கு, 'போன வாரம் எனக்கு இண்டர்வியூ

கார்டு அனுப்பியதாகவும் அந்த வேலைக்கு நான் ஒரே ஒரு கேண்டிடேட் தான்!' என்றும் சொன்னாரே! ஆமாம், எனக்கு ஏதாவது இண்டர்வியூ கார்டு வந்திருந்ததா?'' என்று கேட்டாள்.

''வந்திருந்தது. ஆனால் நான் தான்... கிழித்துப் போட்டு விட்டேன். உண்மையிலே நான்.... நான்.... நான்...''

கடைசியில் நான் அவளிடம் உடைத்துச் சொல்லிவிட்டேன் உண்மையை! ஏன் எனக்கு அவள் வேலைக்குப் போவது பிடிக்கவில்லை என்று!

''இரு நூறு ரூபாய் வேலை செய்து நான் இந்த வீட்டை இன்னும் அழகுறச் செய்யலாமே!''

''ஆனால்.... ஆனால் இனி என்ன செய்ய முடியும்? வேலை நினைப்பையே விட்டுவிடு! வேலை செய்வது என்பது வாழ்க்கையில் ஒன்றும் பெரிய விஷயம் இல்லை!'' என்றேன்.

நான் மனத்துள் மிக மகிழ்ந்தேன். என் சூழ்ச்சியில் எனக்கு வெற்றி கிடைத்து விட்டது என்று இறுமாந்தேன். ஆனால் அவள் என் சொல்லைச் செவிகளில் போட்டுக்கொள்ளாமல் அதே அழுத்தத்தோடு சொல்லிக் கொண்டு போனாள்:

''கார்டைக் கிழிக்கும் பொழுது நீங்கள் இண்டர்வியூ தேதியை ஒருவேளை பார்க்கவில்லை போலும்! எனக்கு வேறு இண்டர்வியூ கார்டு கிடைத்துவிட்டது. இன்று நான் இண்டர்வியூ கொடுத்து 'அப்பாயிண்ட்மெண்ட்' லெட்டரும் வாங்கி வந்து விட்டேன்!''

## என்னை டாக்டர் ஆக்கு, அம்மா!

ஏழையின் இதயவேதனை போலப் புகை போக்கியிலிருந்து புகை வந்து கொண்டிருந்தது.

சூளையின் முனையில் தன்னந்தனியாக நின்ற தேக்கு மரத்தின் அடியில் படுத்து அவன் விடாமல் புகையையே பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு அவன் தூசி மண்டிய கால்களைப் பார்த்தான். பின் தன் உடல் முழுவதும் ஒருமுறை பார்வையை ஓட்டினான். பிள்ளைப் பிராயத்தில் அவன் உடல் எவ்வளவு சதைப் பற்றோடு கரணை கரணையாக அழகாக இருந்தது! இப்பொழுது எண்ணிப் பார்த்தாலும் அவனுக்கு வியப்பாயிருந்தது.

ஆனால் இப்பொழுது......? ஒட்டி உலர்ந்த எலும்புக் கூடாக ஆகிவிட்டான் அவன்.

கண நேரத்துக்கு அவன் தன்னையே ஒரு புகை போக்கியாக எண்ணினான். புகை முழுவதும் நின்று போயிருந்த சூளையின் ஓர் உபயோகமுமற்ற புகை போக்கிபோலத் தோன்றியது. எனவே, அவனுக்குத் தன் மீதே கோபமும் வெறுப்புமாக வந்தன. தன்னைக் காட்டிலும் தன் நிலைமையை எண்ணி ஏற்பட்ட கோபம் தான் அதிகம். எல்லாவற்றைக் காட்டிலும் அவனுக்கு அதிகக் கோபம் வந்தது சூளைக் கணக்குப் பிள்ளையின் மீதுதான். இதோ வந்து விட்டேன் என்று சொல்லிவிட்டு அவன் எங்கேயோ போய் விட்டான். தேக்கு மரத்தடியில் படுத்துக்கொண்டு மணிக் கணக்கில் அவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். போகும் பொழுதே கணக்குப்பிள்ளை காகிதம் கிழித்துக் கொடுத்திருந்தால் இந்நேரம் அவன் பாதி வழி தாண்டியிருப்பான். 'இந்தக் கணக்குப்பிள்ளைப் பயலுக்குச் சூளை கிட்டேயே இருந்து பழக்கமா? எனவே, தீக்'குழாயாகச் சுடுகிறான்! தீக் குணமே படிந்து விட்டது!' என்று மீண்டும் அவன் மனம் வெதும்ப ஆரம்பித்தான்.

அதன் பின்னர் அவன் தன் கழுதைகள் பக்கம் பார்வையை ஓட்டினான். செங்கல்லைச் சுமையாகச் சுமந்து கொண்டிருந்த பொழுதிலும் அவை ஆனந்தமாகப் புல் மேய்ந்து கொண்டிருந்தன, எதுவுமே நடைபெறாதது போல். புல் தின்பதில் அவை முனைந்து மூழ்கியிருந்ததனால், சுமையின் பளு அவற்றுக்கு ஒன்றுமே தெரியவில்லை போலும். என்ன இருந்தாலும்

சுமையைச் சுமந்துதானே ஆகவேண்டும்? குறைவாயிருந்தால் என்ன, அதிகமாயிருந்தால் என்ன? இரண்டும் அவற்றுக்கு ஒன்றுதான். கணக்குப்பிள்ளை மணிக் கணக்கில் வராமல் இருந்தாலும் அவற்றுக்கு ஒன்றும் குடி முழுகிப் போகப் போவதில்லை.

''என்ன இருந்தாலும் கழுதை கழுதைதானே, சனியன்!''

அவை அப்படி அலட்சியமாகப் புல் மேய்வதைக் கண்டு அவனுக்கே சிரிப்பு வந்தது. ''மனிதனுக்கும் கழுதைக்கும் இடையே இதுதான் முக்கிய வேறுபாடு. மனிதன் அநியாயத்தைக் கண்டால் அதற்கு எதிராகக் குரல் கொடுக்கிறான். ஆனால் கழுதை......? கழுதை கழுதையாகவே இருந்து விடுகிறது!

மனிதன் தனக்குக் கீழே வேலை செய்பவர்களையும் கழுதையாகவே கருதுகிறான். அவர்கள் என்ன குரல் எழுப்பினால் என்ன? கேட்டும் கேட்காமல் போய் அலட்சியப்படுத்தப் படுகிற குரல் ஒலித்து என்ன பயன்? அவர்களைக் காட்டிலும் கழுதைகளே எவ்வளவோ மேல். இரவு பகல் தலையைக் குனிந்து கொண்டு வேலை செய்து கொண்டே யிருக்கின்றன. ஆனால் பலனைப் பற்றி எப்பொழுதுமே சிந்தித்துப் பார்ப்பதில்லை.

அவனுடைய கழுதைகள் அப்பொழுதும் கவலை யின்றிப் புல் மேய்ந்து கொண்டிருந்தன.

அவன் அவற்றைப் பார்த்து மீண்டும் சிரித்தான்.

இம்முறை அவனுடைய சிரிப்பு மனம் விட்ட சிரிப்பாயில்லை. பொதுவாகச் சிரிப்பென்றால் அப்படித்தானே இருக்கவேண்டும்? ஆனால் சிரித்தபொழுது அவன் உள்ளத்தில் எங்கோ வலித்தாற் போலிருந்தது. அவன் உள்ளத்தில் ஒரு தாழ்வு உணர்ச்சி எழுந்தது. தேக்கு மரத்தடியில் படுத்த வண்ணமே அவன் குறுகிச் சுருங்கி மூட்டைபோல் ஆகிவிட்டான். தன்னை மிகவும் சிறியவனாக, வறியவனாக உணர்ந்தான். கழுதைகளைக் காட்டிலும் கீழானவனாக எண்ணினான்.

''கழுதைப் பயல் இன்னும் திரும்பவில்லையே!'' அவன் மீண்டும் அவசரப்பட்டான்.

மனிதன் அல்லவா?

பொழுது விடிந்ததும் அவன் மூன்று நடை போய்விட்டு வந்துவிட்டான். நான்காவது நடை அடித்த பிறகு அவன் ஓய்வு எடுத்துக் கொள்வதாக இருந்தான். அப்புறம் அவன் தன் தலைவனின் பேச்சைக் கேட்கப் போவதாயிருந்தான். அவனுடைய

கிராமத்துப பள்ளிக்கு அடிக்கல் நாட்ட வருவதாயிருந்தான் தலைவன். ஆனால் இந்தக் கணக்குப்பிள்ளை இதோ வந்து விட்டேன் என்று சொல்லிவிட்டு எங்கேயோ தொலைந்து விட்டானே!

கழுதைகள் இன்னும் அலட்சியமாக மேய்ந்து கொண்டிருந்தன. வானத்தில் சிறு சிறு மேகங்கள் கூடின. காற்றின் இரண்டொரு அசைவுகள் அவன் கண்களுக்குக் குளிர்ச்சியைத் தந்தன. கணநேரத்துக்கு நல்ல களை கட்டினாற் போலிருந்தது. ஆடி மகிழ்ந்து அவன் ஒரு பாட்டை எடுத்து விட்டான்!

'சேலைத் தலைப்பை வீசி விளக்கை அணைத்தாள் அவள்
வேலை விழித் துப்பாக்கி ரவைபட்டு மாய்ந்தான் அவன்!'

அவன் மீண்டும் ஒருமுறை கலகலவென்று சிரித்தான்.

தொடர்ந்து தாடிக்காரப் பெருங் கவிஞன் ஒருவன் அவன் நினைவில் தோன்றினான். அவன் நாடோடிப் பாடல்கள் சேகரிப்பதற்காக அவன் ஊருக்கும் வந்திருந்தான், உள்ளூர்க் கவியும் அவனுக்கு வாத்தியாருமான மாஸ்டரைத் தேடி. பேச்சு வாக்கில் அந்தக் கலைந்த தலைக் கவிஞன் கூறினான்: 'நான் இந்தப் பாடலை டாகுருக்குச் சொன்னேன். கேட்டு எப்படி அயர்ந்துவிட்டார்; போதையில் கிறங்கிவிட்டார், தெரியுமா?'

அவன் அந்தப் பெருங் கவிஞனின் எத்தனையோ பாடல்களைக் கேட்டிருந்தான். எடுத்துவிட்டால் அந்தப் பாட்டுக்கள் முடிவதே இல்லை. இனிக்க இனிக்க நீண்டு கொண்டேயிருந்தன. கேட்டுக் கேட்டு அவன் மகிழ்ந்து மாய்ந்து போனான். அது மட்டுமா? அவன் தன் அன்பை முழுவதும் அந்தக் கவிஞனுக்கே கொட்டி அளந்தான்.

அப்புறம் கவி—மாஸ்டரும், பெருங் கவிஞனும் தங்கள் தங்கள் கவிகளைப் பரிமாறிக் கொண்டார்கள்.

அவன் அருகில் உட்கார்ந்து வியப்போடு கேட்டுக் கொண்டிருந்தான். அன்றுதான் அவனுக்கு வாழ்க்கையில் முதன் முறையாக ஒரு விஷயம் வெளிச்சமாகியது. 'கவிஞர்களும் கள்ளர்களும் கூட மற்ற மனிதர்களைப் போலத்தான் இருக்கிறார்கள். சாதாரண மனிதர்களைப் போலவே கையும் காலும் உள்ளவர்களாகத் தான் இருக்கிறார்கள். அதே சாதாரண மனிதர்களுக்குள்ள பழக்க வழக்கங்கள் அவர்களிடமும் படிந்திருக்கின்றன!' என்பதைக் கண்கூடாகக் கண்டான் அவன்.

அதனால் தானே அந்தப் பெருங் கவிஞன் சிரிக்கவேண்டிய விஷயமாக இருந்தால் சிரித்து மகிழ்ந்தான்!

அன்று அவனுக்குத் தன் மாஸ்டர் கூட நல்ல கவிஞனாகவே தோன்றினான். ஆரம்பத்தில் எல்லாம் அவனுக்குத் தன் மாஸ்டரும் கவிஞனாக இருப்பான் என்ற நம்பிக்கையே ஏற்படடதில்லை. ஏனோ தெரியவில்லை. அவனுக்குத் தன் மாஸ்டர் உண்மைக் கவிஞனாக இருக்கக் கூடும் என்னும் விஷயத்தில் ஐயமே இருந்து வந்தது.

ஒருநாள் அவன் வெகு யோசனையோடும் உள்ளூற வெட்கத்தோடும் ஒரு கவிதை எழுதினான். எழுதினான் என்று சொல்வது தவறு; தான் சொல்லி, இன்னொருவரை எழுதவைத்தான்.

மாஸ்டர் கவி எப்படி மகிழ்ந்து போனான், அவனையும் அவன் கவிதையையும் கண்டு! "ஆகா! டாகுர் எப்படிப் பளிச்சிடுகிறார்! என்ன வண்ணம்! யாருமே தொட்டுப் பாராத கருத்து! பிள்ளாய்! நீ டாகுர் ஆவாய்! முயற்சியை விடாதே!' என்று தட்டிக் கொடுத்தான். அன்று தான், அவனுக்குத் தானும் டாகுர் ஆக முடியும் என்ற நம்பிக்கை தோன்றி வேர் ஊன்றவும் செய்தது.

அவன் கீதாஞ்ஜலியின் மொழி பெயர்ப்பை வாங்கி வந்து நான்கு முறைகள் படித்தான். ஆனால் அவன் அறிவுக்கு அதன் பொருள் எட்டவில்லை. அவன் மீண்டும் தன்னைத் தாழ்ந்தவனாக எண்ணி மறுகினான்.

ஆனால் கவி—மாஸ்டர் அவனுக்குத் தைரியம் ஊட்டிக் கொண்டே வந்தான். "நீ ஒரு நாள் கட்டாயம் டாகுர் ஆவாய். உன் கவிதை போல அந்தத் தாடிக் கவிஞனின் ஒரு கவிதையும் இல்லை. முன்னேறு, பிள்ளாய்! முன்னேறு!" என்று உற்சாகப் படுத்தினான். தாடிக் கவிஞன் என்று அவன் குறிப்பிட்டது, நாடோடிப் பாடல் தேடி வந்திருந்த பிராயம் முதிர்ந்த கிழவனை. 'அவன் எந்த விஷயத்தைக் கொடுத்தாலும், நல்ல—மிக நல்ல கவிதை எழுத முடியும்' என்ற துணிவை அவனுள் புகுத்த முயன்றான்.

ஆனால் ஒரு கவிஞன், கவியைக் காட்டிலும் மாஸ்டராக இருந்து விட்டால், ஒன்றைக் கவிதை என்றே சட்டென்று ஒப்புக்கொள்வதில்லை. குயவன் பத்ருவுக்கு இது வியப்பை அளித்தது.

பிறகு அவன் நினைவில் பக்கத்துக் கிராமத்துக்குப் பரிசு வழங்க வந்த தலைவன் நிழலாடினான். பரிசுகளால் பத்ருவின் பை

நிறைந்து விட்டது. சில பரிசுகளை மட்டும் அவன் தனது ஒரு நண்பனுக்கு விட்டுக் கொடுக்கும்படி இருந்தது. மற்றபடி அவன் பள்ளியில் முதலாவதாக வந்திருந்தான்; ஓட்டப் பந்தயத்தில் முதலாவதாக வந்திருந்தான். செய்யுள் போட்டியிலும் அவனே முதலாவதாக வந்திருந்தான்.

அன்றைக்கு அவன் மகிழ்ச்சி வெறியில் மிதந்தான். அவனுடைய கவி—மாஸ்டரும் எல்லையற்ற மகிழ்ச்சியில் மூழ்கினான். அப்பொழுது தலைவன் தன் பேச்சுக்கிடையே கூறினான்:

"வருங்காலத்தில் உங்களிலிருந்துதான் பெருந் தலைவர்கள் உருவாவார்கள். உங்களிலேயே ஒருவர் மகாத்மா காந்தி ஆகலாம். மகா கவி டாகுர் ஆகலாம். மகா கவி டாகுர்! அவரை டாகுர் ஆக்கியவள் அவர் அன்னை!"

அவன் விழா முடிந்ததும் ஒரே ஓட்டமாகத் தன் தாயாரிடம் ஓடினான். அவன் தனது பரிசுகள் அத்தனையையும் தாயாரின் மடியில் கொட்டினான்.

பிறகு அவனது கைகள் இரண்டும் தாமாகவே தாயாரின் கழுத்தைச் சுற்றிக் கட்டிக் கொண்டன. அவன் கொஞ்சும் மொழியில் அன்போடு கெஞ்சினான்: "அம்மா, அம்மா! என்னை டாகுர் ஆக்கு, அம்மா!"

"என்ன?" அவன் கூறுவது அவன் அன்னைக்கு விளங்கவில்லை.

"என்னை டாகுர் ஆக்கு, அம்மா!"— அவன் மீண்டும் வேண்டினான்.

"என்ன 'குர், குர்' என்கிறாய்?"— தாயார் எதுவும் புரியாமலே புரிந்து கொண்டவள்போலப் பேசினாள். "உன் விரோதி கூட இப்படிக் 'குர் குர்' ஆகவேண்டாம், குழந்தாய்!" என்றாள்.

அவனுக்குத் தன் தாயாரின்மேல் ஆத்திரமாக வந்தது. அறியாமையினால் அவள் அதை ஏதோ பள்ளிக் குழந்தைகளுக்குக் கொடுக்கும் தண்டனையாக எடுத்துக் கொண்டு விட்டாள் என்பது அவனுக்கு விளங்கவில்லை. "எதற்கு நான் உன்னைக் கொக்குப் பிடிக்க வைக்கவேண்டும்? நீ என்ன தவறு செய்தாய்?" என்று அவன் ஆத்திரத்தை அகற்ற அவள் விளக்கம் கூறினாள்.

'கொக்கு' என்னும் சொல்லைக் கேட்டதும் அவனுக்கு நொண்டி வாத்தியாரின் நினைவு வந்தது. அவன் பையன்களைப் பலமுறை கொக்குப் பிடிக்க வைத்திருக்கிறான். அவன் கழுத்துக்குப்

பின்னல் இரு கால்களையும் கைகளையும் கட்டிப்போட்டு வெய்யி லில் நிறுத்திவிடுவான். போதாக் குறைக்குக் கைப் பிரம்பை எடுத்துச் சுழற்றி, "ஏண்டாலே! துளிர்த்துப் போச்சோ? என்ன வென்று நினைத்துக் கொண்டிருக்கிருய், இந்த வாத்தியாரை? அடி உதவுகிறதுபோல அண்ணன் தம்பி உதவமாட்டான்! உயிரை வைத்துத் தோலை உரித்து விடுவேன், ஜாக்கிரதை!" என்றும் பயமுறுத்துவான்.

அவர்கள் வெகு நேரம் இப்படி வெய்யிலில் கொக்குப் பிடித்து நிற்பார்கள், உடல் எரிய.

அப்புறம் அவனுக்குத் தன் தந்தைக்குத் திடீரென்று பக்க வாதம் ஏற்பட்டு ஒரு பக்கம் உணர்விழந்து படுத்த படுக்கையாகி விட்டது நினைவுக்கு வந்தது. அதிலிருந்து அவன் பள்ளிக்கு முழுக்குப் போட்டான். எட்டாவது வகுப்போடு ஏறக் கட்டிக் கொண்டு அவன் வீட்டு வேலைகளைக் கவனிக்கும்படி ஆயிற்று.

கவி—மாஸ்டர் அவன் அப்பாவிடம் சென்று பத்ருவை எப்பாடு பட்டாவது பத்தாவது வரை படிக்க வைக்குமாறு வேண்டினன் ஆனல் அவன் தந்தையின் ஒரே பதிலில் அவன் வாய் அடைத்து விட்டது. "வாத்தியாரையா! உங்களுக்குச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. வயிற்றுக் கவலை வாட்டினல் படிப்பைப் பற்றிச் சிந்திக்கத் தோன்ருது. வயிறு முந்தி, படிப்பு பிந்தி!" என்று வெட்டு ஒன்று துண்டு இரண்டாகக் கூறிவிட்டான்.

மாஸ்டர் ஏமாற்றமே உருவாக அவன் வீட்டிலிருந்து திரும்பினன்.

அன்று குயவன் பத்ருவுக்குள்ளே யிருந்த பாதி டாகுர் மரித்து விட்டான்.

....இன்று ஒரு தலைவன் கிராமத்துப் பள்ளிக்கு அடிக்கல் நாட்ட வந்து கொண்டிருந்தான்.

அவன் எழுந்து உட்கார்ந்து கொண்டான். அவன் கழுதைகள் இன்னும் ஆனந்தமாக மேய்ந்து கொண்டிருந்தன. இன்னும் புகை போக்கிகளிலிருந்து புகை வந்து கொண்டிருந்தது. தொலை வில் கணக்குப்பிள்ளை சைக்கிளில் வருவது தெரிந்தது. அவன் அருகில் வந்ததும் கீழே பிடித்துத் தள்ளிவிடலாமா என்று அவ னுக்குத் தோன்றியது.

ஆனல் அவனுடைய தாழ்வு மனப்பான்மையோ, அல்லது உள்ளுக்குள்ளிருந்த மானிடப் பண்போ அவனை அப்படிச் செய்ய

வொட்டாமல் தடுத்து விட்டது. அவன் எழுந்து தன் உடல் புழுதியைத் தட்டிக்கொண்டான். கை கால்களைக் கழுவிக் கொண்டு பேசாமல் காகிதம் வாங்கிக் கொண்டு புறப்படுவதற்குத் தயாராகி விட்டான். தலைக்குமேல் வந்து விட்ட ஆதவன் நெருப்பைக் கக்கிக் கொண்டிருந்தான். அவனுக்குத் தன் வெறுங் கால்களின் மீது இரக்கம் பிறந்தது. நடந்து நடந்து கால்கள் அப்பளம் போலப் பொரிந்து விட்டன. கால்களில் புடைத்துக் கொண்ட நரம்புகள் மின்சாரக் கம்பிகளைப்போலப் பின்னிக் கொண்டிருந்தன. பல நூற்றாண்டுகளாக அவன் நடந்தே பழகியவன்போலத் தோன்றியது.

''அட சிங்கங்களா! நடவுங்களடா! ஏலே நீலா! வழியிலே எங்கேயும் கீழே கீழே விழுந்து வைக்காதே! என் மானத்தை வாங்கி விடாதே! வீட்டுக்குப் போனதும் வயிறு நிறையத் தீனி போடுகிறேன்!'' என்று கூறி ஓட்டினான் அவன்.

நீலன் என்னும் கழுதை மற்ற கழுதைகளைக் காட்டிலும் சோனி. இரண்டொரு தடவை அது கற்கள் நிறைந்த சாக்கைக் கீழே தள்ளியிருக்கிறது. புல்லைத் தின்றுவிட்டுக் குதித்துக் கொண்டே மற்ற கழுதைகளுக்கு முன்னே செல்றது.

அவன் தலைப்பாவின் தலைப்பில் முடிந்து வைத்திருந்த வெல்லக் கட்டியை எடுத்தான். கொஞ்சம் தின்றுவிட்டு மீதியை முடிந்து வைத்தான்.

ஊருக்குப் போய் மீதியைச் சாப்பிடலாம். வயிறு நிறையத் தண்ணீரைக் குடிக்கலாம். அப்புறம் கிணற்று மேடையில் உட்கார்ந்து தலைவனின் பேச்சைக் கேட்கலாம் என்று அவன் எண்ணினான்.

''அம்மா! இந்த அரச ஆடைகளையும் வைரம் பதித்த பொன்னகைகளையும் அணிந்து கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்? நீ என்னை இந்த வீண் கட்டுப்பாட்டில் சிக்கவைக்காதே! நான் உலகத்துச் சந்தையிலே, உயிர் ஊட்டும் மண் புழுதியிலே விளையாடி மகிழ விரும்புகிறேன்!''

அவனுக்கு டாகுரின் இந்த வரிகள் நினைவுக்கு வந்தன. இவை அவனுடைய கவி உணர்வு மிகுந்த ஆசிரியர் பள்ளிச் சுவரில் எழுதிப் போட்ட வாக்கியங்கள்.

''நானும் மண்ணில்தான் பிறந்தேன், மண்ணில்தான் விளையாடி வளர்ந்தேன். ஆனால் டாகுர் ஆக முடியவில்லையே!'' அவன் உரத்த குரலில் கடகடவென்று சிரித்தான்.

சூடான மணலில் அவன் கால்கள் தீய்ந்தன. ஒரே புழுக்கம்! ஒரே இறுக்கம்! யாரோ ஒரு ராட்சசன் எல்லாக் காற்றையும் பருகிவிட்டது போல!

அவனுக்குத் தன் அன்னையின் நினைவு வந்தது. இப்படிப் புழுக்கித் தள்ளும் நேரங்களில் கூரைக்கு அடியே படுத்து ஈற்றில் 'புர்' என்று முடியும் ஏழு ஊர்களின் பெயர்களைக் கூறுவாள். மர்ஹம்புர், அதம்புர், ஜைன்புர் என்று அடுக்கிக்கொண்டே போவாள்! ஆனால் அப்படிச் சொன்னதனால் காற்று ஒன்றும் வீசி அடித்ததாகத் தெரியவில்லை.

'அடப் பாவிக் காற்றே! அடிக்கக் கூடாதா நீ?' காற்றை அவன் அறைகூவி அழைத்தான். செங்கதிரவனின் சிவப்பான கோளம் அனலைக் கக்கிக் கொண்டிருந்தது.

'அட பாழுஞ் சூரியனே! இன்றுதானா உனக்கு நாள் அகப்பட்டது, இப்படிக் கொளுத்த? இன்று என் கால்கள் வெறுமையா யிருப்பது தெரியவில்லை? நீயும் எரிந்து பிறரையும் எரிக்கிறாயே, இதில் உனக்கு என்ன இன்பம்?' அவன் சூரியனைக் குறை கூறுவதுபோலப் பேசினான்.

'ஓ மேகங்களே! அறிவின் தோழர்களே! எங்கு போயத் தொலைந்தீர்கள் நீங்கள்?' என்று அவன் பற்களைக் கடித்துக் கொண்டு கேட்டான்.

தொலைவில் ஒரு சிறிய மேகத்துண்டு வருவது தென்பட்டது. அவன் மகிழ்ந்து போனான். ஆனால், அதற்குள் அந்த மேகத் துஞ்சு எங்கோ ஓடி ஒளிந்து கொண்டது. இல்லாமைக் கொடுமைக்கு இலக்காகி எத்தனையோ ஏழைகள் தீர்ந்து விடுவதில்லையா, அப்படி! ஆனால் இருக்கிற உலகத்துக்கு, வாழ்கிற உலகத்துக்கு அதுபற்றி எதுவுமே தெரிவதில்லை அல்லவா? அதே போலத்தான் அலட்சியமாக அனலைக் கக்கியவாறு பவனி வந்து கொண்டிருந்த சூரியனுக்கும் மேகத்தின் மறைவு தெரியவில்லை. கழுதைகளின் நடையில் சற்று வேகம் குறைந்தது.

“ஐயையோ! நீங்கள் அனைவருமே என் உயிருக்குச் சத்துரு ஆகி விட்டீர்கள் போலிருக்கிறதே!” — கோபாவேசத்தில் அவன் கழுதைகளைப் புடைக்கத் தொடங்கிவிட்டான். கழுதைகள் கத்திக்கொண்டு பின்னங் கால்களை உதைத்துக்கொண்டு ஓட லாயின. சட்டென்று தாவி ஒரு கழுதையின் முதுகில் ஏறி உட்கார்ந்தால் என்ன என்று தோன்றியது அவனுக்கு. அவன்

சுமை தாங்காமல் கழுதை படுத்துவிட்டால் என்ன செய்வது என்ற பயத்தில் அவன் நடந்தே செல்லலானான்.

எதிர்த்தாற்போல ஆலமரக்கடி கிணறு வந்தது. அவனுக்கு அதைக் காணவும் ஒரே மகிழ்ச்சி! அவன் வயிறு நிறையத் தண்ணீர் குடித்தான். தலைப்பாவின் தலைப்பில் முடிந்து வைத்திருந்த வெல்லத்தை ஆவலோடு ஒரு முறை பார்த்தான் 'இதைக் கிராமத்துக்குப் போனபின் தின்னவேண்டும், தின்றுவிட்டுத் தலைவனின் பேச்சைக் கேட்கவேண்டும்!' ஆலமரத்தின் அடியில் நின்று அவன் சிந்திக்கலானான்.

'தலைவன் வந்து விட்டுத் திரும்பிப் போயிருந்தால்....!' என்று எண்ணியவாறே அவன் மீண்டும் நடக்கலானான்.

நீரில் நனைந்திருந்த அவன் கால்கள் நிமிஷத்தில் உலர்ந்து விட்டன. சூடேறிய மணலில் அவனது உள்ளங்கால்கள் எரிந்து தீய்ந்தன. நிலத்தில் அவன் கால் பாவவே இல்லை ஒரு குதி குதித்தான். அப்பொழுது அவனுக்கு ஓர் உபாயம் தோன்றியது. ஓடினான். ஒரே ஓட்டமாகப் பலாச மரத்தின் அடி ஒன்றுக்கு! அதன் இலைகளைப் பறித்தான். தலைப்பாத் துணியிலிருந்து ஒரு துண்டைக் கிழித்து எடுத்து அந்தப் பலாச இலைகளைத் தன் கால்களுக்கு அடியில் வைத்துக் கட்டிக் கொண்டான்.

அப்புறம் அவனுக்கு மணல் சூடு குறைவாகத் தெரிந்தது. அவன் மகிழ்ந்து போனான். இடது கையின் உள்ளங்கையைப் புரட்டி உதடுகளில் வைத்துக்கொண்டு உரக்க ஒரு சீழ்க்கை அடித்தான். அது அந்தப் பகுதி முழுவதும் எதிரொலித்தது. அப்படியும் அவனுக்கு நிம்மதி ஏற்படவில்லை. அவன் மீண்டும் சீழ்க்கை அடித்துவிட்டுப் பாடத் தொடங்கிவிட்டான்:

'ஓட்டப்பா உன் ஆடுகளை—குட்டிகள்
ஒட்டக் குடித்துவிடும் பாலை !

எதிரே ஊர் தோன்றியது. அவன் களிப்போடு ஊருக்குள் நுழைந்தான். பள்ளிக்கெதிரே மாவிலை, வாழை இலைத் தோரணங்களால் வரவேற்பு வாயில் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அவற்றை ஒட்டினாற்போல வண்ண வண்ணக் கொடிகள் படபடத்துக் கொண்டிருந்தன. நாற்புறமும் ஒரே ஆரவாரமும் கூச்சலுமாக இருந்தது. பள்ளி ஆசிரியர்கள் இங்கும் அங்கும் ஓடியாடித் துறுதுறுவென்று வேலை செய்து கொண்டிருந்தனர்.

அவன் அப்படியே மயங்கி நின்று பார்த்துக் கொண்டிருந்தான்.

அவனுக்கு மீண்டும் தனது பிள்ளைப் பருவம் நினைவுக்கு வந்தது.

கிராமம் கிராமமாகச் சென்று நாடோடிப் பாடல்கள் சேகரித்தானே, அந்த முதுபெருங் கவிஞனின் நினைவு வந்தது. அவனுக்கு அவன் நூற்றுக் கணக்கான நாடோடிப் பாடல்கள் கூறியிருந்தான். அந்தக் கவிஞன் திரும்பவும் ஒருமுறை வருவதாகக் கூறிச்சென்றிருந்தான். ஆனால் திரும்ப வரவில்லை.

அந்தக் கிழவன் மீண்டும் வந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? அவன், தான் புதிதாக எழுதிய பாட்டுக்களைக் கட்டாயம் கூறலாம் அல்லவா? இப்பொழுது அவன் எந்த விஷயத்துக்கும் நல்ல நல்ல கவிதைகள் இயற்ற முடியும்.

ஆனால் அந்த முதுபெருங் கவிஞன் அவனை எப்பொழுதுமே புழுதியில் கிடக்கும், கீழ்த் தட்டில் உள்ள குயவன் என்று நினைக்கிறான் போலும்! அதனால் தான் அவன் தொலைவில் இருந்தபொழுதிலும் அவன் கவிதைகளைக் கவிதைகளாகவே கருதவில்லை. அவன் எப்பொழுதும் புழுதியோடு புழுதியாகக் கிடக்கிறானே, அதனால்தானோ? இந்த மண்ணில் அளைந்து விளையாடத்தானே டாகுர் மீனைப்போலத் துடித்தார், ஆவியாய்த் தவித்தார்! அந்த மண்ணில் அவன் உயிர் வாழ்ந்து கொண்டிருந்தான்; வளர்ந்து கொண்டிருந்தான்! அவன் அப்படியே பிரமைபிடித்தவன் போல நின்றான். நின்றவன் மாயமாய் எங்கோ மறைந்துவிட்டான். அவன் உதடுகள், அவன் கண்கள், அவன் கைகால்கள். ஏன், அவனே ஒரு கவிதையாகி விட்டான்!

அங்கே ஒரு பாட்டு உருவாகித் துடித்துக் கொண்டிருந்தது. ஆனால் அதை யாருடைய உதடுகளும் எச்சிற்படுத்தவில்லை!

சட்டென்று அவன் ஒரு முறை நடுங்கிப் போனான், தூக்கி வாரிப் போட்டாற்போல!

ஒரு பாடல் சிதறியது!

ஓர் அறை, இரண்டு அறை! ஒரு குத்து, இன்னொரு குத்து...

"நாய்ப்பயலே! குசப்பயமவனே! இங்கே நின்று என்னடா வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறாய்! உன் கழுதைகள் என் வயலை அழித்து விட்டனவேடா! நாய்க்குப் பிறந்த பயலே!"

குடி வெறியில் மூழ்கிய கட்டுமஸ்தான ஒரு ஜாட் சிவந்த கண்களை அகல விரித்தபடி அவனைத் திட்டித் தீர்த்துக்கொண்டிருந்தான். அவன் நின்ற இடத்திலேயே நடுநடுங்கிப் போனான்.

ஜாட் பக்கத்தில் நின்ற பாட்டு வண்டியில் இருந்து தார்க் குச்சியை எடுத்துக் கொண்டு அவனை நெருங்கினான்.

அவன் காட்டானைப் போலக் கழுதைகளைக் கம்பால் அடித்து விரட்டிக் கொண்டே ஓடினான். அப்பொழுது எழுந்த புழுதியில் ஒரு புள்ளியாகச் சிறுத்து மறைந்தான்.

தலைப்பாவின் தலைப்பில் முடிந்திருந்த வெல்லக்கட்டி அவன் ஓடிய ஓட்டத்தில் அசைந்தாடி இறங்கி வந்து அவன் தோள் பட்டைகளை உறுத்திக்கொண்டிருந்தது.

# கதை ஆசிரியர்களின் அறிமுகம்

**நானக் சிங்**

பிறப்பு : 1897

தொழில் : எழுத்து

கதைத் தொகுதிகள் : ஹன்ஜூ ஆன் தே ஹார், ஸத்தரான் தே ஹார், மித்தே ஹோர ஏ புல்ல, டண்டியான் சாவான், ஸுன்ஹரீ ஜில்த், ஸுபனியான் தீ கபர்.

முகவரி : பிரீத் நகர், அம்ருத்ஸர்.

நானக்சிங் பஞ்சாபி மொழியில் தலைசிறந்த கதை ஆசிரியர். நவீனங்கள் படைப்பதில் தான் இவருக்கு ஈடுபாடு அதிகம். நகர்ப்புறத்தில் வாழும் நடுத்தர வகுப்பின் ஏழைமை நிலையை இரக்க உணர்வு பொங்கப் படம் பிடித்துக் காட்டுவதில் நானக் சிங் ஆற்றல் மிகுந்தவர். நிகழ்ச்சிகளை அடுக்கு அடுக்காகச் சொல்வது, அடர்த்தியாக வைப்பது இவருக்குக் கை வந்த கலை. கதைகளில் சம்பவங்களை நெய்யும் பொழுது சிறிது தளர்ச்சி காணக் கூடும். எனவே தான் நானக் சிங் சிறுகதைகள் குறைவாக எழுதியிருக்கிறார் 'சீட்டாட்டப் பழக்கம்' என்னும் கதை நடுத்தர வகுப்பினரின் வாழ்க்கை முறையை இரண்டொரு கூற்றுகளைக் கொண்டு மட்டும் அல்ல; முழுக்கதைக் கோப்பின் மூலமுமாகவே கேலி செய்கிறது.

**குருபக்ஷ் சிங் 'பிரீத்லடீ'**

பிறப்பு : 1895

கல்வி: பி. எஸ்ஸி. ஸி. ஈ. [மிஷிகன் யு. எஸ். ஏ.]

தொழில் : பத்திரிகைத் தொழில்

கதைத் தொகுப்புகள் : பிரீத் கஹானியான், நாக பிரீத் தா ஜாது, அநோகே தே இகல்லே, வீணா விநோத், ஷப்னம், பாபீ மைனா தே ஹோர் கஹானியான், ஆகிரீ ஸபக் தே ஹோர் காஹானியான், பிரீதான் தே பஹ்ரேதார், இஷ்க் ஜினான் தீ ஹட்டீ ரச்யா, ஜிந்தகீ வாரஸ் ஹை.

முகவரி : பிரீத் நகர், அம்ருத்ஸர்

குருபக்ஷ் சிங் நகர்ப்புறத்தோடு அனுதாபத் தொடர்பு கொண்ட கலைஞர். இவர் முதன் முறையாகப் பஞ்சாபி கதைக்குக் குறிப்பான வாழ்க்கை நோக்கைத் தர முயன்றிருக்கிறார். பல இடங்களில் இவரது கதை தத்துவக் கருத்துகளைச் சித்திரிக்கிறது என்றாலும் சிற் சில சமயம் அதே தத்துவக் கருத்துக்கள் கதைக்கு ஓர் ஆழத்தைத் தருகின்றன. 'அன்பின் வழியது உயிர்நிலை' எனும் கருத்தை அடிப்படையாகக் கொண்டு, இயல்பான அன்பு மார்க்கத்தைக் கடைப்பிடித்து ஆன்மிகத துறை தொடங்கி மார்க்ஸீய பௌதிகத்துறைவரை தத்துவ நோக்கோடு இவர் அணுகுகிறார். ஒரு மொத்தமாகப் பார்த்தால் இவரது உணர்வுகள் இயல்பான அன்பு மார்க்கத்தையே சார்ந்திருக்கின்றன. முடிவு என்னவெனில், இவரது எழுத்தைப் போலவே இவரது கதைகளிலும் ஒரு முனைச்சித்திரம் தான் காணக் கிடைக்கிறது. துவந்துவப் போரோ, நாடகம் பற்றிய எதிர் மறை உணர்வுகளோ குரல் எழுப்பும் வாய்ப்பு இவர் கதைகளுக்குக் கிட்டுவதில்லை அறிவு பூர்வமாக இவர் ஈடுபடுவது மார்க்ஸீயத்தைத்தான். அன்பும் அகப்போரும் கலை நுணுக்கம் தழுவிய இறுக்கத்தோடு எவ்வெப்பொழுதாவது தலைகாட்டுகின்றன.

'அண்ணி மைனு' கதையில் இயல்பான அன்பு மார்க்கம் ஒரு குழந்தையின் மூலம் சித்திரிக்கப் படுகிறது. வயது வந்தபின் தோன்றும் அன்பைக் குழவிப் பருவத்தோடு தொடர்பு காட்டிச் சித்திரிப்பது குருபக்ஷ் சிங்கின் கலை உத்திகளில் தன் நிகரற்ற ஒன்று. பலகதைகளிலும் இதே உத்தி கையாளப் பட்டிருக்கிறது. இந்த உத்தியின் மூலம்தான் அன்பைத் தூய்மையாக வைத்துக்கொள்ளும் வாய்ப்பு சுலபமாகக் கிட்டுகிறது.

**சந்த் சிங் ஸேகோன்**

பிறப்பு: 1908

கல்வி: எம். ஏ. (ஆங்கிலம்—பொருளாதாரம்)

தொழில்: உபாத்தியாயர்

கதைத் தொகுப்புகள்: சமாசார், காமே தே யோத்தே, பாரா தரி, அதீவாட், தீஜா பஹர்.

முகவரி: பிரின்ஸிபல், குரு கோவிந்த சிங் ரிபப்ளிக் கல்லூரி, ஜண்டியாலா, ஜாலந்தர் ஜில்லா.

சந்த் சிங் ஸேகோன் பஞ்சாபி மொழியில் இலக்கியத்தின் பல துறைகளிலும் அக்கறை கொண்ட எழுத்தாளர். எனவே, ஏறக் குறைய இலக்கியத்தின் எல்லாத் துறைகளையும் கையாண்ட பெருமை இவருக்கு உண்டு. ஒரு நாவல், ஒரு கவிதைத் தொகுப்பு, பல நாடகங்கள், ஓரங்க நாடகத் தொகுப்புகள், சிறுகதைத் தொகுப்புகள் ஆகியவை யெல்லாம் இவரது எழுத்துக்குச் சான்று பகருகின்றன. விமரிசனக் கட்டுரைகளின் மூலம் தான் இவருக்கு அதிகப் புகழ் கிட்டியது. பஞ்சாபி மொழியில், இலக்கியத்துக்குச் சமூக வியல் சார்ந்த விரிவுரைக்கு அடிக்கல் நாட்டியவரே ஸேகோன் தான். இவருடைய சில கதைகள் உணர்ச்சிக்கு இலக்காகாமல், உணர்ச்சிகமழும் சூழ்நிலையை ஏற்படுத்திக் காட்டுகின்றன. 'பேமியின் குழந்தைகள்' அத்தகைய கதைகளில் ஒன்றுதான்.

## குருமுக் சிங் முஸாபிர்

பிறப்பு: 1899

கல்வி: மெட்ரிக்யுலேஷன், ஞானி

கதைத் தொகுப்புக்கள்: ஸஸ்தா தமாஷா. ஸப் அச்சா, பக்ரீ துனியா, ஆல்னே தே போட், குடார், கந்தா போல் பயீயான்

முகவரி: 21, பிரோஸ் ஷா சாலை, புது தில்லி.

குருமுக் சிங் முஸாபிர் பஞ்சாபின் அரசியல் தலைவரும் இலக்கிய கர்த்தாவும் ஆவார். இவர் கவிஞர், நாடகாசிரியர். இவர் தம் வாழ்க்கையோடு தொடர்பு கொண்ட சில கதைப் பகுதிகளை எழுதியிருக்கிறார். இவருடைய பெரும்பான்மையான கதைகள் இவரது அரசியல் அநுபவங்களைப் பிரதிபலிக்கின்றன. அவற்றில் அரசியல் வாழ்வின் எளிய உண்மைகளை தெளிவாகக் காணலாம். ஆனால் சிக்கலான உண்மைகள் இலை மறை-காய் மறையாகக் காட்டப்படுகின்றன. காரணம் என்ன, முஸாபிர் முதலில் கவிஞர், அவர் தமது அநுபவச் செல்வத்தைத் தாராளப் போக்குடன் உபயோகித்திருக்கிறார்.

'விடியா மூஞ்சி' 1947-ம் ஆண்டின் பயங்கரக் கலவரத்தோடு தொடர்பு கொண்டது. ஆனால் இவர் எழுத்தில் மதவெறி காரணமான அடி—தடியோ உயிர்பலியோ கூடக் கசக்கவில்லை. ஆனால் அதை ஒட்டிய நிகழ்ச்சிகள் தான் கசக்கின்றன. பஞ்சாபி

இலக்கியத்தின் இயல்பே, கடந்த காலத்துக் கஷ்ட நஷ்டங்களை மறந்து விடுவதும், நிகழும் சிரமங்களின் குத்தலை அநுபவிப்பதுமே ஆகும்.

**ஸுஜான் சிங்**

பிறப்பு: 1909
கல்வி: எம். ஏ. (பஞ்சாபி)
தொழில்: உபாத்தியாய
கதைத் தொகுதிகள்: சுக்—துக், துக்—ஸுகோங் தோ பிச்சோ, ஸப் ரங்க், நர்காங் தே தேவதே, மநுக்க தே பசு, நவான் ரங்க்.
முகவரி: பிரின்சிபல், லாஜபத்ராய் மெமொரியல் கல்லூரி, டுடிகே, பிரோஜ்புர் ஜில்லா.

ஸுஜான் சிங் பஞ்சாபி இலக்கியத்தில் முன்னணியில் நிற்கும் முற்போக்கு எழுத்தாளர். அவருடைய முதல் கதைத் தொகுதி 'ஸுக்—துக்' அவருடைய கலைப் போக்குக்குச் சான்றாக விளங்குகிறது. பிறகே அவர் முற்போக்கு இலக்கிய ஓட்டத்தைப் பின்பற்றுவதென்று நேர யோசித்து முடிவு செய்தார். அவருடைய கலை முயற்சி அவ்வளவும் மார்க்ஸீய தத்துவத்தின் கீழ்தான் இயங்குகிறது. இப்பொழுது சில ஆண்டுகளாக மௌனம் சாதிக்கிறார், எழுதுவதில்லை. இவருடைய பெரும்பாலான கதைகள் நிகழ்ச்சிகளை முக்கியமாகக் கொண்டவை. கீழ் மட்டத்தைச் சேர்ந்தவர்களிடம் தனது அநுதாபத்தைத் தெளிவாகவும் கண்கூடாகவும் வெளியிடுகிறது, 'ராஸ லீலை' இவருடைய முதல் கதைத் தொகுதியிலிருந்து எடுத்தது.

**கர்த்தார் சிங் துக்கல்**

பிறப்பு: 1917
கல்வி: எம். ஏ. (ஆங்கிலம்)
தொழில்: இயக்குநர், நேஷனல் புக் டிரஸ்ட், தில்லி.
கதைத் தொகுதிகள்: ஸவேர் ஸார், பிப்ல பத்தியான், குடீ கஹானி கர் தீ கயீ, டங்கர், அக்க கானேவாலே, நவான் கர், நவான் ஆத்மீ, கச்சா தூத்த, புல்ல தோட்டு மறு ஹை, லடாயீ நஹீன், கராமாத், கோரஜ், பாரே மைரே, இக் சிட்ட சானன் தீ, ஸம்பே ஸான் ஜீ வால், ஸதாயன்.

முகவரி : இயக்குநர், நேஷனல் புக் டிரஸ்ட், க்ரீன்பார்க், புது தில்லி.

கர்த்தார் சிங் துக்கல் பஞ்சாபி இலக்கியத்தின் பல துறைகளிலும் புகழ்வாய்ந்த எழுத்தாளர். அவர் கவிதைகளும் எழுதியிருக்கிறார், விமரிசனக் கட்டுரைகளும் எழுதியிருக்கிறார். பல நாடகங்கள், நாவல்கள் படைத்த பெருமையும் இவர் பேனாவுக்கு உண்டு. அவருடைய நாடகங்கள், நவீனங்கள் ஆகியவையும் நல்ல புகழ் பெற்றுள்ளன. ஆனால் துக்கல் பெரும்பாலும் கதாசிரியர் என்ற முறையிலேயே போற்றப் படுகிறார். அவருடைய கதைப் போக்கு இடையறா நீரோட்டம் போல மேலே மேலே ஓடிக்கொண்டே இருக்கும். கடந்த முப்பது ஆண்டுகள் பஞ்சாபி உணர்ச்சி எப்படி இயங்கி யிருக்கிறது என்னும் வரலாற்றை இவர் கதைகள் எடுத்துக் காட்டுகின்றன.

'விந்தைச் செயல்' பஞ்சாபி மொழியின் சிறந்த வெகு சில கதைகளில் ஒன்று ஆகும். பஞ்சாபிப் புராணத்தையும் வரலாற்றையும் புத்தி பூர்வமாக ஏற்கும்படி தூண்டுகிறது இக் கதை.

### தேவேந்திர ஸத்யார்த்தி

பிறப்பு: 1908

தொழில்: எழுத்து

கதைத் தொகுப்பு: குங்க் போஷ், ஸோனு காசீ, தின் புஹேயான் வாலா கர், பாரிஸ் தா ஆத்மீ.

முகவரி: கல்பனு, ரோஹ்தக் ரோடு, தில்லி 35.

தேவேந்திர ஸத்யார்த்தி பல மொழிகள் அறிந்த பல உருவம் அமைந்த இலக்கிய ஆசிரியர். இவருககு, நாடோடிப் பாடல்கள் சேகரிப்பவர் என்ற முறையிலும் அதை அழகாக எடுத்துரைப்பவர் என்ற முறையிலும் பெரும் புகழ் கிடைத்துள்ளது. கடந்த பல ஆண்டுகளாக ஸத்யார்த்தி காவியம்—கதை இரண்டிலும் ஈடுபாடு கொண்டு, விடாமல் பணிபுரிந்து வருகிறார். தமது விந்தை உத்தியின் காரணமாக ஸத்யார்த்தியின் இலக்கியம் வாசகர்களிடமிருந்து சற்று விலகியே நிற்கிறது. ஸத்யார்த்தியோடு குறிப்பிட்ட அளவு உணர்வுப் பங்கீடு கொள்ள வேண்டுமானல், கடுமையான சாதனை புரிந்தாகவேண்டி யிருக்கிறது.

இடைவிடாது ஏதாவது புது முயற்சியில் ஈடுபடுவது என்பது தேவேந்திர ஸத்யார்த்தியின் இலக்கியக் கோட்பாடு.

'தஸௌந்தா சிங்' இவருடைய பொறுக்கி யெடுக்கப்பட்ட கதைகளில் ஒன்று ஆகும். இதில் மண்ணையும் பருவத்தையும் கூட மானிடப் பாத்திரங்கள் போலவே கதையோடு இழைத்து இணைத்துச் செல்லும் ஆற்றலைக் காண்கிறோம். ஆனால் ஒன்று நினைவிருக்கட்டும். இந்தக் கதையில் பஞ்சாபி மண்ணோ பருவமோ இடம் பெறவில்லை, பஞ்சாபுக்கு அப்பால் உள்ள பருவமும் மண்ணுமே இடம் பெற்றுள்ளன.

### குல் வந்த் சிங் விர்க்

பிறப்பு: 1921

கல்வி: எம். ஏ. (ஆங்கிலம்) எல். எல். பி.

தொழில்: அரசாங்க உத்தியோகம். (தகவல் அதிகாரி, இந்திய அரசாங்கம்)

கதைத் தொகுப்புகள்: சாஹ் வேலா, தர்தீ தே ஆகாஷ், தூடீ பண்ட், ஏகஸ் கே ஹம் பாரக், துத்த யா சப்பட், கோலான், நவே லோக்.

முகவரி: 148, செக்டர் 11-ஏ. சண்டீகட்.

குல்வந்த் சிங் விர்க் கதைகள் மட்டுமே எழுதியிருக்கிறார். பஞ்சாபிய கிராமங்கள், குடியானவ மக்கள் இவற்றிடம் தான் எழுத்தாளர் விர்க்குக்கு ஈடுபாடு அதிகம். கதையின் முடிவில் விந்தை தவழும் சொல்லையோ, வியக்கத் தகு நிகழ்ச்சியையோ நிறுத்திப் புதுமைபுரியும் ஆற்றல் விர்க்கின் எழுத்துக்களுக்கு அணிசேர்த்து உதவுகிறது.

'கோரைப் புல்' — பஞ்சாபி ஜாட் இனத்தின் வாழ்க்கை முறையை அத்தாட்சி பூர்வமாக எடுத்துரைக்கும் கதை. இக் கதையின் தலைவி ஒரு ஜாட் இனத்துப் பெண்மணி. இதன் முழுப் பகைப் புலனும் மனச் சூழலும் ஜாட் இனத்தாரின் வாழ்க்கையோடு ஒட்டியவை. இக் கதையின் முக்கிய சின்னமாகத் தோன்றும் 'கோரைப்புல்' கூட இவர்களுடைய வாழ்க்கையோடு தொடர்பு கொண்டது தான். எத்தனையோ இன்னல்கள் பட்ட, பின்பும் எப்பொழுதும் மண்ணோடு இணைந்து நிற்கும் ஆசைதான் இந்தக் கதையின் மையப் புள்ளி.

**அம்ருதா ப்ரீதம்**

பிறப்பு : 1919

தொழில் : எழுத்து

கதைத் தொகுப்புகள் : இருபத்தாறு ஆண்டுகளுக்குப் பின், கடைசிக் கடிதம், கோஜர் தியான் பரியான், சானன் தா ஹௌகா, ஜங்க்லீ பூடி.

முகவரி : கே. 25, ஹௌஜ் காஸ், புது தில்லி-16.

அம்ருதா ப்ரீதம் பஞ்சாபி மொழியின் தலை சிறந்த பெண் கவிஞர் மட்டும் அல்ல, புகழ் பெற்ற கதை எழுத்தாளரும் நாவலாசிரியரும் கூட ஆவார். இவர் சில எளிய கட்டுரைகள், அழுத்தமான விமரிசனக் கட்டுரைகள், பயணக் குறிப்புகள் கூட எழுதியிருக்கிறார். நாகமணி என்னும் மாதப் பத்திரிகையின் மூலம் அம்ருதா ப்ரீதம் ஒரு புது விதமான பத்திரிகைத் தொழிலுக்கு வித்திட்டிருக்கிறார். ஒரு விஷயத்தை அச்சமின்றி அணுகுவதும் உணர்ச்சியோடு வெளியிடுவதும் இவருடைய கவிதை, கதைகளின் சிறப்பியல்புகள். கதைகள் மூலம் இளம் பெண்களின் மனவெழுச்சியை எளிய சொற்களால் அழகாக விண்டு வைப்பது அம்ருதா ப்ரீதமுக்குக் கைவந்த கலையாகும்.

'பெருமூச்சு' கதை கூட, ஓர் இளம் பெண், சமூகம் ஒதுக்கும் செயலை எப்படி அச்சமின்றி மேற்கொள்ளுகிறாள் என்பதை மையக் கருத்தாகக் கொண்டது.

**ஸந்தோக் ஸிங் தீர்**

பிறப்பு : 1920

கல்வி : மெட்ரிக்யுலேஷன்

தொழில் : எழுத்து

கதைத்தொகுப்புகள் : மிட்டியான் தீ சான், ஸான்ஜீ கந்த், ஸவேர் ஹோனே தக்.

முகவரி : மண்டி கோவிந்த் கட், பஞ்சாப்.

ஸந்தோக் ஸிங் தீர் பஞ்சாபி இலக்கியத்திலே நிகழ்ந்த முற்போக்கு இயக்கம் மூலம் உருவானவர். கவிதை, கதை இரு துறைகளிலும் புகழ் பெற்றவர். ஒரு நவீனமும் எழுதியிருக்கிறார். இப்பொழுது சில ஆண்டுகளாக வாளா விருக்கிறார்.

இவர் கதைகள் எண்ணிக்கையால் அதிகம் இல்லை. ஆனால் ஐந்தாறு கதைகள் எந்த நல்ல கதைத் தொகுப்பிலும் இடம் பெறக் கூடிய சிறப்புப் பெற்றவை. இவருடைய கதைகள் கிராமத்துச் சுக துக்கங்களோடு தொடர்பு கொண்டவை. எடுப்பான பேச்சுகளின் மூலமே சிறப்பான சூழ்நிலையைச் சித்திரித்துக் காட்டும் பாங்கு தீரின் கதைகளிலிருந்து பிரிக்க முடியாததோர் அழகு.

'விடியும் வரை' என்னும் கதைக்குத் தொடர்பு நிகழ்ச்சியோடு இல்லை. என்ன நிகழுமோ என்னும் வருங்கால உணர்வோடு பிணைந்திருக்கிறது. தனி மனிதனின் வாழ்வைக் காட்டிலும் அப்போதைக்குள்ள நிலையைச் சித்திரிக்கிறது. இன்னல்கள் நிறைந்த வாழ்வை நகைச் சுவையோடு விண்டு வைக்கிறது

மஹிந்தர் சிங் ஸர்ணா

பிறப்பு: 1924

கல்வி: பி. ஏ.

தொழில்: அரசாங்க வேலை. டைரக்டர் ஆஃப் ஆடிட் அண்டு அக்கவுண்ட்ஸ், — புது தில்லி.

கதைத் தொகுப்பு: பத்தர் தே ஆத்மீ, ஸக்ணா பரீ ஸவேர், ஸுட் னேயான் தீ ஸீமா, வஞ்ஜலீ தே விலக்னீ, சவியான் தீ ருத், காலிங்கா.

முகவரி: எஸ். 6. கிரேட்டர் கைலாஸ், புது தில்லி-48.

மஹிந்தர் சிங் ஸர்ணா சிறு கதை எழுத்தாளரும் நாவலாசிரியரும் ஆவார். தற்சமயம் பெருங் காப்பிய முறையிலே நீண்டதொரு காப்பியம் சமைப்பதிலே ஈடுபட்டிருக்கிறார். மனத்தத்துவமே ஸர்ணாவின் கதைகளுக்கு முக்கியமான ஆதாரம். செதுக்கிச் சமைத்த சொல் அமைப்பு, இவருடைய கதைச் சிறப்பத்திற்கு மெருகு கூட்டுகிறது. 1947-ம் ஆண்டு நாட்டிலே நிகழ்ந்த அதி பயங்கர நிகழ்ச்சிகள் ஸர்ணாவின் கதைகளிலே அடிக்கடி தலை காட்டுகின்றன. இவரிடம் காணப்படும் அடர்த்தியான உணர்வுச் செல்வம் ஒரொரு சமயம் உணர்ச்சியின் எல்லையையே தொடுவதாகத் தோன்றுகிறது. அதே சமயம் கூர்மையான குத்தல் அந்த உணர்வைத் தளரவும் வைத்து விடுகிறது. கசப்பான கேலி, இனிமையான மனிதத் தன்மை இரண்டுமே அழகாக இணைந்து இவர் கதைக்கு ஒரு தனிச்சிறப்பை அளிக்கின்றன.

'கசாப்புப் பருவம்' — நாடு பிரிக்கப்பட்ட பொழுது நிகழ்ந்த ரத்தக் களறியைப் பற்றிய கதை. சாதி — இனத்தலைவர்களின் இரக்கமின்மை, பண்டைய கால வாழ்க்கையை மதித்து நடக்கும் மனிதர்களின் இயல்பான மென்மை, இவ்விரண்டுக்கும் இடையே சிக்கித் தங்கள் எண்ணத்தைச் செயலாக்க முடியாமல் தவிக்கும் மக்களின் கையாலாகாத நிலை — இம் மூன்றும் இக் கதையில் எடுப்பாகக் கையாளப் பட்டிருக்கின்றன. எனவே, இக் கதை கவிதையைப் போன்று உள்ளத்தைத் தைத்துத் தனக்கு இடம் ஏற்படுத்திக் கொள்ளுகிறது.

**நவதேஜ் சிங்**

பிறப்பு: 1925

கல்வி: எம். ஏ. (மனத் தத்துவம்)

தொழில்: பத்திரிகைத் தொழில் (ஆசிரியர், ப்ரீத் லடி)

கதைத் தொகுப்பு: தேச் வாபிஸீ, நவீன் ருத், பாஸ்மதி தீ மஹக், சானன் தே பீஜ்.

முகவரி: ப்ரீத் நகர், அம்ருத்சர்.

மனத் தத்துவத் துறையின் மாணவரான நவதேஜ் சிங் முதலில் ஈடுபட்டது மார்க்ஸீயக் கொள்கைகளில் தான். அரசியல், பத்திரிகைத் தொழிலைக் காட்டிலும் சூட்சுமமான காவியக் கற்பனையில் தான் நாட்டம் அதிகம் கொண்டிருக்கிறார்.

நவதேஜின் கதைகளில் கிராமத்துப் பிரச்னைகள் நகரத்து நுணுக்கத்தோடு அணுகப் படுகின்றன. அன்றாட வாழ்வின் கடுமையான யதார்த்தத்தை மென்மையான கற்பனை ஓவியங்களாக உருவகப்படுத்திப் படம் பிடித்துக் காட்டுவதில் நவதேஜ் சிங் வல்லுநர். இதன் பயனாக இவருடைய கதை ஒரு குறிப்பிட்ட புள்ளியிலேயே மையம் கொள்ளாமல், முழுச் சூழ்நிலையிலும் பரந்து விரிந்து கிடக்கிறது. கதை கவிதையைப் போன்றதொரு தோற்றம் தருவதன் ரகசியமே இது தான்.

'விதியின் நூலிழை' என்னும் இவருடைய கதையில் நாட்டுப்புறத்தின் ஐயப்பாடு நகர்ப்புறத்து விளக்கவுரையாகச் சித்திரிக்கப்படுகிறது. ஐயம் என்பது சுத்த பௌதிக நிலையில் ஏற்படும் மன நிலையாகும். இதன் ஒரு முனை அன்றாட வாழ்க்கைத் தேவைகளோடு கட்டப்பட்டிக்கிறது. மற்றொரு முனை மனிதனின் உள்

மனத்தில் இருக்கும் மானசிக யுக்திகளோடு பிணைக்கப்பட்டிருக்கிறது. பௌதிக-மானஸிக நிலையை இணைப்பதே நவதேஜின் கதைகளின் சிறப்பியல்பாகும்.

**மஹிந்தர் சிங் ஜோஷி**

பிறப்பு: 1919

கல்வி: எம். ஏ. (பஞ்சாபி) எல். எல். பி.

தொழில்: அரசாங்க ஊழியம் (உறுப்பினர், ஆட்சி மொழி சட்டத் துறை கமிஷன்)

கதைத் தொகுப்புகள்: ப்ரீதான் தே பர்சாவே, தோடா தே த்ருப்தீ ஆல், தில் தோ தூர், கிர்ணு தீ ராக், ஸௌன் மைனு ஆப்ணீ.

முகவரி: 4-2, மல்டி ஸ்டோரி பில்டிங்க், ஷாஜஹான் சாலை, புது தில்லி-11.

1947-ம் ஆண்டுக்குப்பின் பஞ்சாபைச் சேர்ந்த மால்வாப் பகுதிக்குத் தன் குரலை எழுப்பும் வாய்ப்புக் கிட்டியுள்ளது. அதன் காரணமாகப் பஞ்சாபி இலக்கிய மொழி அமைப்பிலும், பாவ முத்திரையிலும் முன்னேற்றம் கண்டிருக்கிறது. இதனை எளிதில் இனம் கண்டுகொள்ளலாம். பெரும்பாலும் சிறு கதைத் துறையில் தான் இந்த முயற்சி அதிகமாகக் காணப்படுகிறது. ஜோஷி அத்தகைய மால்வாக்காரர்களில் ஒருவர். தமது மால்வா அநுபவத்தையும் மொழியையும் தமது இலக்கிய ஆற்றலுக்கு ஏற்ற வகையில் பயன்படுத்தி வெற்றி கண்டிருக்கிறார். இவரது அதிகமான கதைகள் இப் பகுதியோடு தொடர்பு கொண்டவை தாம். கடந்த காலத்தைத் தொட்டுச் செல்லும் உணர்வு ஓட்டமும் அழுத்தமான சொற் கட்டும் ஜோஷியின் கதைகளில் காணப்படும் சிறப்பியல்புகளாகும். எனவே தான் இவருடைய கதைகளின் நோக்கும் போக்கும் தனித் தன்மை வாய்ந்தவை யாகத் தோன்றுகின்றன. இவருடைய படைப்புகளை மிகுந்த முனைப்போடு படிக்க வேண்டியிருக்கிறது.

'மோதீ' — 1947-ம் ஆண்டின் பயங்கரச் சூழலைப் பகைப் புலனாகக் கொண்ட கதை ஆகும். இதில் மூன்று சிந்தனை ஓட்டங்கள் கலந்து ஓர் உணர்ச்சி விட்டத்தைப் படைக்கின்றன.

**லோசன் பக்ஷி**

பிறப்பு: 1923

கல்வி: பி. ஏ.

தொழில்: அரசாங்க ஊழியர் (ஆகாஷ்வாணியில் நிகழ்ச்சித் துறை அதிகாரி)

கதைத் தொகுப்புகள்: பாப்-புன்ன தோ பரே, வர் தேஸ்ராப், பரே மேலே பிச், மேரீ ருஷீ மோட் தே.

முகவரி: நிகழ்ச்சித் துறை அலுவலர், ஆகாஷ் வாணி, புது தில்லி.

லோசன் பக்ஷி வெகு நாட்களாக, ஆனல் வெகு மெதுவாக எழுதி வருகிருர். போடோ ஹாரின் எழில் மிகு மண்ணில் இவருக்கு தனியானதோர் ஈடுபாடு. தாம் சொல்வதைச் சூசகமாக மாற்றுப் பொருளின் உதவி கொண்டு சொல்வதில் இவர் ஆர்வம் காட்டுகிருர் இதன் பயனுகக் கதை மறைமுகமாகத் தான் மனத்தில் இடம் பெறுகிறது. கதைச் சுவையுடன் காவியச் சுவையும் சுலபமாகக் கூடுகிறது. யதார்த்தத்தில் கவர்ச்சி வண்ண ஜாலம் காட்டுகிறது. தமது நீண்ட கதைகள் காரணமாகவே லோசன் பக்ஷி புகழ் பெற்றிருக்கிருர்.

'கடைத்தெருவின் துயரம்' லோசன் பக்ஷியின் மறை பொருள் உதவி கொண்டு கூறப்படும் கதை. வாழ்க்கை கடைத் தெருவின் பாதி மானிட உருவத்தின் மூலம் புனையப் பெற்றிருக்கிறது. இக் கதையின் முக்கியபாத்திரம் மார்க்கெட் நிலவரம் ஆகும்.

**குருதயால் சிங்**

பிறப்பு: 1933

கல்வி: எம். ஏ. (பஞ்சாபி)

தொழில்: ஆசிரியர்

கதைத் தொகுப்பு: பகலம் ருத், ஸக்கீ புல்ல, ஓபரா கர்.

முகவரி: ஜைதோ, பஞ்சாப்.

குருதயால் சிங் மால்வாப் பகுதியைச் சேர்ந்த சிறுகதை எழுத்தாளர், நாவலாசிரியர். 'மடீ கா தீவா' என்னும் தம் நவீனத்தின் மூலம் இவர் புகழ் பெற்ருர். மால்வாப் பகுதியின் பூகோளக்

குறிக்கோளுக்கு பாவனை கொண்டு ஓர் உருவம் கொடுத்து வெளிப்படுத்தியிருக்கிறார். இவருடைய பெரும்பாலான படைப்புகளும் மால்வா வாழ் நிலமற்ற மக்கள் சமுதாயத்தைப் பற்றியவையாகும். நிலமற்ற குடியானவர்களின் நிரந்தரத் தோழனை துயரத்தை கபடமின்றி வெளியிடுவது குரு தயால் சிங்கின் கலைச்சிறப்பாகும். இப்படி நிலமற்றவர்களுக்குக் குரு தயால் சிங் ஒரு புதுப் பெயர் சூட்டியிருக்கிறார் 'அன்ஹாயே' அதாவது இல்லாதவர்கள் என்று. இவர்களுக்கு ஓர் இருப்புத் தேடி, மனிதனின் தனித் தகைமையை வளர்க்கும் முயற்சியில் ஈடுபட்டுக் கதை சமைக்கிறார். வெற்றி காணு விட்டாலும் முதல் முயற்சி என்று கூறலாம். இவர் தம் கதைகளை மாலவி மொழியைப் பயன்படுத்தி எழுதுவதாலுல், இவரைப் பஞ்சாபின் வட்டாரக் கதாசிரியர் என்று அழைக்கலாம். தான் உணர்ச்சி வசப்படாமல், உணர்ச்சிகளை ஊட்டிப் படைப்பது குருதயால் சிங்குக்குக் கை வந்த கலை.

'காயந்த வேப்பங்கிளை' இல்லாமைக்கு ஓர் இருப்பிடம் தேடும் புதுமைக் கதையாகும்.

### அஜீத் கௌர்

பிறப்பு. 1934

கல்வி: எம். ஏ. (பொருளாதாரம்)

தொழில்: பத்திரிகைத் தொழில்

கதைத் தொகுப்புகள்: குல்பானோ, மஹாக் தீ மௌத், புத சிகன்

முகவரி: 16/6, கிழக்குப் பட்டேல் நகர், புது தில்லி-8.

அஜீத்கௌர் நகரத்துப் பெண்மணிகளின் மனக்கிலேசத்தைச் சித்திரிக்கும் கதைகள் எழுதுவதில் வல்லவர். பொருளாதார, சமூக, கஷ்டங்களையும் மனக் கிலேசங்களையும் மக்கள் அனைவருமே அநுபவிக்கின்றனர். ஆனால் சில கஷ்டங்களைப் பெண் மட்டுமே அநுபவிக்கிறாள், பெண்ணாய்ப் பிறந்துவிட்ட காரணத்தினால். பொருளாதார நோக்கில் சுதந்திரமாக வாழும் பெண், பெருநகரங்களில் இருப்பதனால் சமூகத்தின் தங்கு தடைகளிலிருந்து பெரும்பாலும் விடுபட்டு வளரும் பெண், போகந்தை காரணமாகத் தன் பசிகளைத் தன் இஷ்டத்துக்குத் தணித்துக்

கொள்ளும் ஆற்றல் படைத்த பெண்—என்றெல்லாம் சொல்லிக் கொண்டாலும் நகர்ப்புறத்தில் வாழும் பெண்களுக்கும் சில துயரங்கள் இருக்கின்றன. அவற்றை நல்ல பொருளாதார நிலை தீர்த்து வைப்பதில்லை. சமூகத்தில், அவள் பெற்றிருக்கும் சுதந்திரம் தீர்த்துவைப்பதில்லை. அல்லது பேரகந்தையும் தீர்த்து வைப்பதில்லை. அஜீத் கௌரின் கதைகள் இந்தத் துயரங்களைத் தெளிவாக விளக்குகின்றன இந்தக் கதைகளைப் படிப்பதனால் நகர்ப்புறத்துப் பெண்களிடம் ஓர் அநுதாபம் எப்பொழுதும் எழுவதில்லை என்றாலும், அவளுடைய நிலை, வாழ்க்கை முறை, ஆகியவை பற்றிக் கட்டாயம் உணர முடிகிறது.

'கழுவில் தொங்கிய கணங்கள்' தன் நிறைவு பெற்ற, சுதந்திர நிலையில் உள்ள, பேரகந்தை பிடித்த நகரத்துப் பெண்ணின் கஷ்டங்களை விண்டு வைக்கும் கதையாகும்.

**குல்ஜார் சிங் ஸந்து**

பிறப்பு : 1934

கல்வி : எம். ஏ. (ஆங்கிலம்)

தொழில் : அரசு ஊழியம் (ஆசிரியர், விவசாய அமைச்சரகம், பாரத அரசாங்கம்)

கதைத் தொகுப்புகள் : ஹூஸ்ன் தே ஹானீ, இக் ஸான்ஜ் புரானீ, ஸோனே தீ இட்ட

முகவரி : ஏ. 246, பண்டாரா ரோடு, புது தில்லி-11.

வயதினால் புதிய தலைமுறை எழுத்தாளர்களுடன் தொடர்பு கொண்டிருந்த பொழுதிலும், குர்ஜார் சிங் சந்து உணர்வுகளை வெளியிடுவதிலும் கதைகளை வடிப்பதிலும் பழைய ஸேகோன் கதை முறையைப் பின்பற்றுபவர். தமது வாழ்நாளில் பெரும் பாலான காலத்தை நகர்ப்புறங்களில் கழித்த பொழுதிலும், அவருடைய நாட்டம் எல்லாம் பஞ்சாபியக் கிராம வாழ்க்கையிலேயே உள்ளது. கிராம வாழ்க்கையில் உள்ள பிரச்னைகளைக் காட்டிலும் அதிகமாகக் கிராமத்து உணர்வுகளுக்கு அநுதாபம் காட்டும் எழுத்தாளர் அவர். பஞ்சாபியக் கிராமங்கள் கிட்டத்தட்ட தனது எல்லாப் பிரச்னைகளையும் தீர்த்துக் கொண்டு விட்டன. ஆனால் கிராமத்து மனிதனை மனிதன் என்ற முறையில் ஆராயும் பான்மை இன்னும் நமது எழுத்தாளர்களிடையே

தொடங்கவில்லை. நமது பெரும்பான்மையான கிராமத்துக் கதைகள் கிராமப்புறத்து உள்மனத்தின் உணர்வுகளை வெளியிடுவதையே நோக்காகக் கொண்டுள்ளன. 'ஏமாற்றம்' அத்தகைய ஓரிரு கதைகளில் ஒன்றாகும். உருவாகி முன்னேறி வரும் பஞ்சாபின் குரல் அவற்றில் ஒலிக்கச் செய்யும் வாய்ப்பு கிட்டியுள்ளது. புதிய பாக்ரா அணையுடன் பழைய உணர்வுகளை இணைத்துக் கதை உருவாக்கப் பட்டிருக்கிறது. ஏமாற்றமுற்ற கிழவியின் நிலை முழுவதும் ஒரு நிகழ்ச்சியையோ பிரச்னையையோ பிணைத்துக் கொள்ளாமல் உணர்வுகளோடு இணைந்திருக்கிறது. இந்த உணர்வு தனி மனிதனுடையதல்ல; பஞ்சாபைச் சேர்ந்த குடியானவர்களுடைய சமூகம் முழுவதும் கொண்டுள்ள உணர்வின் சின்னம் ஆகும்.

### தலீப் கௌர் டிவாணு

**கல்வி ;** எம். ஏ. (பஞ்சாபி) பி. எச். டி.

**தொழில் :** கல்வி புகட்டுதல் (லெச்சரர், பஞ்சாபி யூனிவர்சிடி படியாலா)

**கதைத் தொகுப்புகள் :** த்ராடான், கிஸே தீ தீ விகானே வைண், வேதனு, யாத்ரா, தூ பரீ ஹங்காரா.

**முகவரி :** ஸம்பூர்ண லாட்ஜ், படியாலா.

தலீப் கௌர் டிவாணு பல கதைகள் எழுதியிருக்கிறார். இரு நவீனங்களும் எழுதியிருக்கிறார். இவர் புகழுக்கு உண்மையான அடிப்படை இவரது நவீனம் 'ஐ ஹமாரா ஜீவன்' என்பது ஆகும். பஞ்சாபி மொழியின் மற்ற இரு பெண் எழுத்தாளர்களைப் போல (அம்ருதா பரீதம், அஜீத் கௌர்) தலீப் கௌரின் கதைகளும் பெண்ணின் காதல் அநுபவங்களைச் சித்திரிப்பவையாகும். காதலுக்கென்று நிறுவப்பட்டுப் பழகிப் போன முறை—வழிகளிலிருந்து சற்று விலகி எழுதும் போக்கை இம் மூன்று கதையாசிரியர்களிடமுமே காணலாம். ஆனால் அம்ருதா ப்ரீதம், அஜீத் கௌர்—இவர்களுடைய கதைகளின் முடிவு அச்சமின்மையாக இருக்கும். தலீப் கௌரின் கதைகள் அடக்கத்திலும் சீல உணர்விலும் போய் முடியும்.

'விஷக்கடி வேளை'யும் இளமைப்பருவத்தின் காதல் அநுபவம் பற்றிய கதைதான். காதலும் காமமும் கலக்கும் மையப் புள்ளி

ஒன்றாக அமையாவிடில் ஓர் இறுக்கம் ஏற்பட்டு விடுகிறது. இரண்டும் சரியாகச் சேரவில்லை என்பதை அறிந்து கொள்வதன் மூலம் இறுக்கத்தையும் தன் வயப்படுத்த முடியும் என்பதைச் சித்திரிக்கும் சிறந்த கதை இது.

**பூடா சிங்**

பிறப்பு: 1919

கல்வி: எம். ஏ. (பஞ்சாபி)

தொழில்: அரசாங்க ஊழியர் (டிரயின் எக்ஸாமினர், ரெயில்வே ஸ்டேஷன், தில்லி.)

கதைத் தொகுப்பு: லோ சுபாரே தீ

முகவரி: 75/2, நியூ ரெயில்வே குவார்ட்டர்ஸ், ஸப்ஜீ மண்டி, தில்லி–6.

பூடா சிங்கின் ஒரே கதைத் தொகுதிதான் பிரசுரமாகியிருக்கிறது. ஆனால் கடந்த பல ஆண்டுகளாக இவருடைய கதைகள் தொடர்ந்து பஞ்சாபிப் பத்திரிகைகளில் பிரசுரமாகிக் கொண்டிருக்கின்றன. இப்பொழுது ஒரு நவீனம் அச்சிடுவதில் ஈடுபட்டிருக்கிறார். இவருடைய பெரும்பாலான கதைகள் நகர்ப்புரத்து மத்திய வகுப்பைப் பிரதிபலிப்பவை. வாழ்க்கையில் ஏதாகிலும் விந்தையான தொரு விஷயத்தைக் கண்டு விட்டால், அதையே தமது கதைக் கருவாக்கிக் கொள்வதில் இவர் அதிக ஈடுபாடு காட்டுகிறார். எப்படியோ வேண்டாத காமச் செய்கைகள் இவருடைய கதைகளில் இடம் பெற்று விடுகின்றன.

'சதராம்மா' இவருடைய ஆரம்பக் கதைகளில் ஒன்று. முதலில் இந்தக் கதையின் காரணமாகத்தான் பூடா சிங்குக்குப் புகழ் கிட்டியது. தாமே ரெயில்வே ஷண்டிங் துறையில் தொடர்பு உள்ளவராகையால், பூடா சிங் இத்தகைய வாழ்க்கையை அருகிலிருந்து காணும் வாய்ப்பைப் பெற்றிருக்கிறார். எனவே, அவ் வாழ்க்கையை அத்தாட்சி பூர்வமாக வெளியிடும் ஆற்றல் இவருக்கு இயல்பாகவே அமைந்துள்ளது.

**ஜஸ்வந்த் சிங் விர்தீ**

பிறப்பு: 1934

கல்வி: எம். ஏ. (ஹிந்தி)

**தொழில்:** அரசாங்க உத்தியோகம். (ஆசிரியர், ஹிந்திக் கல்வித்துறை, பஞ்சாப் அரசு)

**கதைத் தொகுதிகள்.** பிட் பராயீ, அப்னீ அப்னீ ஸீமா.

**முகவரி:** ஆசிரியர், ஹிந்தி கல்வித் துறை, பஞ்சாப் அரசு, சண்டீகர்.

ஜஸ்வந்த் சிங் விர்தீ புதுத் தலைமுறையின் முக்கியமான கதை எழுத்தாளர்களில் ஒருவர். தமது அநுபவங்களை அப்பட்டமாக யதார்த்த வாத முறையில் வெளியிடுவதில் குறியாயுள்ளவர். இவருடைய வளர்ச்சிப் பயணம் எப்பொழுதும் சோதனைப் படைப்பை நோக்கியே முன்னேறுகிறது. இவருடைய 'ஸிம்பாலிக்'க் கதை 'தாரே தோட்னு' (நட்சத்திரப் பூக்களைப் பறித்தல்) இவருக்குப் புகழ் தேடித் தந்தது. சிறுகச் சிறுக விர்தீ தம் படைப்பைச் சம்பவம், பாத்திரப் படைப்பு இவற்றின் கட்டிலிருந்து விடுவித்து வந்திருக்கிறார். விர்தீயின் படைப்புகளில், நிகழ்ச்சிக் கோவையோ பாத்திரப் படைப்போ கலைத் தத்துவம் என்ற முறையில் ஆளப்படவில்லை. ஆனால் வாழ்க்கையின் பல கோணங்களையும் உணர்ச்சிக்கு இலக்காக்காமல் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்துகின்றன. இதுவே விர்தீயின் கதைப் படைப்பின் தனித்தன்மையாகும்.

'அவரவர் எல்லை' என்னும் கதை சங்கிராந்தி கால வாழ்க்கையின் அதாவது இரு முனை கூடுவதன் வனப்பை வெகு அழகாகச் சித்திரிக்கிறது. இது முற்றிலும் பெண்ணைப் பற்றிய கதையும் அல்ல; ஆணைப் பற்றிய கதையும் அல்ல. பிரச்னைகளும் பெண்களின் சார்பிலோ ஆண்களின் சார்பிலோ அணுகப்படவில்லை. இரு நோக்குகளுக்கும் இடையே ஒரு சமரசம் ஏற்படுத்தும் முயற்சியும் காணும். தற்கால உணர்வை அப்படியே எடுத்து வைத்திருக்கிறது என்று வேண்டுமானால் கூறலாம். இக் கதையில் தனிமனிதன் தன் எல்லைக்குள் வளைய வருகிறான் என்பதே முக்கியம்.

**மோகன் பண்டாரி**

**பிறப்பு:** 1937

**கல்வி:** பி. ஏ., எல். எல். பி.

**தொழில்:** அரசாங்க ஊழியம் (கல்வித் துறை, பஞ்சாப்)

கதைத் தொகுதிகள் : தில் செளலீ, மனுஜ் தீ பேட்
முகவரி : 1385–ஏ, 20 பி. செக்டர், சண்டீகட்.

மோகன் பண்டாரி புதுத் தலை முறையின் முக்கியமான எழுத்தாளர்களில் ஒருவர். இவருடைய படைப்புகள் புதுமை— பழமை இரண்டுக்கு மிடையே இணை கோட்டில் நிற்பதாகத் தெரிகின்றன: மால்வாப் பகுதியில் நிலமில்லாத நாட்டுப்புற மக்கள் பற்றிய பிரச்னை தான் இவருடைய கதைகளின் கருவூலம். இந்த மக்களின் துயரம் நிறைந்த வாழ்க்கையை அநுதாபத் தோடும் அதே நேரத்தில் கேலி கலந்த நோக்கிலும் முன்னே கொண்டு நிறுத்துகிறார். நடை ஓட்டமுள்ள மொழி இவருடைய படைப்புக்குக் கைகொடுத்து உதவுகிறது.

'என்னை டாகுர் ஆக்கு, அம்மா' என்னும் கதையில் கிராமத்துக் குயவனின் சாதாரண நிலையும் அவனுடைய வாழ்க்கையின் தனித் தகு நிலையும் இணைக்கப்பட்டுப் புது முறையிலே சித்திரிக்கப்படுகின்றன. இதன் காரணமாகக் கதையின் இறுதிப் பிரபாவம் பழையதாக இருந்தாலும் புதிய உணர்வு விளக்கத்துக்கு அடிகோலுவது போலவும் அமைந்துள்ளது.

# தமிழில் வெளிவந்துள்ள மற்ற நூல்கள்

ரூ.பை.

தேசிய வாழ்க்கை வரலாற்று வரிசை :

| | | |
|---|---|---|
| 1. *தியாகராஜர்*—பி. சாம்பமூர்த்தி | ... | 1 75 |
| 2. *ராமாநுஜர்*—ஆர். பார்த்தசாரதி | ... | 2 00 |
| 3. *குரு நானக்*—கோபால் சிங் | ... | 2 25 |
| 4. *முத்துஸ்வாமி தீக்ஷிதர்* —டி. எல். வெங்கட்டராம அய்யர் | ... | 2 50 |
| 5. *கபீர்*—பரஸ்நாத் திவாரி | ... | 2 25 |
| 6. *ஹரிநாராயண் ஆப்தே*—எம் ஏ. கரந்தீகர் | ... | 2 75 |
| 7. *ரண்ஜீத் சிங்*—டி. ஆர். ஸீத் | ... | 2 75 |

இந்தியா—நாடும் மக்களும் வரிசை :

| | | |
|---|---|---|
| 1. *வீட்டுப் பிராணிகள்*—ஹர்பன்ஸ் சிங் | ... | 4 50 |
| 2. *சாதாரண மரங்கள்*—எஸ் சாந்தபௌ | ... | 4 75 |
| 3. *மக்கட் தொகை*—எஸ் என். அகர்வாலா | ... | 3 75 |
| 4. *இந்தியப் பாம்புகள்*—பி. ஜே. தியோரஸ் | ... | 6 50 |
| 5. *தோட்ட மலர்கள்*—விஷ்ணு ஸ்வரூப் | ... | 6 00 |
| 6. *பூ மரங்கள்*—எம். எஸ். ரந்தாவா | ... | 6 50 |
| 7. *நிலமும் மண்வளமும்* —எஸ். பி. ராய் சௌதுரி | ... | 5 25 |

அனைத்திந்திய நூல் வரிசை :

| | | |
|---|---|---|
| 1. *அக்னி நதி*—குர் அதுல்ஐன் ஹைதர் | ... | 8 50 |
| 2. *மறைந்த காட்சிகள்*—பகவதி சரண்வர்மா | ... | 8 00 |
| 3. *காகித மாளிகை*—முப்பாள ரங்கநாயகம்மா | ... | 4 25 |
| 4. *வெண்குருதி*—நானக் சிங் | ... | 6 00 |
| 5. *இந்திச் சிறுகதைகள்*—டா. நாம்வர் சிங் | ... | 8 25 |

ரூ. பை.

| | | | |
|---|---|---|---|
| 6. | *அழிந்த பிறகு*—சிவராம காரந்த | ... | 5 25 |
| 7. | *கவி*—தாராசங்கர் பந்த்யோபாத்யாய் | ... | 5 50 |

பல்வகை நூல்கள் :

| | | | |
|---|---|---|---|
| 1. | *காந்தியின் இந்தியா* —வேற்றுமையுள் ஒற்றுமை | ... | 2 25 |
| 2. | *அக்பர்*—லாரென்ஸ் பின்யன் | ... | 2 25 |
| 3. | *அறிவு வளர்க்கும் அறிவியல்* —ரிட்சி கால்டர் | ... | 4 25 |
| 4. | *அசோக சாசனங்கள்* —என். ஏ. நிகாம், ரிச்சர்டு மக்கியோன் | ... | 3 00 |
| 5. | *கோதம புத்தர்*—ஆனந்த கே. குமாரசாமி —ஐ. பி. ஹார்னர் | ... | 6 00 |
| 6. | *மார்கோ போலோ*—மௌரிஸ் காலிஸ் | ... | 5 75 |
| 7. | *குடதிசை-குணதிசை ஞானப் பெண்மணிகள்*—ஸ்வாமி கஞகநந்தா | ... | 6 00 |
| 8. | *இன்பத்தின் வெற்றி* —பெட்ராண்ட் ரஸ்ஸல் | ... | 3 50 |
| 9. | *பாமர மக்களின் பரம்பரைப் பாடல்கள்*—அழ. வள்ளியப்பா | ... | 1 25 |
| 10. | *விழாவும் பூசையும்* —எஸ். ஜி. கணபதி அய்யர் | ... | 1 25 |